# தமிழ் எழுத்தியல்

தி. முருகரத்தனம்

1973

திருவருள் அச்சகம்

# ஆசிரியன் உரை

பண்டு தொட்டு இன்றுவரை தொல்காப்பியம் முதலான எத்தனையோ இலக்கணங்கள் தமிழில் எழுந்துள்ளன. அவ் விலக்கணங்களை இணைத்து உறவு படுத்தி 'வரல் ஆறு' காணல் பயன்படும்; அது தேவையும் ஆகும். தமிழ்மொழி பற்றி மொழியியல் நோக்கில் தமிழராலும் பிறராலும் ஆராய்ந்து எழுதப்பட்ட ஆராய்ச்சியுரைகளும் கட்டுரை களும் எத்தனையோ உண்டு. இவற்றையும் இலக்கணங்களு டன் இணைத்து உறவுபடுத்தி அவ் 'வரல் ஆறு' எழுதப் படல் வேண்டும். இத்தகைய முயற்சி இதுவரை ஒரு சிறிதே மேற்கொள்ளப் பட்டுள்ளது. இரண்டு நூல்களை மட்டுமே இவ்வகையில் குறிப்பிடலாம். அவையும் ஆங்கிலத்தில் அமைந்தவை. இத்தகைய முயற்சி மேலும் பெருக வேண்டும். இவ்வரலாற்றுப் பணியில் ஒரு சிறுமுயற்சியாகத் **தமிழ் எழுத்தியல்** என்னும் இந்நூல் வெளிவருகிறது.

அன்றும் இன்றும் தமிழ் எழுத்துக்களின் இயல்பு யாது? அவை உற்ற மாற்றங்கள் யாவை? புதிய தோற்றங் கள் யாவை? இவ்வெழுத்தியலின் விளக்கமும் வரலாறும் என்ன? இவை பற்றித் தொல்லிலக்கண நல்லாசிரியர்கள் அந்நாள் ஆராய்ந்தனர். இன்றைய மொழியியல் அறிஞர்கள் இந்நாள் ஆராய்கின்றனர். கிடைத்த கருத்துக்கள் பலப்பல. குறிப்பாக இவற்றைத் தொகுத்து ஆராய்ந்து வழங்குகிறது

இந்நூல்; இன்றைய விளக்க மொழியியலின் (Descriptive Linguistics) அடிப்படையில் எழுத்துக்களை விளக்கித் தொல்காப்பிய நன்னூல்களுடன் ஒப்பிட்டு வரலாற்றை வரைகின்றது. ஒலியியல், மெய்யெழுத்துக்கள், உயிரெழுத்துக்கள், சார்பெழுத்துக்கள், எழுத்து மயக்கம் ஆகியவை பற்றி இந்நூல் பேசுகிறது. இவையெல்லாம் எழுத்தியல் ஆகும். எழுத்தியல் நிறைவுறப் புணர்ச்சியும் வேண்டும். அக்குறை பின்னர்த்தான் தீர வேண்டும்.

'நூல் நீளமாகத் திரிக்கப்பட்டுவிட்டது' என இறுதியில்தான் தெரிந்தது! இது பிறப்பெடுத்தது 'முதுகலை' வகுப்பில் ஆகும்! அங்குப் பேசப்பட்ட விளக்கங்கள் நூலில் இடம் பெற்றுள்ளன. அடிக்குறிப்புக்களும்பல நீள இடம் பெற்றுவிட்டன. விளக்கவேண்டும் என்ற நோக்கம் தவிர நிறைக்க வேண்டும் என்ற ஆசை இல்லை. மாற்றுக் கருத்துக்களும் முழு அளவில் இடம் பெறுமானால் மாற்று முடிவுகள் கொள்ள அவை துணையாகும் என்ற எண்ணமும் இதற்குக் காரணம் ஆகியது. கற்போரும் கற்பிப்போரும் இதனால் பயன் பெறுவர் அல்லவா? வேண்டியதை வேண்டுவோர் நாடலாம்.

மொழியியலில் இன்று நானே பின்னணியினன்! பிற பணியினன். மொழியியலோ விரைந்து வளர்ந்து விரைந்து பரவி விரைந்து மாறும் மழைக் காலத்துக் 'குடைப் பயிராக' விளங்குகிறது! இந்நூலோ பல

ஆண்டுகளுக்கு முன்னரே கருப்பெற்று உருப்பெற்றது! சில ஆண்டுகள் உறங்கித் திருவருளால் ஓராண்டில் அச்சேறித் தயக்கத்துடன் தளர் நடையிட்டு வெளி வருகிறது. முன்னணியினர் இந்நூலை விரைவில் பின் னணியினதாக ஆக்குவார்களாக. அதுவே ஆராய்ச்சியில் வளர்ச்சி. என் வேண்டுகோளும் அதுவே.

என் மொழியியல் அறிவு வளர என் கல்லூரித் தொடக்ககால மாணவர்கள் தூண்டுகோலாய் அமைந்து துணை நின்றனர். அவர்களை இந்நேரம் நன்றியுடன் நினைவு கூர்கிறேன். ஒரு கையெழுத்துப் படியை ஆயிரம் அச்சுப்படிகளாக ஆக்கித் தந்தனர் திருவருள் **அச்சகத்தார்**. மொழியியலுக்கு ஏற்ற சிறப்பெழுத்துக்களைப் பயன்படுத்தி ஆற்றிய அவர்கள் பணி நன்றியுடன் போற்றுதற்கு உரியது. மதுரையில் இவ்வளவுதான் நூலாக்கம். எப்போதும் என் துணை இப்போதும் துணை.

அன்புடனும் அஞ்சாமையுடனும் ஊக்கத்துடனும் நூலை வெளியிட முன்வந்த நாவலர் பதிப்பகத்தின் காவலர் சாம்பசிவனார் நட்புக்கும் உரியவர்; நன்றிக்கும் உரியவர்.

தி. முருகரத்தனம்.

2-10-'73.
மதுரை.

# பொருளடக்கம்


பக்கம்

1 ஒலியியல் 1

மொழியியல் தரும் ஒலியியல்

1. 1. ஒலியும் மொழியும்
1. 2. ஒலிவடிவும் வரிவடிவும்
1. 3. இவ்வியலின் பொருள்
1. 4. ஒலியாராய்ச்சி முறைகள்
1. 5. பேச்சுறுப்புக்கள்
1. 6. ஒலிப்புறுப்புக்களும் ஒலிப்பிடங்களும்
1. 7. இதழ்கள்
1. 8. நாக்கும் அண்ணமும்
1. 9. பல்
1. 10. தொண்டை
1. 11. மூச்சுக்குழலும் நுரையீரலும்
1. 12. குரல் வளை
1. 13. மூக்கு
1. 14. பேச்சுறுப்புக்கள் தொகையும் வகையும்
1. 15. ஒலிகளும் வகைகளும்
1. 16. மெய்யொலிகள் விளக்கம்
1. 17. மெய்யொலிகள் பட்டி
1. 18. உயிரொலிகள்

தமிழிலக்கணங்கள் தரும் ஒலியியல் :

தொல்காப்பியர் கருத்துக்கள் 26

1. 19. பேச்சுறுப்புக்கள் தொகை
1. 20. உந்தி

1. 21. வளிசெல் வழிகள்
1. 22. பிற உறுப்புக்கள்

நன்னூலார் கருத்துக்கள்

1. 23. பேச்சுறுப்புக்கள் தொகை
1. 24. இதழ்கள்
1. 25. நாக்கும் அண்ணமும்
1. 26. அண்பல்
1. 27. இலக்கணங்கள் பேசாதவை
1. 28. பல்வகை
1. 29. உறுப்புக்கள் தொழிற்பாடு
1. 30. முடிவுரை

2 மெய்யெழுத்துக்கள் 49

2. 0. முன்னுரை

| | | | |
|---|---|---|---|
| 2. 1. | ககரம் | 2. 10. | நகரம் |
| 2. 2. | சகரம் | 2. 11. | மகரம் |
| 2. 3. | டகரம் | 2. 12. | னகரம் |
| 2. 4. | தகரம் | 2. 13. | யகரம் |
| 2. 5. | பகரம் | 2. 14. | ரகரம் |
| 2. 6. | றகரம் | 2. 15. | ழகரம் |
| 2. 7. | ஙகரம் | 2. 16. | லகரம் |
| 2. 8. | ஞகரம் | 2. 17. | ளகரம் |
| 2. 9. | ணகரம் | 2. 18. | வகரம் |

2. 19. மெய்யெழுத்துக்களும் மெய்யெழுத் தொலிகளும்
2. 20. 20–ஆம் நூற்றாண்டுத்தமிழ் மெய்யெழுத்துக்கள்

மெய்யெழுத்துக்கள் அன்றும் இன்றும் 153

2. 21. வல்லெழுத்துக்கள் : மூவேறொலிகள்
2. 22. சகரம் 2. 23. பகரம் 2. 24. றகரம்
2. 25. மெல்லின மெய்கள்
2. 26. ஙகரம் 2. 28. ணகரம்
2. 27. ஞகரம் 2. 29. மகரம்
2. 30. நகர னகரங்கள்
2. 31. இடையின மெய்கள்
2. 32. யகரம் 2. 35. லகரம்
2. 33. வகரம் 2. 36. ளகரம்
2. 34. ரகரம் 2. 37. ழகரம்

3. உயிரெழுத்துக்கள் 230
3. 1. குறில் நெடில் வேற்றுமை
3. 2. அகர ஆகாரங்கள் 3. 5. எகர ஏகாரங்கள்
3. 3. இகர ஈகாரங்கள் 3. 6. ஒகர ஓகாரங்கள்
3. 4. உகர ஊகாரங்கள் 3. 7. ஐகார ஔகாரங்கள்
3. 8. உயிரெழுத்துக்களும் எழுத்தொலிகளும்
3. 9. இலக்கணங்கள் கண்ட உயிரெழுத்துக்கள்
3. 10. உயிரொலிகளில் யகரவகரப் பண்பு
3. 11. பேச்சுத்தமிழில் உயிரொலிகள் மாற்றம்
3. 12. பேச்சுத்தமிழ் உயிரெழுத்துக்கள்

4. சார்பெழுத்துக்கள் 258
4. 1. முதல் சார்பு எனும் பகுப்பு:
தொல்காப்பியர் கருத்துக்கள்

4. 2 ‘ சார்பெழுத்துக்கள் ’ வழக்கும் பின்னை இலக்கணங்களும்
4. 3 சார்பெழுத்துக்களின் தொகை
4. 4. சார்பெழுத்தின் இலக்கணம்
4. 5. பின்னையோர் பிறழ்வுணர்ச்சி
4. 6. ஆய்தம் 271
4. 6. 1. முன்னுரை
4. 6. 2. பெயர்களும் காரணங்களும்
4. 6. 3. ஆய்தல் = ஆய்தம்
4. 6. 4. புள்ளியும் ஒற்றும்
4. 6. 5. தனிநிலை
4. 6. 6. அஃகேனம்
4. 6. 7. தொல்காப்பியர் கருத்து
4. 6. 8. 1. நன்னூலார் கருத்து
4. 6. 8. 2. அங்காப் பொலி
4. 6. 9. ஆய்தம் பற்றி யுணர்த்தும் பிற சான்றுகள்
4. 6. 9. 1. புணர்ச்சியில் தோன்றும் ஆய்தம்
4. 6. 9. 2. நீட்டல் விகார ஆய்தம்
4. 6. 9. 3. ஒருரையாசிரியர் துணிபு
4. 6. 10 ஆய்த ஒலி உரைவொலியே: இன்றைய வழக்கு
4. 6. 11 யகரஒலி ஆய்தம்
4. 6. 12. ஆய்தத்தின் வழக்கு
4. 6. 13. தமிழில் ஆய்தத்தின் தோற்றம்
4. 6. 14 ஆய்தம் தோன்றுதலின் காரணம்

4. 6. 15 ஆய்தம் தனியே ஓர் எழுத்தா?
4. 6. 16. ஆய்தம் திரிதலும் வழக்கு வீழ்தலும்
4, 6, 17. ஆய்தம் வைப்பு முறை
4. 6. 18 ஆய்தக் குறுக்கம்

4. 7. குற்றியலிகரம் 307

4, 7, 1. ஒலி
4. 7. 2. சூழல்
4 7, 3. பிற மெய்முன் இகரம்
4. 7. 4 மொழிமுதலிலும் இகரம்
4. 7. 5 எழுத்து நிலை
4. 7. 6 வரலாறு

4. 8. குற்றியலுகரம் 315

4. 8. 1. ஒலி
4. 8. 2. சூழல்
4. 8. 3. வகை
4. 8. 4. மொழியிடைக் குற்றியலுகரம்
4. 8. 5. 'உயிர்வரின் உக்குறள்'
4, 8. 6. மொழிமுதற் குற்றியலுகரம்
4. 8. 7. எழுத்து நிலை
4, 8. 8. ஏவல் வினையில் குற்றியலுகரம்
4. 8. 9. இன்று ஓர் எழுத்து
4. 8. 10. வரலாறு
4. 8. 11. வரிவடிவு
4. 8. 12. புள்ளியிடலின் பொருள்

4. 9 மகரக் குறுக்கம்
4. 10 பிற சார்பெழுத்துக்கள்
4. 10. 1. உயிர்மெய் யெழுத்துக்கள்
4. 10. 2. அளபெடைகள்
4. 10. 3. ஐகார ஔகாரக் குறுக்கம்
5 எழுந்து மயக்கம் 335
5. 1. மயக்க விளக்கம்
5 2. 1. மொழிமுதல் எழுத்துக்கள்
5. 2. 2. சகரக் கிளவி
5. 2, 3 அண்ணொலித் திரிபு
5. 2. 4 புதுமைகள்
5. 3. இடைநிலை மயக்கம்
5. 3. 1. உயிரொலித் திரிபு
5. 3- 2. ஈருயிர்மயக்கம்
5. 3. 3. மெய்மயக்கம்
5: 3. 4. மும்மெய் மயக்கம்
5. 3. 5. பழையன கழிதலும் புதியன புகுதலும்
5. 4. மொழியீற்றெழுத்துக்கள்
புறவிதழ்கள் 371
1. எழுத்தாக்கம் 372
2. மொழியியற் கலைச்சொற்கள் 398
குறுக்க விளக்கம்
நூல் விளக்கம்






# ஒலியியல்[1]

## மொழியியல் தரும் ஒலியியல்

### 1. 1. ஒலியும் மொழியும்

மொழி **பொருட்குறிப்புள்ள**[2] **பேச்சொலிகளால்**[3] இயன்றதே ஆகும். இப்பொருட்குறிப்புள்ள பல்வேறு பேச்சொலிகளே பல்வேறு **எழுத்துக்களாக** வரையறுக்கப் படுகின்றன. ஆகவே எழுத்துக்கள் எல்லாம் உண்மையில் **வாயொலிகளே**[4]. ஆதலால் எழுத்துக்களின் பிறப்பு, தன்மை, வகை, தொகை என்பவையெல்லாம் வாயில் பிறக்கும் ஒலிகளின் பிறப்பு, தன்மை, வகை, தொகையே ஆகும். இந்நூலின் பின் இயல்களில் செய்யப்படும் மெய், உயிர் எழுத்துக்களின் ஆராய்ச்சி இவ்வொலிகளின் ஆராய்ச்சியே ஆகும்.

### 1. 2. ஒலிவடிவும் வரிவடிவும்

செவிப்புலனாகும் இவ்வெழுத்துக்களுக்கு என அமைக்கப்பட்ட குறியீடுகளே கட்புலனாகும் **வரிவடிவெழுத்துக்கள்**[5]. **ஒலி வடிவெழுத்தின்றி**[6] வரிவடிவெழுத்துக்கள் இல்லை. வரிவடிவெழுத்துக்கள் ஒலிவடிவெழுத்துக்களுக்கு ஏற்ப மாற்றியமைக்கப்படும் தன்மையன. வரிவடிவெழுத்துக்கள் ஒரு

---

1. Phonetics 2. Significant 3. Speech sounds
4. Oral sounds or Vocal sounds 5. Script or Alphabets
6. ஒலிநிலையில் அமைந்த எழுத்துக்கள் என்பதே பொருள்.

மொழிக்கு அமைந்திருக்கலாம்; அமையாமலும் இருக்கலாம். நாகரிக மக்களே தம் மொழிகளுக்கு வரிவடிவெழுத்துக்கள் அமைத்துக்கொண்டனர். இன்றும் எண்ணற்ற மொழிகள் வரிவடிவெழுத்துக்கள் இன்றியே வழங்குகின்றன. ஒலிவடிவெழுத்துக்கள் வேறு; வரிவடிவெழுத்துக்கள் வேறு எனப் பிரித்தறியாமையால் இலக்கண நூல்களிலும், மொழியியலிலும் பலசிக்கல்கள் ஏற்பட்டுள்ளன. ஒலி வடிவான எழுத்துக்களே முதலானவையும் முதன்மையானவையும் என உணர்தல் இன்றியமையாதது. இந்நூலுள் எழுத்து என்பது செவிப்புலனாகும் ஒலிவடிவெழுத்தையே குறிக்கும்[7]. இத்தகைய தமிழெழுத்துக்களின் வரலாற்றாராய்ச்சியே இந்நூலின் நோக்கம்.

---

**7. 'எழுதப்படுவதே எழுத்து' என்ற கருத்து ஒன்றுண்டு. "எழுது" வினை; "எழுத்து" பெயர். 'எழுவது அல்லது எழுப்பப்படுவது எழுத்து' என்ற மற்றொரு கருத்தும் உண்டு. "நீட்டம் வேண்டின் அவ்வளபுடைய கூட்டி எழூஉதல் என்மனார் புலவர்" (தொல்.எழு.6) என்ற நூற்பாவில் "எழூஉதல்" ஒலியெழுப்புதல் என்ற பொருளில் வழங்கப்படுதல் கருதத்தக்கது. இக்கருத்து "ஒலியே எழுத்து" என்ற கருத்துக்குப் பொருந்தி வருகிறது. பேர். தெ. பொ. மீ. அவர்கள் கருத்து இங்குக் குறிக்கத் தக்கது.**

**"eluttu is the word used and ordinarily the word is traced to the root eluttu "to write". But eluttu itself contains the root elu ( tu being taken a formative) and Tolkappiyar uses the root elu in the sense of articulating a sound (tol-6). He also speaks of the quantity of eluttu (Tol. 3, 4, 11, 12) Therefore he must be refering to the sounds, though there are places where eluttu means "letters". -HTL.P. 63**

## 1. 3. இவ்வியலின் பொருள்

தமிழ் எழுத்தொலிகள் பிறக்கும் முறைகளையும் அவற்றின் அடிப்படையிலமைந்த பாகுபாட்டினையும் அறிவதற்கு முன் பொதுவாகப் பேச்சொலிகள் பிறக்கும் முறைகளையும் அவை பாகுபடுக்கப்படும் முறைகளையும் அறிவது இன்றியமையாதது. இதுவே இவ்வியலின்[8] பொருளாகும். தொல்காப்பியர் முதலான இலக்கணப் பேராசிரியன்மாரும் தமிழொலிகளின் பிறப்பினை விளக்கி எழுத்துக்களை வகைப்படுத்தியுள்ளனர். இவ்வாசிரியன்மாரின் ஒலியியற் கருத்துக்களையும் இங்கு ஒப்பிட்டுக் காணுதல் தமிழெழுத்தொலிகள் வரலாற்றை அறிவதற்குத் துணை செய்யும். ஆனால் ஒலியியலும் உடலியலும்[9] நுண் கருவிகளும் இன்று வளர்ந்திருக்கின்றமை போல் இவ்வாசிரியன்மார் காலத்தில் வளர்ந்திருக்கவில்லை. ஆதலால் அவர்கள் கருத்துக்கள் பல்வகையிலும் குன்றக் கூறலாகவும், குறைபடக் கூறலாகவும் அமைந்திருக்கின்றன. அவற்றை ஆங்காங்கே காணலாம்.

## 1. 4. ஒலியாராய்ச்சி முறைகள்

பேச்சொலிகளை இன்றைய மொழியியல் மூன்று முறைகளில் ஆராய்தல் உண்டு.

ஒன்று: வாயுறுப்புக்கள் பேச்சொலிகளைப் பிறப்பிக்கும் முறையாராய்ச்சி.

---

நன்னூலாசிரியரும் எழுத்து இன்னது என்னும் பொழுது "மொழி முதற்காரணம் ஆம் அணுத்திரளொலி எழுத்து" என விளக்குகிறார். - நன். 58.

8, Chapter 9. Physiology

இரண்டு: வாயுறுப்புக்கள் பேச்சொலிகளைப் பிறப்பிக்கும் இயக்கத்தால் தோன்றும் காற்றலைமுறையாராய்ச்சி.

மூன்று: பேச்சுறுப்புக்களின் இயக்கத்தால் காற்றலைகள் ஏற்படுத்தும் செவிப்புலக்கேள்வி நிகழ்ச்சி முறையாராய்ச்சி[10].

பின்னிரண்டு முறைகளும் மொழியியலில் நன்கு வளர்ச்சி அடையவில்லை; முதலதான **ஒலிப்பியல்**[11] ஆராய்ச்சியே எளிமை காரணமாகச் சிறப்புற வளர்ந்துள்ளது. இம்முதல் முறையை ஒட்டியே இந்நூலுள் எழுத்துக்கள் ஆராயப் படுகின்றன.

## 1. 5. பேச்சுறுப்புக்கள்

பேச்சொலிகள் எல்லாம் நம் உடலுறுப்புக்கள் சிலவற்றின் அசைவுகளால் தோன்றுவனவே. இவ்வசைவை ஒலித்தல் அல்லது ஒலிப்பு[12] என வழங்கலாம். இப்பேச்சின் பிறப்பில் பங்கு கொள்ளும் உறுப்புக்களைப் **பேச்சுறுப்புக்கள்**[13] என வழங்கலாம். இப் பேச்சுறுப்புக்கள் அடங்கிய உடற்பகுதியைப் **பேச்சுப்பிறப்பகம்**[14] எனக் குறிக்கலாம். இப் பேச்சுப் பிறப்பகத்தில் அடங்கி ஒலிப்பிலே பங்கு கொள்ளும் உறுப்புக்கள் **வாயகவுறுப்புக்கள்**[15], **மூக்ககம்**[16]

---

10 இம்மூன்று முறைகளையும் மொழியியல் முறையே Articulatory Phonetics, Acoustic Phonetics, Auditory Phonetics எனப் பெயரிட்டு ஆராய்கிறது.

11 Phonetics ஒலியியல் எனவும் Articulatory Phonetics ஒலிப்பியல் எனவும் இந்நூலுள் வழங்கப்படும்.

12. Articulation 13. Organs of Speech or Vocal organs 14. Speech tract 15. Organs in the oral cavity 16 Nasal cavity

தொண்டையும் அதன் அடியில் அமைந்த குரல்வளையும்,[17] இருபகுதியாக அமைந்த நுரையீரல்[18], நுரையீரல்களையும் தொண்டையையும் இணைக்கும் மூச்சுக்குழல்[19], இவ்வுறுப்புக்களை இயக்கும் வன்றசைகள், மென்றசைகள் முதலியன. நுரையீரல்கள், மூச்சுக்குழல், தொண்டை, வாயகம்,மூக்ககம் ஆகிய ஐந்தினையும் வளிசெல்வழிகள் எனக்குறிக்கலாம்.

இவ்வுறுப்புக்கள் எல்லாம் உண்பதற்கும், உயிர்ப்பதற்குமே இயற்கையில் அமைந்தவை. இவற்றின் அடுத்த பணியாகவே அல்லது துணைப்பணியாகவே[20] மக்கள் இனத்திற்குப் பெரும்பயனைப் பேச்சு அமைந்தது. மூக்குவழியாகவும், வாய்வழியாகவும் எப்போதும் காற்று உள்ளிழுக்கப்பட்டும் வெளிவிடப்பட்டும் மூச்சுவாங்குதல் (அல்லது உயிர்த்தல்) நடைபெறுகிறது. காற்று உள்ளிழுக்கப்பட்டு மார்பில் அமைந்த இருநுரையீரல்களிலும் செறிகிறது. இந்த நுரையீரல்கள் வயிற்றையும் மார்புக் கூட்டையும் பிரிக்கும் வயிற்றுக்கூரை[21] மீது தங்கியிருக்கின்றன. இக்கூரை தசையாலாகியது. இதுவே நுரையீரலை உந்தி இயக்கி அதனுள்ளிருக்கும் காற்றை வெளித்தள்ளுகிறது. அக்காற்று நுரையீரல்களிலிருந்து மூச்சுககுழல் வழியாகச்சென்று, குரல்வளை கடந்து தொண்டையை அடைந்து வாய் வழியாகவும் மூக்கு வழியாகவும் வெளிவருகிறது. இவ்வாறு வெளிவரும் காற்றைக் குரல்வளைத்தசைகள், நாக்கு, இதழ்கள்,

---

17. Pharynx and larynx 18. Lungs 19. Trachea
20. Secondary function 21. Diaphragm




பேச்சுறுப்புக்கள்

1. மேலிதழ்
2. கீழிதழ்
3. மேற்பல்
4. கீழ்ப்பல்
5. ஈற்றண்ணம்
6. வல்லண்ணம்
7. மெல்லண்ணம்
8. உள் நா
9, மூக்ககம்
10. மூக்கக வாயில்
11. தொண்டை
12 நுனி நா
13, முன்நாவிளிம்பு
14. பின் நா
15; வேர்நா
16, குரல்வளை மூடி
17. குரல் தசைகள்
18, குரல்வளை
19, மூச்சுக்குழல்
20. உணவுக் குழல்

**அண்ணம், பற்கள் ஆகிய பல்வேறு உறுப்புக்கள் பங்கு கொண்டு அடைத்தோ, தடுத்தோ, தாக்கியோ, செறித்தோ** பல்வேறு பேச்சொலிகளை எழுப்புகின்றன.

## 1. 6. ஒலிப்புறுப்புக்களும் ஒலிப்பிடங்களும்

இவ்வாறு பங்கு கொள்ளும் உறுப்புக்களை இருவகையினவாகப் பிரிக்கலாம்.

1. பேச்சொலிகளை எழுப்புவதன் பொருட்டுப் பல்வேறு நிலைகளில் எழுந்து இயங்கும் உறுப்புக்கள் **ஒலிப்புறுப்புக்கள்**[22] ஆகும். **குரல்வளைத்தசைகள், நாக்கு, கீழிதழ்** முதலியன இத்தகையன.

2. இவ்வொலிப்புறுப்புக்கள் அணுகுவதற்கும், தொடுவதற்கும் ஏற்ப அவற்றின் எதிரெதிரே அமைந்த (இயங்காது நிலைத்த) இடங்கள் ஒலிப்பிடங்கள்[23] ஆகும். **அண்ணம், மேற்பல்வரிசை, மேலிதழ்** முதலியன இத்தகையன. மொழி ஒன்றின் பேச்சொலிகளை ஆராய இவ்விருவகையாகிய ஒலிப்புறுப்புக்களையும் ஒலிப்பிடங்களையும் நுட்பமாகப் பகுத்தறிதல் வேண்டும். அவை பற்றி இனிக்காண்போம்.

## 1. 7. இதழ்கள்[24]

1. வாயில் **மேலிதழ், கீழிதழ்** ஆகிய இரண்டும் பேச்சொலிப்பிறப்பில் பங்குகொள்ளுகின்றன. இவ்விரண்டு இதழ்களும் ஒன்றோடொன்று வன்மையாகவோ மென்மையாகவோ பொருந்தி உள்ளிருந்து வரும் காற்றை முழுவதும் தடுத்துப்பின் வெளிவிடலாம். பகரம் இவ்வாறு பிறக்கிறது.

---

**22. Articulators 23. Points of Articulation 24. Lips**

2. கீழிதழ் மேற்பல்வரிசையைத் தொட்டுக் காற்றை வெளிவிடலாம். வகரம் இவ்வாறு பிறக்கிறது.

3. இரண்டிதழ்களும் முன் நோக்கிக் குவிந்து-அடுப் பூதுவது போன்று - காற்றை வெளி விடலாம். இவ்வாறு உயிரெழுத்துக்களாகிய உகர ஒகரங்கள் பிறக்கின்றன.

4. இவ்வாறே கீழிதழ், மேற்பல்வரிசையைத் தொடாது அணுகி நின்று காற்றை வேகமாக வெளிவிடலாம். இங்கனமே ஆங்கிலத்திலுள்ள f, v, இரண்டும் பிறக்கின்றன.

இதழால் பிறக்கும் ஒலிகள் **இதழொலிகள்**[25] எனப்படும். மேலிதழும் கீழிதழும் ஆகிய இரண்டும் பொருந்தப் பிறக்கும் ஒலிகள் **ஈரிதழொலிகள்**[26] எனப்படும். கீழிதழும் மேற்பல்லும் பொருந்தப் பிறக்கும் ஒலிகள் **பல்லிதழொலிகள்**[27] எனப்படும். கீழிதழ் ஒலிப்புறுப்பாகும். மேலிதழும் மேற்பல் வரிசையும் ஒலிப்பிடங்களாகும்.

## 1. 8. நாக்கும் அண்ணமும்

*1. 8. 1.* பேச்சொலிகள் எழுப்புவதில் நாக்கின் பங்கு மிகப்பெரியது. பல்வேறு நிலைகளில் இயங்குவதற்கு ஏற்ப அது எலும்பும் நரம்புமற்ற தசையால் ஆகி நெகிழ்பண்பு கொண்டது. இந்நாக்குப் பொதுவாக மூன்று பகுதிகளாகப் பிரித்து ஆராயத் தக்கது.

*1.* நா நுனி (அல்லது நுனி நா)[28]

---

**25. Labial sounds 26. Bilabial sounds**
**27. Labiodental sounds 28. Apex or Tip of the tongue**




2. முன் நா[29]
3. பின் நா (அல்லது அடி நா)[30]

நுனி நாக்கினை ஒட்டி அடுத்துள்ள மெல்லிய தகடு போன்ற பகுதியைத் தகட்டு நா[31] எனக் குறிக்கலாம். இதுவும் நுனிநாப் பகுதியில் அடங்கும்.

இந்நாவுறுப்புக்கள் பேச்சொலிகளை எழுப்பத் துணை செய்யும் ஒலிப்புறுப்புக்களே. இந்நாக்கின் எதிர் மேலே அமைந்த உறுப்புக்கள் அண்ணமும்[32] மேற்பல் வரிசையும் ஆகும். முன்மேற்பல்லடியிலிருந்து தொண்டை வரை அமைந்த பகுதியே அண்ணம். இந்நீண்ட பகுதியைச் சில சிறுபகுதிகளாகப் பகுத்துக் காணலாம். முன்மேற்பல் வரிசையை அடுத்துள்ளதும், அப்பல்வரிசையின் வேர்கள் அமைந்துள்ளதும், குவிந்த வடிவுடையதும் ஆகிய பகுதி ஈற்றண்ணம் அல்லது சுருக்கமாக ஈறு[33] எனப்படும். அதனை அடுத்துக் கவிந்த வடிவோடு வலிய எலும்பால் ஆகிய பகுதி வல்லண்ணம்[34] எனப்படும். அதனை அடுத்து எலும்பில்லாது மெல்லிய தசையால் ஆகிய பகுதி மெல்லண்ணம்[35] எனப்படும். இவையெல்லாம் ஒலிப்பிடங்களாகப் பேச்சொலிப்பில் பங்கு கொள்கின்றன. அண்ணத்தின் உள்ளோரத்தில் தொண்டையின்முன் தொங்கிக் கொண்டிருக்கும்

---

29 Front of the tongue 30 Back or dorsom of the tongue 31. Blade or Lamina of the tongue 32. Roof of the mouth 33. Tooth ridge or alveolae என்னும் பொருளுடைய எயிறு என்ற பழஞ்சொல்லே பொருளும் வடிவும் திரிந்து ஈறு என இன்று வழங்குகின்றது. 34. Hard palate (or palate) 35. Velum (or soft palate)

மெல்லிய தசையாலாகிய பகுதி **உள்நாக்கு**[36] எனப்படும். பின்நாக்கு மெல்லண்ணத்துக்கு எதிரேயும், முன்நாக்கு வல்லண்ணத்துக்கு எதிரேயும், நுனிநாக்கு ஈற்றண்ணத்துக்கு எதிரேயும் கீழே இயல்பான நிலையில் படிந்திருக்கும்.

1. 8. 2. நாக்கின் மிகுநெகிழ்பண்பு கொண்ட கூரிய முனையே நுனிநா எனப்படும். அது முன்மேற்பல் வரிசையின் பின்புறத்தை ஒற்றியோ, ஈற்றண்ணத்தை ஒற்றியோ, வல்லண்ணத்தை ஒற்றியோ, உள்ளிருந்துவரும் காற்றை முழுவதும் தடுக்கமுடியும்; தடுத்துப் பின் வெடியோசையோடு அக்காற்றை வெளிவிட முடியும். இப்படிப் பிறக்கும் ஒலிகள் **தடையொலிகள்** அல்லது **தடைவெடியொலிகள்**[37] எனப்படும். தமிழிலுள்ள டகர தகரங்கள் நுனிநாவின் முயற்சியால் தடைவெடியோடு இவ்வாறு பிறப்பனவே.

1. 8. 3. முன்நா நுனிநாவிலிருந்து 3 செ. மீ. நீளம் உள்ள பகுதியாகும். இது முன்மேற்பற்களின் அடியினைப் பொருந்தியும், வல்லண்ணத்தைப் பொருந்தியும், ஈற்றண்ணத்தைப் பொருந்தியும் ஒலி எழுப்பக் கூடும். தமிழ்ச்சகரம் [எ. கா. பச்சை] இவ்வாறு முன்நா ஈற்றண்ணத்தைப் பொருந்தப் பிறக்கிறது. முன்நாக்கு இருபுறமும் நெடுக விளிம்பு உயர இடையில் குழிந்து அண்ணத்தை ஒற்றி உள்ளிருந்து வரும் காற்றை அக்குழிவு வழியாக **உரைவொடு**[38] வெளியிடல் கூடும். "பசி"யில் உள்ள சகரம் இவ்வாறு பிறப்பதே. இத்தகைய ஒலிகள் **உரைவொலிகள்**[39] எனப்படும். முன்நாக்கு எழுந்து அண்ணத்தைத்

---

36. Uvula 37. Stops or Stop-Plosives 38. Friction
39. Fricatives or Spirants

தொட்டுக்கொண்டிருக்க ஒருபுறமோ இருபுறமோ காற்று வெளிச் செல்லச் சில ஒலிகள் பிறக்கின்றன. இவை **புறவளி யொலிகள்**[40] அல்லது **மருங்கொலிகள்** எனக் குறிக்கப்படு கின்றன. தமிழ் லகர ளகரங்கள் இவ்வாறு பிறப்பனவே. வல்லண்ணத்தை **முன்வல்லண்ணம்**[41], **நடுவல்லண்ணம்**[42], **பின்வல்லண்ணம்**[43] என மூன்றாகப் பிரித்து அவற்றிற்கு ஏற்ப ஒலிகளைப் பாகுபாடு செய்யலாம்.

1. 8. 4. முன்நாக்கினை அடுத்துள்ள கீழ்ப்பகுதி பின்நா எனப்படும். இப் பின்நா மேல் எழுந்து மெல்லண்ணத்தைப் பொருந்திப் பேச்சொலிகளைப் பிறப்பிக்கும். தமிழில் ககர ஙகரங்கள் இவ்வாறு பிறக்கின்றன. பின்நாக் குழிந்திருக்க அதன் இருபுற விளிம்புகளும் அண்ணத்தைப் பொருந்தி நிற்கவும், பேச்சொலி தோன்றுதல் உண்டு. இவ்வாறு சில உயிரொலிகளும் யகரமும் பிறப்பதாகத் தமிழ் இலக்கணங்கள் கூறுகின்றன. (பின்னர்க் காண்க.)

1. 8. 5. பின்நாவிற்கும் கீழே தொண்டையில் அமைந்த நாவின் பகுதியை **வேர்நா**[44] எனக்குறிக்கலாம். இது தமிழ்ப் பேச்சொலி யாதொன்றுக்கும்ஒலிப்புறுப்பாகஅமையவில்லை.

உள்நாக்கு உள்ளிருந்து வரும் காற்றால் அதிர்ந்து ரகரம் போன்ற ஒலியைப் பிறப்பிக்கலாம். தமிழில் இத் தகைய ரகரவொலி இல்லை.

---

40. Lateral sounds 41. Prepalate 42. Mediopalate
43. Postpalate 44. Root of the tongue

உள்ளிருந்து வாய் வழியாகக் காற்று வெளிவரும் போது நாக்குப் பல்வேறு நிலைகளில் எழுந்து நின்று வாயகத்தின் உள்ளக நிலையை[45] மாற்றலாம். இம்மாற்றத் தால் ஒலிவேறுபாடுகள் தோன்றுகின்றன. இவ்வாறுதான் உயிரெழுத்துக்கள் பிறக்கின்றன. பின்நாக்கு மேல்நோக்கி எழுந்து நிற்க உகர ஒகரங்களும், முன்நாக்கு மேல்நோக்கி எழுந்து நிற்க இகர எகரங்களும் பிறக்கின்றன.

## 1. 9. பல்

தனியே யாதொரு பல்லும் பேச்சொலிப்பில் பங்கு கொள்ளுதல் இல்லை. மேற்பல்வரிசை, கீழ்ப்பல்வரிசை கடைவாய்ப்பல்வரிசை என இவையே ஒலிப்பில் ஒலிப் பிடங்களாகப் பங்குகொள்ளுகின்றன. பின்நாவின் விளிம் புகள் கடைவாய்ப்பல்வரிசையில் பொருந்தி நிற்கச் சில உயி ரெழுத்துக்கள் பிறக்கின்றன எனத் தமிழிலக்கணங்கள் விளக்குகின்றன. மேற்பல்வரிசை, கீழ்ப்பல்வரிசை ஆகியவற் றின் இடையில் நா நிற்கச் சில ஒலிகள் பிறக்கின்றன. ஆங்கி லத்திலுள்ள thin என்பதிலுள்ள தகரம் இவ்வாறு பிறக் கிறதாம். மேற்பல் வரிசையே பேச்சொலிப்பில் பெரிதும் பங்குகொள்ளுகின்றது. கீழிதழ் மேற்பல் வரிசையைப் பொருந்த வகரம் பிறக்கிறது. நாநுனி மேல்வரிசை யண்பல் லடியினை ஒற்றத் தகர நகரங்கள் பிறக்கின்றன.

## 1. 10. தொண்டை

வாயகத்தை அடுத்துள்ளது தொண்டை. தொண்டை வழியாகக் காற்றும் உணவும் சென்று முறையே காற்றுப்

---

45. Shape of the Oral Cavity

பையையும் (நுரையீரல்), இரைப்பையையும் அடைகின்றன. தொண்டை சுற்றிலும் தசையினாலாகிய சுவருடையது. இச் சுவரின் புறம் சுருங்கி விரியும் தன்மை பெற்றது. தொண்டை இவ்வாறு சுருங்கி விரிந்து வாயகம் குறுகவும் பெருகவும் செய்தலால் ஒலி மாறக்கூடும்.

## 1. 11. மூச்சுக்குழலும் நுரையீரலும்

தொண்டையிலிருந்து மார்பிலுள்ள நுரையீரலை இணைப்பதற்குக் குரல்வளையினைத் தொடக்கமாகக் கொண்ட ஒருமூச்சுக்குழல்[46] உண்டு. மூச்சுக்குழலின் கீழ் நுரையீரல் இருபிரிவாகப் பிரிந்து மார்பின் இருபுறமும் அமைந்துள்ளது. இந்நுரையீரலே காற்றினை உள்ளிருந்து மீண்டும் ஒழுங்காக வெளியே தள்ளிக் கொண்டிருக்கிறது. இவ்வாறு வெளிவரும் காற்றே பேச்சொலி யாகிறது. இங்கனம் ஒழுங்குபட (அலையலையாக) வெளித்தள்ளப்படும் மூச்சுக்காற்று மொழியில் **அசைகள்**[47] அமைவதற்கு அடிப்படையாகின்றது. ஆங்கில மொழியில் அசைவரையறுப்பு இவ்வொழுங்கின் அடிப்படையிலேயே காணப்படுவதாகும்.

## 1· 12. குரல்வளை

தொண்டையின்கீழும் மூச்சுக்குழலின்மேல் அதன் தொடர்ச்சியாகவும் மென்றசைகளாலும், வன்றசைகளாலும் ஆகி வளை போன்று அமைந்திருப்பது **குரல்வளை**[48]. வெளியிலிருந்து பார்ப்போருக்கு முன் கழுத்தின் மேல் புடைத்துத் தோன்றுவது இதுவே[49]. இக்குரல்வளையின் உச்சியில்தான் முன்னும் பின்னுமாகப் படுக்கை முறையில் அமைந்த தகடு போன்ற இரண்டு மெல்லிய தசைகள் உண்டு.

---

**46. Trachea or Windpipe 47. Syllables 48. Larynx**
**49. இப்புடைப்பினை ஆங்கிலத்தில் Adam's apple என்பர்.**

இவை இரண்டையும் குரல்தசைகள்[50] எனக் குறிக்கலாம். இக்குரல்தசைகள் இரண்டும் விரிந்து ஒன்றோடொன்று பொருந்தி உள்ளிருந்து வரும் மூச்சுக்காற்றை முழுவதும் தடுக்கக் கூடும்; அல்லது சுருங்கி ஒன்றிலிருந்து ஒன்று விலகி அமைந்து உள்ளிருந்து வரும் மூச்சுக்காற்றைத் தடையின்றி வெளிவிடக்கூடும்; அல்லது இருகுரல்தசைகளும் நெருங்கி அமைந்து உள்ளிருந்து வரும் மூச்சுக்காற்றுச் செறிவுடனும் உரைவுடனும் செல்லுமாறு செய்யக்கூடும். இந்நிலையில் அம்மெல்லிய குரல்தசைகள் துடிதுடித்து அதிரும். இவ்வதிர்ச்சியால் தோன்றுவதே குரல் அல்லது குரலொலி[51] இக்குரலொடு கூடிய எழுத்தொலிகள் மொழிகளில் உண்டு. குரல்தசைகள் விலகி நின்று அதிராதிருக்கப் பல ஒலிகள் பிறக்கின்றன. அவை உயிர்ப்பொலிகள்[52] எனப்படும். [53]"பாங்கு" என்ற தமிழ்ச்சொல்லில் உள்ள ககரம் குரலும் கூடியது. 'பாக்கு'என்ற தமிழ்ச்சொல்லிலுள்ள ககரம் குரல் கூடா உயிர்ப்பொலி.ஆங்கில எழுத்து g குரல் கூடியது k உயிர்ப்பொலி மட்டுமே; குரலொலி- உயிர்ப்பொலி வேறுபாடே இவ்விரண்டிற்கும் உள்ள வேறுபாடாகும். ஆகவே பேச்சொலிகள் எல்லாம் குரல் கூடியவையாகவோ, அல்லது

---

50. Vocal cords குரல்வளையின் உச்சியில் குரல் தசைகளுக்கு இடையில் அமைந்த திறப்புவெளியை glottis என்பர். இவ்வளி செல்வழியை மூடுவதற்கு நாக்கின் வேர்ப்பகுதியில் ஒரு தசைமூடி உண்டு. இதனை epiglottis என்பர். மூச்சு வாங்குகின்றபோது மட்டும் திறந்து உணவு உண்கின்றபோது அத்தசைமூடி வளிசெல் வழியை அடைத்து விடும்.
51. Voice or voiced sound 52. Voiceless sounds 53 குரல்வளைத் தசைகளால் பிறப்பிக்கப்படும் ஓசை மட்டுமே குரல் எனப்படும். மற்ற ஓசை எல்லாம் பொதுவாக ஒலி எனப்படும்.

குரல் கூடா உயிர்ப்பொலிகளாகவோ அமையும்[54]. இக்காரணத்தால் ஒலிகளைப் பாகுபாடு செய்கின்றபோது குரல் கூடலும் கூடாமையும் கருத்தில் கொள்ளப்படும். இவ்வேறுபாடு பல மொழிகளில் பொருள் வேறுபாட்டிற்கு இன்றியமையாததாக விளங்குகின்றது. தமிழ்மொழிக்கு இவ்வேறுபாடு வேண்டியதில்லை போலும். குரல்தசைகள் அதிர்ந்து குரலொலி எழுப்புகின்ற காரணத்தால் அவை ஒலிப்புறுப்புக்கள் என்ற வகையைச் சாரும்.

## 1. 13. மூக்கு

அண்ணத்திற்கு மேலே **மூக்ககம்**[55] அமைந்துள்ளது. மூக்ககத்தின் உட்புறவழி மெல்லண்ணத்திற்கு மேலே அமைந்துள்ளது. மெல்லண்ணம் தசையாலாகியது. அத்தசை மேலுயர்ந்து மூக்கக வழியை அடைக்கவும் கீழ்த்தாழ்ந்து அதனைத் திறக்கவும் கூடிய இயல்புடையது. மெல்லண்ணம் உயர்ந்து மூக்கக வழியை அடைத்திருக்கும் போது மூச்சுக்காற்று வாய்வழியாக மட்டும் வெளிவரும். மெல்லண்ணம் தாழ்ந்து மூக்ககவழி திறந்திருக்கும் போது மூச்சுக்காற்று மூக்குவழியாக வெளிவரும். சிலபோது மூக்குவழி, வாய்வழி ஆக இருவழிகளிலும் மூச்சுக்காற்று

---

54. Voiced sound, Voiceless sound என்ற தொடர்களைத் தமிழில் மொழிபெயர்ப்பதில் தடுமாற்றமும் தெளிவின்மையும் இருக்கின்றன. இவை முறையே ஒலிப்பொலி எனவும் ஒலிப்பிலாஒலி எனவும் மொழிபெயர்க்கப் படுகின்றன. ஒலித்தல் இல்லாத ஒலி எவ்வாறு இருக்க முடியும்? உடன்பாட்டில் தக்க சொல் அகப்படாமையால் ஏதோ ஒருகுறியீடாக உயிர்ப்பொலி என்பது இங்குத் தேர்ந்தெடுக்கப்பட்டது

55. Nasal Cavity இது மூக்கறை எனவும் வழங்கப்படுகிறது

வெளிவரலாம். மூக்குவழியாகக் காற்றுச் சென்றுகொண்டிருக்கப் பிறப்பிக்கப்படும் ஒலியும், வாய்வழியாகக் காற்றுச் சென்றுகொண்டிருக்கப் பிறப்பிக்கப்படும் ஒலியும் தன்மையில் வேறுபாடுடையன. மூச்சுக்காற்று வாய்வழியாகச் சென்று கொண்டிருக்கப் பிறப்பிக்கப்படும் ஒலி வாயொலி[56] எனவும், மூச்சுக்காற்று மூக்கு வழியாகச் சென்று கொண்டிருக்கப் பிறப்பிக்கப்படும் ஒலி மூக்கொலி[57] எனவும் வழங்கப்படும். தொண்டைக்கு மேலாகப் பிறப்பிடம் கொண்ட எல்லா ஒலிகளையும் வாயொலிகளாகவோ, அல்லது மூக்கொலிகளாகவோ பிறப்பிக்கலாம். தகர நகரங்களுக்கிடை உள்ள வேறுபாடு வாயொலி- மூக்கொலி வேறுபாடே ஆகும். தமிழ் மெல்லினவெழுத்துக்களெல்லாம் மூக்கொலி எழுத்துக்களே.

## 1- 14. பேச்சுறுப்புக்கள் தொகையும் வகையும்

பேச்சொலி (சிறப்பாகத் தமிழ்ப்பேச்சொலிகள்) பிறப்பிலே பங்குகொள்ளும் உடலுறுப்புக்களை இங்குத் தொகுத்துக் காணலாம்.

| ஒலிப்புறுப்புக்கள் | ஒலிப்பிடங்கள் |
|---|---|
| கீழிதழ் .... .... .... | மேலிதழ் |
| | மேற்பல் வரிசை |
| நுனிநா .... .... .... | ஈற்றண்ணம் |
| முன்நா .... .... .... | முன்வல்லண்ணம் |
| (முன்நா விளிம்பும்) | நடுவல்லண்ணம் |
| | பின்வல்லண்ணம் |
| பின்நா .... .... .... | மெல்லண்ணம் |
| குரல்வளைத் தசைகள் | |

---

56. Oral sound. 57. Nasal sound

மேற்கண்ட இவற்றோடு மூச்சுக்குழல், நுரையீரல் (மூச்சுப்பை), மூக்ககம், தொண்டை, இவற்றுடன் இணைந் திருக்கும் தசைகள் (வயிற்றுக்கூரை உட்பட), தசைநார்கள் முதலியவையும் பேச்சொலிப்பில் பங்கு கொள்ளுகின்றன.

## 1. 15. ஒலிகளும் வகைகளும்

*1. 15. 1.* இவ்வுறுப்புக்கள் பங்கு கொண்டு பிறப் பிக்கும் பேச்சொலிகளைச் சிறப்பாகக் கொள்ளத்தக்க ஐந்து முறையினவாக[58] மொழியியலறிஞர் பிரிக்கின்றனர். அவை வருமாறு:

*1.* இரண்டுறுப்புக்கள் பொருந்தி உள்ளிருந்து வரும் காற்றை முழுவதும் தடுத்துப் பின் வெடியோசையோடு வெளிவிடலால் பிறக்கும் ஒலிகள் முதல் முறை. இவை **தடையொலிகள் அல்லது தடைவெடியொலிகள்** எனப்படும்.[59] தமிழ்க் க ட த ப ஆங்கில p, t, k இவ்வாறு பிறக்கின்றன.

*2.* இரண்டுறுப்புக்கள் நெருங்கி (அவற்றுள் ஒன்று கவிந்தோ அல்லது குவிந்தோ) நின்று உள்ளிருந்து வரும் காற்றைச் செறிவுறச் செய்து அக்காற்று உறுப்புக்களோடு உரைந்த உரைவுடன் விரைந்து வெளிச் செல்லவிடலால் பிறக்கும் ஒலிகள் இரண்டாம் முறை. இவை **உரை வொலிகள்**[60] எனப்படும். 'இசை' என்ற தமிழ்ச்சொல்லில் உள்ள சகரம் இவ்வாறு பிறக்கிறது. ஆங்கிலத்திலுள்ள f, v, s, z முதலியவை இவ்வாறு பிறக்கின்றன.

---

58. Types or Manners 59. Stops or stop-Plosives
இவை அடைப்பொலிகள் எனவும் வழங்கப்படும்.
60. Fricatives or Spirants

3. நாக்கோ அல்லது அது போன்ற ஓர் ஒலிப் புறுப்போ வாயின் நடுநின்று உள்ளிருந்து வரும் காற்றைத் தன் ஒருபுறமாகவோ இருபுறமாகவோ வெளிவிடலால் பிறக்கும் ஒலிகள் மூன்றும் முறை. இவை **புறவளியொலிகள்** அல்லது **மருங்கொலிகள்**[61] எனப்படும். லகர ளகரங்கள் இவ்வாறு பிறக்கின்றன.

4. ஒலிப்புறுப்பு ஒன்று உள்ளிருந்து வரும் காற்றால் தாக்கப்பட்டு விரைந்து துடித்தலால் பிறக்கும் ஒலிகள் நான்காம் முறை. இவை **துடிப்பொலிகள்**[62] எனப்படும். தமிழ் ரகரமும் ஆங்கில r-உம் இவ்வாறு பிறக்கின்றன.

5. உள்ளிருந்து வரும் காற்று எவ்வகைத் தடையுமின்றி வெளிவர, நாக்கோ இதழ்களோ பல்வேறு நிலைகளில் நின்று வாயகத்தின் உள்ளகநிலையினை மாற்றப் பிறக்கும் ஒலிகள் ஐந்தாம் முறை. இவையே **உயிரொலிகள்**[63] எனப்படும்.

1. 15. 2. எல்லாப் பேச்சொலிகளையும் (குரல்வளைத் தடையொலி[64] தவிர) வாயொலியாகவோ மூக்கொலியாகவோ[65] பிறப்பிக்க முடியும். பெரும்பான்மையான மொழிகளில் மூக்கொலியெழுத்துக்கள் குறிப்பிடத்தக்க சிறப்பான பங்கு கொள்கின்றன. வல்லெழுத்துக்கள் (தடையொலிகள்) எல்லாம் மூக்கொலி பெற்று வேறெழுத்துக்கள் ஆகின்றன. இவற்றின் சிறப்பு நோக்கி மொழியியலறிஞர் மூக்கொலிப்பையும் ஒருமுறை எனக் கொள்ளுகின்றனர்.

---

61. Lateral sounds 62. Vibrants or Trills or Roller sounds 63 Vowels 64. Glottal Stop 65. Oral Sound or Nasal sound

1. 15. 3. மேல் கூறப்பட்டவற்றுள் முதல் நான்கு முறை ஒலிகளும் உள்ளிருந்துவரும் காற்று ஏதாகிலும் ஒருவகையில் மறிக்கப்படுதலால் பிறக்கின்றன. இவ்வாறு மறிப்புக்களால் பிறப்பனவற்றையே **மெய்யொலிகள்**[66] என இலக்கணங்களும் மொழியியலும் வகுக்கின்றன. காற்று எவ்வகை மறிப்புமின்றி வெளிவரப் பிறக்கும் ஐந்தாம் முறை ஒலிகளையே **உயிரொலிகள்** என அவை வகுக்கின்றன. மறிப்புண்மையும், மறிப்பின்மையுமே மெய் உயிர்களுக்கிடையுள்ள வேறுபாட்டிற்கு அடிப்படை என மொழியியல் கொள்கிறது. தடையொலிகளே மூக்கொலிப்புப் பெற்று மூக்கொலிகள் ஆகின்றமையால் இம் மூக்கொலிகளும் மெய்யெழுத்துக்களாகக் கருதப்படும்.

## 1. 16. மெய்யொலிகள் விளக்கம்

இதுகாறும் கூறியவற்றால் ஒருமெய்யொலியினை அறியவும், விளக்கவும் சிறப்பாக நான்கு கருத்துக்கள் வேண்டும் என உணரலாம். அவையாவன:

1. ஒலிப்புறுப்பு[67]
2. ஒலிப்பிடம்[68]
3. ஒலிப்பு முறை[69]
4. குரல் தசை நிலை[70]

மொழியியலறிஞர் இந்நான்கின் அடிப்படையாகவே மெய்யொலிகளுக்குப் பெயரிட்டுள்ளனர். இவற்றின் அடி

---

66. Consonant sounds. obstruction என ஆங்கிலத்தில் வழங்கப்படுவதே இங்கு மறிப்பு எனப்படுகிறது.
67. 68. 1.14-இல் கூறப்பட்டன. 69. 1.15-இல் கூறப்பட்டன 70. 1.12-இல் கூறப்பட்டன.

யாகவே அவைகளை வகை தொகை செய்கின்றனர். இந் நூலுள்ளும் தமிழெழுத்துக்கள் இம்முறையிலேயே ஆராயப்பட்டு வகை தொகை செய்யப்படும். எடுத்துக் காட்டாகத் தமிழ்ப் பகரம் ஒலிக்கின்றபோது கீழிதழ் ஒலிப்புறுப்பாகவும் மேலிதழ் ஒலிப்பிடமாகவும் உள்ளன; உள்ளிருந்து வரும் மூச்சுக்காற்று ஈரிதழாலும் தடுக்கப் படும் முறை உள்ளது; குரல்வளைத் தசைகள் அதிராமை யால் உயிர்ப்பொலியாகவே தோன்றுகிறது. ஆகவே பகரம் ஈரிதழ்த் தடையுயிர்ப்பொலி எனப் பெயர் பெறும்.

## 1. 17. மெய்யொலிகள் பட்டி

ஒலிப்பிட ஒலிப்புறுப்புக்களோடு ஒலிப்பு முறைகளை உறழ்ந்து பேச்சொலிகளைக் குறிப்பிட முடியும். கீழுள்ள பட்டி இவ்வாறு உறழ்ந்து காணத்தக்க பேச்சொலிகளைக் காட்டுகிறது. இப்பட்டியிலுள்ள எல்லா ஒலிகளுமே ஒரு மொழியில் வழங்கும் என்பதில்லை. சில வழங்கமாட்டா. ஆனால் இவை உலகின் பல மொழிகளிலும் பயின்று வழங்குகின்றன. பேச்சொலிகள் எல்லாம், வாயொலிகளா கவோ மூக்கொலிகளாகவோ இருக்கலாம். வாயொலிகள் எல்லாம் குரலொலிகளாகவோ உயிர்ப்பொலிகளாகவோ இருக்கலாம் என்பதும் மேலே கூறப்பட்டது. சில ஒலிகள் தவிர மற்ற ஒலிகள் பெரும்பாலும் வாயொலிகளாக மட் டுமே வழங்குகின்றன. பெரும்பாலும் குரலொலிகளாகவும் வாயொலிகளாகவும் வழங்குபவை மட்டும் இந்தப் பட்டியில் காட்டப்படுகின்றன.

மெய்யொலிகள்

| ஒலிப்புறுப்பு | | | கீழிதழ் | | நுனிநா | | | முன் நா | பின் நா | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| ஒலிப்பிடம் | | | மேலிதழ் | மேற்பல் | | ஈற்றண்ணம் | நடுவல்லண்ணம் | | மெல்லண்ணம் | தொண்டை |
| ஒலிப்புமுறை | தடை | உயிர்ப்பு | p | | t | ṯ | ṭ | Q | k | |
| | | குரல் | b | | d | d̲ | ḍ | q | g | |
| | உரைவு | உயிர்ப்பு | Φ | f | θ | s | ṣ | | H | |
| | | குரல் | β | v | δ | z | ẓ | | h | |
| | மூக்கு | | m | | n | n̲ | ṇ | n̄ | ṅ | |
| | புறவழி | | | | l | l̲ | ḷ | | | |
| | துடிப்பு | | | | r | ṙ | ṛ | | R | |

இப்பட்டியில் காட்டப்பட்ட ஒலிகள் மட்டும்தான் மொழிகளில் வழங்குகின்றன என்பதில்லை. பேச்சொலிகள்

எண்ணற்ற நுண்வேறுபாடுகளோடு ஒலிக்கப்படுகின்றன. சில மொழிகள் மற்ற மொழிகள் அறியாத வேறு பேச்சொலி களை வழங்குகின்றன. எடுத்துக் காட்டாகத் தமிழ் ழகரம் திராவிட மொழியினத்தில் மட்டுமே வழங்குகின்றது.[71] உள்நா ரகரம் சில ஐரோப்பிய மொழிகளில் மட்டுமே வழங்குகின்றது. வளைநாவெழுத்துக்கள் பெரும்பாலும் இந்திய மொழிகளில் மட்டுமே வழங்குகின்றன. இவ்வாறான அரிய பேச்சொலிகள் தனியே விளக்கப்படல் வேண்டும்.

## 1. 18. உயிரொலிகள்

உயிரொலிகளின் பாகுபாடு மெய்யொலிகளின் பாகு பாட்டை விட எளிதே. உள்ளிருந்து வரும் மூச்சுக்காற்று எவ் வகைத் தடையுமின்றி வாய்வழியாக வெளிவருவதால் பிறப் பதே உயிரொலி என மேலே கூறப்பட்டது. மூச்சுக்காற்று, வெளிவருகின்ற போது வாயகத்தில் நாக்குப் பல்வேறு நிலை யில் நின்று அவ்வாயக நிலையினை மாற்றுகிறது. இதழ்களும் குவிந்தும் விரிந்தும் உயிரொலித் தன்மையை மாற்றுகின்றன. ஆகவே உயிரொலிகளின் பிறப்பு மூன்று கருத்துக்களால் விளக்கமுறுகிறது:

1. நாவின் பகுதி
2. நாவின் எழுச்சி (அல்லது உயர்ச்சி)
3. இதழ் நிலை

### 1. 18. 1. முன்னுயிர்கள்

உயிரொலிகளின் பிறப்பிலே முன்நாவும் பின்நாவும் பங்கு கொள்ளுகின்றன. முன்நா வல்லண்ணத்தை நோக்கி மேலெழுந்து நிற்கச் சில உயிரொலிகள் பிறக்கின்றன.

---

71. இவ் ழகரத்தை மேற்கண்ட பட்டியில் அடக்கல் அரிது.

ஆங்கு, ஏங்கு, ஈங்கு என்ற சொற்களை முறையே ஒலிக்க ஒலிக்க முன்நா சிறிது சிறிது மேல் நோக்கி எழுதலை உணரலாம். இதற்கேற்பக் கீழ்த்தாடை முறையே படிப் படியாக மேல் எழுதலையும் காணலாம். இவ்வாறு முன் நாவின் எழுச்சியால் பிறக்கும் உயிரொலிகளை **முன்நா வுயிர்கள் அல்லது முன்னண்ணவுயிர்கள்** அல்லது சுருக்க மாக **முன்னுயிர்கள்**[72] எனலாம்.

### 1. 1 . 2. பின்னுயிர்கள்

இவ்வாறே பின்நா, மெல்லண்ணம் நோக்கி எழச் சில உயிரொலிகள் பிறக்கின்றன. ஆங்கு, ஓங்கு, ஊங்கு என்ற சொற்களை முறையே ஒலிக்க ஒலிக்கப் பின்நா சிறிது சிறிது மேல் நோக்கி எழுதலை உணரலாம். இதற்கேற்பக் கீழ்த் தாடை முறையே படிப்படியாக மேல் நோக்கி எழுதலையும் காணலாம். இவ்வாறு பிறக்கும் உயிரொலிகளைப் **பின்நா வுயிர்கள்** அல்லது **பின்னண்ணவுயிர்கள்** அல்லது சுருக்க மாகப் **பின்னுயிர்கள்**[73] எனலாம்.

### 1. 18. 3. நடுவுயிர்கள்

நடுநா நடுவண்ணம் நோக்கி எழப் பிறக்கும் உயிரொலி களும் உண்டு. இவற்றை **நடுநாவுயிர்கள்** அல்லது **நடு வண்ணவுயிர்கள்** அல்லது சுருக்கமாக **நடுவுயிர்கள்**[74] எனலாம். தமிழ் அகர ஆகாரங்களை நடுவுயிர்கள் எனலாம். ஆனல் இவ்வுயிர்கள் ஒலிக்கும்போது நா மேல்நோக்கி எழுவதில்லை; படிந்தே உள்ளது,

---

72. Front Vowels 73. Back Vowels 74 Central Vowels

### 1. 18. 4. நாவின் எழுச்சி

நாவின் எழுச்சியளவு, பல படித்தாக இருக்கலாம். மூன்ருகவோ, ஐந்தாகவோ, ஏழாகவோ அவ்வெழுச்சியைப் பகுக்கலாம். அது மொழிக்கு மொழி வேறுபடும். நாக்கு மிக உயர்ந்து பிறக்கும் ஒலியை **உயரொலி**[75] எனலாம்; மிகத் தாழ்ந்து பிறக்கும் ஒலியைத் **தாழொலி**[76] எனலாம்; இடைப்பட்ட உயர்வுடைய ஒலியை **இடையொலி**[77] எனலாம்; உயரொலிக்கும் இடையொலிக்கும் இடைப்பட்டதைத் **தாழுயரொலி**[78] எனலாம். இடையொலிக்கும் தாழொலிக்கும் இடைப்பட்டதை **உயர்தாழொலி**[79] எனலாம். இவ்வாறு நாவின் எழுச்சியை ஐந்து படிகளாக வகுக்கலாம்.

### 1. 18. 5. இதழ்நிலை

உயிரொலிகள் நாவின் எழுச்சியால் பிறக்கின்ற போது வாயின் இதழ்கள் **குவிந்தும்**[80] இருக்கலாம்; **பரந்தும்**[81] இருக்கலாம். பின்நா மெல்லண்ணம் நோக்கி எழுகின்றபோது இதழ்கள் குவிந்திருத்தலும் முன்நா வல்லண்ணம் நோக்கி எழுகின்றபோது இதழ்கள் பரந்திருத்தலும் பொதுவாகப் பல மொழிகளில் காணக்கிடைக்கும் பண்பாகும். ஆகவே எல்லா உயிர்களும் **இதழ்குவியுயிர்களாகவோ**, அல்லது **இதழ்பரவுயிர்களாகவோ** இருக்கின்றன.

---

75 High-Sound 76. Low-Sound 77. MidSound
78 Low-Higher sound 79. Higher-Low sound
80. Liprounding 81. Lip-spreading

## 1. 18. 6 உயிரொலிகள் பட்டி

உயிரொலிகளின் வகை தொகைக்கு நாவெழுச்சியின் ஐந்து படிகளும், நாவின் மூன்று பகுதிகளும், இதழ்களின் குவிவும், விரிவும் (பரவுதல்) இன்றியமையாதன. இவற்றின் உறழ்ச்சியால் உயிரெழுத்துக்களின் அளவினைக் கணக்கிட முடிகிறது. கீழ்க்கண்ட பட்டி இவ்வாறு கணக்கிடுதலைக் காட்டுகிறது.

உயிரொலிகள்

| | முன் நா | நடு நா | பின் நா |
|---|---|---|---|
| | இதழ் விரிவு | | இதழ் குவிவு |
| உயர்வு | **i** | *i* | **u** |
| தாழுயர்வு | e | | **o** |
| இடை | ε | ə | ô |
| உயர்தாழ்வு | æ | | **Λ** |
| தாழ்வு | **a** | ä | â |

மேற்கண்ட பட்டி, பதினைந்து வகைப்பட்ட உயிரொலிகளையே காட்டுகிறது. ஆனால் உயிரொலிகளைச் சில மொழியியலார் நாற்பத்திரண்டு வகையினவாகப் பிரித்துக் காட்டுகின்றனர்.[83] நாவின் எழுச்சி ஏழு; நாவின் பகுதி மூன்று; இதழ் குவிவு, விரிவு இரண்டு ஆகியவை உறழ நாற்பத்திரண்டு ஆகின்றன. ஆனால் இவ்வொலிகள் எல்லாம் ஒரே மொழியில் வழங்குவது இல்லை. சிலவே வழங்குகின்றன.

நாவின் எழுச்சி, நாவின் பகுதி, இதழ்நிலை ஆகியவற்றின் அடியாகவே உயிரொலிகளுக்குப் பெயர் குறிக்கப்படுகின்றது. உயிரொலிகள் குரலொலிகளாகவும் இருக்கலாம்; உயிர்ப்பொலிகளாகவும் இருக்கலாம். குரலுயிரொலிகளே மொழிகளில் பெரும்பாலும் வழங்குகின்றன. தமிழ் உயிரொலிகள் எல்லாம் குரலொலிகளே.

## தமிழிலக்கணங்கள் தரும் ஒலியியல்

**பேச்சுறுப்புக்கள்: தொல்காப்பியர் கருத்துக்கள்**

### 1. 19. பேச்சுறுப்புக்கள் தொகை

தொல்காப்பியர் எழுத்தொலிகள் பிறக்குமாற்றைப் பிறப்பியலின் முதல் நூற்பாவில் பொதுவாகக் கூறுகிறார்

உந்தி முதலா முந்துவளி தோன்றித்
தலையினும் மிடற்றினும் நெஞ்சினும் நிலைஇப்
பல்லும் இதழும் நாவும் மூக்கும்
அண்ணமும் உளப்பட எண்முறை நிலையான்
உறுப்புற் றமைய நெறிப்பட நாடி

82. OLA. 2 8. காண்க.

எல்லா எழுத்தும் சொல்லுங் காலைப்
பிறப்பின் ஆக்கம் வேறுவே றியல
திறப்படத் தெரியும் காட்சி யான.[83]

"மூச்சுக்காற்று (வளி) கொப்பூழடியாக (உந்திமுதலா)த் தோன்றித், தலையிலும் கழுத்திலும் (மிடறு) நெஞ்சிலும் தங்கி (நிலைஇ), பல், இதழ், நா, மூக்கு, அண்ணம் ஆகிய இவற்றோடு பொருந்தி அமைதலால் (உறுப்புற்றமைய) எல்லா எழுத்துக்களுக்கும் பிறப்பு வேறு வேறாகி அமைகின்றன" என்பது இந்நூற்பாவின் கருத்தாகும்.[84]

---

83. தொல். எழு. 83. 84 இந்நூற்பாவிற்கு நச்சினார்க்கினியர் வரைந்த உரை இது:

எல்லா எழுத்தும் பிறப்பின் ஆக்கஞ் சொல்லுங்காலை தமிழெழுத்து எல்லாவற்றிற்கும் ஆசிரியன் கூறிய பிறப்பினது தோற்றரவை யாங் கூறுமிடத்து, உந்தி முதலாத் தோன்றி முந்து வளி–கொப்பூழடியாகத் தோன்றி முந்துகின்ற உதானனென்னுங் காற்று தலையினும் மிடற்றினும் நெஞ்சினு நிலைஇ-தலையின் கண்ணும், மிடற்றின்கண்ணும், நெஞ்சின் கண்ணும் நிலைபெற்று. பல்லும் இதழும் நாவும் மூக்கும் அண்ணமும் உளப்பட எண்முறை நிலையான் உறுப்புற்று-பல்லும், இதழும், நாவும், மூக்கும், அண்ணமுமென்ற ஐந்துடனே அக்காற்று, நின்ற தலையும் மிடறும் நெஞ்சுங் கூட எட்டாகிய முறைமையையுடைய தன்மையோடு கூடிய உறுப்புக்களோடு ஒன்றுற்று, அமைய -இங்ஙனம் அமைதலானே, வேறு வேறு இயல அவ்வெழுத்துக்களது தோற்றரவு வேறு வேறு புலப்பட வழங்குதலையுடைய, காட்சியான நாடிநெறிப்பட–அதனையறிவான் ஆராய்ந்து அவற்றின் வழியிலே மனம்பட, திறம்படத் தெரியும் - அப்பிறப்பு வேறுபாடுகளெல்லாங் கூறுபட விளங்கும்.

இந்நூற்பாவின் அடிப்படையிலேயே தொல்காப்பியர் எழுத்துக்களைப் பாகுபாடு செய்கிறார். இவைபற்றி விரிவாகக் காணலாம்.

### 1. 20. உந்தி

தொல்காப்பியர் மூச்சுக் காற்றை 'வளி' எனக் குறிப்பிடுகிறார். மூச்சுக்காற்றுக்குடலுக்கு மேலமைந்த தசைக்கூரை மீது தங்கியிருக்கும் நுரையீரல்களிலிருந்துதான் புறப்படுகிறது. அக்காற்றினை வயிற்றுக்கூரை உந்தி மேல் தள்ளுகிறது. இம்முயற்சியால் உந்தியில் இயக்கம் (அசைவு) தோன்றலாம். இதனையே 'வளி உந்தி முதலாகத் தோன்றுகிறது' எனத் தொல்காப்பியர் குறிப்பிட்டிருக்க வேண்டும்.[85]

---

85. இவ்வாறு கொள்வதன்றி "உந்தி(கொப்பூழ்) முதலா முந்துவளி தோன்"றுகிறது என்று கொள்வது இன்றைய உடலியலறிவுக்குப் பொருந்தவில்லை. மூச்சுக் காற்றின் பிறப்பும் செலவும் பற்றி இன்று பலரும் ஏற்றுக் கொண்டகருத்து இதுவாகும்.

அறிஞர் எஸ். பாட்டர் அவர்கள் கருத்து இங்குக் காணத்தக்கது:

"The primary physical impulse comes from the diaphragm or midriff, that dome-shaped sheet of fibrous tissue which is the muscle of respiration. This tendinous partition separating thorax from abdomen turns its concave side downwards and it is fastened to the sternum or breast bone in front, to the lumbar vertibrae behind and to the cartilages of the lower six ribs on either side............ As the outgoing breath stream is forced by diaphragmatic pressure upwards from the lungs

## 1. 21. வளிசெல் வழிகள்

மேலும் தொல்காப்பியர் "எல்முறைநிலை" பற்றிக் கூறுகிறார். அவற்றுள் மூன்றாகிய தலையிலும் மிடற்றிலும் நெஞ்சிலும் வளிநிலையலைக் குறிக்கிறார். மிடறு கழுத்தாகும். நெஞ்சு மார்பாகும். நெஞ்சில் காற்றுப்பைகளாகிய நுரையீரல்களும், காற்றுக்குழலும் அமைந்துள்ளன. கழுத்தில் குரல்வளையும், தொண்டையும் அமைந்துள்ளன. இவற்றின் வழியாகவே காற்றுச் செல்கிறது. இவ்வாறு காற்றுச் சென்று வருதலையே "வளிதோன்றித் தலையினும் மிடற்றினும் நெஞ்சினும் நிலை இ" எனத் தொல்காப்பியர் குறித்திருக்க வேண்டும். ஆகவே இரண்டாம் அடி வளி செல்வழிகளையே குறிப்பதாக நாம் கொள்ள வேண்டும். மிடறு என்ற சொல்லைத் தொல்காப்பியர் இவ்வியலில் மேலும் இரண்டிடங்களில் பயன்படுத்தியுள்ளார். இவ்விரண்டிடங்களிலும் மிடறு வளிசெல் வழியாகவே குறிக்கப்படுகிறது எனலாம். "மிடற்றுப் பிறந்தவளி[86]", "மிடற்றெழுவளி[87]," என்ற தொடர்களின் பொருள் இதனைத் தெளிவாக்குகிறது. இம்மூன்றுறுப்புக்களும் வளிசெல் வழிகள் தானே ஒழிய இன்றைய மொழியியல் வகுக்கும்

---

through the bronchial tubes and the trachea or windpipe into the mouth it may be checked or impeded in various ways." "(Simeon Potter's Modern Linguistics Andre Deutch. 1957, PP. 14 & 15,)

உந்தி என்ற சொல் உந்து என்னும் வினையடியாகப் பிறந்து காற்றினை உந்தித்தள்ளும் வயிற்றுக் கூரையையே இங்குக் குறிக்கிறது எனத் தக்கணக்கல்லூரி மொழியியலறிஞர் சி. ஆர். சங்கரன் அவர்கள் வற்புறுத்திக் கூறுகிறார்கள்.

86. தொல். எழு. 84 87. தொல். எழு. 99.

ஒலிப்புறுப்புக்கள் அல்ல. தொல்காப்பியர் காற்றுப்பை, காற்றுக்குழல், குரல்வளை, தொண்டை ஆகியவை பற்றிக் குறிப்பாகவும் கூட யாதொன்றும் கூறவில்லை என்பது கருதத்தக்கது. மிடற்றுவளியால் உயிரொலிகளும் யகரமும் பிறக்கின்றன என அவர் பின்னர்ப் பிறப்பியலில் கூறிச் செல்கிறார். ஆனால் நெஞ்சினைப்பற்றிப் பின்னர்ப் பிறப்பியலில் யாதொன்றும் கூறவில்லை. நெஞ்சு (அல்லது அதனுள் அமைந்த உறுப்புக்கள்) ஒலிப்புறுப்பாகவோ அல்லது ஒலிப்பிடமாகவோ அமையாது வளிசெல் வழியாக மட்டுமே அமைந்த காரணத்தால் அவர் அதுபற்றிப் பின்னர்க் கூறவேண்டிய தேவை அமையவில்லை போலும். மிடறு, நெஞ்சு போன்று தலையையும், அவர் வளிநிலையிடமாகக் கூறுகிறார். தொல்காப்பியர் இவ்வாறு கூறுவதன் கருத்து விளங்காச் சிக்கலாகவே உள்ளது. இத்தலை பற்றியும் அவர் பிறப்பியலில் வேறெங்கும் குறிப்பிடவில்லை.[88] வளிசெல் வழியாகத் தலையில் வாயகமும் மூக்ககமும் உள்ளன. அவர் மூக்கினை இதே நூற்பாவில் தனியாகக் கூறுகிறார். ஆகவே தலை என்ற சொல்லால் வாயகத்தை அவர் குறிக்கின்றாரோ? எனக் கருதத்தோன்றுகிறது. இம்முதல் நூற்பாவின் அமைப்பினை நோக்க அதன் இரண்டாம் அடி வளிசெல் வழிகளையும் மூன்று நான்காம் அடிகள் ஒலிப்பிட ஒலிப்புறுப் புக்களையும் குறிப்பிடுவதாகக் கருதலாம். தொல்காப்பியர், மூக்கினை ஒலிப்பிட ஒலிப்புறுக்களுடன் வைத்தெண்ணுவது அமைவுடையதாக இல்லை; வளிசெல்வழிகளோடு மூக்ககம் வாயகம் இரண்டையும் வைத்தெண்ணாது தலையினை வைத்-

---

88 இக்குறையினைப் போக்கத்தான் "தலைவளியால் வல்லினம் பிறக்கும்" என உரையாசிரியர்கள் கூறி வைத்தனர் போலும். அடிக்குறிப்பு 94 காண்க.

நெண்ணியதும் பொருந்தவில்லை. பேச்சொலிப் பிறப்பிலே மூக்கக வாயக உறுப்புக்களின் செய்கை தவிரத் தலையின் செய்கை வேறு யாதொன்றும் இல்லை.[89]

---

89. இவ்விடம் சொல்லாய்வறிஞர் ஞா. தேவநேயப் பாவாணர் கருத்துக் காணத்தக்கது(தொல். எழு. 63. பக்)

"எழுத்தைப் பிறப்பித்தற்கு இடமும் உறுப்பும் என இரண்டு வேண்டும். எழுத்தின் இனத் தன்மையைத் தோற்றும் நெஞ்சு தொண்டை முதலியவை இடம். தனித்தனி எழுத்தைத் தோற்றும் நா பல் முதலியவை உறுப்பு. மூக்கைத் தொல்காப்பியர் உறுப்பென்றார். நன்னூலார் இடமென்றார். இருவரும் தலையை ஓர் இடமாகக்கொண்டனர். இஃது உடல்நூலுக்கும் ஒலி நூலுக்கும் பொருந்துவதாய்த் தோன்றவில்லை"

இந்நூற்பாவில் உள்ள இச்சிக்கல் காரணமாக இந்நூற்பா முழுவதுமே பிற்சேர்க்கை" என்போரும், "இந்நூற்பாவில் 2, 3, 4 ஆம் அடிகள் இடைச்செருகல் என்போரும் உளராயினர். இவ்வறிஞர்தம் கருத்தும் காரணமும் கருதத்தக்கனவே. கீழ்வருவது பேர். தெ. பொ. மீ. அவர்கள் கருத்து.

"Articulatory Phonetics. Gaps. Tolkappiyam devotes a chapter to explain the phonetic articulation of the Tamil sounds. But, here also, there are gaps suggesting that in spite of additions, the old book has not come to us in its entirity. The first sutra in this chapter on phonetics seems to remind us of the Siksas especially Paniniya Siksa. The references to sounds from talai "head" (perhaps the retroflex sounds) and from nencu 'the chest' (perhaps the breathed or unvoiced sounds) are not used in the subsequent explanations. This suggests that this sutram was not originally there." –HTL., p. 52

கீழ்வருவது அறிஞர் சி. ஆர். சங்கரன் அவர்கள் கருத்து:

"A critical study of this sutra reveals that its lines 2, 3 and 4 are interpolations. They mar the general trend of the sutra and its aphoristic nature. They do not fit into the pattern of thougt embodied in the rest of the lines, The thought embodied in line 1 runs without hindrance into line 5, in orderly sequence as தோன்றி, உற்று, அமைய, நெறிப்பட, etc. and does not need the intervening lines for its continuity. The insertion of the lines 2 to 4 in between them disrupts the thought structure, inverts the sequence of the thought as well as the grammatical construction."

"The second line asserts that the breath stays or halt (நிலை) in the head etc, and the fourth line continues this illconceived idea and includes head-as one of the positions which produce phonemes! Tolkappiyar nowhere mentions either in this chapter or elsewhere, head as one of the vocal organs, which gives rise to phonemes. In the stream of speech there is no room for the breath to enter the head or sojourn there. It is not only erroneous but even riduculously preposterosu to state that the breath halts in the head to produce a phoneme at all".

"The lines 2, 3 and 4 thus offend the physiological truth obviously being contrary to it and are therefore manifestly repugnant to the rest of the chapter and to Tolkappiyam as a whole: They have therefore to be expelled as flagrant interpolations, which clearly they are without doubt! Evidently some misguided enthusiast introduced these lines to rectify a supposed defect in order to place phonemes of Tolkappiyam on a par with Sanskrit Phonemes of so called murdhanya Veriety." TC: vol. IX pp. 120 & 121

## 1. 22. பிற உறுப்புக்கள்

மேலும் தொல்காப்பியர் வாயகவுறுப்புக்களாகிய பல், அண்ணம், நாக்கு, இதழ் ஆகியவை பேச்சொலிப் பிறப்பில் பங்குகொள்ளுதலை விளங்க உரைப்பது குறிப்பிடத் தக்கதே. ஆனல் பேச்சுறுப்புக்களை வளிசெல்வழி, ஒலிப்புறுப்புக்கள், ஒலிப்பிடங்கள் என முத்திறத்தனவாக மொழியியலார் வகுத்துக் கொண்டது போன்று அவர் வகுத்துரைக்கவில்லை.

---

தலையினையும் நெஞ்சினையும் தொல்காப்பியர் பிறப்பியலில் பின்னும் கூருமைக்கு, அவை வளிசெல்வழிகளாக மட்டுமே தொழிற்படுகின்றன என்பதும், தனித்தனியே எழுத்தொலிகள் பிறப்பதற்கு அவை எவ்வகையிலும் தொழிற்படுதல் இல்லை என்பதும் காரணமாகலாம். இந் நூற்பா வடமொழியிலக்கணக் கருத்துக்களை ஒட்டி அமைந்திருக்கிறது என இலக்கணவறிஞர் வே. வேங்கடராசுலு ரெட்டியார் தம் "தொல்காப்பியம் எழுத்ததிகார வாராய்ச்சி" யில் (பக்கம்76) எடுத்துக்காட்டுகிருர், அது உண்மையாகலாம். ஆனல் அறிஞர் சி. ஆர், சங்கரன் அவர்கள் எடுத்துக்காட்டியிருப்பது போன்று பின் தோன்றிய மயக்க வழிப்பட்ட மிகையார்வலர், வடமொழிக்கருத்துக்கள் தொல்காப்பியத்தில் இல்லாமை குறையெனக் கருதி அக்கருத்துக்களை இடைச்செருகியிருத்தல் வேண்டும். இப்போலியார்வலர் தொல்காப்பியத்தில் (மற்ற நூல்களிலும் கூட) மேலும் பல இடங்களில் இத்திருப்பணி புரிந்துள்ளார் என்பது இன்று ஆராய்ச்சியொளியால் புலனுகிறது. எனினும்அறிஞர் சி. ஆர் சங்கரனின் இத்தகைய கடுந்தாக்குதலுக்கு இந் நூற்பா உரியதன்று.

## பேச்சுறுப்புக்கள்: நன்னூலார் கருத்துக்கள்

### 1. 23. பேச்சுறுப்புக்கள்தொகை

தொல்காப்பியரைப் பின்பற்றியே நன்னூலாசிரியரும் ஒலிகளின் பிறப்புப் பற்றிப் பொதுவிதி செய்திருக்கிறார்.

நிறையுயிர் முயற்சியின் உள்வளி துரப்ப
எழும்அணுத் திரள்; உரம் கண்டம் உச்சி
மூக்குற்று, இதழ்நாப் பல்லணத் தொழிலின்
வெவ்வே றெழுத்தொலி யாய்வரல் பிறப்பே[90]

தொல்காப்பியரிடத்து நாம் கண்ட சிக்கல் நன்னூலாரால் தீர்க்கப்பட்டதாகத் தோன்றுகிறது. நன்னூலார் உரம் (நெஞ்சு) கண்டம் (கழுத்து) உச்சி (தலை?) மூக்கு ஆகிய நான்கினையும் அணுத்திரள் உறும் உறுப்புக்களாக (வளிசெல்வழிகளாக) த் தெளிவுபடக் கூறியிருக்கிறார்.[91] இதழ், நா, பல், அண்ணம் ஆகிய நான்கினையும் தொழிற்படுமுறுப்புக்களாக (ஒலிப்பிட ஒலிப்புறுப்புக்களாக)வும் அவர் வேறுபடுத்தி உரைப்பது குறிப்பிடத்தக்கது. தலை என்ற சொல்லுக்கு மாறாக நன்னூலார் உச்சி என்ற சொல்லை ஆண்டிருக்கிறார். உச்சி என்ற சொல்லை அவர்

90. நன். 74 / 91 'அணுத்திரள்... உற்று... வரல்' என்ற தொடர் 'வளிசெலல்' என இங்குக் கொள்ளுவதற்கு ஏற்ப அமைந்துள்ளது. வரல்=செலல் தொல்காப்பியத்தின் பிறப்பியல் முதல் நூற்பாவின் முதல் இரண்டடிகளை இவ்வாறுபொருள்படவே நன்னூலார் உணர்ந்திருப்பார், இவ்விரண்டடிகளும் வளிசெல்வழிகள் பற்றியே கூறுகின்றன என நாம்பொருள்கொள்ளுவற்கு இதுவும் ஒருகாரணம்.

வேறெங்கும் ஆளவில்லை. ஆனால் தலை என்ற சொல்லையே "ஆய்தக் கிடந்தலை" என்ற இடத்தில் (உச்சிக்கு மாற்றாக) ஆண்டுள்ளதைக் காணலாம்:

மேலும் தொல்காப்பியரைப் போலாது நன்னூலார், "அவ்வழி

ஆவி இடைமை இடமிட றாகும்,

மேவும் மென்மைமூக்கு; உரம்பெறும் வன்மை" [92]

எனவும்

"ஆய்தக்கு இடம் தலை" [93]

எனவும் உயிரெழுத்துக்களுக்கும் இடையினவெழுத்துக்களுக்கும் பிறப்பிடம் மிடறு (கண்டம்) எனவும் மெல்லெழுத்துக்களுக்குப் பிறப்பிடம் மூக்கு எனவும், வல்லெழுத்துக்களுக்குப் பிறப்பிடம் நெஞ்சு(உரம்) எனவும் வகுக்கின்றார். நன்னூலாரின் இக்கருத்துக்களே சிக்கல் நிறைந்தனவாக உள்ளன. மேல் அவர் இந்நான்குறுப்புக்களையும் அணுத்திரள் உறும் இடங்களாகவே கூறுகிறார். "அணுத்திரள் ... உற்று ....ஒலியாய் வரல்............." என்பது காண்க. இவ்வாறிருக்க இந்நான்குறுப்புக்களையும் மீண்டும் எழுத்துக்களுக்கு இடங்களாக வகுப்பதன் பொருத்தம் விளங்குமாறில்லை. மெல்லெழுத்துக்கள் மூக்கின் வழி மூச்சுக்காற்று வெளிவரப் பிறக்கின்றன. வல்லெழுத்துக்கள், மூச்சுக்காற்றினை ஒலிப்பிடமும், ஒலிப்புறுப்பும் பொருந்தித் தடுக்க அக்காற்று நெஞ்சிலுள்ள மூச்சுப்பையாகிய ஈரலிலும், காற்றுக் குழலிலும், தொண்டையிலும் செறியப் பிறக்கின்றன. உயிரெழுத்துக்களும் இடையினவெழுத்துக்களும் சிறப்பாக மிடற்றில் அமைந்த குரல்தசை

---

92. நன். 75 93. நன். 87

உள்ளிருந்து வரும் மூச்சுக்காற்றால் இயக்கப்பட்டுப் பிறக்கின்றன. இவ்வொலியியல் உடலியல் உண்மைகளையே நன்னூலார் மேற்கண்டவாறு வகுத்திருத்தல் வேண்டும் என ஒருவாறு அமைதி கூறலாம்.[94] ஆனாலும் ஒலி (ஆய்தவொலி) தலையில் பிறக்கிறது என்பது இன்றைய ஒலியியலறிவிற்கு முற்றிலும் ஏலாக்கருத்து.

---

94. தொல்காப்பியர் நெஞ்சு, மிடறு, தலை என்னும் மூன்றையும் வளிசெல்வழிகளாகவே கொண்டிருந்திருக்கலாம் என்பது மேலே கூறப்பட்டது. (1,22 காண்க) தொல்காப்பிய உரையாசிரியர்கள் இளம்பூரணரும் நச்சினார்க்கினியரும் இதனை உடன்பட்டே உரை கூறினர்போலும். "யாப்புற என்றதனான் இடையினத்திற்கு மிடற்றுவளியும் வல்லினத்திற்குத் தலைவளியும் கொள்க" (தொல். எழு. 100) என்ற நச்சினார்க்கினியர் உரையாலும், "இடையெழுத்திற்கு மிடற்றுவளியும் வல்லெழுத்திற்குத் தலைவளியும் கொள்க" (தொல். எழு. 100) என்ற இளம்பூரணர் உரையாலும் இது விளங்குகிறது. 'மிடற்றுவளி' மிடற்றுவழிச் செல்லும் வளி எனவும் 'தலைவளி' தலைவழிச் செல்லும் வளி எனவும் பொருள் கொள்ளத்தகும். ஆனால் தொல்காப்பியர்க்குப் பின் தோன்றிய இலக்கண அறிஞர்கள் சிலர் இம்மூன்றுறுப்புக்களையும் வளிசெல்வழிகள் என உண்மை உணராது பிறப்பிடங்கள் எனப் பிறழ உணர்ந்தனர் போலும். வீரசோழிய உரைகாரர், "உரத்தை வல்லினமும் சிரத்தை ஆய்தமும் கண்டத்தை உயிரும் இடையினமும், மூக்கை மெல்லினமும் பொருந்தும் எனக்கொள்க" எனக் கூறியது இப்பிறழ உணர்வையே காட்டும். இவ்வுரையினைப் பின்பற்றியே "ஆவி இடைமை இடம மிடறாகும்; மேவும் மென்மை மூக்கு; உரம்பெறும் வன்மை." "ஆய்தக்கிடம் தலை" என்ற நன்னூல் நூற்பாக்கள் எழுந்தன போலும். இக்கருத்துக்களின் வளர்ச்சியால் தொல்காப்பியர் கருத்துக்களில் கண்ட (1.21) சிக்கல்கள் தீர்க்கப்பட்டனவாக இல்லை; மாறாகக் குழப்பப்பட்டே உள்ளன.

நெஞ்சு, மிடறு, தலை ஆகியவற்றுடன் மூக்கினையும், வைத்து எண்ணுவது போற்றுதலுக்கு உரியது. இதற்குரிய பாராட்டு வீரசோழியத்துக்கே போய்ச்சேரும். நன்னூல் வீரசோழியத்தைப் பின்பற்றியே இம்மாற்றத்தைச்செய்தது.

தொல்காப்பியரும் நன்னூலாரும் இதழ், நா, பல் அண்ணம் ஆகியவற்றைத் தம் பொதுவிதி நூற்பாவில் பாகுபடுத்தாது கூறியிருப்பினும் பின் நூற்பாக்களில் எழுத்துக்களின் பிறப்பைத் தனித்தனியே கூறுகின்ற போது வேண்டியாங்குப் பாகுபடுத்தியே கூறுகின்றனர்.

## 1. 24. இதழ்கள்

தொல்காப்பியர் பிறப்பியலில் இதழ் என்ற சொல்லை நாலிடங்களில் ஆளுகிறார். பல்லும் நாவும் பேச்சொலிகள் பிறத்தலில் பங்கு கொள்ளுவது போன்று இதழும் பங்கு கொள்ளுகிறது என முதலில் குறிக்கிறார் அவர். இதழ் என்றே அவர் ஆண்டிருந்தாலும், இதழ்கள் எனப் பன்மையாகவே நாம் அதனைக் கொள்ள வேண்டும். "இதழி யைந்து பிறக்கும் பகார மகாரம்"[95] என அவர் குறிப்பது காண்க. இதழ் இயைதல், இதழ்கள் இரண்டும் பொருந் துதல் ஆகும். இதழ்கள் குவிந்து உ, ஊ, ஒ, ஓ, ஔ என ஐந்தும் இசைப்பதையும் அவர் குறித்திருக்கிறார்.[96]

தொல்காப்பியர் இதழை "மேலிதழ்" "கீழிதழ்" என வெளிப்படையாக வேறுபடுத்திக் கூறவில்லை; பொதுவா கவே கூறுகிறார். ஆனால் வகரத்தின் பிறப்புப்பற்றி அவர் கூறும்போது "பல்லிதழ்" இயைய வகாரம்

---

95. தொல். எழு 97 96. தொல். 87

பிறக்கும்''[97] எனக் குறிக்கிறார். இதனால் கீழிதழும் மேற் பல்லும் இயைதலை அவர் குறிக்கிறார் எனவே கொள்ளுதல் வேண்டும். ஆகவே கீழிதழை ஓர் ஒலிப்புறுப்பாக அவர் ஆண்டமை விளங்குகிறது. இதழ்குவிதல், இதழியைதல், ஆகிய இரண்டையும் இதழ்களின் செயல்களாக அவர் கூறியிருப்பது கருதத்தக்கது.

தொல்காப்பியரைப் போன்றே நன்னூலாசிரியரும் இதழ் என்ற சொல்லை நாலிடங்களில் ஆண்டுள்ளார். பல்லும் நாவும் போன்று இதழும் தொழிற்படுதலால் வெவ் வேறெழுத்தொலிகள் தோன்றுகின்றன என முன்னுரை நூற்பாவில் அவர் குறிக்கின்றார்[98]. தொல்காப்பியரைப் பின்பற்றி இதழ்கள் குவிந்து உ, ஊ, ஒ, ஓ, ஔ என்ற ஐந்து எழுத்துக்களையும் பிறப்பிக்கின்றன எனவும் அவர் குறிக்கின்றார்;[99] ஆனால் தொல்காப்பியரை விடத் தெளிவாக இதழை மீயிதழ், கீழிதழ் எனப் பிரித்துக்காட்டி, "மீகீழ் இதழுறப் பம்மப் பிறக்கும்''[100] எனவும் "மேற்பல் இதழுற மேவிடும் வவ்வே''[101] எனவும் உரைப்பது பாராட்டத் தக்கது. தொல்காப்பியர் இங்கெல்லாம் இதழியைதல் என்பதை நன்னூலார் இதழுறல் எனக் குறித்திருப்பதையும் காண்க.

## 1. 25. நாக்கும் அண்ணமும்.

*1. 25. 1.* தொல்காப்பியரும் நன்னூலாரும் நாக்கினை மூன்று பகுதிகளாகப் பிரித்திருக்கின்றனர். இப்பிரிவு

---

97. தொல் எழு. 98 98. நன். 74 99. "உ, ஊ, ஒ, ஓ, ஔ, இதழ் குவிவே" நன். 78 100. நன். 81 101. நன். 85

இன்றைய மொழியியலறிஞர் கருத்துக்களோடு முற்றிலும் ஒத்துள்ளது.

1. நுனிநா: தொல்காப்பியர் இதனை நுனிநா[102] என இரண்டிடங்களிலும், நாநுனி[103] என இரண்டிடங்களிலும், ஆண்டுள்ளார். நன்னூலார் நுனிநா[104] என மூன்றிடங்களிலும் நாமுடி[105] என ஓரிடத்திலும் ஆண்டுள்ளார்.

2. முன்நா: இதனைத் தொல்காப்பியரும், நன்னூலாரும் இடைநா எனக் குறிக்கின்றனர். இருவரும் ஓரிடத்திலேயே இதனைத் தம்நூலில் ஆண்டுள்ளனர்[106]. நுனிநாவிற்கும் பின்நாவிற்கும் இடையில் அமைந்த காரணத்தாலேயே இவ்வறிஞர்கள் இதனை இடைநா எனக் குறித்தனர் போலும். ஆனல் மொழியியலறிஞர் நாவின் நீளத்தை ஒட்டி முன் 3 செ. மீ. நீள நாக்கினை முன்நா எனவும் அதன் கீழுள்ள பகுதியைப் பின்நா எனவும் பகுத்தனர். நுனிநாவிற்கு நீளம் இல்லை. இவ்விலக்கணப் பேராசிரியன்மாரின் கருத்துப்படி சகர ஞகரங்கள் தோன்றும் இடைநா முன்நாவில் அடங்குதல் காணலாம்.

3. பின்நா: தொல்காப்பியர் இதனை "முதல் நா" என இரண்டிடங்களில்[107] குறிக்கிருர். நன்னூலார் "முதல் நா" என இரண்டிடங்களிலும்[108] "அடிநா" என ஓரிடத்திலும்[109] குறிக்கிருர். இப்பின்நா ஆங்கிலத்தில் Root of the tongue எனப்படுவதிலிருந்து வேறுபட்டது.

---

102. தொல் எழு. 91 103. தொல் எழு. 93 104. நன். 79, 83, 86. 105. நன். 80. 106. தொல். எழு 90. நன் 79 107. தொல் எழு. 86, 89 108. நன். 77, 99 109. நன். 82

மேற்கண்ட நாவின் ஒவ்வொரு பகுதியினுடைய மேற்பரப்பும் அண்ணத்தை ஒற்றி நின்று ஒலி பிறப்பிக்கின்றது என்ற கருத்தையே இவ்வறிஞர்கள் உரைக்கின்றனர். இவ்வாறு ஒலிகள் பிறப்பித்தலேயன்றி முன்நா, பின்நாக்கள் குழிந்திருக்க அவற்றின் இருபுற விளிம்புகளும் உயர்ந்து (அல்லது விங்கி) அண்ணத்தைப் பொருந்தி நிற்கச் சில ஒலிகளும் பிறக்கின்றன எனவும் இவ்வறிஞர்கள் குறித்திருக்கின்றனர். இகர ஈகாரங்கள் பின்நா விளிம்பு பின்னண்ணத்தைப் பொருந்தவும் லகர ளகரங்கள் முன்நா விளிம்பு ஈற்றண்ணத்தைப் பொருந்தவும் பிறக்கின்றன என்பது அவர்கள் கண்ட கருத்து.

1. 25. 2. நாக்கினை மூன்று பகுதிகளாகப் பிரித்தது போன்று அந்நாக்கிற்கு மேல் அமைந்த அண்ணத்தை இவ்விலக்கணப் பேராசிரியன்மார் தெளிவுறப் பிரிக்கவில்லை. தொல்காப்பியர் அண்ணத்தின் வெவ்வேறிடத்தில் பிறக்கும் ஒலிகளைப் பற்றிக் கூறும்போது கூட அண்ணத்தைப் பாகுபடுத்தவில்லை. அவர் அண்ணத்தைப் பற்றிப் பத்திடங்களிலே குறிக்கிறார். தொல்காப்பியத்தின்

> ககார ஙகாரம் முதல்நா அண்ணம்
> சகார ஞகாரம் இடைநா அண்ணம்
> டகார ணகாரம் நுனிநா அண்ணம்[110]

என்ற மூன்று நூற்பாக்களின் பொருள்செல்முறையை நோக்க அண்ணத்தின் மூன்று பகுதிகள் விளக்கமுறலாம். நச்சினார்க்கினியர் இவற்றுக்கு உரை சொல்லும்போது "முதல் நா முதலண்ணம்" என்றும், "இடைநா இடை

110. தொல். எழு. 89, 90, 91.

யண்ணம்" என்றும் "நுனிநா நுனியண்ணம்" என்றுமே பொருளுரைக்கின்றார். நன்னூலாரும் ஓரிடத்தில் தவிர மற்ற எல்லாவிடங்களிலும் பாகுபடுத்தாது அண்ணம் எனப் பொதுப்படவே கூறிச்செல்கிறார். ஓரிடத்தில் மட்டும் "அடியண்ணம்"[111] என்ற குறியீட்டை ஆண்டுள்ளார். இதனால் இடையண்ணம், முன்னண்ணம் என்ற பாகுபாடுகளையும் அவர் கருதியிருத்தல் வேண்டும் எனக் கொள்ளலாம். முன்னை இலக்கணப் பேராசிரியன்மாரின் அண்ணம் பற்றிய கருத்துக்கள் போதிய அளவு நுட்பமானவை அல்ல என்றே கொள்ளல் வேண்டும்.

## 1. 26. அண்பல்

ஆனால் தொல்காப்பியரும் நன்னூலாரும் வேறொரு நுண்ணிய கருத்தினைக் குறித்துள்ளனர். மேல்வரிசைப் பற்களின் அடியும், அண்ணமும் இணையும் இடத்தைப் பன்முறை குறிப்பிடுகின்றனர். நாவின் பகுதிகள் அவ்விடத்தைப் பொருந்தப் பல ஒலிகள் பிறக்கின்றன என்பதை அவர்கள் எடுத்துக்காட்டுகின்றனர். இவ்விடத்தைக் குறிக்க அவர்கள் படைத்த சொற்கள் பலவாகும். **"அண்பல்"**[112] **"அண்பல் முதல்"**[113] **"அண்ணம் நண்ணிய பல்முதல் மருங்கு"**[114] எனத் தொல்காப்பியரும், **"அண்பல்"**[115], **"அண்பல் முதல்"**[116], **"அண்பல்லடி"**[116], என நன்னூலாரும் வழங்கியுள்ளனர். "அண்பல்" என்பது "அண்ணம் நண்

---

111. நன். 82 112. தொல். எழு. 86 113. தொல். எழு 96 114. தொல். எழு. 93 115. நன் 77 116 நன் 80, 84.

லிய பல்" எனப்பொருள் கொள்ளத்தக்கது.[117] பல் முதல் என்பதும் பல்லடி என்பதும் ஒரு பொருளினவே.

## 1. 27. இலக்கணங்கள் பேசாதவை

தொல்காப்பியரும் நன்னூலாரும் தொண்டை, மூச்சுக் குழல், நுரையீரல்கள், குரல்வளை, குரல்தசைகள் ஆகியவை பற்றியும் அவற்றின் தொழில்பற்றியும் யாதொன்றும் குறிப் பிடவில்லை. தொல்காப்பியர் மிடறு எனவும் நன்னூலார் மிடறு, கண்டம் எனவும் கழுத்தினைக் குறித்திருக்கின்ற னர். தொல்காப்பியர் 'மிடற்றுப் பிறந்த வளி' யால் உயிரெழுத்துக்களும், 'மிடற்றெழு வளியிசையால்' யகரமும் பிறக்கின்றன என்கின்றார். நன்னூலார் இடையின எழுத்துக்களுக்கும், உயிரெழுத்துக்களுக்கும் இடம் மிடறு என்கிறார். இவ்விரு நூலாரும் இத்தொடர்களால் புலப் படுத்தும் கருத்துக்கள் தெளிவுபடவில்லை. மிடற்றி லமைந்துள்ள குரல்தசை யதிர்ச்சியால் தோன்றும் குர லொலிகளையே இவ்வாறு குறிக்கின்றனரோ எனக் கருதத் தோன்றுகிறது. தமிழ்மொழியில் குரலொலி உயிர்ப் பொலி வேறுபாடு பொருள் புலப்பாட்டிற்குத் தேவை யில்லாமையால் அவ்வறிஞர்கள் குரலொலியினைக்

---

117. இது Alveodental எனப்படும். நச்சினார்க்கினியர் "அண்பல் முதல்நா விளிம்புறல் உடைய" [தொல். எழு 86] என்ற நூற்பாவில் "அண்பல்"லினை வினைத்தொகை யாகக் கொண்டு பொருளுரைக்கின்றார். "அண்பல் வினைத் தொகை எனவே நாவிளிம்பு அணுகுதற்குக் காரணமான பல்லென்று அதற்கோர் பெயராயிற்று". இங்கு அண் எனப் படுவது அண்ணமே என்று கொள்ளுவதே சிறந்தது எனலாம்.

குறிப்பிடாது போயினர் போலும்.[118] அவர்கள் மிடறு எனவும் கண்டம் எனவும் குறித்ததைத் தொண்டை, குரல்வளை என ஒருவாறு கொள்ளலாம். நுரையீரல்களை யும் மூச்சுக்குழலையும் அவர்கள் ஒருவாறு நெஞ்சு அல்லது உரம் என்ற உறுப்பால் குறித்தனர் போலும்.

தொல்காப்பியரும் நன்னூலாரும் உள்நாக்குப் பற்றி யும் ஒன்றும் கூறவில்லை. உள்நாக்குத் தமிழ்ப் பேச்சொலிப் பிறப்பில் ஒரு சிறிதும் பங்கு கொள்ளவில்லை.

1. 28. பலவகை

பல்லினைப்பற்றி இவ்விரு நூலாசிரியன்மாரும் பன் முறை கூறுகின்றனர். ஆனால் தொல்காப்பியர் மேற்பல்,

---

118. தொல்காப்பியர் குரலொலி பற்றிக் குறிப்பிடுகிறார் என்பது ஒருசாரார் கருத்து. அவர் உயிரெழுத்துக்களையும் யகரத்தையும் மூக்கொலிகளையும் விளக்குகின்றபோது 'இசைத்தல்' என்னும் வினையைப் பயன்படுத்துகிறார். (தொல். எழு. 84, 85, 99, 100 எ. கா.' பன்னீருயிரும். மிடற்றுப் பிறந்த வளியின் இசைக்கும்') இவை அனைத்தும் குரலொலிகூடியவையே. பிற மெய்யெழுத்துக்கள் குரலொலி களும் அல்ல; தொல்காப்பியரும் இவற்றின் விளக்கத்துக்கு 'இசைத்தலையும்' பயன்படுத்தவில்லை. ஆதலால் குர லொலித்தல்' (voicing) என்னும் பொருளில் 'இசைத்தல்' என்னும் சொல் தொல்காப்பியரால் பயன்படுத்தப் பட்டுள்ளது என்பர் இச்சாரார்.

It is significant that when mentioning the vowels Tolkappiyam uses the word icaikkum' which probably has to be interpreted as voiced. In Sutra 33 also the term 'icai' occurs in 'orricai' and there also one may interpret it as referring to the sound of the voiced consonants—the nasals and the semi-vowels. P. 165. A Modern Evaluation of Nannul.

கீழ்ப்பல், கடைவாய்ப்பல் என்ற எவ்வகை வேறுபாடு மின்றிக் கூறிச் செல்கிறார். கடைவாய்ப்பல்லினையும் மேற்பல் வரிசையினையும் தெளிவுபடக் கூறவேண்டிய இடங்களில் கூட அவர் வேறுபடுத்தாது பொதுப்படவே கூறியிருக்கிறார்[119]. நன்னூலார் மட்டிலும் வகரத்தின் பிறப்பைக் கூறுகின்றபோது "மேற்பல் இதழுற மேவிடும் வவ்வே"[120] என மேற்பல் வரிசையைப் பிரித்துக் கூறுகிறார். கீழ்ப்பல் வரிசை இலக்கணங்களில் கூறப்படவுமில்லை; தமிழ்ப் பேச்சொலிகளுக்குப் பயன்படுவதுமில்லை.

## 1. 29. உறுப்புக்கள் தொழிற்பாடு

இன்றைய ஒலியியல், ஒலிகளின் பிறப்பிலே **முறை**[121] என்ற ஒன்றைக் குறிப்பிடுகிறது. **தடை. உரைவு. துடிப்பு. தொடர்வு, இதழ் குவிவு, இதழ்விரிவு, தட்டல்** முதலிய சில இன்றைய ஒலியியல் கூறும் முறைகள். இம்முறைகளுக்கு ஏற்பவே ஒலிகள் தடையொலிகள், உரைவொலிகள் முதலாக வகைப்படுகின்றன. இந்த முறைகள் எல்லாம் பேச்சுறுப்புக்களின் பல்வேறு தொழிற்பாடுகளால் தோன்றுகின்றன. தமிழிலக்கணங்கள் இத்தகைய தொழிற்பாடுகள் பலவற்றைக் குறித்திருக்கின்றன. இவற்றின் துணைக் கொண்டு தமிழ் எழுத்துக்களை வகை செய்யலாம். அது மட்டுமல்லாது இத்தகைய தொழிற்பாடுகளைக் குறித்திருத்தலால் பண்டையாசிரியர்கள் பழந்தமிழொலிகளை ஆராய்ந்த நுட்பமும் ஆழமும் நமக்குப் புலப்படுகின்றன.

---

119. "இ ஈ எ ஏ ஐ ..................அண்பல் முதல்நா விளிம்புறல் உடைய" (தொல் எழு 86), "பல்லிதழ் இயைய வகாரம் பிறக்கும்" (தொல் எழு. 98) என்ற நூற்பாக்களின் பொருளை எண்ணுக. 120 நன். 85 121. Manner of Articulation

**அங்காத்தலும் இதழ்குவிதலும்:** அ, ஆ, இ, ஈ, எ, ஏ, ஐ ஆகியவை அங்காத்தியலும் என்கிறூர் தொல்காப்பியர்.[122] பொதுவாக வாயகம் திறத்தலை இது குறிப்பிடுகிறது எனப்பலர் கருதுகின்றனர். இந்தச் சொல்லுக்கு அதுவே பொருளாக இருந்தாலும் இந்த இடத்தில் அதனேடு வேறு பொருளையும் கருதவேண்டியிருக்கிறது. மேலே கண்ட உயிரெழுத்துக்கள் போக எஞ்சிய உ, ஊ, ஒ, ஓ, ஔ ஆகியவற்றை ஆசிரியர் தனியே தந்து 'ஐந்தும் இதழ் குவிந்தியலும்' என்கின்ருர்.[123] உயிரெழுத்துக்கள் பிறப்பிலே ஆசிரியரால் இவ்வாறு அங்காத்தலும் இதழ் குவிதலும் மட்டுமே குறிப்பிடப்படுகின்றன. இ,ஈ, எ, ஏ, ஆகியவை இதழ் விரிந்து (=பரந்து) பிறப்பவை எனப் பின்னர்க் காண்போம்.[124] ஆதலால் இவற்றுக்கு உரிய அங்காப்பு இதழ்குவிதலுக்கு எதிர்மறையாக இதழ்விரிதலைக் குறித்தல் வேண்டும்.

**ஒற்றலும் இயைதலும்:** தடையொலிகள் தோன்றக் காரணமாக ஒலிப்பிடமும் ஒலிப்புறுப்பும் நன்கு பொருந்தி நின்று உள்ளிருந்து வரும் காற்றை முழுதும் தடுத்தல் வேண்டும். இவ்வாறு உறுப்புக்கள் பொருந்துதலைத் தொல்காப்பியர் ஒற்றல் எனவும் இயைதல் எனவும் குறிப்பிடுகிருர். த, ந, ற, ன, ப, ம ஆகியவற்றின் பிறப்பைக் கூறுகின்றபோது இச்சொற்கள் பயன்படுதல் இக்கருத்தை வலியுறுத்துகின்றன.[125] ஆதலால் 'ஒற்றலும்' 'இயைதலும்' இன்றைய ஒலியியல் கூறும் தடுத்தல் அல்லது அடைத்தல் ஆகிய கருத்தைச் சுட்டி நிற்கின்றன எனக்கொள்ளலாம்.

---

122: தொல். எழு.85, 86. 123. தொல். எழு 87. 124. 1,5, 18. காண்க. 125. தொல்.எழு. 93, 94, 97.

நகரம் பற்றி விளக்குகின்றபோது தொல்காப்பியர் 'நா நுனி பரந்து மெய்யுற ஒற்ற' என்று கூறி ஒற்றுதலை மேலும் நுட்பமாக விளக்குகிறார். 'பரந்து மெய்யுற' என்ற தொடர் தொழிற்பாட்டினை ஐயமின்றித் தெளிவாக்குகின்றது.

**வருடல்.** ழகர ளகரங்கள் மேலைநாட்டு மொழிகளில் இல்லை என்னும்படி அருகி வழங்குவன. ஆதலால் மேலை நாட்டு மொழியியல்கூட இத்தமிழொலிகளை விளக்சத் திணறுகின்றது; இவற்றை விளக்க அங்குத் தக்க கலைச் சொல் இல்லை எனவே கூறிவிடலாம். தொல்காப்பியர் ரகர ழகர ளகரங்களை விளக்க வருடல் என்ற சொல்லையே பயன்படுத்துகிறார். தமிழர்களே இதன் பொருத்தத்தை உணர முடியும். நா அண்ணத்தை வருட இவ்வொலிகள் பிறக்கின்றன.[126]

**அணருதல்.** தொல்காப்பியர் நுனிநா அணருதல் பற்றிக் குறிப்பிடுகிறார். ற, ன, ர, ழ ஆகியவை இத்தொழிற் பாட்டோடு பிறக்கின்றன என்பது அவர் கருத்து.[127] நுனிநா மேல்நோக்கி எழுதல் என்பது இத்தொடருக்குப் பொருள். இன்றைய ஒலியியல் retroflexion எனக் குறிக்கும் கருத்தையே இத்தொடர் சுட்டுகிறது எனல் வேண்டும். வளைநாவெழுத்துக்கள் பண்டையிந்தியாவில் திராவிட மொழிகளுக்கே உரியவை. பண்டை வளைநா வொலிகளை விளக்கவும் நாம் அறியவும் தொல்காப்பியர் ஆண்ட இத்தொடரே பெரிதும் துணைசெய்கிறது. நா அணரினல்தான் வருடலும் நடக்க முடியும். ஆகவேதான் ரகர, ழகரப் பிறப்பினைக் குறிப்பிடும் போது தொல்காப்பி யர் நுனிநா அணரி அண்ணம் வருடலைக் குறிப்பிடுகிறார்.

126. தொல். எழு. 95 127. தொ.எழு. 91, 94.

**கண்ணுற்றடைதல்.** 'வளியிசை கண்ணுற்றடைய யகரம் பிறக்கும்'[128] என்பார் தொல்காப்பியர். 'இடத்தை நெருங்கிச் செறிதல்' என்ற பொருளை இத்தொடருக்குத் தரலாம். இன்றைய ஒலியியல், ஒலிப்பிடமும் ஒலிப்புறுப்பும் நெருங்கி நிற்கவும் உள்ளிருந்து வரும் காற்று உரைவுடன் செல்லவும் உரைவொலி தோன்றுதல் பற்றிப் பேசுகின்றது. இத்தகைய உரை நிலையையே 'வளியிசை கண்ணுற்றடைதல்' என்னும் தொடர் குறிப்பிடுகிறது எனல் வேண்டும். இவ்வாறு கொள்ளுவது சரியானல் தொல்காப்பியர் கேட்ட யகரம் ஓர் உரைவொலியாகும்.

**உறுதல்.** தொல்காப்பியர் மேலும் பல இடங்களில் உறுதல் என்னும் சொல்லைப் பயன்படுத்துகிருர். பேச்சுறுப்புக்கள் பொதுவாகப் பொருந்துதலை இச்சொல் குறிக்கிறது.

நன்னூலாசிரியர் உறுப்புக்களின் தொழிற்பாடுகள் பற்றிப் பேசுகையில் பெரும்பாலும் தொல்காப்பியரையே பின்பற்றிச் செல்லுகிருர். ஆனல் தொல்காப்பியர் கண்ட நுண்ணிய வேறுபாடுகளை நன்னூலார் குறிப்பிடவில்லை. பெரும்பாலான இடங்களில் உறுதல் என்னும் தொழிற்பாட்டையே அவர் குறிப்பிடுகிருர். தொல்காப்பியர் கண்ட 'இயைதல்' 'அணருதல்' 'கண்ணுற்றடைதல்' ஆகிய தொழிற்பாடுகளை நன்னூலார் காணவில்லை. தொல்காப்பியர் கண்ட 'அங்காத்தல்' 'இதழ்குவிதல்' 'ஒற்றல்' 'வருடல்' 'உறுதல்' ஆகியவற்றை அவர் தருகிருர். தொல்காப்பியர் நன்னூலார் ஆகியோரிடை அமைந்த இவ்

---

128. தொல். எழு. 99

வேறுபாடு ஒருகால் தமிழ்மொழியில் உற்ற மாற்றம் காரணமாகக்கூட நேர்ந்திருக்கலாம். ஆனாலும் இது மேலும் ஆராய்தற்கு உரியது.

## 1. 30. முடிவுரை

இன்றை மொழியியலார் கண்ட ஒலியியல் தரப்பட்டது. அதனோடு தமிழிலக்கணங்கள் கூறும் ஒலியியற் கருத்துக்கள் உறவுபடுத்திக் காட்டப்பட்டன. ஆங்காங்கே தமிழ்க் கருத்துக்களின் வன்மை மென்மைகள் சுட்டிக் காட்டப்பட்டன. இறுதியில் பொதுவான சில கருத்துக்கள் எழுகின்றன.

1. இன்றைய மொழியியல் பேச்சொலிகளை எம்மொழியுடனும் உறவுபடுத்தாது பொதுவாகத் தனியே ஆராய்கிறது. அதுவே ஒலியியல். அத்தகைய தனிமைப் பொதுமையாராய்ச்சியைத் தமிழிலக்கணங்களில் காணமுடியவில்லை. தொல்காப்பியம் முதலான இலக்கணங்கள் தமிழ்ப் பேச்சொலிகளைத்தான் ஆராய்கின்றன. தொல்காப்பியம் முதலானவை தமிழிலக்கணங்களே ஒழியப் பொதுமையிலக்கணங்கள் அல்ல. ஆதலால் பொதுமையொலியியலை அங்கு எதிர்பார்க்க முடியாதுதான்.

2. இன்றை மொழியியல் பெரும்பாலும் பேச்சொலிகளை ஆராயும் முறை ஒலிப்பியல் முறையே.[129] தமிழிலக்கணங்களும் அவ்வாறே ஒலிப்பியல் முறையிலேயே ஒலிகளை ஆராய்கின்றன. அவை ஒரு சிலபோது கேள்வி முறை ஆராய்ச்சியையும் சேர்த்துக் கொள்ளுகின்றன.[130]

---

129. Articulatory phonetics

130. Auditory phonetics

எடுத்துக்காட்டாக வல்லினம் மெல்லினம் இடையினம் என்னும் பாகுபாடு கேள்விமுறையை ஒட்டி அமைந் திருப்பது காண்க.

3. தொல்காப்பியர் தமிழொலிகள்பற்றிக் கண்ட கருத் துக்கள் பெரும்பாலும் இன்றை மொழியியலுக்கு உடன் பாடே. தொல்காப்பியர் காலத்தில் ஒலியியல் ஆராய்ச்சி இந்த அளவு நடந்திருக்கிறது என்பது பெரும் பாராட்டுக்கு உரியது; தமிழர் பெருமைப்படுதலுக்கும் உரியது; ஆனால் பின்னர்த் தோன்றிய இலக்கணங்கள் தொல்காப்பியத்தைக் கண்மூடிப் பின்பற்றிச் செல்கின்றன. அவை புதிய ஆராய்ச்சியும் செய்யவில்லை; ஒலியியலை வளர்க்கவும் இல்லை. மாறாக ஒலியியலாராய்ச்சி தேய்ந்து கொண்டே வந்தது. நன்னூல், ஒலியியலைப் பொறுத்த வரை தொல்காப்பியக் கருத்துக்களில் இங்குமங்குமாகச் சில திருத்தங்கள் செய்தது தவிரப் புதுமை ஒன்றும் செய்யவில்லை என்பது இங்குக் கருதத்தக்கது. பிற் காலத்தில் தமிழொலிகளில் மாற்றங்கள் ஏற்பட்டன; அம்மாற்றங்கள் புதிய ஆராய்ச்சிக்கு வாய்ப்புத் தந்தன. ஆனால் புதிய ஆராய்ச்சிதான் தோன்றவில்லை.

---

ûṡṛÇçōḍΦ‡ṉṉɛāó

# மெய்யெழுத்துக்கள்

## 2. 0. முன்னுரை

உயிரெழுத்துக்கள், மெய்யெழுத்துக்கள் ஆகியவற்றின் பிறப்புநிலை, எழுத்துநிலை, எழுத்தொலிநிலை, பண்டுதொட்டு இன்றுவரையான வரலாறு ஆகியவை இவ்வியலுள்ளும் அடுத்த இயலுள்ளும்[1] ஆராயப்படும் இன்றைத்தமிழில் இவ்வெழுத்துக்களின் நிலைபற்றி இந் நூலாசிரியர் கருத்துக்கள் முதலில் கூறப்படும்; மற்ற அறிஞர்கள் கூற்றுக்கள் அடுத்துத் தரப்படும்; அதன் பின் அவற்றின் பண்டைய வரலாறு எடுத்துக்காட்டப் படும்.

திராவிட மொழியியலறிஞர் Modern Tamil என்று குறிப்பதே இன்றைத்தமிழ் என இங்கும் குறிக்கப்படுகிறது. ஆனால் இன்றைத்தமிழ் எது என வரையறுப்பதும் எளிதல்ல. தமிழகக் கல்விக் கூடங்களிலும், இலக்கியப் படைப்புக்களிலும், செய்தித்தாள்களிலும், பிறதாள்களிலும், அரசினர் பணிமனைகளிலும், நாள்தோறும் தமிழ் மக்கள் தமக்குள் உறவாடுவதிலும் இன்று பயன்படுத்தப்படும் எழுத்துத்தமிழையே[2] அதாவது இலக்கியத்தமிழையே[3] பொதுவாக இன்றைத்தமிழ் எனக்

---

1. Chapter 2. Written Tamil 3. Literary Tamil

கொள்ளவேண்டும். இத்தமிழே தமிழர்கள் வாழும் எல்லா இடங்களிலும் எழுத்துத் தமிழாகப் பயன்படுத்தப் படுகிறது. தமிழ்மக்கள் பேசும்போது பயன்படுத்தும் பேச்சுத்தமிழும்[4] இன்றைத்தமிழில் ஒருபகுதியாகக் கொள்ளப்படவேண்டும். ஆனாலும் எழுத்துத்தமிழும், பேச்சுத்தமிழும் வேறுபட்டு விளங்குகின்றன. எழுத்துத்தமிழ் பழந்தமிழ் சார்ந்திருக்கிறது; பேச்சுத்தமிழ் நாள்தோறும் மாறும் மாற்றங்களைச் சார்ந்திருக்கிறது. ஆகவே பேச்சுத்தமிழ் இடந்தோறும், மக்களினந்தோறும் வேறுபடுகிறது. இக்காரணத்தால் இந் நூலில் இன்றைய எழுத்துத்தமிழ், இன்றைத்தமிழ் எனவும் மக்கள் பேசும் தமிழ் பேச்சுத்தமிழ் எனவும் வேறுபடுத்தப்பட்டுக் குறிக்கப்படுகின்றன.

இன்றைத் தமிழெழுத்துக்களை இன்றைய ஒலியியல் முறைப்படி ஆராய்ந்து கட்டுரைகளும் நூல்களும் எழுதிய அறிஞர்கள் டாக்டர் மு. வ., பேராசிரியர் தெ. பொ. மீனாட்சிசுந்தரனார், செக்கோஸ்லேவேகிய நாட்டுத் தமிழறிஞர் பேராசிரியர் டாக்டர் கமில் சுவலபில், இலண்டன் பல்கலைக்கழக மொழியியல் பேராசிரியராயிருந்து காலஞ்சென்ற ஜே. ஆர். பெர்த்த், காலஞ்சென்ற பேராசிரியர் எல். வி. இராமசாமி, திராவிட மொழியியலின் தந்தை டாக்டர் இராபெர்ட் கால்ட்வெல் ஆகியோரின் கருத்துக்கள் இந்நூலில் எடுத்துக் காட்டப்படுகின்றன. பேராசிரியர் தெ. பொ. மீனாட்சிசுந்தரனார் திரவிடஇந்தைரோப்பிய மொழியியலறிஞர்கள் பேராசிரியர்கள் எம். பி. எமனோ, டி. பரோ, பேராசிரியர்

---

4. Spoken Tamil or Tamil Speech

எல்.வி. இராமசாமி, மொழியியலறிஞர் கே. வி. சுப்பையா, திராவிடமொழியியலறிஞர் இராபெர்ட் கால்ட்வெல் ஆகிய அறிஞர்கள்,[5] திராவிட மொழிகளின் பண்டை எழுத்தியல்[6] துறையில் பணிபுரிந்து அருங்கருத்துக்களைக் கண்டு கூறியிருக்கின்றனர். அன்னாரின் கருத்துக்கள் எழுத்துக்களின் பண்டை வரலாறு பற்றி உரைக்கும் போது எடுத்துக் காட்டப்படும். தமிழுக்கு இலக்கணம் வகுத்த பேரறிஞர்கள் தொல்காப்பியர், பவணந்தி முனிவர் முதலியோர் தமிழைப் பேசி ஆராய்ந்து இலக்கணம் கண்டனர். இவ்வறிஞரின் கருத்துக்களும் இங்குச் சிறப்பிடம் பெறும்.

பேச்சு மொழியிலுள்ள எழுத்துக்களின் பிறப்பையும், ஒலியையும் அறிவது எளிது. பேசுவோரே தன் ஒலிப்புறுப்புக்களும் ஒலிப்பிடங்களும் எவ்வாறு தொழிற்படுகின்றன என்று உணர்ந்து குறிக்க முடியும். பிறர் பேசுவதை ஒலியியலறிஞர்கள்[7] கூர்ந்து நோக்கியும், நுண்கருவிகள் கொண்டு ஆராய்ந்தும் குறிக்க முடியும். இவ்வாறுதான் இன்றைத்தமிழின் எழுத்துக்களது பிறப்புப் பற்றி இந்நூலுள் கூறப்படுகிறது. ஆனல் பழந்தமிழின் எழுத்துக்கள் பற்றி இவ்வாறு அறிதல் முடியாது. அதற்குப் பல்வேறு முறைகளிலும் துறைகளிலும் கிடைத்த செய்திகளை இணைத்துக் காணுதல் வேண்டும். பண்டை இலக்கணவாசிரியர்களும் உரையாசிரியர்களும் கண்டு கூறிய கருத்துக்கள் இவ்வகையில் பெரிதும் பயன்படும்; தமிழ் மொழியின் எழுத்-

---

5. Dr. Kamil zvelebil; Prof. J. R. Firth; Dr. Robert Caldwell; Prof. M. B. Emeneau; Prof. T. Burrow

6 Phonology 7. Phoneticians

துக்கள் பற்றிப் பிற மொழியறிஞர்கள் தம் இலக்கண நூல்களுள்ளோ பிறவற்றுள்ளோ குறித்துவைத்த கருத்துக்களும் பயன்படும்; தமிழ்ச்சொற்களைப் பிறமொழியினர் தம் மொழியெழுத்துக்களால் எழுதி வைத்தவையும் மிகப் பயன்படும். தமிழ்மொழி இலக்கியங்களிலேயே எதுகை மோனை முதலிய முறைகளால் எழுத்துக்களின் உறவும் தன்மையும் விளங்கலாம். இவையும் பண்டை எழுத்துக்களின் இயல்பு பிறப்புப் பற்றி அறிய உதவும். அயல்மொழிகளுக்குக் கடன்போன தமிழ்ச் சொற்களாலும், தமிழ் மொழிக்குள் கடன் வந்த அயல் மொழிச் சொற்களாலும் எழுத்துக்களின் இயல்பும் பிறப்பும் ஓரளவு தெளிவுறலாம். இவ்வாறு பல்வகையிலும் கிடைத்த செய்திகளைக் கொண்டே பண்டைத் தமிழெழுத்துக்களின் இயல்பும் பிறப்பும் இங்கு அறியப்படுகின்றன.

**பழந்தமிழ்** அல்லது **பண்டைத்தமிழ்** என இங்குக் குறிக்கப்படுவது எட்டுத்தொகை, பத்துப்பாட்டு, பதினெண்கீழ்க்கணக்கு, இரட்டைக்காப்பியங்கள், தொல்காப்பியம் ஆகியவற்றின் தமிழ் ஆகும். அவற்றை அடுத்து ஏறத்தாழ ஓராயிரம் ஆண்டுத்தமிழ் இடைத்தமிழ் அல்லது **இடைக்காலத்தமிழ்** எனக் குறிக்கப்படும்

## 2. 1. ககரம்

*2. 1. 0.* தொல்காப்பியம் முதல் இன்றைய பள்ளிச் சிறுவரிலக்கணம் உட்பட்ட இலக்கண நூல்கள் தமிழில் பதினெட்டு மெய்கள் உண்டு என இலக்கணமுரைக்கின்றன. இந்தப்பதினெட்டு மெய்களும்,

வல்லினம் கசடத பற என ஆறே[8]
மெல்லினம் ஙஞணந மன என ஆறே[9]
இடையினம் யரலவ ழள என ஆறே[10]

என வகைப்படுத்தி உரைக்கப்படுகின்றன. இன்றைய நெடுங்கணக்கில்[11] இவை உண்டு. ஒன்றைப் படிக்கின்ற போதும் இயல்பாகப் பேசுகின்ற போதும் இந்நெடுங் கணக்கிலமைந்த மெய்யெழுத்துக்களின் பிறப்பு[12] எவ்வாறு இருக்கிறது என்பதனை இங்கு முதலில் காணலாம். இவ்வெழுத்துக்களின் பிறப்புப்பற்றிய கருத்துக்கள் பெரும்பாலும் இந்நூலாசிரியர் பேச்சிலமைந்த எழுத்துக் களுடையவையும், மற்றவர் பேச அவர் கேட்டுணர்ந்த வையும் ஆகும்.

பெரும்பாலும் ஒவ்வோரெழுத்தும் பல்வேறு **எழுத்துச்சூழல்களில்**[13] வழங்கி அச்சூழல்களுக்கு ஏற்பப் பல்வேறு ஒலிகளாக விளங்குதல் இயல்பு. இப் பல்வேறு ஒலிகளும் இச்சூழல்களால் திரிக்கப்பட்ட திரிபுகளாகவே இருக்கும். இவ்வாறான பல்வேறொலிகளின் தொகுதி ஒன்றையே ஓர்எழுத்து எனல் வேண்டும். மொழியின் ஒவ்வோரெழுத்தும் இவ்வாறு ஓர் ஒலித்தொகுதியே. ஒவ் வோரொலியையும் அவ்வெழுத்துக்குரிய ஒலி அதாவது எழுத்தொலி எனல் வேண்டும். இப் பல்வேறொலிகளன்றி வேறு எழுத்தில்லை. எழுத்து என்பது ஒரு குறியீட்டுக்

---

8 நன். 68 9. நன். 69 10. நன். 70 11. Alphabetical system 12. Production 13. Phonological environment.

கற்பனையே.[14] ஆதலால் எழுத்துச் சூழல்களில் வழங்கும் எழுத்தொலிகளை ஒட்டியே எழுத்துக்களை ஆராய்தல் வேண்டும்.

2. 1. 1. **ககர மெய் (க்)** இன்றைய தமிழில் கீழ்க் கண்ட சூழல்களில் வழங்குகின்றது.

1. மொழி முதல் : க்-[15]
2. மொழியிடை : -க்க்-; -ய்க்க்-; -ர்க்க்-;
   யிரட்டை -ழ்க்க்;
3. வலிப்பின்[16]
   (டறப்பின்) : -ட்க்-; -ற்க்-;

---

14. இக்கருத்துக்கள் இன்றைய மொழியியலறிஞருடையவையே: phoneme, allophone என்ற கொள்கைகளால் இக் கருத்துக்களை அவர்கள் விளக்குகின்றனர். அவற்றை இங்கு விளக்கி உரைக்க இது பொதுமொழியியல் நூல் அல்ல! அவ்வாறு விளக்காது அச்சொற்களைப் பயன்படுத்தலும் முறையல்ல. ஆகவே பொதுவாகக் கூறப்பட்டது.

15. ஓரெழுத்துக்குப் பின் இவ்வாறு சிறுபடுக்கைக் கோடு இடுதல் சொல்லுள் அவ்வெழுத்துக்குப் பின் எழுத்துண்டு (இங்கு உயிரெழுத்து) என்பதைக் குறிக்கும். ஓரெழுத்துக்கு முன் இவ்வாறு கோடிடுதல் அதற்குமுன் எழுத்துண்டு என்பதைக் குறிக்கும். இருபுறமும் கோடி-டுதல் இருபுறமும் எழுத்துண்டு என்பதைக் குறிக்கும். எடுத்துக்காட்டாக க்-, -க்-, -க் என்பவை முறையே மொழி முதல், மொழியிடை, மொழிக்கடைக் ககரங்களைக் குறிக்கும்.

16. தமிழிலக்கணக் குறியீடுகள் சில பொருந்தாதவையாகவும், குறையுடையவையாகவும் இருக்கக்கண்டும் இவ்வலி, மெலி, என்ற குறியீடுகள் எளியவையாகவும், இலக்கணத்தில் பயின்றவையாகவும், இருக்கின்ற காரணத்தால் இவை இலக்கணத்துள் அவைபெற்ற பொருள்களிலேயே இந்நூலுள் வழங்கப்படுகின்றன.

4. மெலிப்பின்
(ஙஞணநமனப்பின்) : -ங்க்-; -ண்க்-; -ன்க்-,
5. உயிரிடை : -க்-
6. இடைப்பின் : -ய்க்-; -ர்க்-; -ல்க்-;
(யரலவழளப் பின்) -ள்க்-, -ழ்க்-;

**மொழி முதல் ககரம்:** குரல் தசைகள் ஒலிக்காதிருக்கவும், மூக்குவழி அடைக்கப்பட்டிருக்கவும், அடிநாக்கு மெல்லண்ணத்தை ஒற்றி, உள்ளிருந்து வரும் காற்றை முழுவதும் தடுத்துப் பின் வெடியோசையோடு வாய்வழியாக அக்காற்றை விடுதலால் பிறப்பதே இக்ககரம். ஆகவே இதனை **அடிநா மெல்லண்ணவுயிர்ப்புத்தடை-யொலி**[17] எனலாம். இதனை [k] என்னும் குறியீட்-டால் குறிக்கலாம்.

எ. கா. கிளி கொஞ்சும்

**இரட்டைக்ககரமும்** டகர றகரவலிப்பின் **ககரமும்** மொழிமுதற்ககரம் போன்றே பிறக்கின்றன.

எ. கா. வாழ்க்கையில் துய்க்கும் வேட்கை யார்க்கும் இயற்கை.

**மெலிப்பின் ககரம்:** குரல் தசைகள் அதிர்ந்து ஒலித்துக் கொண்டிருக்கவும், மூக்குவழி அடைக்கப்பட்-டிருக்கவும், அடிநாக்கு மெல்லண்ணத்தை ஒற்றி, உள்-ளிருந்து வரும் காற்றை முழுவதும் தடுத்துப்பின் வெடியோசையோடு வாய்வழியாக அக்காற்றை விடுத

---

17. Dorsovelar Voiceless stop

லால் பிறப்பதே இக்ககரம். ஆகவே இதனை அடிநா மெல்லண்ணக் குரல்தடையொலி[18] எனலாம். இதனை [g] எனக் குறிக்கலாம்.

எ. கா. நங்கை, கண்கள், மீன்கள்.

**உயிரிடைக்ககரம்:** குரல்தசைகள் அதிர்ந்து ஒலித்துக் கொண்டிருக்கவும், மூக்குவழி அடைக்கப்பட்டிருக்கவும், அடிநாக்கு எழுந்து மெல்லண்ணத்தை அணுகி மிகச் சிறிதே சந்து விட்டு நிற்கவும், உள்ளிருந்து வரும் காற்று, அவ்வடிநா மெல்லண்ணத்தின் இடைவழியே உரைந்து கொண்டு ஓசையுடன் செல்லுதலால் பிறப்பதே இக்ககரம். ஆகவே இதனை அடிநா மெல்லண்ணக் குரலுரைவொலி[19] எனலாம். இதனை [h] எனக் குறிக்கலாம்.

இடைப்பின் ககரமும் உயிரிடைக்ககரம் போன்றே பிறக்கின்றது.

எ. கா. தமிழகம் வாழ்க
கொள்கை வெல்க
பொய்கை குளிர்கிறது

ககர மெய்யினை அடுத்துக் ககரமும் உயிரெழுத்தும் தான் (குற்றியலுகரம், குற்றியலிகரம் உட்பட)வருகின்றன வேறெழுத்துக்கள் வருதல் இல்லை. ககரத்தையடுத்து உயிரெழுத்து வருகின்றபோது அவ்வுயிரெழுத்தின் பிறப்

---

18. Dorsovelar voiced stop 19. Dorsovelar voiced fricative

பிடத்திற்கேற்பக் ககரத்தின் ஒலிப்பிடம் சிறிது வேறு படுகிறது. பின்னண்ணவுயிர் வருகின்றபோது ஒலிப்பிடம் பின்மெல்லண்ணமாகவும்,[20] முன்னண்ணவுயிர் வருகின்ற போது முன்மெல்லண்ணமாகவோ[21] அல்லது பின் வல்லண்ணமாகவோவும்[22] இருக்கின்றது. இவ்வேறுபாடு ஒருவகை ஒலியியைபு[23] ஆகும். கீழ்வருவனவற்றை ஒலித்துக்காணலாம்.

எ.கா. கோழி கூவும்
கிளி கிளக்கும்

உயிரிடைக்ககரம் குரலுரைவொலியாக அமைகிறது என்பது மேலே கூறப்பட்டது. அது சிலபோது உயிர்ப் புரைவொலியாகவும் அமைகிறது. ஆனல் சூழல்வரை யறை செய்ய முடியவில்லை; பெரும்பாலும் குற்றுயிரை அடுத்து உயிர்ப்பொலி கொள்கிறது என்னலாம்,

எ.கா. முகம் கருகியது.

மேற்கண்ட விளக்கத்தால் கொள்ளப்படும் ககரத்தின் எழுத்தொலிகளும் அவற்றின் சூழல்களும் வருமாறு:[24]

---

20 Postvelum 21. Prevelum 22. Postpalate
23. Assimilation

24 ஒரு சூழலில் வழங்கும் ஒரெழுத்தொலியே மற்றொரு சூழலில் வழங்கும் நிலையும் உண்டு: காலம் மொழி முதல்ககரம் பெற்றுள்ளது; ஒருகாலம் என்ற தொடர் மொழியுள் அதுவே உயிரிடைக்ககரமாகச் சூழல் மாற்றம் பெறுகிறது. காப்பியர்: தொல்காப்பியர், கொடுமை: பெருங் கொடுமை, கிளி : நல்ல கிளி என்பவையும் அவ்வாறே.

/க/:[25]

[k] மொழி முதலிலும் இரட்டுகிறபோதும் வலிப்பின்னும்

[g] மெலிப்பின்

[h] உயிரிடையும் இடைப்பின்னும்

உயிர்ப்புத்தடை, குரல்தடை, உரைவு ஆகிய மூன்று மட்டுமே தமிழ் வல்லெழுத்துக்களின் எழுத்தொலி வேறுபாடுகளாகச் சீரோடு அமைந்திருக்கின்றன. தமிழ் வல்லெழுத்துக்களிடை அமைந்திருக்கும் இவ்வொழுங்கமைப்பு[26] வல்லெழுத்தொலிகளை வரையறுக்கத் துணை செய்கின்றது. (வல்லெழுத்துக்களின் இயல்புகள் பற்றி இந்நூலில் பின்னர் விளக்குகின்றபோது இக் கருத்து மேற்கொள்ளப்படுகிறது.)

---

இவ்வாறு மாறிய சூழல்களுக்கு ஏற்ப எழுத்தொலிகளும் மாறுகின்றன என்று கூற முடியவில்லை. சிலர் Tolkaappiyar என்கின்றனர்; மற்றும் சிலர் Tolhaappiyar என்கின்றனர். தொடர்மொழியில் விட்டிசைப்பு இருத்தல் கருதத்தக்கது. இவ்வொலிமாற்றங்கள் தொடரும் மொழிகள் கொள்ளும் நெருக்கத்தைப் பொறுத்தன போலும். ஆகவே இங்குக் குறிக்கப்படும் சூழல்கள் ஒருமொழிச் சூழல்களே ஆகும்; தொடர் மொழிச் சூழல்கள் அல்ல.

25. எழுத்தைக் குறிப்பதற்குச் சாய்வு கோடுகளும் எழுத்தொலியைக் குறிப்பதற்குக் கட்டக்கோடுகளும் இடுதல் இன்றைய மொழியிலார் வழக்கம்.

26. இதனை ஆங்கிலத்தின் Pattern என்பர்

27. அறிஞர்பெர்த் அவர்களின் கருத்துக்களையும் காண்க.

2.1.2. மொழியியலறிஞர் பெர்த் அவர்கள் தமிழெழுத்தொலிகளின் மிகச்சிறு வேறுபாடுகளையும் நன்கு ஆராய்ந்து குறித்துள்ளார்கள்.[28] ககரம் எட்டு ஒலிவேறு பாடுகளுடன் வழங்குகின்றது என்பது அவர்கள் கண்டுபிடிப்பு. "......... single *k* is variously pronounced a palatal (i. e. fronted) k, g, palatal fricative ç, velar k, g, velar fricatives x, *r*, or h according to position and neighbouring sounds.

---

28. திரு பெர்த் அவர்களின் 34 பக்கங்கள் கொண்ட ஓரிய கட்டுரை A Short Outline of Tamil Pronunciation" என்ற தலைப்பொடு திரு. A. H Arden. M. A., என்பார் எழுதிய "A Progressive Grammar of Common Tamil" என்ற நூலின் பிற்சேர்க்கையாக அமைந்துள்ளது. 1934-ஆமாண்டு அல்லது அதற்குச் சற்று முன்பு அவர் இலண்டன் பல்கலைக்கழகத்துப் பல்கலைக்கழகக் கல்லூரியில் மொழியியலுயர்விரிவுரையாளராக இருந்தபோது இது எழுதப்பட்டது. இந்திய மொழிகளின் ஒலியியலை அவர் ஆக்ஸ்போர்டு பல்கலைக் கழகத்தில் கற்பித்ததனுல் பெற்ற அறிவு கொண்டு இதனை எழுதியுள்ளார். இங்கிலாந்தில் அக்காலங்களில் படித்துக் கொண்டிருந்த பல தமிழ் மாணவர்களின் தமிழ்ப்பேச்சே அவர்கள் தமிழொலியிய லாராய்ச்சிக்குப் பயன்படுத்திய தாகும். திருநெல்வேலி மாவட்டத்திலிருந்து சென்ற திருவாளர் சி. பா. ஆதித்தன், M. A., Bar-at-law அவர்களையும், திரு. கிளேட்டன் பாதிரியாரையும் இவ்வகையில் உதவியோராக அவர்கள் சிறப்பாகக் குறித்திருக்கின்றனர். அவர்கள் ஆராய்ச்சி தமிழெழுத்துக்களைப்பற்றி மிக நுட்பமாகச் செய்யப்பட் அறிவியல் முறைப்படியமைந்த முதல்கட்டுரை எனலாம்.

k = fronted k in kiil, tar.
= fronted g in tanki.
= fricative ç in aḻuki, decayed, and pakiir, terror,
= back k in kool, a rod and kuuli, day-wage.
= back g in paṅkam disgrace.
= breathed velar fricative *x* in makan, son.
= voiced velar fricative *r* in orukaalattil, at one time.
= voiced h in vaḻiyaaka, in the way."[29]

இவ்வாறு எட்டு எழுத்தொலிகள் ககரத்திற்கு உண்டு என்று கண்டாலும் அவற்றை அவர் மூவகையாக வகைப்படுத்துகிறார். அவை வருமாறு:

1. மொழிமுதலில் சிறிதே ஹகரவொலி பெற்ற மெல்லண்ணவுயிர்ப்புத் தடையொலி. தன்பின் வரும் முன்னண்ணவுயிர்கள் (இ, ஈ, எ, ஏ) பின்னண்ண வுயிர்கள் (அ, ஆ, உ; ஊ, ஒ, ஓ) ஆகியவற்றுக்கேற்ப முறையே முன்மெல்லண்ணம் அல்லது பின்வல்லண்ணத்தையோ; பின்மெல்லண்ணத்தையோ இக்ககரம் தன் ஒலிப்பிடமாகக் கொள்கிறது.[30]

எ.கா. கூலி, கீல்.[31]

---

29. A Short Outline of Tamil Pronunciation, பக். ii. இது இனி SOTP. எனக் குறிக்கப்படும். 30 "Initially- A voiceless slightly aspirated velar stop" as in the English cool, card, cube, keel, with similar differences of articulation from back to front according to the following vowel." -P.X, SOTP. 31. இவ்வெடுத்துக்காட்டுக்கள் எல்லாம் அறிஞர் பெர்த்த் தருகின்றவையே!

11. உயிரிடையில் மெல்லண்ணவுயிர்ப்புத்தளர்வுரை வொலி. தன்முன்னும் பின்னும் வரும் முன்னண்ணவுயிர்கள் (இ, ஈ; எ, ஏ) பின்னண்ணவுயிர்கள் (அ, ஆ, உ, ஊ; ஒ, ஓ) ஆகியவற்றுக்கேற்ப முறையே முன்மெல்லண்ணம் அல்லது பின்வல்லண்ணத்தையோ பின்மெல்லண்ணத்தையோ, இக்ககரம் தன் ஒலிப்பிடமாகக் கொள்கிறது.[32]

எ. க. பகீரென்று, அழுகி, மகன், ஆகையால்.

இக்ககரமே நீண்ட சொற்களின் இறுதியில் உள்மெல்லண்ணக் குரலொலியாகிறது[33]

எ. கா. வழியாக, சாகும்.

111. மெலிப்பின் மெல்லண்ணக்குரல் தடையொலி. இதுவும் தன்பின் வரும் முன்னண்ணவுயிர்கள் (இ, ஈ, எ, ஏ,) பின்னண்ணவுயிர்கள் (அ, ஆ, உ, ஊ,

---

32 "Intervocallically single k can never be a stop. In this position k is always a lax fricative, ranging from a weak sort of C (the German ich-sound) to a similarly weak or lax *x* (the German ach-sound) according to the preceding and following vowels" P.X. SOTP. 33. "When followed by a or u in a final syllable, particularly agglutinations of three or more syllables, k, often sounds like a voiced h- the sort of h used in educated Northern English in a word like behind". -P. X. SOTP. உண்மையில் h என்ன ஒலி என்பது விளங்கவில்லை. பல ஒலிகளுக்கு வரையறுத்த பெயர்கள் அவர் கூறாதது போலவே இதற்கும் கூறவில்லை.

ஒ, ஓ) ஆகியவற்றுக்கேற்ப முறையே முன்மெல்லண்ணம் அல்லது பின்வல்லண்ணத்தையோ பின்மெல்லண்ணத்தையோ தன் ஒலிப்பிடமாகக் கொள்கிறது.[34]

எ. கா. நாங்கள் தங்கி

இவ்வாறு வகைப்படுத்திய மூவொலிகளை மட்டுமே ககரத்தின் எழுத்தொலிகள் என அறிஞர் பெர்த்த் கொள்ளுகிறார் போலும்.

2. 1. 3. அறிஞர் கால்டுவெல் தமிழ்ப் பேச்சில் மெய்யெழுத்துக்கள் எவ்வாறு ஒலிக்கின்றன எனச் சென்ற நூற்றாண்டினிடையில் தாம் கேட்டவாறே விளக்கி வைத்துள்ளார். ஆனாலும் அறிஞர் பெர்த்த் நுட்பமாகவும் தெளிவாகவும் சூழலோடும் விளக்கியிருப்பது போன்று அவருடைய விளக்கம் அமையவில்லை. வடமொழி, ஆங்கிலமொழி ஆகியவற்றுள் தமிழ் ஒலிகளை ஒத்த ஒலிகள் இருக்குமானல் அவற்றைச் சுட்டிக் காட்டித் தமிழ் ஒலிகள் இவை போன்றன எனக் கூறி ஒற்றுமை வேற்றுமை காட்டிச் செல்வது அவர் வழக்கம். அவருடைய கருத்துக்கள் 19-ஆம் நூற்றாண்டின் இடையில் தமிழெழுத்துக்கள் எவ்வாறு ஒலித்தன என நாம் அறியப் பயன்படுகின்றன.

---

34. "When preceded by n, k is pronounced like the g— sound in the word finger, when followed by open and back vowels. It is a fronted g when preceded by n and followed by ii or i.' –P. X, SOTP.

அறிஞர் கால்டுவெல் ககரத்திற்கு [k], [g], [h] என மூன்று ஒலிகள் உண்டு என்பதை உணர்ந்து குறித்துள்ளார். வடமொழி maha என்னும் சொல் தமிழில் மகா என்று எழுதப்பட்டு hகர ஒலிபெறுவதை அவர் எடுத்துக்காட்டுகிருர். ஆனுலும் ஈருயிரிடை-தான் ககரம் hகர ஒலி பெறுகிறது என்பதை அவர் தெளிவாக உணர்ந்ததாகத் தோன்றவில்லை. மற்ற kகர gகர ஒலிகளின் சூழல்களை நாம் இங்குக் கண்டவாறு அவரும் கண்டு குறித்துள்ளார்.[35]

2. 1. 4. பண்டைய இலக்கணவாசிரியர்களான தொல்காப்பியரும், நன்னூலாரும் எழுத்துக்கள் பிறப்புப் பற்றிக் கூறியிருக்கின்றனர். ஒலிப்பிடம், ஒலிப்புறுப்பு, ஒலிப்புத்தொழில், அல்லது ஒலிப்புமுயற்சி ஆகியவற்றின் அடிப்படையில் அவர்கள் எழுத்துக்களைப் பற்றி விளக்கம் கூறி வகைப்படுத்த முயன்றிருக்கின்றனர். குரல்நிலை பற்றி அவர்கள் ஏதும் கூறவில்லை. அவர்கள் கூறிய விளக்கக் கருத்துக்களோடு நம் கருத்துக்களை ஒப்பிட்டுக் காணலாம். வரலாற்று முறையில் எழுத்துக்களின் அன்றைய நிலையையும் இன்றைய நிலையையும் மாற்றங்-களையும் அறிய இவ்வொப்பீடு துணை செய்யும்.

---

35 அறிஞர் கால்டுவெல் தன் *திராவிட மொழி-களின் ஒப்பிலக்கணம்* என்னும் நூலில் திராவிட மொழி-களின் ஒலிகளை விரிவாக ஆராய்ந்துள்ளார். இவை பற்றிய கருத்துக்களை *ஒலிகள்* (Sounds) என்னும் இயலில் அவர் தந்துள்ளார். இங்கும் பின்னும் இந்நூலில் தமிழ் ஒலிகள் பற்றிய கால்டுவெல் கருத்துக்களாகத்தரப்படுபவை அங்கிருந்து எடுக்கப்பட்டவையே. 137 முதல் 147 வரை அவர் நூலின் பக்கங்கள் காண்க.

இவ்வொப்பீட்டாய்வில் நாம் காணும் ஒரு முக்கியக் கருத்து இது: நம் ஆய்வில் ஓரெழுத்தே பல வேறு சூழல்களில் பல ஒலிகளைப் பெற்றிருக்கின்றது என்பது தெரிகிறது. இவ்வாறு பல்வேறொலிகளைப் பெற்ற பல எழுத்துக்கள் உண்டு. ஆனால் பண்டையாசிரியர்கள் ஒவ்வோரெழுத்திற்கும் ஒரு பிறப்பினையும் ஓரொலியையும் மட்டுமே கூறியிருக்கின்றனர். இந்நிலையின் காரணங்கள் ஆராயத்தக்கன.

தொல்காப்பியர் ககரம் பற்றிக் கூறுகையில் "ககாரஙகாரம் முதல்நா வண்ணம்" என்கிறார். அதாவது அடிநாக்கு தன்னெதிரே அமைந்த அண்ணத்தை (மெல்லண்ணத்தைப்) பொருந்தி (உள்ளிருந்து வரும் காற்றைத்) தடுத்தலால் இக்ககரம் பிறக்கிறது என்பது அவர் கருத்தாகலாம். மேலும் அவர் ககரத்தை வல்லெழுத்து என வகுத்தார். வல்லெழுத்துக்களைத் தடையெழுத்துக்கள் என நாம் ஒருவாறு கொள்ளலாம். ஆகவே தொல்காப்பியர் கருத்துப்படி ககரம் அடிநா மெல்லண்ணத் தடையொலி. இவ்வெழுத்தின் குரல்நிலைபற்றி ஒன்றும் கூறப்படவில்லை. இது எச்சூழலில் என்பதும் கூறப்படவில்லை. இவ்வெழுத்திற்கு நாம் மேற்கண்ட ஒலிகள் உண்டா என்பதும் கூறப்படவில்லை. நன்னூலார் வல்லெழுத்துக்களுக்குப் பிறப்பிடம் "உரம்" (=நெஞ்சு) என்கிறார். வல்லெழுத்துக்கள் நெஞ்சைப் பிறப்பிடமாகக் கொண்டிருக்கின்றன என்ற இவரது கருத்துத்தான் விளங்கவில்லை. அதன்பின் ககரம் பற்றி

கஙவும் சஞவும் டணவும் முதலிடை
நுனிநா அண்ணம் உறமுறை வருமே

—நன். 79.

என்ற நூற்பாவில் குறிக்கிறார். ஆகவே நன்னூலார் கருத்துப்படியும் ககரம், **அடிநா மெல்லண்ணத்தடையொலி** ஆகலாம்.

## 2. 2. சகரம்

2. 2. 1. சகரமெய் [ச்] தமிழில் கீழ்க்கண்ட சூழல்களில் வழங்குகிறது:

1. மொழிமுதல் : ச்-
2. உயிரிடை : -ச்-
3. இடைப்பின் : -ய்ச்-, -ர்ச்-, -ல்ச்-, -ழ்ச்-, -ள்ச்-.
4. மொழியிடை : -ச்ச்-, -ர்ச்ச்-,
   யிரட்டை -ய்ச்ச்-, -ழ்ச்ச்-.
5. வலிப்பின் : -ட்ச்-, -ற்ச்-.
6. மெலிப்பின் : -ஞ்ச்-, (-ண்ச்-, -ன்ச்-).

**மொழிமுதல் சகரம்:** குரல் தசைகள் ஒலிக்காதிருக்கவும், மூக்குவழி அடைக்கப்பட்டிருக்கவும், முன் நாக்கு இடையே குழிந்து அண்ண ஈற்றினை ஒற்றிக்கொண்டிருக்கவும், உள்ளிருந்து வரும் காற்றுக் குழிந்த நாக்கிடைச் சென்று நாக்கின்மீதும் ஈற்றண்ணத்தின் மீதும் உரைந்து கொண்டே செல்லப் பிறப்பதே இச்சகரம். ஆகவே இதனை **முன குழிநா வீற்றண்ண வுயிர்ப்புரைவொலி**[36] எனலாம் இதனை [s] எனக் குறிக்கலாம்.[37]

**உயிரிடைச் சகரமும் இடைப்பின் சகரமும்** மொழி முதற்சகரம் போன்றே பிறக்கின்றன.

---

36 Laminoalveolar voiceless groove fricative

37. ஆங்கிலத்தில் See [=பார்] என்ற சொல்லில் இதன் ஒலி விளங்குகிறது.

எ. கா. சிரிப்பு, இசை, வல்சி.[38]

சென்னை மாநகரத்தில் கற்றோர் கல்லார் இருசாரார் பேச்சிலும் இம்மொழிமுதல், உயிரிடை, இடைப்பின் சகரங்கள் சிறிது வேறுபட்டொலிக்கின்றன. முன் நாக்கின் பெரும்பகுதி பரந்து சிறிதே குழிந்து முன்வல்லண்ணத்தில் நன்கு பொருந்தியிருக்க இச்சகரம் பிறக்கிறது. ஆகவே இதனை முன்குழி நா முன்வல்லண்ணவுயிர்ப் புரைவொலி[39] எனல் வேண்டும். இதனை [ṡ] எனக் குறிக்கலாம்.[40]

**இரட்டைச் சகரம்:** குரல்தசைகள் ஒலிக்காதிருக்கவும், மூக்குவழி அடைக்கப்பட்டிருக்கவும், முன்நாக்குப் பரந்து ஈற்றண்ணத்தை ஒற்றி, உள்ளேயிருந்து வரும் காற்றினை முழுவதுந்தடுத்துப் பின் (வெடியோசையோடு பிரியாது) உரைவொலி தோன்றும்படியாக மெல்லப் பிரிவதால் பிறப்பதே இச்சகரம். இங்குத் தடையும் மெல்லப் பிரிவும் உரைவும் இருப்பது உணரலாம். நாக்குக் குழிதல் இங்கில்லை. தடையும், உரைவும் ஆகிய இரு முயற்சிகளால் பிறத்தலால் இது ஒருகூட்டவொலியே.[41] இதனை முன்நாவீற்றண்ணவுயிர்ப்புத் தடையுரைவொலி எனலாம்.[42] ஆகவேதான் அனைத்துலகொலியியற்பட்டி இதனை t͜s என

38. வல்சி(=சோறு) என்பது பழந்தமிழ்ச் சொல்; இன்று வழங்கவில்லை. இடைப்பின் சகரம் தமிழில் அரிதே.

39. Lamino-pre-palatal voiceless spread fricative

40. ஆங்கிலத்தில் she (=அவள்) என்ற சொல்லில் இதன் ஒலி விளங்குகிறது. Shiyali (சீர்காழி) Sholavandan (சோழவந்தான்) என்ற ஊர்ப் பெயர்களைக் காண்க.

41. இக் கூட்டொலியே ஆங்கிலத்தில் Affricate எனப் படுகிறது.

42. Laminoalveolar voiceless affricate

ஈரெழுத்தால் குறிக்கிறது.[43] இதனை நாம் [c] எனக் குறிக்கலாம்.

எ. கா. பச்சை, தேர்ச்சி, பாய்ச்சு, தாழ்ச்சி.

**வலிப்பின் சகரமும்** மொழியிடையிரட்டைச் சகரமே போன்று தடையுரைவொலியாகவே பிறக்கின்றது.

எ. கா. கட்சி, முயற்சி.

ஆனால் சகரத்தின் ஒலிப்பிடம் தன்முன்வரும் மெய் யெழுத்துக்களின் ஒலிப்பிடங்களுக்கு ஏற்பச் சிறிது வேறு படுகிறது. அதன்முன்வரும் மெய்யெழுத்துக்கள் வல்லண்ணத்தில் பிறப்பவையானல் சகரமும் அவ்வல்லண்ணத்தையே ஒலிப்பிடமாகக் கொண்டிருக்கிறது. கட்சி, தாழ்ச்சி என்ற சொற்களை ஒலித்துக்காணலாம். இச் சொற்களின் சகரங்கள் முன்று வல்லண்ணவுயிர்ப்புத்தடையுரைவொலிகளே.[44]

**மெலிப்பின் சகரம்:** குரல் தசைகள் அதிர்ந்து ஒலித்துக்கொண்டிருக்கவும், மூக்குவழி அடைக்கப்பட்டிருக்கவும், முன்நாக்குப் பரந்து அண்ணவிற்றினை ஒற்றி உள்ளிருந்து வரும் காற்றினை முழுவதுந் தடுத்துப் பின் (வெடி யோசையோடு பிரியாது) உரைவொலி தோன்ற

---

43. Church என்ற ஆங்கிலச்சொல்லில் இதன் ஒலி விளங்குகிறது நாகர்கோயில் வட்டாரத்தில் 'ஈசல்' என்பது [iica]என ஒலிக்கப்படுகிறது. பிற பகுதிகளில் அது [iisa] என ஒலிபெறும். நாகர்கோயில் வழக்கு உயிரிடையும் தடையுரைவொலி உண்டோ என்ற ஐயத்தை எழுப்பலாம். இது இரட்டைச் சகரமோ?

44. Laminopalatal voiceless affricates

மெல்லப் பிரிவதால் பிறப்பதே இச்சகரம். இங்குத் தடையும், உரைவும், மெல்லப்பிரிவும், குரல்வளை ஒலிப்பும் இருப்பது உணரலாம். நாக்குக் குழிதல் இங்கும் இல்லை. இதுவும் கூட்டொலியே! ஆகவே இதனை முன்னு வீற்றண்ணக்குரல் தடையுரை வொலி எனலாம்.[45] அனைத்துலகொலியியற்பட்டி இதனை d͡z என ஈரெழுத்தால் குறிக்கிறது. இதனை இங்கு [j] எனக்குறிக்கலாம்.[46]

எ. கா. வஞ்சி கொஞ்சும்

இன்றைய பேச்சுத்தமிழில் ஒருசொல்லுள் ணகர ஞகரங்களை அடுத்துச் சகரம் வருவதில்லை; ஆனால் சொல்லொடு சொல் புணரும் தொடர்மொழியுள் வருகின்றது.

எ. கா. கண் சிமிட்டப் புன்சிரிப்பு

இவ்விடங்களில் சகரம் தடையுரைவொலியாக ஒலிக்காது உரைவொலியாக மட்டுமே ஒலிக்கிறது.[47] இது

---

45. Laminoalveolar voiced affricate

46. ஆங்கில J, வடமொழி ஜ ஆகியவற்றின் ஒலி இதுவே. இக்காரணத்தால்தான் தமிழகத்தின் சுவர்களில் "லஞ்ஜம் வாங்கினன்" "நஞ்ஜப்பச்செட்டி உபயம்" என்ற தொடர்கள் காணப்படுகின்றன. நஞ்சப்பா, நெஞ்சில் ஓராலயம், தஞ்சாவூர் முதலிய தமிழ்ச் சொற்களை Nanjappa, Nenjil oralayam, Tanjavur என Jகரத்தோடு நாம் (காதால் கேட்கும் முறையிலேயே) ஆங்கிலத்தில் எழுதுவதும் இதனை வலியுறுத்தும்:

47. இவ்விடங்கள் தொடர்மொழியாய் விட்டிசைப்புப் பெற்றுள்ளன என்பது கருதத்தக்கது நெடுஞ்செழியன் என்ற தொடர்மொழி Ncdunchezhiyan என -ch- இட்டு எழுதப்படுவதும் இக்காரணத்தால் போலும்.

எழுத்துத் தமிழைப் படிக்கின்றபோது மட்டும் உள்ள ஒரு மரபு போலும்.[48] மற்ற உயிர்ப்புத்தடையெழுத்துக்கள் மூக்கினவெழுத்துக்களின் பின் குரலொலித்தடையெழுத்துக்களாக மாறுகின்றன என்பது குறிப்பிடத்தக்கது.

கல்லாத காட்டுப்புற மக்கள் பேச்சிலும் தென்தமிழகத்தில்பெரும்பாலும் (கற்றோருட்பட்ட) எல்லோருடைய பேச்சிலும், யாழ்ப்பாணத்திலும் மொழிமுதற்சகரம் உரைவொலியாக இல்லாது தடையுரையொலியாகவே ஒலிக்கிறது.[49]

எ. கா. சிரிச்சா(ன்) ciriccaa(n̠)

திராவிட மொழியியலறிஞர் சிலர் மொழிமுதற்சகரம் முன்னண்ணஉயிர்கள் (இ, ஈ, எ, ஏ) முன் c எனவும் மற்றையுயிர்கள் முன் s எனவும் ஒலிப்பதாகக் குறித்திருக்கின்றனர்.[50] ஆனல் கற்ரோர் பலர் பேச்சில் தமிழகத்தின்

---

48. கோயம்புத்தூரைச் சேர்ந்த இளந்தமிழறிஞர் ஒருவர் 'கொஞ்சிக்கொஞ்சிப் பேசினான்' என்பதை konsi konsi peesinaan என ஒலிக்கின்றார்! இவர் மொழியில் ஞகரம் ணகரமாக (நகரமாக) மாறிவிட்டது போலும். இவ்வாறே 'பாஷை.' 'பஸ்சுக்கு'முதலான வழக்குக்கள் இன்றைய செய்தித்தாள்களில் இடம்பெறும் வேடிக்கைகளையும் பார்க்கிறோம்!

49. 2,22 காண்க

50. 'Tamil c is, according to J R. Firth's description in A. H. Arden, 'A Progressive Grammar of Common Tamil,' 4th ed. Madras 1934, which is based on modern educated speech, a ch-like affricate initially before short and long i and medially after *r*, and an s-like sibilant initially before other vowels than short and long i and intervocalically.' —M B. Emeneau in 'Proto-Dravidian C-: Toda t-'' Collected Papers, P. 46. அடிக்குறிப்பு 53 காண்க.

எல்லா இடங்களிலும் s எனவும் கல்லார் பேச்சில் தமிழகத்தின் எல்லா இடங்களிலும் ṭs எனவுமே அது ஒலிக்கக் கேட்கிறோம். சென்னைப் பல்கலைக் கழகத்தார் வெளியிட்ட தமிழ்ப் பேரகராதி சகரத்தை எல்லாச் சூழல்களிலும் c என்ற ஆங்கில எழுத்தாலேயே குறித்திருக்கிறது. இவ்வாங்கில எழுத்தின் ஒலியே தமிழ்ச் சகரத்தின் உண்மையொலி அல்லது பண்டையொலி என அவர்கள் கருதியதே இதன் காரணமாகலாம்.[51]

மேற்கண்ட விளக்கத்தால் கொள்ளப்படும் சகரத்தின் எழுத்தொலிகளும் அவற்றின் சூழல்களும் வருமாறு:

/ச/: [s] மொழி முதலிலும் உயிரிடையும் இடைப்பின்னும்
[c] இரட்டுகிற போதும் வலிப்பின்னும்
[j] மெலிப்பின்

மொழி முதலில் கிளைமொழிகள் வழக்காக (c) வழங்குகிறது.

2. 2. 2. மொழியியலறிஞர் பெர்த்த் சகரத்திற்கு மூன்று எழுத்தொலிகள் உண்டு எனக் காண்கிறார்.

---

51. Chakkubal, Cheemaichamy, M.L A., Chattappan, Chinnappan, Chinkaram, Chintamani, Chidambaram, Chengleput, Chellappan, Chennimalai, Chokkappa, Colas (சோழர்) என ஆங்கிலத்தில் எழுதப்படும் தமிழ்ப்பெயர்களும் இதனை வலியுறுத்தும். இப்பெயர்கள் காதால் கேட்கப்பட்டவாறே கிட்டத்தட்ட ஆங்கிலத்தில் எழுதப்பட்டவை.

I. உயிரிடையிலும் மொழிமுதலில் அகர உகர ஒகரங்களுக்கு முன்னும் இதழ் குவியாக் குழிமுன்று வீற்றண்ணவுயிர்ப்புரை வொலி.[52]

எ.கா. சொல் சென்று பேசு பசி

II. மொழிமுதலில் இகர ஈகாரங்களுக்கு முன்னும் இரட்டுகிறபோதும் இதழ்குவியாமுன்று வீற்றண்ணவுயிர்ப்புத்தடையுரைவொலி.[53]

எ. கா. சினம் சீக்கிரம் பேச்சு

III. மொழிமுதலிலும் உயிரிடையும் ஞப்பின்னும் இதழ்குவியா முன்றுவீற்றண்ணக் குரல் தடையுரை வொலி.

எ. கா. ஜனங்கள் ராஜா தஞ்சம்

திரு. பெர்த்த், சகரம் உயிரிடை ஒருவகைத் தளர்வுரை வொலியாக விளங்குகிறது எனவும் குறித்திருக்கிறார்.[54]

---

52. 'An s-sound with a bit of ʃ in it ... produced with the blade of the tongue behind the teeth-ridge without any lip- rounding.' —P. XI, SOTP.

53. 'Initially when followed by ii or i , C is pronounced with a preceding homorganic stop. The sibilant is then the affrication of t-like stop made with the blade (not the tip) behind the teeth-ridge without any lip-rounding.' —P. XI, SOTP.

54. 'It is more s-like in initial positions when followed by open or back vowels (a o u) then in intervocalic position when, like many other Tamil consonants in such position it has as lex articulation." -P, XI, SOTP.

மூன்றும் வகைச் சகரம் என மேலே குறிக்கப்பட்டிருப்பது ஜகரமாகும். இதனை அவர் சகரத்தின் ஓர் எழுத்தொலி எனக் கருதாது ஜகர எழுத்தின் ஓரொலி எனவே கருது கிறார். அவருக்குச் சகரமும் ஜகரமும் பொருள்வேறுபாடு செய்யும் இரண்டெழுத்துக்கள்[55] ஆகும். இரண்டும் மொழி முதலிலும் உயிரிடையுமான ஒரே சூழல்களில் வழங்கு கின்றன.

2. 2. 3. அறிஞர் கால்டுவெல் சகரத்திற்கு Ch, ś, j என மூன்று ஒலிகள் உண்டு என உணர்ந்துள்ளார்; இம் மூன்று ஒலிகளும் நாம் கண்ட சூழல்களிலேயே வழங்கு-கின்றன என்றும் குறித்துள்ளார். இச்சகரம் தமிழ்க் கொச்சைப் பேச்சில் மொழிமுதலில் Ch எனவும் படித்தோர் பேச்சில் ś எனவும் வேறுபட்டு ஒலிக்கிறது என்றும் அவர் மேலும் குறித்துள்ளார். தம் நூலில் தமிழ்ச்சகரத்தை ś எனவே தாம் குறிப்பதாகவும் அவர் கூறுகிறார்.

2. 2. 4. தொல்காப்பியர் சகரத்தை வல்லினம் என வகைப்படுத்துகிறார். அதன் பிறப்புப்பற்றியும் 'சகார ஞகாரம் இடைநா அண்ணம்'[56] எனக் கூறுகிறார். ஆகவே இவர் கருத்துப்படி சகரம் **இடைநாநடுவல் லண்ணத் தடையொலி** ஆகலாம்.[57]

நன்னூலாரும் சகரத்தை வல்லினம் என வகைப் படுத்துகிறார். "உரம் பெறும் வன்மை" என்பதனால் அவ்

---

55. phonemes. 56. தொல். எழு. 90
57. Central mediopalatal Stop

வல்லெழுத்தின் பிறப்பிடம் நெஞ்சு எனக்கொள்ளுகிறார். அதன் பிறப்புப்பற்றி

கஙவும் சஞவும் டணவும் முதலிடை
நுனிநா அண்ணம் உறமுறை வருமே[58]

என்ற நூற்பாவில் கூறுகிறார். ஆகவே நன்னூலார் கருத்துப்படி சகரம் நெஞ்சிடமாகப் பிறந்த இடைநா[59] நடுவல்லண்ணத் தடையொலி ஆகலாம்.

---

58. நன். 79. 59. சகரம்பற்றி அறிஞர் எல். வி. ஆர் அவர்களின் கருத்து இவ்விடத்தில் குறிப்பிடத்தக்கது:—

'The sound c is described by the Old Tamil grammar Tolkappiyam Eluttadigaram (80) as produced with the middle of the tongue-blade on the "annam." The point of articulation of the sound was perhaps somewhere between the alveolus and the highest point of the hard palate. The commentarians interpret the Sutra as meaning that the point of articulation was on the "middle of the hard palate" which was perhaps true of the phonation of the sound in their days. To-day the sound is commonly produced with the middle of the tongue-blade on the alveopalatal frontier or on the portion of the hard palate immediately behind the teeth-ridge.'

'Tolkappiyam classifies the sound among valleluthu (19) and groups it along with க, ட, த, ப and ற. It is quite possible that it may already have had the affricate value (i. e., that of a unitary sound in which the occlusion of a plosive is immediately followed by the sibilant element) that it possesses to-day in some context in Tamil'

[அறிஞர் எல். வி. ஆர். அவர்கள் தொல்காப்பியர் காலத்தில்கூடச் சகரம் தடையுரைவொலியாக இருந்திருக்கலாம்

P. T. O.

எனக் கருதுகிறார். ஆனால் தொல்காப்பியர் "சகார ஞகாரம் இடைநா அண்ணம்" (எழு.90) என (இன்றுபோலல்லாது) இடைநா இடையண்ணத்தையே சகரத்தின் பிறப்பிடமாகக் குறித்திருத்தலால் அவர்காலத்தில் அது ககரம்போன்று ஒரு தடைவெடியொலியாகவே இருந்திருக்கலாம். இடைநா இடையண்ணத்தால் தடைவெடியொலியே பிறத்தல் எளிது. தொல்காப்பிய உரையாசிரியர்களும் சகரத்தின் பிறப்பு இடைநா இடையண்ணம் என்று குறிப்பிடுதலால் அவ்வுரையாசிரியர்கள் காலத்திலும் சகரம் இடைநா இடையண்ண ஒலியாகவே இருந்திருக்கலாம் என அறிஞர் எல்.வி. ஆர். கருதுகிறார். அப்படியானால் அவர்கள் காலத்தில் அது தடைவெடியொலியாகவே இருந்திருத்தல் வேண்டும் என்பது பொருள். ஆனால் குமாரிலபட்டர் காலமாகிய கி.பி. ஏழாம் நூற்றாண்டு முதல் இன்றுவரை இச்சகரம் முன்னுமுன் வல்லண்ணவுயிர்ப்புரை வொலியாகவே வழங்கி வந்தமைக்கே சான்றிருத்தலால் உரையாசிரியர்கள் கருத்து உண்மையாகாது அவர்கள் பழைய மரபு பற்றியே கூறியிருக்கவேண்டும்.

மேலும் அறிஞர் எல். வி. ஆர். சகரம்பற்றிக் கூறும் கருத்துக்கள் நாம் மேலே விளக்கி வரையறுத்த கருத்துக்களையே வற்புறுத்துகின்றன.]

'Short initial c in many Tamil areas is evaluated as a sibilant s both in the colloquial and in the reading of the texts.

Short medial intervocal c has in all areas the value of s

Short medial c in the literary groups ய்ச், ழ்ச், ர்ச், ல்ச். ள்ச், ண்ச், ன்ச் (the medial position arising on account of external sandhi except in the group ல்ச்) is (when texts are read) equated commonly to s, sometimes slightly voiced in ன்ச் and ண்ச்

Medial cc is always (both in the colloquials and in the reading of the texts) brougt out as a long affricate, the length being evident in the element of occlusion being kept

## 2. 3. டகரம்

2. 3. 1. டகரமெய் (ட்) இன்றைய தமிழில் கீழ்க் கண்ட சூழல்களில் வழங்குகின்றது:

1 மொழியிடையிரட்டை : -ட்ட்-
2 வலிமுன் : -ட்க்-, -ட்ச்-, -ட்ப்-.
3 உயிரிடை : -ட்-
4 மெலிப்பின் (ணப்பின்): -ண்ட்-

**இரட்டைட்டகரம்.** குரல் தசைகள் ஒலிக்காதிருக்கவும், மூக்குவழி அடைக்கப்பட்டிருக்கவும், நுனிநாக்கு எழுந்து உள்நோக்கி வளைந்து முன்வல்லண்ணத்தை ஒற்றி, உள்ளிருந்து வரும் காற்றினை முழுவதுந்தடுத்துப் பின் வெடியோசையோடு வாய்வழியாக அக்காற்றை விடுதலால் பிறப்பதே இட்டகரம். ஆகவே இதனை வளைநுனிநா **முன்வல்லண்ணவுயிர்ப்புத்[60] தடையொலி** எனலாம். இதனை [ṭ] எனக்குறிக்கலாம்.

**வலிமுன்** டகரமும் இரட்டைட்டகரம் போன்றே பிறக் கின்றது.

எ. கா. திட்டம் இட்டனர்
வெட்கம், கட்சி, திட்பம்.

---

up for a longer time than for the short c (when pronounced as an affricate.)'-(L.V.R's Some Parallelisms and Diver-geuces in South Indian Dravidian, Educational Review, Vol. 44) [In this passage s is alveolar]

60. Apico-pre-palatal voiceless retroflex stop. பேர். தெ.பொ.மீ, அவர்கள் தெளிவாக ஒலிக்கின்றபோது முன்வல்லண்ணமல்லாது நடுவல்லண்ணமே (madio-palate) ஒலிப்பிடமாகிறது என்கின்றனர். —க. க.

**மெலிப்பின்டகரம்.** குரல்தசைகள் அதிர்ந்து ஒலித்துக் கொண்டிருக்கவும், மூக்குவழி அடைக்கப்பட்டிருக்கவும், நுனிநாக்கு எழுந்து உள்நோக்கி வளைந்து முன்வல்லண்ணத்தை ஒற்றி, உள்ளேயிருந்து வரும் காற்றை முழுவதுந் தடுத்துப் பின் வெடியோசையோடு வாய்வழியாக அக் காற்றை விடுதலால் பிறப்பதே இட்டகரம். ஆகவே இதனை **வளை நுனிநா முன்வல்லண்ணக் குரல்தடையொலி** எனலாம்.[61] இதனை [ḍ] எனக்குறிக்கலாம்.

எ. கா. கண்டவர் விண்டது

**உயிரிடைட்டகரம்.** குரல்தசைகள் அதிர்ந்து ஒலித்துக் கொண்டிருக்கவும், மூக்குவழி அடைக்கப் பட்டிருக்கவும், நுனிநாக்கு எழுந்து உள்நோக்கி வளைந்து முன்வல்லண்ணத்தை ஒருதட்டுத்தட்டி விட்டுப்பிரிதலால் பிறப்பதே இட்டகரம். ஆகவே இதனை **வளை நுனிநா முன் வல்லண்ணக் குரல்தட்டொலி** எனலாம்.[62] இதனை [ṛ] எனக் குறிக்கலாம்.[63]

எ. கா. மடம் கெடுக

மேற்கண்ட விளக்கத்தால் கொள்ளப்படும் டகரத்தின் எழுத்தொலிகளும் அவற்றின் சூழல்களும் வருமாறு:

/ட/ : [ṭ] இரட்டுகின்றபோதும் |வலிமுன்னும்
[ḍ] மெலிப்பின்
[ṛ] உயிரிடை

---

61. Apicoprepalatal voiced retroflex stop
62. Apicoprepalatal voiced retroflex flap
63. தட்டொலி, தடையொலியோடு ஒப்பிடப்படுகின்ற போது அளவால் குறுகியது என்பது தவிர வேறு வகையில் வேறுபட்டதல்ல. இந்நூலின் 21-ஆம் பக்கத்தில் கீழ்ப்புள்ளி பெற்ற r தட்டொலி எனவே கொள்க.

2. 3. 2. மொழியியலறிஞர் பெர்த் டகரவெழுத்திற்கு மூன்று எழுத்தொலிகளைக் காணுகிறார்:

I. வலிமுன்னும் இரட்டுகிறபோதும் வளைநுனிநாப் பின்னிற்றண்ணவுயிர்ப்புத் தடையொலி.[64]

எ. கா. காட்சி, பட்டம்.

II. ணப்பின் வளைநுனிநாப்பின்னிற்றண்ணக் குரல் தடையொலி.

எ. கா. பண்டம்.

III. உயிரிடையில் வளைநுனிநா முன்வல்லண்ணக் குரல்தட்டொலி.[65]

எ. கா. காடு, எடுத்து.

2. 3. 3. அறிஞர் கால்டுவெல் டகரத்திற்குரிய [ṭ], [ḍ] ஆகிய இருவேறுபாடுகளையும் அறிந்து கூறியிருக்கின்றார். ஆனால் தட்டொலியாகிய [ṛ] என்பதனை அவர் கண்டு கூறவில்லை; இச்சிறுவேறுபாட்டை அவர் புறக்கணித்திருக்கலாம்.

---

64 "Here it is a voiceless retroflex stop i.e. a t-sound made with the tip of the tongue just clear of the upper gums.' —P. VIII, SOTP.

65: 'Intervocally —a retroflex flapp d voiced consonant =d. The blade of the tongue is curled back and as it is quickly flapped forward the under-edge of the tip of the tongue just catches that part of the hard palate immediately behind the gums where the palate ceases to be concave and begins to be convex... The tongue is widened laterally and the blade flaps down so that when them ovement is over the tip touches the gum behind the lower teeth.' —P, VIII, SOTP.

2. 3. 4. தொல்காப்பியர் டகரத்தை வல்லினம் என வகைப்படுத்துகிறார். அதன் பிறப்புப்பற்றியும் 'டகார ணகாரம் நுனிநா அண்ணம்'[66] எனக்குறிக்கிறார். ஆகவே அவர் கருத்துப்படி டகரம் நுனிநா வண்ணத் தடையொலியாகலாம்.[67] நுனிநா மேல்நோக்கி

---

66. தொல். எழு.91. க,ச,ட ஆகிய மூன்றையும் தொல்காப்பியர் வல்லினம் என்ற காரணத்தால் அவை தடையொலிகள் எனக்கொள்ளப்படுகின்றன. ஆனால் அவர் பிற எழுத்துக்களுக்கு உரிய ஒலிப்புமுறைகளைக் கூறியது போன்று இம்மூன்றனுக்கும் கூறவில்லை என்பது சிலர் கருத்து. அதுவும் சிந்திக்கத்தக்கதே:

'First of all the author does not state what manner of articulations these are. He states only the place of articulation and the articulators involved. The question why he does not state the manner of articulation may never be solved. This is puzzling, indeed, because his treatment of other sounds in later verses gives all the relavent information. It is possible that part of verse ten is lost or some following verses are lost. However it may be, there is room for speculation that these sub-groups may not all be 'plosives'. This view is somewhat sub stantiated by verse ten: These six sounds are produced in three ways.'—Rama Subblah, in his 'Tolkaappiyam and Phonetics' in Indo-Iranian Journal, Vol. x -No. 4. (1968) [இங்கு verse ten என்பது தொல். எழு. 92.]

67 Apicopalatal or apicoalveolar stop. 'These two sounds ட and ண are alveolar according to Tolkappyiar; but at present they are pronounced by rounding the tongue and allowing to touch the uppermost part of the hard palate exactly in the same way as ட and ண are pronounced in Sanskrit: Hence it is worth investigation whether the

யெழுந்து பின்வல்லண்ணம் முன்வல்லண்ணம் ஈற்றண்ணம் ஆகிய இடங்களைப் பொருந்தி ஒலியெழுப்ப முடியும். நாநுனி உள்நோக்கி வளைந்தும் வளையாதும் ஒலியெழுப்ப முடியும். ஆனாலும் தொல்காப்பியர் இவை பற்றியெல்லாம் ஒருகுறிப்பும் தரவில்லை என்பது கருதத்தக்கது.

நன்னூலாரும் டகரத்தை வல்லினம் என வகைப் படுத்துகிறார். "உரம் பெறும் வன்மை" என்பதனால் இட்டகரத்தின் பிறப்பிடம் நெஞ்சு எனக்கொள்கிறார். அதன் பிறப்புப்பற்றி

கஙவும் சஞவும் டணவும் முதலிடை
நுனிநா அண்ணம் உறமுறை வருமே[68]

என்ற நூற்பாவில் கூறுகிறார். ஆகவே நன்னூலார் கருத்துப்படி டகரம் **நெஞ்சிடமாகப் பிறந்த நுனிநா வண்ணத்தடையொலி** ஆகலாம். இவரும் குறிப்பாக அண்ணத்தின் இடம்பற்றியும் நாவின் நிலைபற்றியும். தொல்காப்பியரைப் போலவே ஒன்றும் கூறவில்லை.

## 2. 4. தகரம்

2. 4. 1. தகர மெய் (த்) இன்றைய தமிழில் கீழ்க்கண்ட சூழல்களில் வழங்குகிறது:

1 மொழி முதல் : த்-
2 மொழியிடை : -த்த்-, -ய்த்த்-, -ர்த்த்-,
யிரட்டை : -ழ்த்-.

---

Sanskrit ட and ண were borrowed from the Dravidian languages. The original pronounciation of Tamil ட and ண is preserved even now in Malayalam.' —P. S. Subrahmanya Sastri, Tolkaappiyam Translation, Vol. I. P. 13.
68. நன். 79

| | | | |
|---|---|---|---|
| 3 | உயிரிடை | : | -த்- |
| 4 | இடைப்பின் (யரழப்பின்) | : | -ய்த்-, -ர்த்-, -ழ்த்-. |
| 5 | மெலிப்பின் (நப்பின்) | : | -ந்த்-, -ய்ந்த்-, -ர்ந்த்-, -ழ்ந்த்-. |

**மொழிமுதல் தகரம்:** குரல்தசைகள் ஒலிக்காதிருக்கவும், மூக்குவழி அடைக்கப்பட்டிருக்கவும், நுனிநாக்குப் பரந்து உள்மேலண்பல்லை ஒற்றி, உள்ளேயிருந்து வரும் காற்றை முழுவதுந் தடுத்துப் பின் வெடியோசையோடு வாய்வழியாக அக்காற்றை விடுதலால் பிறப்பதே இத்தகரம். ஆகவே இதனை **நுனிநா மேலண்பல்லுயிர்ப்புத்தடையொலி** எனலாம்.[69] இதனை [t] எனக் குறிக்கலாம்.

**இரட்டைத் தகரமும்** மொழிமுதல் தகரம் போன்றே பிறக்கின்றது.

எ. கா. பத்துப்பேர் வாழ்த்தினர்,
மக்கள் மொய்த்தனர்,
அன்பு சேர்த்தனர்.

**உயிரிடைத் தகரம்:** குரல் தசைகள் அதிர்ந்து ஒலித்துக்கொண்டிருக்கவும், மூக்குவழி அடைக்கப்பட்டிருக்கவும் நுனிநா உள்மேலண்பல்லை மெல்ல ஒற்றி, உள்ளேயிருந்துவரும் காற்றைச் சிறிதே தடுத்துப்பின் வாய்வழியாக அக்காற்றை விடுதலால் பிறப்பதே இத்தகரம். ஆகவே இதனை **நுனிநா மேலண்பல்குரல்தளர் தடையொலி** எனலாம்.[70] இது தடையொலிக்கும் உரைவொலிக்கும்

---

69. Lamino-alveo-deutal volceless stop
70. Lamino-alveo-dental volced lax stop

இடைப்பட்டது எனல் வேண்டும். இதனை [δ] எனக் குறிக்கலாம்.

இடைப்பின் தகரமும் உயிரிடைத் தகரம் போன்றே பிறக்கின்றது.

எ. கா. வீழ்தல், விழைதல்.

**மெலிப்பின் தகரம்:** குரல் தசைகள் அதிர்ந்து ஒலித்துக்கொண்டிருக்கவும், மூக்குவழி அடைக்கப்பட்டிருக்கவும், நுனிநாக்கு உள்மேலண்பல்லை ஒற்றி உள்ளேயிருந்து வரும் காற்றை முழுவதும் தடுத்துப் பின் வெடியோசையோடு வாய்வழியாக அக்காற்றை விடுதலால் பிறப்பதே இத்தகரம். ஆகவே இதனை நுனிநா மேலண்பல்குரல் தடையொலி எனலாம்.[71] இதனை [d] எனக் குறிக்கலாம்

எ. க. தந்தை குடந்தை சேர்ந்தார்

மேற்கண்ட விளக்கத்தால் கொள்ளப்படும் தகரத்தின் எழுத்தொலிகளும் அவற்றின் சூழல்களும் வருமாறு:

| | | |
|---|---|---|
| /த/: | [t] | மொழி முதலிலும், இரட்டுகிற போதும். |
| | [d] | மெலிப்பின் |
| | [δ] | உயிரிடையும், இடைப்பின்னும். |

2. 4. 2. மொழியியலறிஞர் பெர்த் தகரத்திற்கு மூன்று எழுத்தொலிகளைக் காணுகிறார்.

I. மொழி முதலிலும் இரட்டுகிறபோதும் நுனிநாப் பல்லுயிர்ப்புத்தடையொலி.

---

71. Lamino-alveo-palatal voiced stop

எ. கா. திண்ணை, மேய்த்தேன்.

II. நப்பின் நுனிநாப் பல்குரல் தடையொலி.

எ. கா. தந்தேன்.

III. உயிரிடையில் முன்னுவண்பல்குரல்பரப்புரை வொலி.[72]

எ. கா. போதும்.

2. 4. 3. திரு பெர்த்த் கண்டவாறே அறிஞர் கால்டுவெலும் தகரத்திற்கு மூன்று வேறுபட்ட ஒலிகள் உண்டு என்பதைக் கண்டு குறித்துள்ளார்.

2. 4. 4. தொல்காப்பியர் தகரத்தை வல்லினம் என வகைப்படுத்துகிறுர். அதன் பிறப்புப் பற்றியும்

அண்ணம் நண்ணிய பல்முதல் மருங்கின்
நா நுனி பரந்து மெய்யுற ஒற்றத்
தாமினிது பிறக்கும் தகார நகாரம்[73]

எனக் குறிக்கிறுர். ஆகவே அவர் கருத்துப்படி தகரம் நுனிநா **வண்பல்** தடையொலி ஆகலாம்.[74] 'பரந்து மெய்யுற' என்னும் அடைமொழிகள் தகரம் முழுத்தடையொலி என்பதைக் குறிப்பதாகலாம்.

---

72. 'Intervocally t is rather like the t in other. The tip of the tongue is behind the upper teeth and that part of the blade just behind the tip almost touches the gums. It is quite short and the articulation is lax.' —P. V,SOTP.

73. தொல். எழு. 93

74. Apical alveo palatal stop

நன்னூலாரும் தகரத்தை வல்லினம் என வகைப்படுத்து கிறார். "உரம்பெறும் வன்மை" என்பதனால் இத்தகரத்தின் பிறப்பிடம் நெஞ்சு எனக் கொள்கிறார். அதன் பிறப்புப் பற்றி

அண்பல் அடிநா முடியுறத் தநவரும்[75]

என்ற நூற்பாவில் கூறுகிறார். ஆகவே நன்னூலார் கருத்துப்படி தகரம் நெஞ்சிடமாகப் பிறந்த நுனிநாவண் பல்தடையொலி ஆகலாம்.

## 2. 5. பகரம்

2. 5. 1. பகரமெய் (ப்) இன்றைய தமிழில் கீழ்க் கண்ட சூழல்களில் வழங்குகிறது:

| | | | |
|---|---|---|---|
| 1 | மொழிமுதல் | : | ப்- |
| 2 | மொழியிடை யிரட்டை | : | -ப்ப்-<br>-ய்ப்ப்-, -ர்ப்ப்-, -ழ்ப்ப்-. |
| 3 | வலிப்பின் | : | -ட்ப்-, -ற்ப்-. |
| 4 | மெலிப்பின் | : | -ம்ப்-, -ண்ப்-, -ன்ப்-. |
| 5 | இடைப்பின் | : | -ய்ப்-, -ர்ப்-, -ல்ப்-,<br>-ழ்ப்-, -ள்ப்-. |
| 6 | உயிரிடை | : | -ப்- |

மொழிமுதல்பகரம்: குரல்தசைகள் ஒலிக்காதிருக்கவும், மூக்குவழி அடைக்கப்பட்டிருக்கவும், மேலிதழும் கீழிதழும் ஒற்றி, உள்ளிருந்து வரும் காற்றை முழுவதுந் தடுத்துப் பின் வெடியோசையோடு அக்காற்றை வெளியே விடு தலால் பிறப்பதே இப்பகரம். ஆகவே இதனை ஈரித

75. நன். 80

மூயிர்ப்புத் தடையொலி எனலாம்.[76] இதனை [p] எனக் குறிக்கலாம்.

**இரட்டைப்பகரமும் வலிப்பின் பகரமும்** மொழி முதற்பகரம் போன்றே பிறக்கின்றன.

எ. கா. பாய்மரக் கப்பல், வாய்ப்பு, தீர்ப்பு, காழ்ப்பு.

**மெலிப்பின்பகரம்:** குரல்தசைகள் அதிர்ந்து ஒலித்துக் கொண்டிருக்கவும், மூக்குவழி அடைக்கப்பட்டிருக்கவும், மேலிதழும் கீழிதழும் ஒற்றி, உள்ளேயிருந்து வரும் காற்றை முழுவதும் தடுத்துப் பின் வெடியோசையோடு அக்காற்றை வெளியே விடுதலால் பிறப்பதே இப்பகரம். ஆகவே இதனை **ஈரிதழ்க்குரல் தடையொலி** எனலாம்.[77] இதனை [b] எனக் குறிக்கலாம்.

எ. கா. அன்பும் பண்பும் விரும்புக.

**உயிரிடைப் பகரம்:** குரல் தசைகள் அதிர்ந்து ஒலித்துக்கொண்டிருக்கவும், மூக்குவழி அடைக்கப்பட்டிருக்கவும், மேலிதழும் கீழிதழும் நெருங்கிச் சிறிதே இடைவெளி விட்டு நிற்க உள்ளிருந்துவரும் காற்று ஈரிதழிலும் உணர்ந்து கொண்டு வெளிவரப் பிறப்பதே இப்பகரம். ஆகவே இதனை **ஈரிதழ்க் குரலுரை வொலி**[78] எனலாம். இதனை [β] எனக் குறிக்கலாம்.

**இடைப்பின் பகரமும்** இவ்வுயிரிடைப்பகரம் போன்றே பிறக்கின்றது.

எ. கா. முடிபு சேர்பவர்
சால்பு வாழ்பவர்
செய்பவர் கொள்பவர்



76. Bilabial voiceless stop.
77. Bilabial voiced stop. 78. Bilabial voiced fricatiue

உயிரிடைப் பகரமும் இடைப்பின் பகரமும் தெளிவாகப் பேசுகின்ற போதும் படிக்கின்ற போதும் உரைவொலியாக இல்லாது மெலிப்பின் பகரம் போன்றே தடையொலியாகவே ஒலித்தலும் உண்டு.

மேற்கண்ட விளக்கத்தால் கொள்ளப்படும் பகரத்தின் எழுத்தொலிகளும் அவற்றின் சூழல்களும் வருமாறு:

/ப/ : [p] மொழி முதலிலும் இரட்டுகிற போதும் வலிப்பின்னும்
[b] மெலிப்பின்
[β] உயிரிடையும் இடைப்பின்னும்

2. 5. 2. மொழியியலறிஞர் பெர்த்த் பகரத்திற்கு மூன்று எழுத்தொலிகளைக் காணுகிறார்:

I. மொழி முதலிலும் இரட்டுகிற போதும் ஈரிதழுயிர்ப்புத் தடையொலி.[79]

எ. கா. பல்

II. மெலிப்பின் ஈரிதழ்க்குரல் தடையொலி.

எ. கா. தம்பி, இன்பம்

III. உயிரிடையில் ஈரிதழ்க் குரலுரைவொலி.

எ. கா. கபடு

---

79. 'Initially as in English with slightly less aspiration when followed by short vowels and more when followed by long vowels, especially *uu*. When followed by *uu* it is frequently affricated' e. g. p'uunal' cat.' —P,IV, SOTP.

மொழி முதலில் பகரம் சிறிது ஹகரவொலி பெறு கிறது எனவும் திரு. பெர்த் குறித்திருக்கிறார். மற்ற இடங்களில் அது ஹகரவொலி பெறுவதில்லையாம். இரட்டைப்பகரம் வன்மையோடு ஒலிக்கப்படுகின்ற செறி வொலி எனவும் அவர் குறித்திருக்கிறார்.[80]

2. 5. 3. அறிஞர் கால்டுவெல் பகரத்திற்கு உரிய உயிர்ப்பொலி குரலொலி வேறுபாடுகளை உணர்ந்து குறித்துள்ளார்; ஆனால் அதற்கு உரிய குரலுரைவொலி யாகிய [β] என்பதனைப்பற்றி ஒன்றும் குறிக்கவில்லை.

2. 5. 4. தொல்காப்பியர் பகரத்தை வல்லினம் என வகைப்படுத்துகிறார். அதன் பிறப்புப் பற்றியும் இதழியைந்து பிறக்கும் பகார மகாரம்[81] எனக் குறிக்கிறார். ஆகவே அவர் கருத்துப்படி பகரம் ஈரிதழ்த் தடையொலி ஆகலாம்.

நன்னூலாரும் பகரத்தை வல்லினம் என வகைப்படுத்து கிறார். "உரம்பெறும் வன்மை" என்பதனால் இப்பகரத்தின் பிறப்பிடம் நெஞ்சு எனக் கொள்கிறார். அதன் பிறப்புப்பற்றி

மீகீழ் இதழுறப் பம்மப் பிறக்கும்[82]

என்ற நூற்பாவில் கூறுகிறார். ஆகவே நன்னூலார் கருத்துப்படி பகரம் நெஞ்சிடமாகப் பிறந்த ஈரிதழ்த் தடை யொலி ஆகலாம்.

## 2 6. றகரம்

2. 6. 1. றகரமெய் (ற்) இன்றைய தமிழில் கீழ்க் கண்ட சூழல்களில் வழங்குகிறது:

---

80. 'PP is always a tense p energetically articulated but without aspiration.' —P. IV, SOTP.

81. தொல். எழு. 97 82. நன்.81

1 மொழியிடையிரட்டை : -ற்ற்-
2 வலிமுன் : -ற்க்-, -ற்ச்-, -ற்ப்-.
3 மெலிப்பின் (னப்பின்) : -ன்ற்-
4 உயிரிடை : -ற்-

தென்முனைத் தமிழகம் நீங்கிய மற்றைத் தமிழகத்தில் இவ்வெழுத்துப் பேச்சில் வழங்குதல் இல்லை. படிக்கின்ற போது எத்தகையொலி இதற்குண்டு என்பதை மட்டும் இங்குக் குறிக்கலாம்.

**உயிரிடை றகரம்:** குரல்நசைகள் ஒலித்துக்கொண்டிருக்கவும், மூக்குவழி அடைக்கப்பட்டிருக்கவும், நுனி நாக்கு ஈற்றண்ணம் நோக்கி எழுந்து உள்ளிருந்து வரும காற்றால் துடிப்புண்டு அவ்வீற்றண்ணத்தில் சிலமுறை மோதப் பிறப்பதே இவ் றகரம். ஆகவே இதனை **நுனிநா வீற்றண்ணக் குரல் துடிப்பொலி** எனலாம்.[83] இதனை [r] எனக் குறிக்கலாம்.[84]

இவ்வுயிரிடை றகரம் சிலபோது நுனிநா ஈற்றண்ணத்தை ஒருமுறை மட்டுமே தட்டி நின்றொலிப்பதுமுண்டு. இந்நிலையில் இது **தட்டொலி** எனப் பெயர்பெறும்.[85]

**வலிமுன் றகரமும் னப்பின் றகரமும் உயிரிடை றகரம்** போன்றே ஒலிக்கின்றன.

எ. கா. குறுந்தொகை பயிற்சி
கற்கிறான் கற்பான் என்றான்

---

83. Apicoalveolar voiced trill
84. அனைத்துலகொலியியற்பட்டி இதனை Rolled consonant என வழங்குகிறது
85. Apicoalveolar voiced flap

தென்முனைத் தமிழகத்தில் நாஞ்சில் நாட்டு வட்டாரத்தில் உயிரிடை றகரம் ஈற்றண்ணத்தையல்லாது முன்வல்லண்ணத்தைத்[86] தன் ஒலிப்பிடமாகக் கொண்டொலிக்கிறது.

கல்விக் கழகங்களில் இவ் றகரத்தைக் கற்பிக்கின்ற போது அழுத்தி—வன்மையாக—ஒலிக்க வேண்டும் என ஆசிரியன்மார் கற்பிக்கின்றனர். இது ரகரத்திலிருந்து இவ் றகரத்தை வேறுபடுத்திக் காட்டுதற் பொருட்டேயாகும். ஆனால் பேச்சில் அவ்வாறு வேறுபாடில்லை.[87]

**இரட்டை றகரம்:** குரல்தசைகள் ஒலிக்காதிருக்கவும், மூக்குவழி அடைக்கப்பட்டிருக்கவும், நுனிநாக்கு மேல் நோக்கியெழுந்து முன்வல்லண்ணத்தை ஒற்றி, உள்ளிருந்து வரும் காற்றை முழுவதும் தடுத்துப்பின் பிரிகின்றபோது அக்காற்றால் துடிப்புண்டு அம்முன்வல்லண்ணத்தில் சில முறை மோதப் பிறப்பதே இவ்விரட்டை றகரம். அதாவது முன் றகரம் தடையொலியாகவும் பின்றகரம் துடிப்பொலியாகவும் விளங்குகின்றன. முன்றகரம் டகரந்தான்; பின்றகரம் ரகரம்தான்;[88] வேறல்ல.

---

86 Prepalate 87. றகர ரகரங்கள் வரும் தமிழ்ப் பெயர்கள் அனைத்தையும் ஆங்கிலத்தில் r என்ற ஒரே எழுத்தாலேயே நாம் எழுதுகின்றோம் என்பது இங்குக் கருதத்தக்கது

எ. க. Arumugam, Adayar
Ramasamy, Varadarajan

88. உண்மையில் முற்றிற்று, முட்ரிட்ரு (அல்லது முட்ட்ரிட்ட்ரு) ஆகிய இவற்றிடை ஒலிவேறுபாடில்லை. -ற்ற்- என்பதை நாம் ஆங்கிலத்தில் ttr அல்லது tr என்றே ஈரெழுத்தால் எழுதுகிறோம்.

எ. கா. mutritru

தென்முனைத்தமிழகத்திலும் ஈழத்திலும் இவ்விரட்டை றகரம் வேறுவகையாக ஒலிக்கிறது. குரல் தசைகள் ஒலிக்காதிருக்கவும் மூக்குவழி அடைக்கப்பட்டிருக்கவும் நுனிநாக்கு ஈற்றண்ணத்தை ஒற்றி உள்ளிருந்து வரும் காற்றை முழுவதும் தடுத்துப் பின் வெடியோசையோடு வாய்வழியாக அக்காற்றை விடுதலால் பிறப்பதே இவ்விரட்டை றகரம் ஆகவே இதனை **நுனிநா விற்றண்ணவுயிர்ப்புத்தடையொலி** எனலாம்.[89] அதாவது இங்குத் துடிப்பொலியே இல்லாது தடையொலியே விளங்குகிறது.[90] இதனை [ṯ] எனக் குறிக்கலாம்.

இன்றைத்தமிழில் றகரமும் ரகரமும் ஒன்றே. ஆனால் நெடுங்கணக்கில் மட்டும் வேறுபாடு கொள்ளப்பட்டு வருகிறது. றகரத்தின் பழைய வரலாறும் பழமை விடாமையுமே இக்குழப்பத்திற்குக் காரணம். ஈழத்திலும், தென்முனைத் தமிழகத்திலும் உள்ள வழக்குக்களைக் கிளைமொழி வழக்குக்களாகக் கொள்ளவேண்டும்.

2. 6. 2. மொழியியலறிஞர் பெர்த் வலிமுன் றகரத்தையும் உயிரிடை ரகரத்தையும் ரகரமாகவே கருதுகிறார். அதாவது -ற்- என்பதும் -ர்- என்பதும் அவருக்கு ஒன்றே: -ற்க்- -ற்ச்- -ற்ப்- என்பவை -ர்க்க்- -ர்ச்ச்- -ர்ப்ப்- என்பவையே ஆகும்.[91]

---

89. Apicoalveolar Voiceless stop

90 இந்நாஞ்சில் வட்டாரத்தில் Titus என்ற பெயர் டயற்றஸ் என்றெழுதப்படுகிறது. B.A.,B.T., என்பது பி.ஏ., பி. ற்றி. என்றெழுதப்படுகிறது. Mota Sing என்பதை ஒரு மாணவர் மோருசிங் எனத் தமிழ்ப்படுத்துகிறார்.

91. தமிழகத்தின் விளம்பரங்களிலும் அறிக்கைகளிலும்

மேலும் அவர், -ன்ற்-, -ற்ற்- ஆகிய இரண்டும் சுற்றண்ணத்தில் பிறக்கின்றவை; வளைநுனிநா ஒலிகள் அல்ல என்கிறார். இவையிரண்டையும் முறையே ntr எனவும் ttr எனவும் அவர் குறிக்கிறார். இவற்றில் உள்ள rகரம் உரையொலியாம். ntr என்பது சொல்லிடையில்தான் வழங்குகிறது என்றும் இங்குள்ள t கரம் குரலொலி dகரமேயாகும் எனவும் குறிக்கிறார்.

2. 6. 3. அறிஞர் கால்டுவெல் இவ்றகரத்தைத் திராவிடமொழிகள் பெற்ற வலியமுரட்டுரகரம் என்கிறார்.[93] இப்பண்பிற்கு ஏற்பத் தமிழ் நெடுங்கணக்கில் ஒரு காலத்தில் றகரம் இரட்டை ரகரமாக (-ர்ர்- என) எழுதப்பட்டது என்பதையும் அவர் சுட்டிக்காட்டுகிறார்; தம் நூல் முழு

---

மாணவர் கட்டுரைகளிலும் றகர ரகரப் ''பிழைகள்'' மலிந்து கிடக்கின்றன. ''இப்பிழைகள்'' எல்லாம் மேற்கண்ட குழப்பத்தின் விளைவே. இப்''பிழைகளைத்'' தென்முனைத் தமிழக மாணவர்கள் பெரும்பாலும் செய்வதில்லை!

'......it appears probable that the use of the two written characters ர் and ற் does not correspond to any parallel habits of speech'' —P. XVI, SOTP.

92. 'The groups *ntr* and *ttr* are neither dental nor retroflex but alveolar as in English.

In the group *ntr* the *r* is fricative as in English and the whole group alveolar in articulation.

After *n* the *t* is pronounced as *d*, the whole group occuring medially and sounding like *ndr* in Englisb phrase *undreamt of* or *laundry*.

*ttr* Similarly the group *itr* sounds rather like the *tr* group in the word *patrol*.' —P. IX. SOTP.

93. 'The hard rough r of the Dravidiyan Languages.' –பக், 145, CGDL.

வதும் அதனைக் கீழ்க்கோடிட்ட rகரமாகவே (r என) ஆங்கிலப்படுத்துகிறார். மேலும் அவர் றகரம் இரட்டித்து வழங்குகிறபோது ttr என ஒலிக்கிறது எனவும், இங்குள்ள tt தமிழ் டகரமோ தகரமோ அல்ல என்வும், அது ஆங்கில மொழி வினவான what என்னும் சொல் லின் ஈற்றிலுள்ள வல்லொலி t எனவும் ஆராய்ந்து கூறி யிருக்கிறார். அதாவது அவர் கருத்துப்படி இவ்விரட்டை றகரத்திலுள்ளது ஈற்றன்னவுயிர்ப்புத்தடையொலி ஆகி றது. -ன்ற்- என்ற தொடர் அவருக்கு ndr என ஒலிப்ப தாகத் தோன்றுகிறது.[94]

அறிஞர் பெர்த், கால்டுவெல் இருவரும் ற்றகரத்தில் ஈற்றண்ணத் தடையொலியே உண்டு எனக் கண்டிருக்கின் றனர். ஆனால் அது டகரம்போன்றே முன்வல்லண்ணத் தடையொலியாகவே ஒலிக்கிறது எனச் சிறிது வேறுபட்ட கருத்து மேலே கூறப்பட்டது.[95]

2. 6. 4. தொல்காப்பியர் றகரத்தை வல்லினம் என வகைப்படுத்துகிறார். அதன் பிறப்புப்பற்றி

அணரி நுனிநா அண்ணம் ஒற்ற
றஃகான் னஃகான் ஆயிரண்டும் பிறக்கும்[96]

எனக் குறிக்கிறார். அதாவது "நுனிநா மேல்நோக்கி எழுந்து அண்ணத்தை ஒற்ற இவ்வெழுத்துப் பிறக்கிறது," என்பது இதன் பொருள். நுனிநா எழுகிறபோது உள் நோக்கி வளைகிறதா என்பது தெளிவாகக் கூறப்பட வில்லை. நுனிநா அண்ணத்தின் எப்பகுதியை ஒற்று

94. பக். 145, CGDL. 95. காண்க 2.6.1.
96. தொல். எழு. 94

கிறது என்பதும் குறிக்கப்படவில்லை. "மேல்நோக்கியெழுந்து" எனப்பொருள்படுகிற "அணரி" என்ற சொல் சிறப்பாகப் பயன்படுத்தப்படுகிற காரணத்தால் ஒலிப்பிடம்—நுனிநா ஒற்றுமிடம்—நடுவல்லண்ணமாகலாம். அவ்வாறு நடுவல்லண்ணமானல் நுனிநா சிறிது வளைதல் வேண்டும். ஆகவே தொல்காப்பியர் கருத்துப்படி றகரம் **வளைநுனிநா நடுவல்லண்ணத்தடையொலி** ஆகலாம்.[97]

நன்னூலாரும் றகரத்தை வல்லெழுத்து என வகைப்படுத்துகிறார். "உரம் பெறும் வன்மை" என்பதனல் இவ்றகரத்தின் பிறப்பிடம் நெஞ்சு எனக்கொள்கிறார். அதன் பிறப்புப்பற்றி,

அண்ணம் நுனிநா நனியுறின் றனவரும்[98]

என்ற நூற்பாவால் கூறுகிறார். நன்னூலார் கருத்துப்படி றகரம் டகரத்திலிருந்து சிறிதே வேறுபடுகிறது. டகரம் அண்ணத்தை நுனிநா உற வரும்; றகரம் அண்ணத்தை நனியுறின் வரும். 'உற' என்பதற்குப் "பொருந்த" என்றும் "நனியுறின்" என்பதற்கு "மிகப்பொருந்தின்" எனவும் உரையாசிரியர்கள் பொருள் தருகின்றனர். ஆனல் இவ்வேறுபாட்டால் டகர றகர வேறுபாடு எவ்வாறு அமையும் என்பது விளங்கவில்லை!

தொல்காப்பியர் கூறிய நுனிநா அணர ஒற்றுதல் என்ற கருத்தை நன்னூலார் கூறவில்லை. ஆனல் "நனியுறின்" என்ற தொடரால் அக்கருத்தினைக் குறிக்கிறாரா என்பதும் விளங்கவில்லை. நன்னூலாரின் கருத்துப்படி றகரம் **நெஞ்சிடமாகப் பிறந்த நுனிநா வண்ணத்தடையொலி** ஆகலாம்.

---

**97. Apical medio-palatal retroflex stop 98. நன். 86**

## 2. 7. ஙகரம்

2. 7. 1. ஙகரமெய் (ங்) கீழ்க்கண்ட ஒரே சூழலில் தான் வழங்குகிறது:[99].

இனவலிமுன் : -ங்க்-

குரல்தசைகள் அதிர்ந்து ஒலித்துக்கொண்டிருக்கவும், மூக்குவழி திறக்கப்பட்டு அதன்வழிக் காற்றுச் சென்று கொண்டிருக்கவும், அடிநாக்கு மெல்லண்ணத்தை ஒற்றி உள்ளிருந்து வரும் காற்றைத் தடுத்துப்பின் வாய்வழி யாகவும் அக்காற்றை வெளிவிடுதலால் பிறப்பதே இங்ஙக ரம். ஆகவே இதனை அடிநா மெல்லண்ணக் குரல் மூக் கொலி எனலாம்.[100]. இதனை [ṅ] எனக் குறிக்கலாம்.

இவ் ஙகரம் தன்னையடுத்துவரும் தன்னினக்ககரம் உள்மெல்லண்ணத்திலோ முன்மெல்லண்ணத்திலோ பிறப் பதற்கு ஏற்ப உள்மெல்லண்ணத்தையும் முன்மெல்லண்

---

99 ஙகரம் ஈருயிரிடையில் இரட்டித்து ஐந்து சொற்க ளில் வழங்குகிறது. அவை அங்ஙனம், இங்ஙனம், உங்ங னம், எங்ஙனம், யாங்ஙனம் என்பவை. இவற்றை அவிநய ஞர் நன்னூலார் முதலான இலக்கணவாசிரியர்கள் உடன் பட்டுள்ளனர். இவை முறையே ஆங்கனம் : அங்கனம், ஈங்கனம் : இங்கனம், ஊங்கனம் : உங்கனம், யாங்கனம், எங்கனம், யாங்கனம் என்பவற்றின் திரிபுகளே. இவை இன்னும் வழங்கிக்கொண்டிருக்கின்றன. இவற்றையே இலக்கணமுடைய இயல்பு வழக்குக்களாகக் கொண்டு இரட்டை ஙகரம் பெற்றவற்றை விதிவிலக்கு வழக்குக் களாக இங்குக் கொள்ளலாம். அவ்வாறு கொண்டு இரட்டை ஙகரத்தை எழுத்து வரையறை யராய்ச்சிக்கு எடுத்துக்கொள்ளாது விட்டுவிடலாம்.

100. Dorsovelar voiced nasal

லாத்தையும் தானும் ஒலிப்பிடமாகக் கொண்டிருக்கிறது.

எ. கா. குரங்கு தொங்கி இறங்கும்

குரங்கிலிலுள்ள ஙகரம் உள்மெல்லண்ணத்திலும் தொங்கியிலுள்ள ஙகரம் முன்மெல்லண்ணத்திலும் பிறக்கின்றன.

இவ் ஙகரத்திற்கு [ṅ] ஒன்றே ஒலி; வேறொன்றும் இல்லை.

2. 7. 2. மொழியியலறிஞர் பெர்த்த் ஙகரம் ககரத்திற்கு இனவொலி என அடிநாமெல்லண்ணக்குரல் மூக்கொலியாக விளங்குகிறது என்கிறார். இது -ஙனம் என்ற சூழல் தவிர மற்ற சூழல்களில் ககரத்தின் முன் தான் வழங்குகிறது; அடுத்துவரும் முன்னண்ண பின்னண்ண உயிர்களுக்கு ஏற்ப இது முன்மெல்லண்ண பின்மெல்லண்ண ஒலியாக அமைகிறது என்பதையும் அவர் சுட்டிக்காட்டுகிறார்.

எ. கா. சங்கீதம் இங்ஙனம்

2. 7. 3. அறிஞர் கால்டுவெல் இதனை ṅ என மட்டுமல்லாது ng எனவும் எழுதிக்காட்டுகிறார். ஙகரம் ககர ஒலியும் சிறிது பெறுகிறது போலும்!

2. 7. 4. தொல்காப்பியர் நன்னூலார் முதலாயின இலக்கணவாசிரியர்கள் ஙஞண நமன என்பவற்றை மெல்லெழுத்துக்கள் எனப் பாகுபாடு செய்கின்றனர். வல்லெழுத்துக்களோடு ஒப்பிடுகின்றபோது இவை மென்மையாக ஒலிக்கின்றனவாம். தொல்காப்பியர்

மெல்லெழுத் தென்ப ஙஞண நமன[101]

என்றும் நன்னூலார்

மெல்லினம் ஙஞண நமனஎன் ஆறே[102]

என்றும் கூறுகின்றனர். இவ்விரு நூலாசிரியரும் இம் மெல்லினவெழுத்துக்கள் உள்ளிருந்து வரும் காற்று மூக்கு வழியாகச் செல்லுதலால் பிறக்கின்றன என்பதை உணர்ந் திருக்கின்றனர். ஆகவே அவர்கள் கருத்துப்படி இவை மூக்கொலியெழுத்துக்கள்தாம்.[103] இவ் எழுத்துக்க ளின் பிறப்பு முறையினைத் தனித்தனியே கூறி முடித்தபின் தொல்காப்பியர்,

மெல்லெழுத் தாறும் பிறப்பின் ஆக்கம்
சொல்லிய பள்ளி நிலையின வாயினும்
மூக்கின் வளியிசை யாப்புறத் தோன்றும்[104]

என மெல்லெழுத்துக்களுக்கு ஒரு சிறப்பு விதியும் கூறு கிறார். "யாப்புறத் தோன்றும்" என்பதற்கு "நிறைத லுறத் தோன்றும்" எனவும் "பொருந்தத் தோன்றும்" எனவும் பொருள் கூறப்படுகிறது. நன்னூலாரும் தொடக்கத்திலேயே

அவ்வழி
ஆவி இடைமை இடம்மிட றாகும்
மேவும் மென்மை மூக்கு; உரம்பெறும் வன்மை.[105]

என மூவகை முதலெழுத்துக்களுக்கும் பிறப்பிடம் கூறு கிறார். தொல்காப்பியர் மெல்லெழுத்தாறும் "மூக்கினது வளியினது இசையானது யாப்புறத் தோன்றும்" எனக்

101. தொல். எழு. 20 102. நன். 69.
103. Nasals 104. தொல். எழு. 100
105. நன். 75

கூற நன்னூலார் 'மென்மையானது மூக்கை இடமாக மேவும்' என்கிறார். தொல்காப்பியர் கருத்து இன்றை மொழியியலார் கருத்துக்கு ஏற்ப அமைந்திருக்கிறது. ஆனால் தொல்காப்பியரும் நன்னூலாரும் ஒரே கருத்தையே விளக்க எண்ணியிருக்க வேண்டும். இம்மூக்கொலி யெழுத்துக்கள் எவ்வாறு பிறக்கின்றன என்பதை விளக்கவந்த இவ்விரு நூலாசிரியரும் இவற்றைக் கசடதபற என்ற வல்லெழுத்துக்களோடு இணைத்தே விளக்குகின்றனர்; வல்லெழுத்துக்களின் பிறப்பே இம்மெல்லெழுத்துக்களின் பிறப்பு எனக் கூறுகின்றனர்.[106] தொல்காப்பியர், 'ககார ஙகாரம் முதல்நா வண்ணம்' என்றும் நன்னூலார் 'கஙவும் சஞவும்' டணவும் முதலிடை நுனிநா அண்ணம் உறமுறை வருமே' எனவும் ஙகரத்தின் பிறப்புப்பற்றிக் கூறுகின்றனர். ஆகவே இவர்கள் கருத்துப்படி ஙகரம் அடிநா மெல்லண்ண மூக்கொலி ஆகலாம்.

## 2. 8. ஞகரம்

*2. 8. 1.* ஞகரமெய் (ஞ்) கீழ்க்கண்ட சூழல்களில் வழங்குகிறது:

| | | | |
|---|---|---|---|
| 1 | மொழி முதல் | : | ஞ்- |
| 2 | உயிரிடை | : | -ஞ்- |
| 3 | இரட்டை | : | -ஞ்ஞ்- |
| 4 | சம்முன் (இனவலிமுன்) | : | -ஞ்ச்-[107]. |

106. இவ்வல்லெழுத்துக்களின் பிறப்புப்பற்றி இவ்வாசிரியர்களின் கருத்துக்களை மேல் ஆராய்ந்த முறையால் இம்மெல்லெழுத்துக்களின் பிறப்பும் விளங்கும்.

107. -ஞ்-, -ஞ்ய்- முதலிய சூழல்கள் பழந்தமிழிலும்

**மெலிமுதல் ஞகரம் :** குரல்தசைகள் அதிர்ந்து ஒலித்துக் கொண்டிருக்கவும், மூக்குவழி திறக்கப்பட்டு அதன்வழிக் காற்றுச் சென்று கொண்டிருக்கவும், இடை நாக்கு (பின்நாவின் முன்பகுதி) பின்வல்லண்ணத்தை ஒற்றி உள்ளிருந்து வரும் காற்றைத் தடுத்துப் பின் வாய்வழியாகவும் அக்காற்றை வெளிவிடுதலால் பிறப்பதே இஞ்ஞகரம். ஆகவே இதனை **இடைநாப்பின் வல்லண்ணக் குரல் மூக்கொலி** எனலாம்.[108] இதனை [ñ] எனக் குறிக்கலாம்.

உயிரிடை ஞகரமும், இரட்டை ஞகரமும் மொழிமுதல் ஞகரம் போன்றே பிறக்கின்றன.

எ. கா. ஞாயிறு
அறிஞரும் கலைஞரும்
மஞ்ஞை
விஞ்ஞானமும் அஞ்ஞானமும்

**சம்முன் ஞகரம்:** குரல்தசைகள் அதிர்ந்து ஒலித்துக் கொண்டிருக்கவும், மூக்குவழி திறக்கப்பட்டு அதன் வழிக்காற்றுச் சென்று கொண்டிருக்கவும், முன்நாக்குப் பரந்து ஈற்றண்ணத்தை ஒற்றி உள்ளிருந்து வரும் காற்றைத் தடுத்துப் பின் வாய்வழியாகவும் அக்காற்றை வெளிவிடுதலால் பிறப்பதே இஞ்ஞகரம். ஆகவே இதனை **முன்ஞ வீற்றண்ணக்குரல் மூக்கொலி** எனலாம்.[109] இதனை [ṇ̃] எனக் குறிக்கலாம்.

எ. கா. கொஞ்சம் மிஞ்சியது.

---

அரியன. -ண்ஞ்-, -ய்ஞ்-, -ர்ஞ்-, -ழ்ஞ்-, -ன்ஞ்- முதலியவை தொடர் மொழியுள் மட்டும் வழங்குபவை.

108. mediopalatal voiced nasal.
109. Front alveolar voiced nasal.

மேற்கண்ட விளக்கத்தால் கொள்ளப்படும் ஞகரத்தின் எழுத்தொலிகளும் அவற்றின் சூழல்களும் வருமாறு:

/ஞ/ : [ñ] மொழி முதலிலும் உயிரிடையும் இரட்டுகிறபோதும்.

[ñ] சகரத்தின் முன்.

2. 8. 2. மொழியியலறிஞர் பெர்த் ஞகரத்திற்கு இரண்டு எழுத்தொலிகள் உண்டு எனக் காணுகிறார்.

I. மொழிமுதலில் நடு நா வல்லண்ணக்குரல் மூக்கொலி.[110]

எ. கா. ஞாயிற்றுக்கிழமை

II. ஐம்முன் முன்னு வீற்றண்ணக் குரல் மூக்கொலி.[111]

எ. க. பஞ்சு

இரட்டிவருகின்ற போதும் இது ஈற்றண்ணவொலியாகவே இருக்கின்றது போலும்.

எ. கா. மெய்ஞ்ஞானம்

---

110. 'Palatal nasal made with the front of the tongue against the hard palate'. — பக். XIII, SOTP.

111. "Medially followed by j. In this case n is homorganic with j and pronounced farther forward with the same place of articulation as c and j'. — பக், XIII, SOTP.

திரு பெர்த் blade என்றும் front என்றும் கூறுகின்றவை முன்னுவும் இடை நாவும் ஆகும், நடுநா என ஒன்றை அவர் பாகுபாடு செய்யவில்லையாதலால்.

2. 8. 3. அறிஞர் கால்டுவெல் ஞகரம், யகர ஒலி கூடி ஒலிக்கிறது எனவும் உண்மையில் அது ஓர் இரட்டை எழுத்து எனவும் கருதுகிறார். அவர் காலத்தில் அது nj எனவும் ñy எனவும் ஆங்கில எழுத்தில் எழுதப்பட்டது என்பதையும் அவர் சுட்டிக்காட்டுகிறார்.

2. 8. 4. தொல்காப்பியர் ஞகரம் "மூக்கின் வளியிசை யாப்புறத் தோன்றும்" எனக் குறிக்கிறார். அதன் பிறப்புப்பற்றியும்

சகார ஞகாரம் இடைநா அண்ணம்[112]

எனக்கூறுகிறார். நன்னூலாரும் "மேவும் மென்மை மூக்கு" என்பதால் ஞகரம் மூக்கொலி பெறும் எனக் குறிப்பிட்டு

கஙவும் சஞவும் டணவும் முதலிடை
நுனிநா அண்ணம் உறமுறை வருமே[113]

என்ற நூற்பாவால் அதன் பிறப்பும் கூறுகிறார். ஆகவே இவ்விரு நூலாசிரியர் கருத்துப்படி ஞகரம் இடைநா **நடுவல்லண்ண மூக்கொலி** ஆகலாம்.[114]

## 2. 9. ணகரம்

2. 9. 1. ணகரமெய் (ண்) கீழ்க்கண்ட சூழல்களில் வழங்குகிறது:

1 உயிரிடை : -ண்-
2 வலிமுன் : -ண்க்-, -ண்ட்-, -ண்ப்-.

---

112. தொல். எழு. 90 113. நன். 79
114. Central mediopalatal Nasal

3 மெலிமுன் . -ண்ம்-
4 மொழியிறுதி : -ண்
5 இரட்டை : -ண்ண்-[115]

இண்ணகரம் உயிரிடைத்தவிர மேல் காட்டப்பட்ட மற்ற எல்லாச் சூழல்களிலும் ஒரே தன்மைத்தாகவே பிறக்கிறது.

குரல்தசைகள் அதிர்ந்து ஒலித்துக்கொண்டிருக்கவும், மூக்குவழி திறக்கப்பட்டு அதன்வழிக் காற்றுச்சென்று கொண்டிருக்கவும், நுனிநாக்கு எழுந்து உள்நோக்கி வளைந்து முன்வல்லண்ணத்தை ஒற்றி உள்ளிருந்து வரும் காற்றைத் தடுத்துப் பின் வாய் வழியாகவும் அக்காற்றை வெளிவிடுதலால் பிறப்பதே இண்ணகரம். ஆகவே இதனை **வளை நுனிநா முன் வல்லண்ணக்குரல் மூக்கொலி** எனலாம்.[116] இதனை [ṇ] எனக் குறிக்கலாம்.

எ. கா. பெண்கள் மணம் பூண்டு
பண்பொடும் திண்மையொடும்
பெண்ணீர்மையர்

**உயிரிடை ணகரம்:** குரல்தசைகள் அதிர்ந்து ஒலித்துக்கொண்டிருக்கவும், மூக்குவழி திறக்கப்பட்டு அதன்வழியும் காற்றுச் சென்று கொண்டிருக்கவும், நுனிநா எழுந்து உள்நோக்கி வளைந்து முன்வல்லண்

---

**115. -ண்ச்-, -ண்ஞ்-, -ண்ய்-. -ண்வ்- ஆகிய இலக்கணவாசிரியர் தரும் சூழல்கள் ஒருமொழியுள் வழங்கவில்லை; தொடர் மொழியுள்ளேயே வழங்குகின்றன. இவ்வெல்லாச் சூழல்களிலும் ணகரம் வளை நுனிநா முன் வல்லண்ணக் குரல் மூக்கொலியே யாகும்.**

**116. Apico-pre-palatal voiced retroflex Nasal**

ணத்தை ஒருதட்டுத் தட்டிப் பிரிதலால் பிறப்பதே இன்னகரம். ஆகவே இதனை **வளைநுனிநா முன்வல்லண்ணக்குரல் மூக்குத்தட்டொலி** எனலாம்.[117] இதனை [ṅ] எனக் குறிக்கலாம்.

எ. கா. அணு, பணம்

மேற் கண்ட விளக்கத்தால் கொள்ளப்படும் ணகரத்தின் எழுத்தொலிகளும் அதன் சூழல்களும் வருமாறு:

/**ண**/ : [ṇ] வலிமுன்னும் மெலிமுன்னும் மொழியிறுதியும் இரட்டுகிற போதும்

[ṅ] உயிரிடை

2. 9. 2. மொழியியலறிஞர் பெர்த் ணகரத்திற்கு இரண்டொலிகள் உண்டு எனக் காணுகிறார்.

I. டம்முன்னும் இரட்டுகிறபோதும் இறுதியிலும் வளைநுனிநா முன்வல்லண்ணக் குரல் மூக்கொலி.[118]

எ. கா. தண்ணீர் வேண்டும், கண்.

II. உயிரிடை வளைநுனிநா முன்வல்லண்ணக்குரல் மூக்குத்தட்டொலி.

எ. கா. மணம்

ஆகவே இதனை **வளை நுனிநா முன்வல்லண்ணக் குரல் மூக்குத் தட்டொலி** எனலாம்.

---

117. Apico-pre-palatal voiced retroflex nasal flap.

118. 'Retroflex nasal made with the tip of the tongue just clear of the teeth-ridge, on the hard palate, a similar articulation to t, and when followed by t homorganic with it.'— P. XIII, SOTP.

2. 9. 3. தொல்காப்பியர் ணகரம் 'மூக்கின் வளியிசை யாப்புறத் தோன்றும்' எனக் குறிக்கிறார். அதன் பிறப்புப்பற்றியும் 'டகார ணகாரம் நுனிநாஅண்ணம்'[119] எனக் கூறுகிறார். நன்னூலாரும் 'மேவும் மென்மை மூக்கு' என்பதால் ணகரம் மூக்கொலி பெறும் எனக் குறிப்பிட்டு

கஙவும் சஞவும் டணவும் முதலிடை
நுனிநா அண்ணம் உறமுறை வருமே[120]

என்ற நூற்பாவால் அதன் பிறப்பும் கூறுகிறார். இவ்விருநூலாசிரியரும் நுனிநா வளைதல் உண்டா இல்லையா என்பது பற்றியும் ஒலிப்பிடம் அண்ணத்தின் எப்பகுதி என்பது பற்றியும் ஒரு குறிப்பும் தரவில்லை. இவ்விரு நூலாசிரியர் கருத்துப்படியும் ணகரம், **நுனிநா வண்ண மூக்கொலி** ஆகலாம்.

## 2. 10. நகரம்

2. 10. 1. நகரமெய் (ந்) கீழ்க்கண்ட சூழல்களில் வழங்குகிறது:

| | | | |
|---|---|---|---|
| 1 | தம்முன் (இனவலிமுன்) | : | -ந்த்-, -ய்ந்த்-, -ர்ந்த்-, -ழ்ந்த்-.[121] |
| 2 | மொழி முதல் | : | ந்- |

119. தொல். எழு. 91 120. நன். 79

**121. -ந் இன்றைத் தமிழில் வழங்குதல் இல்லை; ஆகவே -ந்ய்- என்ற சூழலும் இல்லை. -ந்ய்-, -ந்ந்- என்பவை தொடர்மொழியுள் மட்டுமே வழங்குகின்றன. இவற்றின் ஒலி, மொழி முதல் நப் போன்றதே.**

**தம்முன் நகரம்** : குரல்தசைகள் அதிர்ந்து ஒலித்துக் கொண்டிருக்கவும், மூக்குவழி திறக்கப்பட்டு அதன் வழிக் காற்றுச்சென்று கொண்டிருக்கவும், நுனி நாக்குப் பரந்து உள்மேலண்பல்லை ஒற்றி உள்ளிருந்து வரும் காற்றினைத் தடுத்துப்பின் வாய் வழியாகவும் அக்காற்றை வெளிவிடுதலால் பிறப்பதே இந்நகரம். ஆகவே இதனை **நுனிநா வண்பல் குரல்மூக்கொலி** எனலாம்.[122] இதனை [n] எனக் குறிக்கலாம்.

எ. கா. தந்தை சேர்ந்தார்
உய்ந்தார் சூழ்ந்தார்

**யாழப்பின் நகரம்**: எப்போதும் தகரத்தின் முன்னேயே வருகிறது. ஆகவே இந்நகரம் தம்முன் நகரத்தினின்றும் வேறுபட்டதல்ல.

**மொழிமுதல் நகரம்**: குரல்தசைகள் அதிர்ந்து ஒலித்துக் கொண்டிருக்கவும், மூக்குவழி திறக்கப்பட்டு அதன் வழிக் காற்றுச்சென்று கொண்டிருக்கவும், நுனி நாக்கு ஈற்றண்ணத்தை ஒற்றி உள்ளிருந்து வரும் காற்றைத் தடுத்துப்பின் வாய்வழியாகவும் அக்காற்றை வெளிவிடுதலால் பிறப்பதே இந்நகரம். ஆகவே இதனை **நுனிநா வீற்றண்ணக்குரல் மூக்கொலி** எனலாம்.[123] இதனை [n̲] எனக் குறிக்கலாம்.

மேற்கண்ட விளக்கத்தால் கொள்ளப்படும் நகரத்தின் எழுத்தொலிகளும் அவற்றின் சூழல்களும் வருமாறு:

---

122. Front alveodental voiced nasal
123. Apicoalveolar voiced nasal

/ந/ : [n] தகரத்தின் முன்னும் யரழப் பின்னும்
[ṉ] மொழி முதலில்

2. 10. 2. அறிஞர் பெர்த்த் இந்நகரத்தை ஓர் எழுத்தாகவே கொள்ளவில்லை. இது னகரத்தினின்றும் வேறல்ல என்பது அவர் கருத்து.

2. 10. 3. தொல்காப்பியர் நகரம் 'மூக்கின் வளி யிசை யாப்புறத் தோன்றும்' எனக் குறிக்கிறார். இந்நக ரத்தின் பிறப்பையும் தகரத்தின் பிறப்பையும் இணைத்து

அண்ணம் நண்ணிய பல்முதல் மருங்கின்
நாநுனி பரந்து மெய்யுற ஒற்றத்
தாமினிது பிறக்கும் தகார நகாரம்[124]

எனக் கூறுகிறார். நன்னூலாரும், 'மேவும் மென்மை மூக்கு' என்பதால் நகரம் மூக்கொலிபெறும் எனக் குறிப்பிட்டு

அண்பல் அடிநா முடியுறத் தநவரும்[125]

என்ற நூற்பாவால் அதன் பிறப்பும் கூறுகிறார். ஆகவே இவ்விலக்கணவாசிரியர்கள் கருத்துப்படி நகரம், நுனிநாவண்பல் மூக்கொலி ஆகலாம்.[126]

## 2. 11. மகரம்

2. 11. 1. மகரமெய் (ம்) கீழ்க்கண்ட சூழல்களில் வழங்குகிறது:

---

124. தொல். எழு. 93 125. நன். 80
126. Apico-alveo-palatal nasal

| | | |
|---|---|---|
| 1 | மொழிமுதல் | : ம்- |
| 2 | உயிரிடை | : -ம்- |
| 3 | மொழியிறுதி | : -ம் |
| 4 | மொழியிடை யிரட்டை | : -ம்ம்- |
| 5 | பம்முன் (இனவலிமுன்) | : -ம்ப்- |
| 6 | ணனப்பின் | : -ண்ம்-, -ன்ம்-. |
| 7 | யரழப்பின் | : -ய்ம்-, -ர்ம-, -ழ்ம்-.[127] |

இம்மகரம் மேற்காட்டப்பட்ட எல்லாச் சூழல்களிலும் ஒரே தன்மைத்தாகவே பிறக்கிறது.

குரல்தசைகள் அதிர்ந்து ஒலித்துக்கொண்டிருக்கவும், மூக்குவழி திறக்கப்பட்டு அதன்வழிக் காற்றுச் சென்றுகொண்டிருக்கவும், மேலிதழும் கீழிதழும் ஒற்றி உள்ளிருந்து வரும் காற்றைத் தடுத்துப் பின் வாய்வழியாகவும் அக்காற்றை வெளிவிடுதலால் பிறப்பதே இம் மகரம் ஆகவே இதனை **ஈரிதழ்க்குரல்மூக்கொலி** எனலாம்.[128] இதனை [m] எனக் குறிக்கலாம்.

எ. கா. இம்மையும் மறுமையும்
பொய்மை தாழ்மை
மேன்மை தண்மை கூர்மை

இம்மகரத்திற்கு வேறெழுத்தொலிகள் இல்லை.

/ம/ : [m] எல்லா இடங்களிலும்

---

**127. -ம்ய்-, -ம்வ்- ஆகியவை தொடர்மொழியுள் மட்டும் வழங்குகின்றன. அவற்றின் ஒலி மற்றவற்றைப் போன்றதே,**

**128. Bilabial voiced nasal**

2. 11. 2. மொழியியலறிஞர் பெர்த் கருத்துப்படி தமிழ் மகரம் ஆங்கில மகரம் போன்று ஈரிதழ்க்குரல் மூக்கொலி ஆகும்; இதற்கு வேறு எழுத்தொலிகள் இல்லை.

2. 11. 3. தொல்காப்பியர், 'மகரம் மூக்கின் வளியிசை யாப்புறத் தோன்றும், எனக் குறிக்கிறார். அதன் பிறப்புப்பற்றியும் 'இதழியைந்து பிறக்கும் பகார மகாரம்'[129] எனக் கூறுகிறார். நன்னூலாரும் 'மேவும் மென்மை மூக்கு' என்பதால் மகரம் மூக்கொலி பெறும் எனக் குறிப்பிட்டு

மீகீழ் இதழுறப் பம்மப் பிறக்கும்[130]

என்ற நூற்பாவால் அதன் பிறப்பும் கூறுகிறார். ஆகவே இவ்விருநூலாசிரியர் கருத்துப்படியும் மகரம் ஈரிதழ் மூக்கொலி[131] ஆகும்.

## 2. 12. னகரம்

2. 12. 1. னகரமெய் (ன்) கீழ்க்கண்ட சூழல்களில் வழங்குகின்றது:

| | | | |
|---|---|---|---|
| 1 | உயிரிடை | : | -ன்- |
| 2 | மொழியிறுதி | : | -ன் |
| 3 | மொழியிடை இரட்டை | : | -ன்ன்- |
| 4 | வலிமுன் | : | -ன்க்-, -ன்ப்-, -ன்ற்-. |
| 5 | மெலிமுன் | : | -ன்ம்-[132] |

---

129. தொல். எழு 97 130. நன். 81.
131. Bilabial Nasal
132. -ன்ச்-, -ன்ஞ்-, -ன்ய்-, -ன்வ்-, ஆகியவை

இன்னகரம் மேற் காட்டப்பட்ட எல்லாச்சூழல்களிலும் ஒரே தன்மைத்தாகவே பிறக்கிறது.

குரல்தசைகள் அதிர்ந்து ஒலித்துக்கொண்டிருக்கவும் மூக்குவழி திறக்கப்பட்டு அதன்வழிக் காற்றுச் சென்று கொண்டிருக்கவும், நுனி நாக்கு ஈற்றண்ணத்தை ஒற்றி உள்ளிருந்து வரும் காற்றினைத் தடுத்துப் பின் வாய் வழியாகவும் அக்காற்றை வெளிவிடுதலால் பிறப்பதே இன்னகரம். ஆகவே இதனை **நுனிநா வீற்றண்ணக் குரல்மூக்கொலி** எனலாம்.[133]. இதனை [n̠] எனக் குறிக்கலாம்.

| | | |
|---|---|---|
| எ. கா. | இனி | என்பான் |
| | அவன் | தன்மை |
| | இன்னும் | இன்று |
| | என்கிறன் | |

மேற்கண்ட விளக்கத்தால் இன்னகரம் முன்கண்ட நகரத்தின் இரண்டாம் எழுத்தொலியாகிய மொழி முதல் n̠ கரத்தினின்றும் வேறானது அல்ல என்பது விளங்கும்.[134]

2. 12. 2. மொழியியலறிஞர் பெர்த்த் னகரம் நகரம் ஆகிய இரண்டையும் ஓரெழுத்தின் எழுத்தொலிகள்

---

**தொடர்மொழியுள் மட்டும் வழங்குகின்றன. அவற்றின் ஒலி மற்ற வற்றைப் போன்றதே.**

**133. Apicoalveolar voiced Nasal**

**134: ... ... ... ... ... இக்காரணத்தால் தான் நகர-னகர 'பிழைகள்' எங்கும் மலிந்து கிடக்கின்றன.**

எனவே கருதுகிறார்;[135] இரண்டிற்கும் இருசூழல்கள் உண்டு எனவும் காணுகிறார்.

I உயிரிடையிலும் றம்முன்னும் இறுதியிலும் இரட்டுகிறபோதும் நுனிநா வீற்றண்ண மூக்கொலி.[136]

எ. கா. மனம் மன்னன்
ஒன்று தான்

II. மொழிமுதலிலும் தம்முன்னும் நுனிநா வண்பல் மூக்கொலி.

எ. கா. நரி, வந்தான்.

திரு. பெர்த் கூறுவது போன்று நகரமோ னகரமோ இன்றைத்தமிழகத்தில் மொழிமுதலில் நுனிநாப்பல்லொலியாக எங்கும் வழங்குவதாகத் தோன்றவில்லை; நுனிநாவீற்றொலியாகத்தான் வழங்குகின்றன.

2. 12. 3. தொல்காப்பியர், னகரம் 'மூக்கின் வளியிசை யாப்புறத் தோன்றும்' எனக் குறிக்கிறார். அதன் பிறப்பும் றகரத்தின் பிறப்பும் ஒன்று என்ற கருத்துத் தோன்ற றகரத்தோ டதனை இணைத்து

---

135 'In the Tamil alphabet n is represented by two letters ந் and ன், each with its complete set of vowel-consonant syllables ந நா, நி நீ e ன னு, னி னீ etc. When in inflection n replaces l it is represented by ன், not ந், In correct orthography ந் cannot be final and ன cannot be initial' —P. XII, SOTP.

136. 'Intervocalically and finally a clear alveole nasal made with the tip of the tongue on the

அணரி நுனிநா அண்ணம் ஒற்ற
றஃகான் னஃகான் ஆயிரண்டும் பிறக்கும்.[137]

எனக் கூறுகிறார். நன்னூலாரும் "மேவும் மென்மை மூக்கு" என்பதால் னகரம் மூக்கொலி பெறும் எனக் குறிப்பிட்டு

அண்ணம நுனிநா நனியுறின் றனவரும்[138]

என்ற நூற்பாவால் அதன் பிறப்பும் கூறுகிறார். தொல்காப்பியர் கருத்திற்கும் நன்னூலார் கருத்திற்கும் வேறுபாடுண்டு. நன்னூலார் கருத்துப்படி ணகர னகரங்கள் சிறிதே தம்முன் வேறுபடுகின்றன. இவ்வேறுபாடுகள் குறித்து றகரம் பற்றிய இலக்கணவாசிரியர் கருத்துக்களை ஆய்கிறபோது கூறப்பட்டது. (2. 6. 4. காண்க) தொல்காப்பியர் கருத்துப்படி னகரம் வளைநுனிநா நடுவல்லண்ண மூக்கொலி ஆகலாம். நன்னூலாரின் கருத்துப்படி அது நுனிநாவண்ணமூக்கொலி ஆகலாம்.

## 2. 13. யகரம்

2. 13. 1. யகரமெய் (ய்) தமிழில் கீழ்க்கண்ட சூழல்களில் வழங்குகிறது:[139]

| | | | |
|---|---|---|---|
| 1 | மொழிமுதல் | : | ய்- |
| 2 | மொழியிறுதி | : | -ய் |
| 3 | உயிரிடை | : | -ய்- |

---

teeth-ridge near the upper teeth' -P. XII, SOTP.

137. தொல். எழு. 94 138. நன். 86.

139. இச்சூழல்கள் பல தொடர்மொழியுள் வழங்குகின்றன.

4 இரட்டை : -ய்ய்-
5 மெய்முன் : -ய்க்-, -ய்க்க்-,
-ய்ச்-, -ய்ச்ச்-,
-ய்த்-, -ய்த்த்-.
-ய்ப்-, -ய்ப்ப்-
-ய்ங்க்-
-ய்ஞ்-, -ய்ஞ்ச்-
-ய்ந்-, -ய்ந்த்-
-ய்ம்-, -ய்ம்ப்-
-ய்வ்-
6 மெலியிடைப்பின்: -ண்ய்-, -ங்ய்-
-ன்ய்-, -ம்ய்-
-ர்ய்-, -ல்ய்-
-வ்ய்-, -ழ்ய்-
-ள்ய்-

இவ்யகரம் மேற்காட்டப்பட்ட எல்லாச் சூழல்களிலும் ஒரே தன்மைத்தாகவே பிறக்கிறது.

குரல்தசைகள் ஒலித்துக் கொண்டிருக்கவும், மூக்கு வழி அடைக்கப்பட்டிருக்கவும், நடுநாக்கு வல்லண்ணம் நோக்கி எழுந்து இடையே குழிவிழ விளிம்புகள் அவ்வல்லண்ணத்தை ஒற்றிக்கொண்டு நிற்க அக்குழி நா வல்லண்ணத்திடை உள்ளிருந்து வரும் காற்றுத் தடையின்றித் தொடர்ந்து வெளிப் போகப் பிறப்பதே இவ்யகரம். ஆகவே இதனை **நடு நா நடுவல்லண்ணக் குரல்தொடர்வொலி** எனலாம்.[140] இதனை **[y]** எனக் குறிக்கலாம்.

---

**140. Central mediopalatal volced frictionless continnant.**

ஏ. கா. யார், தாய்,
பயன், பொய்யாமை,
ஆராய்ச்சி, ஆய்வு,
ஆய்கிறான், ஆய்பவன்

இதற்கு வேறெழுத் தொலிகள் இல்லை.

/ய/ : [y] எல்லாச் சூழ்நிலைகளிலும்

2. 13. 2. மொழியியலறிஞர் பெர்த், யகரம் மொழிமுதலில் ஈகாரம் போன்ற ஓரரையுயிர் எனவும் மொழியிறுதியிலும் இரட்டுகிறபோதும் செறிவரையுயிர் எனவும் குறிக்கிறார். மொழியிடையில் உயிரெழுத்திற்குப் பின்னும் மெய்யெழுத்திற்கு முன்னும் வருகிறபோது தானும் தன்முன் வரும் உயிரெழுத்தும் இணைந்து ஒரு சந்தியக்கரமாக அமைகின்றன என மேலும் குறிக்கிறார் அவர்.[141]

2. 13. 3. தொல்காப்பியர், நன்னூலார் முதலாயின இலக்கணவாசிரியர்கள் யரலவழள என்பவற்றை இடையெழுத்துக்கள் என வகைப்படுத்துகின்றனர். 'இடை நிகர்த்தாய மிடற்றுவளியாற் பிறத்தலானும் இடையெழுத்தாயிற்று'[142] என நச்சினார்க்கினியர் இடையெழுத்து என்பதற்குப் பெயர்க்காரணம் கூறுகிறார். தொல்காப்பியர்

---

141. 'Initially- a semi- vowel of ii-type rather like the y in yield and yeast'.

'Y occurs medially Preceded by the vowels e, ee, aa, o oo and followed by a consonant. In such cases it marks the C-like ending of what are really diphthongs:' —P. XVII, SOTP.

142. தொல், எழு. நச் 12

இடையெழுத் தென்ப யரல வழள[143]
என்றும், நன்னூலார்,

இடையினம் யரலவ ழளஎன ஆறே[144]
என்றும் கூறுகின்றனர். நன்னூலார்,

ஆவி இடைமை இடமிடறு ஆகும்[145]

என்ற நூற்பாவால் இவ்விடையினவெழுத்துக்களுக்குப் பிறப்பிடம் மிடறு எனக் குறிக்கிறுர். ஆனல் தொல்காப்பியர் மிடற்றைப் பிறப்பிடமாகக் கூருது மிடற்றில் நிலவிய அல்லது பிறந்த அல்லது எழுந்த வளியால் உயிரெழுத்துக்களும் யகாரமும் பிறக்கின்றன எனக் கூறுகிறுர். இருந்தும் தொல்காப்பியவுரையாசிரியர்கள் நச்சினர்க்கினியரும் இளம்பூரணரும் இவ்விடையின வெழுத்துக்கள் ஆறும் மிடற்றுவளியால் பிறக்கின்றன எனத் தம் தொல்காப்பிய உரையில் கூறியிருக்கின்றனர். தொண்டை வழியாக மூச்சுக் காற்றுத் தடையில்லாது வெளிவர மற்றை யுறுப்புக்கள் தொழிற்படுதலால் இவ்வெழுத்துக்கள் பிறத்தலையே இவர்கள் எல்லாரும் இவ்வாறு குறிக்கின்றனர் எனக் கொள்ளலாம். யகரம் நீங்கிய மற்றை இடையெழுத்துக்கள் மிடற்றுவளியால் பிறப்பதில்லை என்ற தொல்காப்பியர் கருத்து குறித்துக் கொள்ளத்தக்கது.

தொல்காப்பியர், யகரத்தை இடையெழுத்து என வகைப்படுத்தி அதன் பிறப்புப் பற்றி

---

143. தொல். எழு. 21 144. நன். 70
145. நன். 75

அண்ணம் சேர்ந்த மிடற்றெழு வளியிசை
கண்ணுற் றடைய யகாரம் பிறக்கும்[146]

எனக் கூறுகிறார். அண்ணத்தின் எப்பகுதி தொழிற் படுகிறது என்பது இந்நூற்பாவில் கூறப்படவில்லை. நாவின் நிலை எத்தகையது என்பதும் கூறப்படவில்லை. அண்ணத்தை நச்சினார்க்கினியர் நூற்பாவில் சொற்கள் உள்ளவாறே கொண்டு "உந்தியில் எழுந்த காற்று மிடற்றிடத்துச் சேர்ந்த அதனாற் பிறந்த ஓசை அண்ணத்தை யணைந்து உரலாணியிட்டாற்போலச் செறிய யகார ஒற்றுப் பிறக்கும்" என உரை வகுக்கிறார். "கண்ணுற்றடைய" என்ற தொடருக்கு "அணைந்து .... செறிய" என உரை கூறப்படுகிறது. மிடற்றெழுவளி (அதாவது உள்ளிருந்து வரும் மூச்சுக் காற்று) அண்ணத்தை அணைந்து செறிவதற்கு நாக்கு அவ்வண்ணத்தை நோக்கி மேலெழுதல் வேண்டும். ஆகவேதான் போலும் இளம்பூரணர் 'அண்ணத்தை நாச்சேர்ந்த' என நாக்கினை எழுவாயாக வருவித்து, இந்நூற்பாவிற்கு உரை வகுக்கிறார். இவ்வாறு நாக்கு அண்ணத்தை நோக்கி எழுந்து செறியக் காற்று அவற்றின் மீது உரைந்து கொண்டு வெளிச்செல்லப் பிறப்பதே இவ்யகரம் என்பது இவர்கள் கருத்து. ஆகவே தொல் காப்பியர் கருத்துப்படி யகரம் **அண்ணவுரை வெழுத்து**[147] ஆகலாம்.

நன்னூலார்,

அடிநா அடியணம் உறயத் தோன்றும்[148]

என நூற்பா வரைகிறார்.

---

146 தொல். எழு. 99 147 Palatal fricative
148. நன். 82

இங்கு அடிநாக்கு ஒலிப்புறுப்பாகவும் மெல்லண்ணம் ஒலிப்பிடமாகவும் தெளிவுபடக் கூறப்படுகின்றன.[149] இரண்டும் உறுகின்றன அதாவது பொருந்துகின்றன என்பதும் கூறப்படுகிறது; ஆனால் எவ்வாறு பொருந்து கின்றன என்பது கூறப்படவில்லை. உரைவொலி ஏற் படுவதற்கான குறிப்பும் இங்கில்லை. ஆனால் 'ஆவி யிடைமை இடம் மிடறுகும்' என அவர் கூறுதலால் உயிரெழுத்துக்கள் பிறப்பது போன்றே யகரமும் காற்றுத் தடையின்றி வெளிவருதலால் பிறக்கும் எழுத் தாதல் வேண்டும். இவ்வாறு காற்று அண்ணத்திற்கும் நாக்கிற்கும் இடையில் தடையின்றி வருதற் கேற்ப அடிநாக்கு நடுவில் குழிந்து அதன் இருபுறமும் மெல்லண்ணத்தைத் தொட்டுக் கொண்டிருத்தல் வேண்டும். இந்நிலையில் ஓரளவு உரைவு ஏற்படத்தான் வேண்டி யிருக்கும். ஆகவே நன்னூலார் கருத்துப்படி யகரம் அடிநா மெல்லண்ணவுரைவொலி[150] ஆகலாம்.

## 2. 14. ரகரம்

*2. 14. 1.* ரகரமெய் (ர்) தமிழில் கீழ்க்கண்ட சூழல் களில் வழங்குகிறது:

| | | | |
|---|---|---|---|
| 1 | உயிரிடை | : | -ர்- |
| 2 | மொழியிறுதி | : | -ர் |
| 3 | வலிமுன் | : | -ர்க்-, -ர்த்-, -ர்ப்-, -ர்க்க்-, -ர்ச்ச்-, -ர்த்த்-, -ர்ப்ப்-. |

---

149. இங்கு நன்னூலார், இளம்பூரணர் கருத்தைக் கொண்டு கூறியிருப்பதை அறியலாம்

150. Dorsovelar fricative

4 மெலிமுன் : -ர்ம்-, -ர்ந்த்-.
5 இடைமுன் : -ர்வ்-[151]

இவ் ரகரம் மேற்காட்டப்பட்ட எல்லாச் சூழல்களிலும் ஒரே தன்மையதாகவே ஒலிக்கிறது.

குரல் தசைகள் ஒலித்துக்கொண்டிருக்கவும், மூக்கு வழி அடைக்கப்பட்டிருக்கவும், நுனிநாக்குப் பின்னிற்றண்ணம் நோக்கி எழுந்து உள்ளிருந்து வரும் காற்றால் துடிப்புண்டு. அவ்விற்றண்ணத்தில் சிலமுறை மோதப் பிறப்பதே இவ் ரகரம். ஆகவே இதனை நுனிநாப் **பின்னிற்றண்ணக்குரல் துடிப்பொலி** எனலாம்.[152] இதனை [r] எனக் குறிக்கலாம்.

| | | | |
|---|---|---|---|
| எ. கா. | மரம் | சார்பு | தேர்தல் |
| | ஊர் | போர்வை | தீர்த்தான் |
| | ஈர்க்கு | தீர்ப்பு | |
| | கூர்மை | தேர்ச்சி | |
| | சேர்கை | சேர்ந்தான் | |

ரகரம் தன்னையடுத்து வரும் மெய்யெழுத்துக்கு ஏற்ப ஈற்றண்ணத்தின் முன்னையும் பின்னையும் ஒலிப்பிடமாகக் கொள்ளுகிறது என்பதும் குறிக்கத்தக்கது. 'சேர்ந்தான்' என்ற சொல்லில் ஒலிப்பிடம் முன்னிற்றண்ணமாக இருப்பதை ஒலித்து உணரலாம். இவ் ரகரம் மேல் விளக்கியுரைக்கப்பட்ட றகரத்தினின்றும் வேறுபட்டதல்ல

151. -ர்ச்-, -ர்ங்-, -ர்ஞ்-, -ர்ந்-, -ர்ங்க்-, -ர்ஞ்ச்-, -ர்ம்ப்-, ர்ய்- முதலியவை தொடர்மொழியுள் மட்டும் வழங்குகின்றன. இவ் எல்லாச் சூழல்களிலும் ரகரத்தின் ஒலிஒன்றே.

152. Apicopost-alveolar voiced trill

என்பது அறியலாம். ஆனால் தென்முனைத் தமிழகத்தில் இது றகரத்தினின்றும் வேறுபட்டது. அங்கு றகரம் முன்வல்லண்ண ஒலியாக ஒலிக்க ரகரம் முன்னீற்றண்ண ஒலியாக எல்லாச் சூழல்களிலும் ஒலிக்கிறது. இதனுக்கு வேறெழுத்தொலி இல்லை என்பது மேலே கூறப்பட்டது.

/ர/ : [r] எல்லாச் சூழல்களிலும்.

*2. 14. 2.* மொழியியலறிஞர் பெர்த் ரகரத்தின் ஒலிப்புமுறுப்பும் ஒலிப்பிடமும் எல்லாச் சூழல்களிலும் நுனிநாவாகவும் முன்னீற்றண்ணமாகவும் அமைகின்றன எனக் குறிக்கிறார். பெரும்பாலும் அதன் ஒலி துடிப் பொலி எனவும் ஆனால் சில சூழல்களில் — குறிப்பாக உயிரிடையும், இரட்டை வலிமுன்னும்— இருமுறை ஈற்றண்ணத்தைத் தட்டும் தட்டொலியாகவும் மொழி முதலில் பெரும்பாலும் குரலுரைவொலியாகவும் அமைகிறது எனவும் அவர் மேலும் விளக்குகிறார்.[153] -ன்ற்-, -ற்ற்- என்பவற்றை அவர் முறையே -ntr- -ttr- எனவே கொள்ளுகிறார். இங்குள்ள ரகரம் (r) -ன்ற்- என்பதில் குரலுரைவொலியாகவும் -ற்ற்- என்பதில் உயிர்ப்புரைவொலியாகவும் அமைந்திருக்கும் நுட்ப வேறுபாட்டை

---

**153. 'Initially– A voiced fricative some-times a two-tap "r" similar to the r of *reason* made with the tip of the tongue on the teeth-ridge just before it meets the upper teeth. The front of the tongue is raised equally'.—P. XV, SOTP.**

**"Finally — A short trilled or rolled r often. unvoiced." —P. XVI, SOTP.**

யும் அவர் எடுத்துக்காட்டுகிறார்.[154]

2. 14. 3. தொல்காப்பியர் ரகரத்தை இடையெழுத்து என வகைப்படுத்தி அதன் பிறப்புப்பற்றி

நுனிநா அணரி அண்ணம் வருட
ரகாரம் ழகாரம் ஆயிரண்டும் பிறக்கும்[155]

எனக் கூறுகிறார். "நுனிநா அணரி" என்ற தொடருக்கு முன்பு பொருள் கண்டது போன்றே 'நுனிநா வளைந்து நடுவல்லண்ணம் நோக்கி எழுந்து' என்றே பொருள் கொள்ளவேண்டும்.[156] வருடுதல் தடவுதலாகும். ஆகவே தொல்காப்பியர் கருத்துப்படி ரகரம் **வளை நுனிநா வல்லண்ண வருடொலி** ஆகலாம்.[157]

நன்னூலாரும் ரகரத்தை இடையினவெழுத்து என வகைப்படுத்தி மிடற்றைப் பிறப்பிடமாகக் கொண்டிருப்பதாகக் கூறி

அண்ணம் நுனிநா வருட ரழவரும்[158]

என அதன் பிறப்புப்பற்றியும் நூற்பா செய்கிறார்.

தொல்காப்பியர் கூறிய அணருதல் கருத்தினை நன்னூலார் கூறவில்லை என்பது கருதத்தக்கது. ஆனாலும் அண்ணத்தின் பகுதியும் கூறப்படவில்லை. அணருதல்

---

154. "When preceded by t, tt, in the groups ntr, ttr, it is an alveolar fricative like the English fricative r-sounds in *laundry*, *patrol* voiced in *ntr*, unvoiced in *ttr*". –P. XVI, SOTP.

155. தொல். எழு. 95
156. 2. 6. 4. காண்க
157. Retroflex rolled consonant
158. நன். 33

கூறப்படாமையால் நுனிநா வளைதலும் தேவையில்லை; வல்லண்ணத்தை நோக்கி எழுதலும் இல்லை. ஒலிப்பிடம் நுனிநாவின் அருகில் மேலே விளங்கும் ஈற்றண்ணமாக இருக்கலாம். ஆகவே நன்னூலார் கருத்துப்படி ரகரம் நுனிநா வீற்றண்ண வருடொலி[159] ஆகலாம்.

## 2. 15. ழகரம்

2. 15. 1. ழகரமெய் (ழ்) தமிழில் கீழ்க்கண்ட சூழல்களில் வழங்குகிறது:

| | | | |
|---|---|---|---|
| 1 | உயிரிடை | : | -ழ்- |
| 2 | மொழியிறுதி | : | -ழ் |
| 3 | மெய்முன் | : | -ழ்க்-, -ழ்க்க்-, |
| | | | -ழ்த்-, -ழ்த்த்-, |
| | | | -ழ்ந்-, -ழ்ந்த்-, |
| | | | -ழ்ம்-, -ழ்ச்ச்-, |
| | | | -ழ்வ்-, -ழ்ப்ப்-.[160] |

இவ்ழகரம் மேற்காட்டப்பட்ட எல்லாச்சூழல்களிலும் ஒரே தன்மையதாகவே பிறக்கின்றது.

---

159 Apicoalveolar rolled consonant

தமிழ் நெடுங்கணக்கின் வைப்பு முறைக்கு மாருக இனி அடுத்து ழகரமும் அடுத்து ளவும் எடுத்துக்கொள்ளப் படுகின்றன. இலக்கண ஆசிரியர்கள் ரழவையும் ளவை யும் இணைத்தே பிறப்பு விளக்கம் கூறுவதால் இங்கும் இவ்வாறே அவை எடுத்துக் கொள்ளப்படுகின்றன.

160. -ழ்ச்-, ழ்ப்-, -ழ்ங்-, -ழ்ஞ்-, -ழ்ங்க்-, -ழ்ஞ்ச்-, -ழ்ம்ப்- ஆகியவை தொடர்மொழியுள் மட்டும் வழங்கு கின்றன; ஒலி வேறுபாடும் இல்லை.

குரல்நரைகள் அதிர்ந்து ஒலித்துக் கொண்டிருக்கவும், மூக்கு வழி அடைக்கப்பட்டிருக்கவும், நாக்குப் பருத்துப் பரந்து நெகிழ்ந்து வாயுள் இழுக்கப்பட்டு வல்லண்ணம் நோக்கி எழுந்து விளிம்பு வளைந்து நடுவல்லண்ணத்தை வருடி நிற்க, உள்ளிருந்து வரும் காற்றுப் பிரிந்து நாக்கின் இருபுறத்தும் வெளிச் செல்லப் பிறப்பதே இவ்ழகரம். குரலொலியும் நாக்கின் இருபுறத்தும் செல்லும் காற்றுத் தடையின்றித் தொடர்தலும் இவ்வெழுத்தின் பிறப்பு முயற்சியில் அமைந்துள்ளன. ஆகவே இதனை **நெகிழ் வளைநா நடுவல்லண்ணக் குரல் புறவளி வருடொலி** எனலாம். மற்றைப் பல மொழிகளில் காணப்படாத அரிய ஒலியாக இது விளங்குகின்ற காரணத்தால் அனைத்துலக ஒலியியற் பட்டியில்கூட இதற்குக் குறியீடு இல்லை.

எ. கா. எழில் தமிழ் வாழ்க்கை தாழ்ச்சி தாழ்வு கீழ்மை.

இவ்ழகரத்திற்கு இது ஒன்றே எழுத்தொலி:

/ழ/ : [ḻ] எல்லாச் சூழல்களிலும்.

ழகரத்திற்கு இவ்வொலி திருச்சிராப்பள்ளி, தஞ்சாவூர் மாவட்டங்களில் மட்டும் பேச்சில் காணப்படுகிறது; மற்ற மாவட்டங்களில் படிக்கின்றபோது மட்டும் கேட்கப் படுகிறது. தென்தமிழகத்தில் இவ்ழகரம் ளகரமாகவும் வடதமிழகத்தின் வடபகுதியில் யகரமாகவும் வடதமிழகத்தின் தென்பகுதியில் குழிவுரைவொலியாகவும் (ஷ எனவும்), மேல்தமிழகத்தில் லகரமாகவும் ஒலிக்கிறது. தமிழ் மெய்யெழுத்துக்களில் வட்டாரத்திற்கு ஏற்ப மிக

மிகத் திரிந்து ஒலிக்கும் மெய்யெழுத்து இதுவே என அறிஞர்கள் குறிக்கின்றனர். பள்ளிச்சிறுவர் பள்ளிகளில் அரிதில் முயன்று இதனைக் கற்கின்றனர். ஈழத்துத் தமிழில் இவ்ழகரம் தென்தமிழகத்திற் போன்றே ளகரமாக ஒலிக்கிறது.[161]

2. 15. 2. மொழியியலறிஞர் பெர்த் ழகரத்தின் பிறப்புப் பற்றிக் கூறிய கருத்துச் சிறப்புடையது. இதழ்குவியாப் பின்னுயிரின் ஒலிப்பண்பு கலந்த உரைவிலாத்தொடர்வொலி யுடையது இவ்ழகரம் என்கிறார் அவர். மேலும் அவர், நாக்கினை நடுவல்லண்ணத்தை நெருங்கும்படி முழுதும் உள்ளிழுத்து முன்பகுதியை இருபுறமும் பரப்பி நுனி மழுங்கும்படி குறுக்கித் தடிப்புறச் செய்து பிறப்பிக்கப்படும் ஒலி இது எனவும் விளக்குகிறார். இவ்வாறு இவ் ழகரம் ஒலிக்கப்படுகையில் சிலபோது நுனிநாவின் அடிப்புறம் நடுவல்லண்ணம் நோக்கி மேல் எழுதலும் உண்டு எனவும் குறிக்கிறார். இவ்வொலி சிலவிடத்து ஆங்கிலத்தின் r போன்று ஒலிக்கிறது எனவும் எடுத்துக்காட்டி இதனைத் தலைகீழ் r-ஆலேயே (ɹ எனக்)குறிக்கிறார்.[162]

---

161 TDC. 1. 20.

162. 'ɹ—A frictionless continuant having an obscure unrounded back-vowel quality ɹ is made by drawing back the whole tongue, and spreading the blade laterally making it thick short and blunt, so to speak, so that it approaches the middle of the hard palate. The result is a very retracted liquid sort of r-sound.

Sometimes the underside of the tip of the tongue is raised towards the mid-palate.' —P. XVI, SOTP.

ழகரம் பற்றி மரே பவுளர் கருத்து இது:

'/ழ/ is a velar retroflex frictionless continuant articulated with the tongue retroflexed almost to the velum, then rolled forward to the alveolar ridge without lateral positioning. (The back of lateral positioning should be emphasized. This /ழ/ is the final phoneme in the name Tamil of which the English spelling, the romanization tamil. and the phonemic writing /tamil/ here adapted, if mistakenly read as phoneti all give a false impression.)'—SPST.

தமிழைத் தாய்மொழியாகக்கொண்ட எல் வி. ராமசாமி அவர்கள் கூறிய ழகரம் பற்றிய கருத்தும் கருதத் தக்கது:

'Both in Tamil and in Malayalam, it is a voiced continuative produced by the passage of air through a channel (slightly broader than that for ஷ) formed between the curled-up tongue-tip and the cacuminal (or sometimes post-alveolar) region of the mouth roof. There is no contact (except for the sides of the tongue with some speakers) with the mouth roof; if a contact occurred, the sound produced would be the plosive ட when the explosion preceded by tension, or ழ when the air is allowed to escape sideways. There is also no "hissing' as for the production of the voiced variety of ஷ; the passage between the tongue-tip and the mouth-roof should be kept slightly broader than for the production of the voiced variant of ஷ in order to allow air to escape through the passage and along the sides in a continuous stream without any 'hissing' whatsoever.'—Tamil-ழ, LVR.

2. 15. 3. ழகரத்தை அறிஞர் கால்டுவெல் அரையுயிர் எனவும் தெளிவோட்டம் உள்ள மெய்[163] எனவும் பொதுவாகக் குறிக்கிறார். ஆங்கில மொழியில் நெட்டுயிரை அடுத்து வரும் r போன்று (எடுத்துக்காட்டாக Form என்பதிற்போன்று) ழகரம் ஒலிக்கிறது எனவும் ஆனாலும் அதனை ஒலிக்கும்போது நாக்கு மிகமிக உள்ளிழுக்கப் படுகிறது எனவும் அவர் மேலும் குறிக்கிறார். ஆகவே தான் அவர் தம் நூலில் ழகரத்தைக் கீழே புள்ளியிட்ட ஆங்கில ரகரமாக (ṛ என) எழுதுகிறார். தம் காலத்தில் ழகரம் வடதமிழ் மாவட்டங்களில் குழிவுரை வொலியாக ஒலிக்கிறது என்பதை அவர் எடுத்துக்காட்டிச், சிலர் அதனை zh எனவும் rzh எனவும் ஆங்கிலப்படுத்து கின்றனர் என்றும் சுட்டிக்காட்டுகிறார்.[164] இவ் ழகரம் தமிழகத்தின் பல பகுதிகளிலும் பலவாறாகத் திரிந்து வழங்குகிறது என்பதையும் அவர் மேலும் எடுத்துக்காட்டு கிறார். தமிழகத்தின் தென்மாவட்டங்களில் ழகரம், பொது மக்களிடை ளகரம் போன்றும், தஞ்சை புதுச்சேரிப் பகுதி களில் rzh அல்லது zh என உரைவொலியாகவும், சென்னையிலும் அதன் சுற்றுப்புறங்களிலும் யகரமாகவோ அல்லது கெட்டுமோ வழங்குகிறதாம். (ழகரம் கெடுவதற்குச் சென்னை வழக்காகிய 'கீயே' (='கீழே') என்ற சொல்லை அவர் எடுத்துக்காட்டுகிறார்.) கால்டுவெல் கண்டுணர்ந்த கருத்துக்கள் இன்றும் பொருந்துகின்றன.

---

163. Semi-vowel, Liquid consonant.

164 இன்று l, zh என இரண்டு முறைகளாலும் ழகரம் ஆங்கிலப்படுத்தப்படுகிறது: பழனி, Palani; கழகம், Kazhagam.

2. 15. 4. தொல்காப்பியரும் நன்னூலாரும் ரகரத்தையும் ழகரத்தையும் இணைத்து இரண்டின் பிறப்பும் ஒன்றே என ஒருநூற்பாவே செய்துள்ளனர். இவ்விரெழுத்துக்களிடை இவர்கள் ஒரு வேறுபாடும் கண்டு குறிக்கவில்லை. அவ்வாறு குறிக்காதது ஒரு விளங்காப் புதிராகவே உள்ளது. ரகரம் பற்றிய கருத்துக்கள் காண்க[165] (2. 14. 3.).

---

165. ற, ன, ர, ழ ஆகியவை பற்றிச் சில சிக்கல்கள் சுட்டிக்காட்டப்பட்டன: தொல்காப்பியர் றனவை வளைநா வெழுத்துக்கள் எனல்; ஆனால் இன்று அவ்வாறின்மை: டண இன்று வளைநா வெழுத்துக்களாக இருத்தல்; ஆனால் தொல்காப்பியர் அவ்வாறு கூறாமை; அவர் ரகரத்தையும் வளைநா ஒலி எனல்; ஆனால் அது இன்று அவ்வா றின்மை; 'அணரி' என்ற சொல்லுக்கு மேல் நோக்கி வளைதல் எனப் பொருள் கொள்ளுதல்; தொல்காப்பியர் நன்னூலார் ரழ இவற்றிடை வேறுபாடு ஒன்றும் சுட்டாமை. இச்சிக்கல்கள் பற்றிப் பலருக்கும் பல்வேறு கருத்துக்கள் தோன்றுகின்றன. ஒருபுதிய கருத்தினை இங்குக்காணலாம். 'அணரி' என்ற சொல் பெயர்ச்சொல் என்றே கொள்ளப் பட்டு 'முன்நா' எனப் பொருள் கொள்ளப்படுகிறது:

"It is to be noticed that a clear distinction is made between the front of the tongue and the tongue tip. The front of the tongue is referred to as 'anari' (அணரி) (Verses 12 and 13, Pirappiyal), while the tip of the tongue is referred to as 'naa nuni' (நாநுனி) or 'nuni naa' (நுனிநா), verses 9, 11, 12, 13 Pirappial)."

"Generally the term 'anari' (அணரி] is taken to mean 'going upwards' or 'reaching upwards' but this interpretation involves some major difficulties. If this iew is taken, it may be noticed that the place of

## 2. 16. லகரம்

2. 16. 1. லகரமெய் (ல்) தமிழில் கீழ்க்கண்ட சூழல்களில் வழங்குகிறது:

1 உயிரிடை : -ல்-
2 மொழியிடை : -ல்ல்-
  யிரட்டை

---

articulation for each set of sounds mentioned in verses 12 and 13 (Pirappiyal) is the same. While r. and n (ற and ன) may be distinguished as oral and nasal, it is difficult to find any satisfactory answer for the grouping of r and l (ர and ழ). They both are oral sounds and have the same place and manner of articulation. There is nothing to distinguish the one from the other. Besides, if 'anari' (அணரி) just means 'going upwards' or 'reaching upwards' there is no contact of any sort at all between the articulator and the place of articulation. Earlier it was mentioned that this contact or obstruction is the criterion to divide vowels from consonants. On the basis of this criterion these four sounds may also be grouped as vowels, because of the absence of any sort of contact or obstruction."–PP. 255 & 256, Rama Subbiah in his 'Tolkaappiyam and Phonetics' in Indo-Iranian Journal, Vol. X-NO. 4 (1968).

'அணரி' என்ற சொல்லுக்கு 'அண்ணம்' என்ற பொருளைத் 'தமிழ்ப்பேரகராதி' தருகிறது; ஆனால் அதற்கு 'முன்நா' என்ற பொருள் எங்கும் இருப்பதாகத் தெரியவில்லை. மேலும் 'ஒற்றலும் வருடலும்' என்னும்' தொழிற்பாடுகளை இவ்ஆசிரியர் எவ்வாறு மறந்தார்?

3 மொழியிறுதி : -ல்
4 மெய்முன் : -ல்க்-, -ல்ப்-, -ல்வ்-.[166]

இவ் லகரம் மேற்காட்டப்பட்ட எல்லாச்சூழல்களிலும் ஒரே தன்மைத்தாகவே பிறக்கிறது.

குரல்தசைகள் அதிர்ந்து ஒலித்துக் கொண்டிருக்கவும், மூக்குவழி அடைக்கப்பட்டிருக்கவும், நுனிநாக்கு ஈற்றண்மைத்தை ஒற்றி நிற்க உள்ளிருந்து வரும் காற்றுப் பிரிந்து நாக்கின் இருபுறத்தும் வெளிச் செல்லப் பிறப்பதே இவ்லகரம். ஆகவே இதனை **நுனிநாவீற்றண்ணக் குரல்புறவளியொலி** எனலாம்.[167] இதனை [l] எனக் குறிக்கலாம்.

எ. கா. தோல் தொல்லை தொலை
கல்வி செல்வை சால்பு

இதன் எழுத்தொலி நிலைகள் வருமாறு:

/ல/ : [l] எல்லாச் சூழல்களிலும்.

2. 16. 2. மொழியியலறிஞர் பெர்த் லகரம் ஈகார வொலிப்பண்பு கலந்த நுனிநா முன்னீற்றண்ணப் பிரிவளியொலி[168] எனக் குறிக்கிருர். இதற்கு வேறு எவ்வொலியும் அவர் காணவில்லை.

---

166 -ல்ச்- பழந்தமிழில் வல்சி போன்ற சொற்களில் வழங்கியது. -ல்ய்- தொடர்மொழியுள் மட்டும் வழங்குகின்றது

167. Apicoalveolar voiced lateral

168. "A very clear l, pronounced with the tip of the tongue touching the teeth-ridge near the teeth or dental with the point of the tongue raised giving it an ii-like quality'. —P. XIV, SOTP.

எ. கா. நிலம்

2. 16. 3. தொல்காப்பியர் லகரத்தை இடையெழுத்து என வகைப்படுத்தி அதன் பிறப்புப்பற்றி

நாவிளிம்பு வீங்கி அண்பல் முதலுற
ஆவயின் அண்ணம் ஒற்றவும் வருடவும்
லகாரம் ளகாரம் ஆயிரண்டும் பிறக்கும்[169]

என ஒரு நூற்பாவும் வகுத்துள்ளார். 'நாவிளிம்பு வீங்கி அண்பல் முதலுற ஆவயின் அண்ணம் ஒற்ற லகாரம் பிறக்கும்'. நச்சினார்க்கினியர் "நாவீங்கி விளிம்பு அண்பல் முதலுற' என மாற்றுகிறார். வீங்கி என்ற சொல்லுக்கு 'மேனோக்கி' என அவர் பொருளுரைக்கின்றார்[170] நா விளிம்பு முன்நாவின் ஓரம்; ஆவயினண்ணம் ஈற்றண்ணமாகலாம். அண்பல் முதலுற முன்நா 'மேனோக்கி' எழும் ஒரு முயற்சியை மேற்கொள்ளவேண்டுமா? தேவையில்லை. மேலும் இவ் லகரத்தின் பிறப்பில் 'அண்பல் முதல்' எனவும் 'ஆவயின் (அவ்விடத்து) அண்ணம்' எனவும் இரண்டு ஒலிப்பிடங்கள் கூறப்படுகின்றன. லகரப்பிறப்பிற்கு நா, அண்பல் முதலை உற்றுப் பின்பு ஆவயின் அண்ணம் ஒற்றுதல் வேண்டுமாம். ஒரே ஒலிப்புறுப்பு ஓரெழுத்தைப் பிறப்பிக்க இம்முறையில் இரண்டொலிப்பிடங்களைப் பொருந்துதல் ஏற்புடையதாகத் தெரியவில்லை: நா, பல் முதலை உற்றுப் பின் அண்ணம் ஒற்றினால் இரண்டெழுத்துக்களே பிறக்கும். ஆகவே தொல்காப்பியர்

---

169. தொல். எழு. 96

170. "மேலுயர்ந்து தடித்து" என வெள்ளை வாரணர் உரை கூறுகிறார். –தொல், நன். எழு. பக். 117.

கூறும் லகரப் பிறப்புச் சிக்கலுடையதாகவே உள்ளது. எனினும் தொல்காப்பியர் கருத்துப்படி லகரம் **முன்று வண்பல்லொலி**[171] என ஒருவாறு கொள்ளலாம்.

நன்னூலாரும் லகரத்தை இடையினவெழுத்தாக வகைப்படுத்தி அதன் பிறப்பிடம் மிடறு எனவும் கூறி,

அண்பல் முதலும் அண்ணமும் முறையின்
நாவிளிம்பு வீங்கி ஒற்றவும் வருடவும்
லகாரம் ளகாரம் ஆயிரண்டும் பிறக்கும்[172]

என அதன் பிறப்புப் பற்றியும் நூற்பா செய்கிறார். இந் நூற்பாவின்படி 'அண்பல் முதலை நாவிளிம்பு வீங்கி ஒற்ற லகாரம் பிறக்கும்.' 'அண்பல் முதலை உறுதல்' அதன்பின் 'ஆவயின் அண்ணம் ஒற்றுதல்' ஆகிய இரண்டு தொழில்கள் தொல்காப்பியத்தில் போன்று இங்குக் கூறப்படவில்லை. 'அண்பல் முதலை ஒற்றுதல்' ஆகிய ஒருதொழில் மட்டுமே இங்குக் கூறப்பட்டுள்ளது. அண்பல்முதல் மட்டுமே இங்கு ஒலிப்பிடம். தொல்காப்பியர் கூற்றில் உள்ள சிக்கல் இங்கு நன்னூலாரால் அறிந்து அவிழ்க்கப் பட்டுள்ளது. நன்னூலார் கருத்துப்படி லகரம் **முன்று வண்பல்லொலி** ஆகலாம்.

## 2. 17. ளகரம்

*2. 17. 1.* ளகரமெய் (ள்) தமிழில் கீழ்க்கண்ட சூழல்களில் வழங்குகிறது:

---

171. Front alveodental

172. நன். 84

## 2. 17 ளகரம்

| | | | |
|---|---|---|---|
| *1* | *மொழியிடை* | : | -ள்- |
| *2* | *மொழியிறுதி* | : | -ள் |
| *3* | *மொழியிடை யிரட்டை* | : | -ள்ள்- |
| *4* | *மெய்முன்* | : | -ள்க்-, -ள்வ்-, -ள்ப்-. |

இவ்ளகரம் மேற்காட்டப்பட்ட எல்லாச் சூழல்களிலும் ஒருதன்மையதாகவே பிறக்கிறது.

குரல்தசைகள் அதிர்ந்து ஒலித்துக்கொண்டிருக்கவும், மூக்குவழி அடைக்கப்பட்டிருக்கவும், நுனிநாக்கு எழுந்து உள்நோக்கி வளைந்து முன்வல்லண்ணத்தை ஒற்றி நிற்க, உள்ளிருந்து வரும் காற்றுப் பிரிந்து நாக்கின் இருபுறத்தும் வெளிச் செல்லப் பிறப்பதே இவ்ளகரம்.[173] ஆகவே இதனை **வளைநுனிநா முன்வல்லண்ணக் குரல் புறவளி** யொலி எனலாம்.[174] இதனை (ḷ) எனக் குறிக்கலாம்.

எ. கா. புளி, புள்ளி, கொள்கை,
கேள்வி, கொள்பவன், கேள்.

இதன் எழுத்தொலி நிலைகள் வருமாறு:

**/ள/** : [ḷ] எல்லாச் சூழல்களிலும்.

---

**173.** இவ் ளகரம் உயிரிடை வழங்குகிறபோது வளைநாத் தட்டொலியாக அமைகிறது என்கின்றார், ஒலியியலறிஞர் பெர்த் அவர்கள்.

**174.** Apico-pre-palatal voiced retroflex lateral

2. 17. 2. மொழியியலறிஞர் பெர்த் ளகரம் வளை நுனிநா வீற்றண்ணத்தட்டொலி எனக் குறிக்கிறார்.[175] இதற்கு வேறு எழுத்தொலிகள் எதுவும் இல்லை:

எ. கா. கிளிப்பிள்ளை

2. 17. 3. அறிஞர் கால்டுவெல் ளகரத்தின் பிறப்புப் பற்றி விளக்கம் ஒன்றும் கூறவில்லை. அவர் அதனை ழகரப் பண்பு கூடிய புதுமையான வலிய லகரம் என்று மட்டுமே விளக்குகிறார்.[176]

2. 17. 4. தொல்காப்பியர் ளகரத்தை இடையெழுத்து என வகைப்படுத்தி அதன் பிறப்புப் பற்றி

நாவிளிம்பு வீங்கி அண்பல் முதலுற
ஆவயின் அண்ணம் ஒற்றவும் வருடவும்
லகாரம் ளகாரம் ஆயிரண்டும் பிறக்கும்[177]

என நூற்பா வகுத்துள்ளார். இந்நூற்பாவிலுள்ள சிக்கல் பற்றி லகர ஆய்வின்போது கூறப்பட்டது.[178] நாவிளிம்பு வீங்கி அண்பல் முதலுற ஆவயின் அண்ணம் வருட ளகரம் பிறக்கும். தொல்காப்பியர் கருத்துப்படி ளகரம் முன்னுவீற்றண்ணவொலி ஆகலாம்.

---

175. "ள. Retroflex and flapped like intervocalic ட and ண. The tip of the tongue must be curled back and flapped very quickly forward the under edge just catching the teeth-ridge on its way forward and down."—P. XV, SOTP

176. "ள is a peculiar heavy l with a mixture of ழ, ... ...." பக். 145, CGDL.

177. தொல். எழு. 96 178. காண்க 2. 16. 3.

நன்னூலாரும் ளகரத்தை இடையினவெழுத்தாக வகைப்படுத்தி மிடற்றினை அதன் பிறப்பிடமாகக் கூறி

அண்பல் முதலும் அண்ணமும் முறையின்
நாவிளிம்பு வீங்கி ஒற்றவும் வருடவும்
லகாரம் ளகாரம் ஆயிரண்டும் பிறக்கும்[179]

என அதன் பிறப்புப்பற்றியும் நூற்பா செய்கிறார். 'அண்ணத்தை நாவிளிம்பு வீங்கி வருட ளகாரம் பிறக்கும்' ஆகவே நன்னூலார் கருத்துப்படி ளகரம் முண்ணுவண்ண வருடொலி ஆகலாம்.

## 2. 18. வகரம்

*2. 18. 1.* வகரமெய் (வ்) தமிழில் கீழ்க்கண்ட சூழல்களில் வழங்குகிறது:

| | | | |
|---|---|---|---|
| 1 | மொழிமுதல் | : | வ்- |
| 2 | மொழியிடை | : | -வ்- |
| 3 | மொழியிரட்டை | : | -வ்வ்- |
| 4 | இடைப்பின் | : | -ய்வ்-, -ர்வ்-, -ல்வ்-, -ழ்வ்-, -ள்வ்-.[180] |

இவ்வகரம் மேற்காட்டப்பட்ட எல்லாச் சூழல்களிலும் ஒரே தன்மையதாகவே பிறக்கிறது.

குரல்தசைகள் அதிர்ந்து ஒலித்துக்கொண்டிருக்கவும், மூக்குவழி அடைக்கப்பட்டிருக்கவும், கீழிதழ்

---

179. நன், 84

180. -வ்- பழந்தமிழில் நாலிடங்களில் மட்டும் வழங்கியது. -ண்வ்-, -ம்வ்-, -னவ்- ஆகியவை தொடர் மொழியுள் மட்டும் வழங்குகின்றன.

முன்மேற்பல் வரிசையை மெல்ல ஒற்றி உள்ளிருந்து வரும் காற்றைத் தடுத்துப் பின் பிரிந்து அக்காற்றை வெளிவிடுதலால் பிறப்பதே இவ்வகரம். இம்முயற்சி களில் காற்று உரைவுடன் செல்லுதலோ, இதழ் வெடியோசையுடன் பிரிதலோ இல்லை. குரல்தசைகள் தொடர்ந்து ஒலித்துக்கொண்டிருக்கக் கேட்கும் ஓரொலி இது. ஆகவே இதனை **இதழ்ப்பல் குரலுரைவிலாத் தொடர்வொலி** எனலாம்.[181] இதனை [v] எனக் குறிக்கலாம்.

எ. கா. வவ்வால் தவிப்பு
கல்வி வாழ்வு

இதன் எழுத்தொலி நிலைகள் வருமாறு

/**வ**/ : [v] எல்லாச்சூழல்களிலும்.

2. 18. 2. மொழியியலறிஞர் பெர்த் அடிநாக்கினை அண்ணம் நோக்கி உயர்த்தி உகரவொலிப் பண்பு தோற்றுவித்துக் கீழிதழ் மேற்பல் வரிசையினை மெல்ல உறச் செய்து பிறப்பிக்கும் உரைவிலாத் தொடரொலியே வகரம் எனக் கூறுகிறார்.[182] இது எல்லாச் சூழல் களிலும் இவ்வோரொலியே பெறுகிறது.

---

181. Labiodental voiced frictionless continuant

182. "V. A frictionless continuant. A lax v sound, made with a slack lower lip very slightly touching the upper teeth and on account of the raising of the back of the tongue having a back vowel quality.

When followed by i or ii it is slightly tensed and 'clearer." –P. XVIII, SOTP.

2. 18. 3. அறிஞர் கால்டுவெல் ய, ர, ல, வ, ழ, ள, ற என்னும் ஏழினையும் தெளிவோட்டமெய்கள் எனவும் அரையுயிர்கள் எனவும் வகுக்கிறார். அதாவது இவை தெளிவோடு வாயகத்தில் தடையின்றிப் பிறந்து ஒலிக்கின்றன என்பது அவர் கருத்தாகும்.[183]

2. 18. 4. தொல்காப்பியர் வகரத்தை இடையெழுத்து என வகைப்படுத்தி அதன் பிறப்புப் பற்றி

பல்லிதழ் இயைய வகாரம் பிறக்கும்[184]

என நூற்பாவும் செய்கிறார். பல் மேற்பல்லும் இதழ் கீழிதழும் ஆகும். நன்னூலாரும் இவ்வகரத்தை இடையினவெழுத்து என வகைப்படுத்தி மிடற்றினை அதன் பிறப்பிடமாகக் கூறி

மேற்பல் இதழுற மேவிடும் வவ்வே[185]

என அதன் பிறப்பும் கூறுகிறார். இவ்விரு நூலாசிரியர் கருத்துப்படியும் வகரம் பல்லிதழொலி ஆகலாம்.[186]

## 2. 19. மெய்யெழுத்துக்களும் மெய்யெழுத்தொலிகளும்

இதுகாறும் கண்டவற்றால் இன்றைத் தமிழில் மெய்யெழுத்தொலிகளின் தொகை 29 ஆகிறது. இத்தமிழ் எழுத்தொலிகளைக் கண்டுபிடிப்பதற்கே தமிழ் நெடுங்

---

183. அறிஞர் கால்டுவெல் இவற்றுக்கு Liquid consonants என்றும் Semi-vowels என்றும் பெயரிடுகிறார். ஆனால் இப்பெயர்கள் வரையறைத் தெளிவில்லாதவை என இன்றைய மொழியியல் கருதுகிறது.

184. தொல். எழு. 98 185. நன். 85

186. Labiodental

கணக்கிலுள்ள பதினெட்டு மெய்களின் அடிப்படை மேற்கொள்ளப்பட்டது. 18 மெய்களுக்கு 29 எழுத்தொலிகள் உண்டு என்று கொள்வதில் சில சிக்கல்கள் அமைந்துள்ளன என இன்றை மொழியியலறிஞர்கள் கருதுகின்றனர். ஆகவே அவர்கள் இவற்றை வேறு வகையில் அமைப்பர். இவ் எழுத்தொலிகளையே மொழியியலறிஞர்கள் குழுக்களாக்கி எழுத்துக்களாக வகுக்கின்றனர். அப்போது ஒலிகளின் தொகையைக் காட்டிலும் எழுத்துக்களின் தொகை குறைகிறது. ஓரெழுத்தே சூழல் வேறுபாட்டால் சிலவேறு ஒலிகளாக மாறி வழங்குகின்றது என்பது ஒருமொழியியல் உண்மை. இதனை இதுகாறுங் கண்டோம். இவ்வாறு மாறி வழங்குகின்றபோது அவற்றின் சூழல்களை நினைவில் கொள்ளுவோமானால் அவை பொருள் வேறுபாடு செய்யப் பயன்படுவதில்லை. முழுக்க முழுக்க ஒரே சூழலில் வழங்கும் வேறு வேறொலிகள் பொருள் வேறுபாடு செய்யுமானால் அவை ஒவ்வொன்றும் தனித்தனியே எழுத்தாக வகுக்கப்படும்.

எ. கா. கக்கு, கச்சு, கட்டு, கத்து, கப்பு;
எண், எம், என்;
கரி, கலி, கவி, கழி, களி;
வாய், வார், வால், வாழ், வாள்;
போன்றன.

சூழல் வேறுபாட்டால் மாறிவழங்கும் ஒலிகளே ஒரு குழுவாக்கப்பட்டு ஓரெழுத்து என வகுக்கப்படும்.

மொழியியலறிஞர்கள் வகுத்துத் தந்த இந்நெறிகளின் அடிப்படையில் சென்று இன்றைத்தமிழில்

(இதில் பேச்சுத்தமிழ் சேர்க்கப்படவில்லை என்பது நினைவு கூரத்தக்கது) 15 மெய்யெழுத்துக்கள் உண்டு எனக் காணலாம். மேலே தரப்பட்ட எடுத்துக்காட்டுக் களே இதற்குத் தக்க சான்றுகள்.

ஙகரம் [ṅ] எப்போதும் ககரத்தின் முன்னர் மட்டுமே வழங்குகிறது. அவ்வாறே [n] எப்போதும் தகரத்தின் முன்னர் மட்டுமே வழங்குகிறது. [ṉ] எப் போதும் சகரத்தின் முன்னர் மட்டுமே வழங்குகிறது. இவை அனைத்தும் மகரத்தோடு நெருங்கிய ஒலியுறவு உடையவை; மிகப்பல இடங்களில் இவை மகரத்தின் திரிபாக அமைகின்றன. இக்காரணங்களால் [ṅ, n ṉ, m] ஆகியவற்றை ஒருகுழுவாக்கி ஓரெழுத்து எனக் கொள்ளுவர் இன்றைய மொழியியலறிஞர்.[187] அவ் வெழுத்தை /ம/கரம் எனக் குறிக்கலாம். ண, ம, ன ஆகிய மூன்றும் ஒரே சூழலில் வழங்கிப் பொருள் வேறுபாடு செய்கின்றமையால் இவை தனித் தனியே எழுத்துக்களாகக் கொள்ளப்படும்.

---

187. மெல்லெழுத்துக்கள் எனப்படும் மூக்கொலி யெழுத்துக்களில் ஒன்றான ஙகரம் ஈருயிரிடையில் இரட்டித்து ஐந்து சொற்களில் வழங்குவதாக — ஐந்து சொற்களில் மட்டுமே அங்ஙனம், இங்ஙனம், உங்ஙனம், எங்ஙனம், யாங்ஙனம்—நன்னூலுரையாசிரியர்கள் காட்டு கின்றனர். மற்ற எல்லா இடங்களிலும் ஙகரம் ககரத்தின் முன்னர் மட்டுமே வழங்குகின்றது. பல இடங்களில் அது மகரத்தின் திரிபுதான் (மரம் + கிடந்தது = மரங்கிடந்தது). அவ்வைந்து சொற்களையும் எழுத்து வரையறைக்கு எடுத்துக்கொள்ளாது விட்டால் ஙகரத்தையும் மகரத்தை யும் ஓரெழுத்தாகவே கொண்டு விடலாம். 'காரணம் ஙகரமும் மகரமும் ஒலி ஒற்றுமை கொண்டு தமக்கென

வரையறைப்பட்ட வேறுவேறு சூழல்களில் வழங்குகின்றன. இரட்டை ஙகரம் பெற்ற சொற்களோடு இரட்டை ஙகரம் பெறாத சொற்களும் (அங்கணம் முதலியன) வழக்கில் இருக்கின்றன. இவையே தமிழின் எழுத்தியலுக்கு ஒத்தவையாகவும் இருக்கின்றன. ஆதலால் இரட்டை ஙகரம் பெற்ற சொற்களை எழுத்துவரையறைக்கு எடுத்துக்கொள்ளாது விடுதலும் தவறாகாது. இவ்வாறன்றி ñ கரத்தை ஞகரத்தின் எழுத்தொலியாகவும் n கரத்தை னகரத்தின் எழுத்தொலியாகவும் ஙகரத்தை மட்டுமே மகரத்தின் எழுத்தொலியாகவும் சிலர் கொள்ளுவர்.

*மரே பவுளர்*, நாம் இங்குக் கண்ட கருத்துக்களோடு பெரும்பாலும் ஒத்துச் சென்று நுண்ணிய ஆழ்ந்த முறையில் மூக்கொலிகளை ஆராய்ந்து எழுத்துக்களையும் எழுத்தொலிகளையும் ஆராய்கிறார். முறைகளிலும் முடிவுகளிலும் வேறுபாடு இருத்தலால் அவர் கருத்துக்கள் கருதத்தக்கன:

"The palatalized allophone [ñ] of the dental nasal phoneme shares a preceding postjunctural environment with both the bilabial and the dental nasal but is never in contrast with either in an identical following environment. In some words the dental nasal alternates freely with the palatalized nasal, e. g. [ñɔ·jīṙɪ] or [nɔ·jīṙɪ] 'sun.' Since the nasality of the palatalized nasal is certain, the available evidence shows only that [ñ] is in complementary distribution with both the other nasals which appear after word juncture, and that it is a free variant of [n]. By applying the criterian of acuteness

[P. T. O.]

opposed to gravity, however, it may more certainly be considered a member of the dental phoneme occurring before a palatal frictionless continuant. 'ñāyiṟu' 'sun' is therefore /nyaayiṛu/. (The nasal appearing before [dz] is the alveolopalatal allophone of the dental phoneme /n/.)

The velar nasal *[ṅ]* is in contrast with the alveolopalatal allophone *[n̠]* of the dental nasal phoneme in a similar environment, e. g. eṅkē *[*jEṅgej*]* 'where': enka *[*jEṅgʌ] 'say so'; but it is in complementary distribution with the bilabial nasal. [m] never appears before an immediately following *[*g*]*, whereas an immediately following [g*]* is presupposed by the velar nasal; *[*The *[ṅʌṉʌm]* of the grammarians (e. g. Naṉṉūl *106*) cannot exist after wordjuncture, and all derivatives have the requisite */*g/.*]* e g. /maram/ 'tree'+the plural morpheme /kaḷ/ yields [mʌrʌṅgθḷ]. Both the other nasal phonemes occur before /g/; e. g. [p'Eṇ*]* 'woman: *[*p'Eṇgθḷ*]* 'women', *[*p'əjjeṉ*]* 'boy': [p'əjjeṉgθḷ*]* 'boys.' *[ṅ]* is therefore classified as a member of the phoneme /m/. maraṅkal *[*mʌrʌṅgθḷ*]* 'trees' is /maramgaḷ/.'
—SPST.

*றகரத்திற்கு எனத் தனி ஒலி இல்லை. அது ரகரமாகவோ டகரமாகவோதான் ஒலிக்கிறது என்பது முன்பு காட்டப்பட்டது. ஆகவே ரகரத்தை ஓரெழுத்தாகவே கொள்ளுவதற்கில்லை.[188] மற்ற தடையெழுத்*

---

188. றகரம் ரகரம் ஆகியவை வேறுபாடில்லாத முறையில் ஒன்றாகிவிட்டன என்ற கருத்திற்கு மாறாக வியக்கத் தக்க முறையில் அவையிரண்டையும் தனித்தனியே எழுத்துக்களாகவே வைத்துக்கொள்ளலாம் என மரே பவுளர் வாதம் செய்கிறார்:

"/r̲, r/ can be shown to be in contrast only after postvocalic syllable juncture.: kar̲i [k'ʌ-ṙi] 'curry' /kar̲ı/; kari [k'ʌ-ri] 'charcoal'; 'witness' /kari/.

A distinctive difference between /r̲/and /r/ can be shown to exist in many pairs of words; nevertheless the phonetic difference between the flap and the continuant is the one most easily annulled in Tamil, the tense flap replacing the lax continuant and thus obliterating the phonemic distinction. In view of the case of this annulment, two further items of evidence are adduced for the retention of the difference as a significant feature of the language. (1) Following [ṙ] all consonants are tense, e g. nār̲kāli [nɐṙk·alI] 'chair'; following [r] they may be either tense or lax, e. g. pārkkirē̲n̲ [p'ɐr̲k'Iṙejn̲] 'I see' compared with avarkaḷ [ʌvʌrḥθḷ] 'they',

[P. T. O.]

துக்கள் நான்கும் தடையுரைவெழுத்து ஒன்றும் ஒரே சூழலில் வழங்கிப் பொருள் வேறுபாடு செய்கின்ற

---

(2) Before a tense velar stop, either /l/ or the [n̲] allophone of /n/ is implied in the alveolopalatal flap; e. g. kar̲kir̲ē*n̲* [k'ʌřk'-*iř*ejn̲] 'I learn' which may be decomposed into /kal/ + /kir̲u/ + /een/; cf. the related kalai [k'ʌləj] and kalvi, both 'learning'. There is no such implication in the alveolopalatal retroflex continuant [ṛ].

It is always /r̲/ more over, which asserts itself over the /r/; i e the flap sometimes replaces the continuant, but the continuant never replaces the flap. (If a generalization were to be made from this one instance, it would have to be that the intensive /r̲/ is obliterating the extensive /r/. The change from intensive to extensive is contrary to what has generally been observed in morphology and syntax). The phonemes are not interchangeable.

The lax alveolopalatal fricative [r̆] always presupposes preceding [d̲] allophone of /d/ and has therefore no independent existence. It has an allophone of the tense alveolopalatal flap /r̲/; mūn̲r̲u [muwn̲d̲͡rɪ] 'three' is thus /muundr̲u/."—SPST.

மையால் அவை தனித்தனியே எழுத்துக்களாகக் கொள்ளப்படும்.

இவ்வாறே இடையின எழுத்துக்கள் ஆறும் ஒலியாலும் வழக்காலும் ஆறு எழுத்துக்களாகக் கொள்ளத்தக்கவை.

ஆகவே ஙகர ஞகர றகரங்கள் தவிரத் தமிழ் நெடுங்கணக்கில் உள்ள மற்ற 15 மெய்களும் இன்றைத் தமிழுக்கு மெய்யெழுத்துக்கள் எனலாம். தமிழ்மெய் யெழுத்துக்களும் அவற்றுக்கு உரிய எழுத்தொலிகளும் இங்குத் தரப்படுகின்றன.

தடையெழுத்துக்கள்:

1 /க/ : [ k ] மொழி முதலிலும்
இரட்டுகிற போதும்
வலிப்பின்னும்
[ g ] மெலிப் பின்
[ h ] உயிரிடையும்
இடைப்பின்னும்

2 /ச/ : [ s ] மொழி முதலிலும்
உயிரிடையும்
இடைப்பின்னும்
[ c ] இரட்டுகிறபோதும்
வலிப்பின்னும்
[ j ] மெலிப்பின்[189]

---

189. மரே பவுளர் அவர்கள் சகரத்தின் ஒலிப்பிலும் வழக்கிலும் பல நுண்ணிய வேறுபாடுகளைக் கண்டு

அவற்றின் இடல்புகளையும் எழுத்தாம்தன்மையையும் ஆராய்கிருர். அவை இங்குக் கருதத் தக்கன:

"/c/ has four allophones: [s, ç tṣ, dz]. Of these [tṣ] and [dz] are in some environments determined, and in others free variants; [s] and [ç] are free variants. In a word of Sanskrit origin which contains one of these sounds, a citation pronunciation will preserve the articulation prescribed for Sanskrit; but in the ordinary stream of speech any one of them may appear as a variant of any other. This mixing has been facilitated by the representation of them all by one symbol by the Tamil alphabet. Thus *tēcam* country < Skt. *deça*, when carefully pronounced, is [dejçʌm], but [dejsʌm] is also heard; *cakōtaraṉ* 'brother' < Skt. *sahodara* 'co-uterine' is pronounced either with the Sanskrit dental sibilant as [sʌḥowdʌṛʌn̥] or with initial [ç] or [tṣ] instead. Even the proper name *Cāstri* is rendered both as [çɒstṙi] and as [tṣɒṣtṙi].

The Sanskrit dental sibilant [s] having no exact phonemic equivalent in Tamil, has associated itself to the /c/ phoneme. When pronounced in Tamil, the dental sibilant may thus represent a Sanskrit dental [s] or it may be a substitute for a Sanskrit palatal

P. T. O.

[ç]; and the palatal [ç] when pronounced in Tamil may likewise correspond to its Sanskrit equivalent or be a substitute for a Sanskrit [s], e. g. *ciṅkam* [çIṅgʌm] 'lion' < Skt *siṁha* where a Sanskrit [s] occurs before a dental stop, no other allophone of /c/ is used, but the /s/ may not be pronounced at all; e. g. [p'ustʌḥʌm] or [p'ut'ʌḥʌm] 'book'....... ..

The affricated dental stop [ts] is an allophone of /c/ after postvocalic word juncture and after syllable juncture preceded /ṭ/, by /r/ or by the [ṭ] allophone of /t/. In the former environment the stop component of the affricate is double, and is decomposable into a tense alveolar stop [ṭ] which closes the last syllable of the preceding word, and a tense dental stop [t] which opens the first syllable of the following word. Example after word juncture: *anta* [ʌndʌ] 'that' + *ciṟiya* [çIṙIjʌ] 'small' yields [ʌndʌṭtsIṛIjʌ]; examples after syllable juncture: *kaṭci* [k'ʌṭ-tsI] 'jungle' /kaṭci/, *paṭci* [p'ʌṭ-tsI] 'bird' /pa'ṭci/ of. *paci* [p'ʌçI] 'hunger' /paci/), *kāṟcari* [kɒ·ṙ-tsʌrḻ] 'anklet' /kaarcarl/, *kaccu* [k'ʌṭ-tsɪ] 'girdle' /katcu/. This conditioned variant [ts] has become

[P. T. O.]

free, as already indicated occurring in utterance-initial as well as elsewhere (cf. *castri* above)

A lax affricated [dz] allophone of /c/ occurs after syllable juncture preceded by the alveolapalatal [*n̲*] allophone of /n/: *mañcaḷ* [mʌ*n̲*dzʌ*ḷ*] 'saffron' /mancaḷ/. This conditioned variant has, like [ts], become free, occurring in utterance-initial as well as elsewhere; e. g. *jaṉṉal* [dzʌnnʌl] or *caṉṉal* [çʌn̲n̲ʌl] 'window' < Ptg, *janela*, *jepam* [dzʌbʌm] or [çʌbʌm] 'prayer' < Skt. *japa*. In certain words of Sanskrit origin, such as *jepam*, [dz]reproduces a Sanskrit sound, ut in all such instances a variant exists; e. g. *irāian* [jIṛɐ·dzʌn̲] or *aracaṉ* [ʌṛʌçʌn̲] 'king', both < Skt. *rāja*. There is no evidence for the phonemic independence of [dz] in Tamil.

In the case /c/ and its allophones, the influence of Sanskrit is no less sure, as the number of Sanskrit words in Tamil pronounced with one of these sounds shows, but the precise definition of the influence is far less certain. It is possible that the representation of several Sanskrit sounds by one letter (transliterated c) in the Tamil alphabet has resulted in hesitation between the Sanskrit

| | | | |
|---|---|---|---|
| 3 | /ட/ : | [ ṭ ] | இரட்டுகிற போதும் வலிமுன்னும் |
| | | [ ḍ ] | மெலிப்பின் |
| | | [ ṛ ] | உயிரிடை |
| 4 | /த/ : | [ t ] | மொழி முதலிலும் இரட்டுகிற போதும் |
| | | [ d ] | மெலிப்பின் |
| | | [ δ ] | உயிரிடையும் இடைப்பின்னும் |
| 5 | /ப/ : | [ p ] | மொழி முதலிலும் இரட்டுகிற போதும் வலிப்பின்னும் |
| | | [ b ] | மெலிப்பின் |
| | | [ β ] | உயிரிடையும் இடைப் பின்னும் |

---

pronunciation and a spelling pronunciation, just as in the variation between [dʌndʌm] and [t'ʌndʌm]. except that here the number of choices is greater. Whether the transformation of the sandhi variant [ts] and the conditioned allophone [dz] into free variants is due wholly to Sanskrit influence it is impossible to say, but it may be that the apparently random extension of [ts] owes its impetus to the force of analogy. It seems likely that in the phoneme /c/ a phonemic split is now in process and that this split has been caused by the influence of sanskritized pronunciation."
—SPST.

மூக்கெழுத்துக்கள்:

6 /ஞ/ : [ ñ ] எல்லா இடங்களிலும்

7 /ண/ : [ ṇ ] வலிமுன்னும்
மெலிமுன்னும்
மொழியிறுதியும்
இரட்டுகிறபோதும்

[ ṇ̇ ] உயிரிடை.

8 /ன/ : [ n̲ ] எல்லா இடங்களிலும்

9 /ம/ : [ n ] தகரத்தின் முன்
[ ñ̲ ] சகரத்தின் முன்
[ ṅ ] ககரத்தின் முன்
[ m ] மற்ற எல்லா இடங்களிலும்

தொடர்வெழுத்துக்கள்:

10 /ய/ : [ y ] எல்லா இடங்களிலும்

11 /வ/ : [ v ] எல்லா இடங்களிலும்

புறவளியெழுத்துக்கள்:

12 /ல/ : [ l ] எல்லா இடங்களிலும்

13 /ள/ : [ ḷ ] எல்லா இடங்களிலும்

14 /ழ/ : [ ḻ ] எல்லா இடங்களிலும்

துடிப்பெழுத்து:

15 /ர/ : [ r ] எல்லா இடங்களிலும்

## தமிழ் மெய்யெழுத்தொலிகள் : 29

| ஒலிப்புறுப்பு | | | கீழிதழ் | | நுனிநா | | வளைநுனிநா | முன்நா | | பின்நா | தொண்டை |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| ஒலிப்பிடம் | | | மேலிதழ் | மேல்பல் | மேல்பல் | ஈற்றண்ணம் | வல்லண்ணம் | ஈற்றண்ணம் | வல்லண்ணம் | மெல்லண்ணம் | |
| ஒலிப்பு வகை | தடை | உயிர்ப்பு | p | | t | | ṭ | | | k | |
| | | குரல் | b | | d | | ḍ | | | g | |
| | உரைவு | உயிர்ப்பு | β | | | | | s | | | |
| | | குரல் | | | δ | | | | | h | |
| | தடையுரைவு | உயிர்ப்பு | | | | | | c | | | |
| | | குரல் | | | | | | j | | | |
| | குரல் | மூக்கு | m | | n | ṉ | ṇ | ṉ̃ | ñ | ṅ | |
| | புறவளி | வருடல் | | | | | ḻ | | | | |
| | | ஒற்றல் | | | | l | ḷ | | | | |
| | துடிப்பு | குரல் | | | | r | | | | | |
| | தட்டல் | வாய் | | | | | ṛ | | | | |
| | | மூக்கு | | | | | ṇ̇ | | | | |
| | குரல்தொடர்வு | | | v | | | | | y | | |

## 2. 20. 20-ஆம் நூற்றாண்டுத்தமிழ் மெய்யெழுத்துக்கள்

பேர். தெ. பொ. மீ. அவர்கள் மொழியியலறிஞர் மு. சண்முகம் அவர்களைப் பின்பற்றி இருபதாம் நூற்றாண்டுக்கான தமிழிற்குக் கீழ்க்காணும் முறையில் 28 மெய்யெழுத்துக்களைத் தருகிறார்.[190] இன்றை எழுத்துத்தமிழ் பேச்சுத்தமிழ் இரண்டுக்குமே இவை உரியன போலும்.

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| p | ṯ | t | ṭ | c | k | |
| b | ḏ | | ḍ | j | g | |
| | f | s | ṣ | | | h |
| β | v | z | | | | |
| m | | n | ṇ | ñ | ṅ | |
| | | l | ḷ | | | |
| | | r | ḻ | | | |
| | | | | | y | |

---

190 A History of the Tamil Language (HTL)by prof. T.P.M., P. 205. திரு. மு. சண்முகம் அவர்களின் கருத்துக்கள் Grammar of Colloquial Tamil என்னும் ஆராய்ச்சியுரையுள் உள்ளன. அண்மையில் வெளிவந்த இக்கால மொழியியல் என்னும் அவரது நூலிலும் *தமிழின் ஒலியன்கள்* இடம் பெற்றுள்ளன (பக். 99–131). இங்குச் சில மாற்றங்கள் கண்டுள்ளார் அவர். டாக்டர் கமில்

பேச்சுத்தமிழ், எழுத்துத் தமிழிலிருந்து ஓரளவு வேறுபட்டது. ஆகவே பேச்சுத்தமிழின் எழுத்தியலமைப்பு எழுத்துத்தமிழினதிலிருந்து வேறுபட்டிருக்கிறது. பேச்சில் நிறைய அயல் மொழிச் சொற்கள் கலந்து பேசப் படுகின்றன. இவ்வயல்மொழிச் சொற்கள் சேய்மையிலும் அண்மையிலும் கடன் கொள்ளப்பட்டன. சேய்மையில் கடன் கொள்ளப்பட்டவை ஓரளவு தமிழெழுத்தியல் மரபோடு ஒன்றியுள்ளன. அண்மை யில் கடன் கொள்ளப்பட்டவை (ஆங்கிலம், வடமொழி முதலியவற்றிலிருந்து கடன் கொள்ளப்பட்டவை) நீரில் எண்ணெய் போன்று இன்று வழங்கிக் கொண்டிருக் கின்றன. இவை பெரும்பாலும் (வடமொழியும் தமிழும் அல்லது ஆங்கிலமும் தமிழும் அறிந்த) இருமொழி யாளராலேயே[191] பேசப்படுகின்றன. இந்நிலையில் எத்தகைய அயல்சொற்களை, எவ்வளவு அயல்சொற்களை எழுத்தியலிலக்கண வரையறுப்புக்கு ஏற்றுக்கொள்வது என்பதில் அறிஞர்கள் கருத்து வேறுபாடு கொள்ளு கின்றனர். அயல் மொழிச் சொற்களை ஏற்றுக் கொள்ளுகிற அளவுக்கு ஏற்பத் தமிழில் எழுத்துக்கள் வகுக்கவேண்டி நேர்கிறது. இருமொழியாளரும் பன் மொழியாளரும் தமிழ்ப்பேச்சில் கலக்கும் அயல்மொழிச்

---

சுவலபில் அவர்கள் இன்றைப் பேச்சுத் தமிழுக்கு இரட்டித்த மெய்களை யெல்லாம் எழுத்துக்களாகக் கொண்டு 44 மெய்யெழுத்துக்களை அமைத்திருக்கிறார்! அவரும் முத்துச்சண்முகனாரைப் பின்பற்றுகிறார். (The Vowels of Colloquial Tamil, Aror 31, 1963 காண்க)

191. Bilinguals

சொற்களுக்கு எல்லையே இல்லை! ஆகவே ஒருமொழித் தமிழரோடு நிற்பது அறிவுடைமை.[192]

---

192. இக்கருத்து வேறுபாடு பற்றித் திரு மு. சண்முகம் அவர்களும் பேசுகிருர்கள். (இக்கால மொழியியல், பக் 114--115)

இன்றைய தமிழ், வடமொழிகலந்த தமிழே என வாதிப்பாரும் உண்டு. திரு. மரே பவுளர் என்னும் அமெரிக்கர் The Segmental Phonemes of Sanskritized Tamil என்றே ஒரு கட்டுரை எழுதியிருக்கிருர்கள். அதற்கு அறிவிப்பாளராக ஈ. கே. நடேசசர்மா என்ற வடமொழி கற்ற பிராமணரையே கொண்டிருக்கிருர். கட்டுரை மிகச்சிறந்த ஆராய்ச்சியுரை என்பதில் ஐயம் இல்லை. ஆனல் தமிழகம் எல்லாம் நடேச சர்மாக்கள் இல்லையே! மரே பவுளர் கருத்து இது:

'This is a phonemic analysis of the Sanskritizied literary Tamil spoken in Madras by those whose vernacular is Tamil and whose fluent knowledge of Sanskrit is due to their heritage and upbringing. This variety of the language is distinct on the one hand from the several geographically determined dialects and, on the other, from Tanittamil 'pure Tamil', which, free (atleast in intention) of all Indo-Aryan influences, has records possibly two thousand years old and is in use today by certain people in the Tamil area. Sanskritized Tamil is a cultivated literary language subject to strict canons of grammar and style, but it is a living speech and not an artificial medium used only by scholars'. –SPST.

இவ்விடத்தில் மரே பவுளர், தான் ஆராய்ந்த தமிழுக்கு எத்தனை எழுத்துக்கள் எவ்வாறு கொள்ளு கிருர் என்பதை அறிதல் நல்லது:

இம்மெய்யெழுத்துக்களுக்கு வேறு எத்தனை எழுத்தொலிகள் உண்டு என்பது பற்றிப் பேர். தெ. பொ. மீ. அவர்கள் ஒன்றும் கூறவில்லை. நம் பட்டியில் காணும் பல எழுத்தொலிகள் பேர். தெ. பொ. மீ. அவர்களால் எழுத்துக்களாகக் கொள்ளப்பட்டிருக்கின்றன. bayilvaan, film, kaafi, balbu, deesam jambar, saambaar, shanmugam, dazen, hindi, gadam முதலிய சொற்களை இவ்வொலிகளோடே மேற்கொண்டு அவற்றின் அடிப்படையில், b, f, s, z, h, g, j, s முதலியவை எழுத்துக்களாக வரையறுக்கப்பட்டிருக்கின்றன. இச்சொற்கள் எல்லாம் இருமொழியாளர் பேச்சில் மட்டுமே உண்டு எனக்கருதி ஒதுக்குவோமானல் மெய்யெழுத்துக்களின் தொகை சிறிது குறையும்.

---

'In the idiolect examined 32 consonantal and 15 vocalic phones have been recorded. These may be combined and classified into 22 consonantal and 5 unitary vocalic phonemes.

Vowels. The five unitary vowels /i e a o u/, either single or double, serve as syllabic nuclei. Single vowels are lax; double vowels are tense.

Consonants. There are *22* consonantal phonemes: */p b t d ṭ ḍ k g m n ṇ l ḷ v c r̠ x h w y r ḻ/.*

In stop consonants paired by similarity of articulatory position, tenseness is the significant feature in opposition to laxness, rather than voicelessness in opposition to voice. Tense stops, unless affricated, are aspirated. No tense stop follows a nasal',–SPST.

தமிழெழுத்தியலை ஆராயும் முறையாலும் எழுத்துக்களின் தொகை குறையவும் மிகவும் செய்யலாம். திரு. மு. சண்முகம் அவர்கள் -க்க்-, -ச்ச்-, -ட்ட்-, -த்த்-, -ப்ப்- முதலியவற்றை ஈரெழுத்துக்கள் எனக் கொள்ளாது k, c, ṭ, t, p என ஓரெழுத்துக்களாகவே கொள்ளுகிறார். ஆகவே அவர் முறையில் பட்டம் என்பது [paṭam] எனவும் படம் என்பது [Paḍam] எனவும் ஆகும்; முத்தல் என்பது [mutal] எனவும் முதல் என்பது [mudal] எனவும் ஆகும். ஆதலால் இங்கு எல்லாம் ṭ, ḍ, t, d ஆகியவை பொருள் வேறுபாடு செய்யப் பயன்படுகின்றன; ஆகவே எழுத்துக்களாகக் கொள்ளப்படவேண்டும். இவ்வாறாகக் குரல் தடைபொலிகளை யெல்லாம் எழுத்துக்களாகக் கொள்வதும் ஒரு முறையே. வடதமிழகத்தில் குரல்தடைபொலிகள் மொழிமுதலிலும் வழங்குதல் வழக்காகி வருவதால் அக்குரல்தடையொலிகள் [b, d, ḍ, j, g] எழுத்துக்களாகக் கொள்ளப்பட வேண்டும் போலும்.

ஈற்றண்ண வுயிர்ப்புத்தடை யொலியாகிய ṯ ஓரெழுத்தாகத் திரு. மு. சண்முகம் அவர்களால் கொள்ளப்பட்டிருக்கிறது. இது அவர்தாயகமான நாஞ்சில் நாட்டிலும் ஈழத்திலும் வழங்கும் தமிழ்க் கிளைமொழிகளில் உள்ளது. தமிழகத்தின் மற்ற பகுதிகளில் அது இல்லை என்பது வெளிப்படை. ஙகரம் எழுத்தாதலுக்குக் காரணம் 'ஙதரம்' எனத் தன்னைக்குறித்து வழங்குகின்ற போது அது மொழி முதலாக நடத்தலே காரணமாம். இவ்வழக்குப் போன்றதை எழுத்து வரையறைக்கு எடுத்துக் கொள்வது தேவையில்லை.[193]

கடந்த சில நூற்றண்டுகளாக வடமொழியாளர் 'ஆதிக்கம்' தென்னக மெல்லாம் மேலோங்கியிருந்தது போன்று தமிழகத்திலும் மேலோங்கி யிருந்தது. அவர்கள் தமிழிற்குத் தேவையில்லாதிருந்தும் ஏராளமான வடசொற்களை அவ்வாறே தமிழில் நுழைத்தனர். அவற்றை எழுத வடமொழி எழுத்துக்களையும் பயன்படுத்தினர். மணிப்பிரவாளநடை என ஒரு தமிழும் தோன்றியது. அதனால் வடமொழியில் உள்ள ஸ, ஷ, ஜ, ஹ, க்ஷ முதலியவை தமிழ் நெடுங்கணக்கில் சேர்க்கவும் பட்டன; இன்று பள்ளிகளில் கற்பிக்கவும் படுகின்றன. இவ்வட-மொழி நுழைப்பினை ஏற்றுக் கொண்டோருக்கு இவ்வட மொழியெழுத்துக்கள் தமிழெழுத்துக்களாகக் கொள்ளப்பட வேண்டும். ஆனால் இந்நுழைப்பாளர்கள் எல்லோரும் வடமொழியும் தமிழ்மொழியும் கற்ற இருமொழித்தமிழரே. ஆகவே இன்றைய ஒருமொழித்தமிழரின் தமிழிற்கு இவ் வடமொழியெழுத்துக்கள் அந்த அளவு எழுத்துக்களாகத் தேவைப்படமாட்டா. வடமொழிச் சொற்களை எழுது-வதற்கு மட்டுமே இவ்வெழுத்துக்கள் இன்றும் பயன் படுகின்றன. இவ்வடசொற்கள் தமிழ்ப் பொதுமக்களிடம் வழங்குவது இல்லை. ஆகவே அயல்மொழிச் சொற்களது வழக்கிற்கேற்ப எழுத்துக்களின் தொகை அமையும் என்பது தெளிவு.

இன்றைய பேச்சுத்தமிழிற்கு எத்தனை எழுத்துக்கள் வகுக்கலாம் என்பது இனித்தான் தமிழறிஞர்களால் முடிவு செய்யப்படவேண்டும். இன்றைய எழுத்துத்தமிழ் எந்த அளவிற்குப் பேச்சுத்தமிழை ஒட்டிச் செல்ல வேண்டுமோ — இதிலும் அறிஞரிடைக் கருத்தொற்றுமை இல்லை— அந்த அளவிற்கு எழுத்துத் தமிழில் எழுத்துக்கள்

அமைக்கப்படும். பேர். தெ. பொ. மீ. அவர்கள் தந்தவை இத்துறையில் ஒருதொடக்க முயற்சியே. அதனில் அவருக்கே மனநிறைவில்லை. [193]

இது காறும் கூறியவற்ருல் இன்றைய பேச்சுத் தமிழிற்கு எழுத்துக்கள் வகுப்பதில் உள்ள சிக்கல் புலப்படும். ஆகவேதான் இந்நூலாசிரியர் இன்றைய எழுத்துத்தமிழ் அளவில் நின்று முன்பிரிவில் (2. 19) தந்தவாறு கருத்துக்கொண்டு செல்லுகிருர். எழுத்திலக்கணம் வரைவதில் முழுமை, எளிமை, தெளிவு ஆகியவை நோக்கமாகக் கொள்ளப்பட வேண்டும். இந் நோக்கத்திற்கு ஏற்கத்தக்க முறையினைப் பின்பற்றித் தக்க முடிவிற்கு வருதல் வேண்டும்.

## மெய்யெழுத்துக்கள் : அன்றும் இன்றும்

### 2. 21. வல்லெழுத்துக்கள்: மூவேருெலிகள்

2. 21. 1 க, ச, ட, த, ப என்னும் தடையெழுத்துக்-கள் (சகரம் தடையுரை வெழுத்தாக இருந்தாலும் சில ஒற்றுமைகள் பற்றித் தடையெழுத்துக்களோடு வைத்துக் கருதப்படுகிறது) ஒவ்வொன்றும் மும்மூன்று எழுத்தொலிகள் பெற்றிருக்கின்றன:

---

193 'The contrasts for ந ன and ங occur only in names of letters and many may not accept this as establishing the contrasts.' —HTL. P.207·

தொல்காப்பியர், நன்னூலார் முதலான இலக்கண ஆசிரியர்களும் இத்தகைய மயக்கங்களை விதிகளாகக் கொள்வதில்லை; விதிவிலக்குக்களாகக் கொண்டு விலக்கு-கின்றனர் ;

(அடுத்த பக்கம்)

| | 1 | 2 | 3 |
|---|---|---|---|
| | இடைப்பின்னும் உயிரிடையும் உரைவொலி | மெலிப்பின் குரல் தடையொலி | மற்றையிடங்களில் உயிர்பபுத் தடையொலி |
| க | h | g | k |
| ச | s | j | c |
| ட | ṛ | ḍ | ṭ |
| த | δ | d | t |
| ப | β | b | p |

இவ்வெழுத்தொலிகளின் வழக்கில் ஓரொழுங்கமைப்பு இருத்தல் தெளிவு. இவ்வொழுங்கமைப்பு இன்றைய பேச்சிலும் எழுத்துத் தமிழைப் படிப்பதிலும் தெளிவுபட அமைந்துள்ளது. இடைப்பின்னும் உயிரிடையும் ṛ δ β ஆகியவை உரைவொலிகளேயன்றிக் குரலொலிகளாகவும் இருக்கின்றன. h சிலபோது குரலொலி. s எப்போதும் உயிர்ப்பொலியே. இச்சூழல்களில் இவற்றின் தலையாய பண்பு உரைவொலியாதல் என்பதே யாகும்; குரலொலி பெறுதலை விதியாகக் கொள்ளத்தக்க அளவு அவை யெல்லாம் குரலொலிகள் ஆகவில்லை. தடையொலிகளே இச்சூழல்களில் ஒலிக்கின்றபோது நெகிழ்ந்து உரை வொலிகள் ஆயின. ஆகவே மொழியியலறிஞர் இப்பர்

---

தம்மியல் கிளப்பின் எல்லா எழுத்தும்
மெய்நிலை மயக்க மானம் இல்லை. (தொல் எழு. 4)

தம்பெயர் மொழியின் முதலும் மயக்கமும்
இம்முறை மாறியும் இயலும் என்ப. (நன் எழு.66)

என்டார் இவற்றை நெகிழ்வொலிகள் என்றே வழங்குவர்[194] இவ்வியல்பினைக் கால்டுவெல் போன்ற மேனாட்டுத் தமிழறிஞர் உணர்ந்து குறித்துள்ளமை ஆங்காங்கே சுட்டப்பட்டது. ஆனால் இவ்வெழுத்தொலி வேறுபாடுகள் பற்றிப் பண்டைத்தமிழகத்துத் தமிழறிஞர்கள் யாதொன்றும் குறிக்கவில்லை. ஆகவே ஒரு கேள்வி எழுகிறது. தடையெழுத்துக்களுக்கு இவ்வெழுத்தொலி வேறுபாடுகள் பழந்தமிழ்க் காலம் தொட்டே உண்டோ? உண்டானால் எவ்வாறு அவற்றை அறிவது? திராவிட மொழியியலின் தந்தை கால்டுவெல் இக்கேள்வியினைக் கேட்டுக்கொண்டு அதற்கு விடையும் தருகிறார். அவர் விடை, 'இவ்வாறு ஒலிவேறுபடும் பண்பு தமிழில் மட்டுமல்ல மற்ற திராவிட மொழிகளிலும் பண்டுதொட்டே அமைந்துள்ள ஓர் உள்ளார்ந்த பண்பு' என்பதாகும். அறிஞர் கால்டுவெல் இதனை The convertibility of Surds and Sonants என்ற தலைப்பிட்டு ஆராய்கிறார்.[195] அன்னாரின் கருத்தினை உடன்பட்டோரும் உண்டு; மறுத்தோரும் உண்டு.[196] இக்கருத்துக்களை 1) உயிர்ப்புத் தடையொலி, 2)குரல் தடையொலி, 3) உரைவொலி என்ற முறையில் தனித் தனியே ஆராயலாம்.

---

194. இவ் வொழுங்கமைப்பினையே மொழியியலில் Pattern என்பர். தமிழ் மெய்யெழுத்துக்களின் வழக்கில் அமைந்த இவ்வொழுங்கமைப்பினைப்பற்றிக் கிப்பர் என்னும் அறிஞர் கூறும் கருத்துக்கள் இவை:

"...... the opposition surd (initially) : sonant (inter vocalically) is not a general characteristic of the Tamil plosive system. It is found in the phoneme t, but not (or not consistently) in the phonemes k and c.

[P. T. O.]

In the case of p the details are not sufficiently clear, whereas ட does not occur initially, and ற must be excluded from the system of plosives in modern Tamil The fundamental opposition is rather between tense articulation and lax articulation (accordingly between fortis and lenis), the latter of which may additionally be characterized by voicing but need not necessarily be." — F. B. J. kuiper, Two Problems of Old Tamil Phonology : Convertibility of Surds and Sonant. Indo Iranian Journal, 2. 3, 1958

இன்றைய தடையெழுத்துக்கள் பற்றி மரே பவுளர் அவர்களும் இவ்வாறே கருதுவர். அடிக்குறிப்பு 2.192 காண்க.

195. CGDL, P. 138

196. குரல் தடையொலி உயிர்ப்புத் தடையொலிகள் பற்றித் திராவிட மொழியியல் ஆராய்ச்சி யறிஞர்களின் ஒட்டிய வெட்டிய கருத்துக்களை இங்கு அறிதல் நல்லது:

" Caldwell assumed that the " law of convertibility of surds and sonants," as operating to the fullest extent in Ta. represented "the Dravidian phonetic system." This meant that, originally, there were only sonants in the medial (intervocalic and post-nasal) position, and surds always in the initial position and in gemination...... Jules Bloch on the basis of the supposed history of three Sanskrit words, ghootaka-horse, gardabha- ass, and draavida n. pr of a people, and a passage from Kumaarila Bhatta's Tantravaartika, arrived at the following conclusions : (1) that voiced plosives (and even aspirated stops) existed in Common

[P. T. O.]

Dravidian in a remote past; (2) that, in Tamil loss of sonority occurred sometime between the beginning of the Christian era and the time of Kumarila ( C. 700 A D.); (3) and that again, about the time of Nannul, i. e , 1200 A. D , intervocalic surds became sonants. He also brought in the striking similarity between Indo-Aryan and Dravidian in the weakening of intervocalic consonants. Therefore, he thinks, by implication, that Te. and Ka. preserve the PDr. system of initial medial stops as against oTa.

P. S. Subrahmanya Sastri contesting Caldwell's theory of sonantizations of medial stops in Ancient Tamil states that these are very recent developments in Tamil and do not belong to the literary dialect. He brings in Te. inku to dry up vanki a hook, kaanka heat, and ance, and Ka. vanki, and kaake, and ance to show that the presence of voiceless plosives in these] languages even after-nasals is a proof that voicing is not an ancient characteristic attributable to the parant speech Alfred master. on the other hand, agrees with Bloch and even goes futher to say that " there is no ground for supposing that there was any period in which Tamil lacked voiced plosives.'· His main evidence is the spirantization of PDr. *-p- and *-c- to -v- and -y- even in Ancient Tamil, which is a clear indication of its weakened articulation of the medial stops.

Chatterjee in a recent article in Indian Linguistics (Vol.14, 1954, pp. 1- 9), entitled "Old and Ancient Tamil and Primitive Dravidian," partly upholds the view of Jules Bloch, and makes the following assumptions: In Primitive Dravidian both unvoiced and voiced stops

[P. T. O.]

were phonemic. It was so even in Ancient Tamil of the pre-Sangam or pre-Tolkaapiyam period. The unvoicing of initial stops in Tamil started " in the early centuries of the Christian era or even still earlier. but it must have become established in Ta. by 600 A.D," In the non-initial (i.e., intervocalic and post-nasal) position voicing started as late as as 1350 A.D., the period when Old Tamil ends and Middle Tamil begins." —PP. 29-30. TVB.

ஆராய்ச்சியாளர்கள் பெரும்பாலும் கால்டுவெல் கருத்துடன் ஒத்துச் சென்று சிறுபாலும் திருத்தங்கள் தருகின்றனர். ஆனால் மரேபவுளர் அதனைக் கடுமையாகத் தாக்கிவிட்டு ஒருசிறிதே ஒத்துப்போகிறார். அவர் தாக்குதல் சிந்தனைக்கு உரியது:

"The effect of Sanskrit. It seems clear that the lax stops b, d, g owe their phonemic status to the widespread use of Sanskrit loan words. Caldwell's law so called, of the convertibility of surds and sonants appears to be based upon a spelling pronunciation, or a wholly Tamilized pronunciation, of these borrowing. Such a pronunciation cannot always be assumed and in some instances cannot be found at all. Thus Sanskrit *danta* [dʌntʌ] tooth becomes Tamil *tandam*, which is pronounced either [dʌndʌm] or [t'ʌndʌm], but more normally and more correctly in the former manner with the memory of its Sanskrit origin provoking the initial [d] and the normal requirement of Tamil distribution requiring the medial [nd] ; the form [ t'ʌndʌm] is a spelling pronunciation. Similarly the common word putam [budʌm] ' wednes day' is always pronounced with initial[b]

The law (caldwell's law ) is, in its author's phrasing completely untenable, since it embodies a confusion of

[P. T. O.]

2. 21. 2. பண்டைக்கால எழுத்தொலிகளை அறி-வதற்குச் சில வழிகளை மேற்கொள்ளலாம்.

1 பண்டைத்தமிழ்ப் பேச்சினை அயல் மொழியினர் கேட்டுத் தமிழ்ச் சொற்களைத் தாம் கேட்டவாறே ஒலி வேறுபாடுகளோடு தம்மொழியில் எழுதிவைத்திருக்கலாம். அவர்கள் மொழியில் தமிழ் எழுத்தொலிகளின் வேறு பாட்டைப் புலப்படுத்துமாறு வரிவடிவெழுத்துக்கள் இருக்கலாம்.[197] மொழிபெயர்க்க முடியாத சிறப்புப் பெயர்கள் இவ்வாறு அயல் மொழிகளில் இடம்பெறலாம். வடமொழியாளர், கிரேக்கவழிச் செலவினர் ஆகியோர்

---

round and symbol and of historical and synchronic analysis. It is possible that the graplic representation of Tamil souuds at some time in the past showed a complementary distribution of surds and sonants at some preceding period—and that, in mordern terms, is what Caldwell is saylng. ('A sonant cannot commence a word neither is a surd admissible in the middle except when doubled,') But that the law operated diachronically, holding the langnage in a perpetual complemntary distribution of these sounds, is not credible. In modern Sanskritized Tamil, surd and sonent (i. e. tense and lax) stops are in contrast." –SPST.

197. காகங்கள் என்ற தமிழ்ச் சொல்லில் மூன்று ககரங்கள் இருக்கின்றன, மூன்றும் ஒரே ககரம்தான்! ஆனால் ஆங்கிலத்தில் kaahangal என k, h. g எனும் மூன்று எழுத்துக்கள் இட்டு, நாம் காதால் கேட்டவாறே எழுதுகிறோம். காரணம் ஆங்கிலத்தில் இவ்வொலிவேறு பாடுகள் உண்டு. இதே முறைதான் அன்றும் இருந்-திருக்கலாம் என்று நம்பப்படுகிறது.

குறித்துவைத்த தமிழ்ச்சொற்கள், இடைக்காலத்து வடமொழிக்கல்வெட்டுக்களில் ஏறிய தமிழ்ச் சொற்கள், அயல் மொழிகளுக்குக் கடன் போன தமிழ்ச் சொற்கள் ஆகியவை இவ்வகையில் நமக்குப் பெருந்துணை புரிகின்றன.

2 தமிழோடு பிறப்புறவு கொண்ட மற்ற திராவிட மொழிகளின் எழுத்தொலிநிலைகள் தமிழின் எழுத்தொலி நிலைகளை ஓரளவு அறிவிக்கலாம்.

3 தமிழ்மொழியில் ஏற்பட்ட சில ஒலியியல் மாற்றங்கள் ஒலிகளின் தன்மையைத் தெரிவிக்கலாம். எடுத்துக் காட்டாகப் பண்டைத் தமிழ்ப் பகரம் ஈருயிரிடை வகரமாயிற்று. இம்மாற்றம் ப > வ என நேரே நடைபெற்றது என்பதைவிட ப [p] > b/β > வ என நடைபெற்றிருக்கலாம் எனக்கொள்வது மொழியியலுக்கு எளிதாக ஏற்புடையது. குரலொலி இல்லாத பகரம் [p] குரலொலி பெற்ற வகரமாக [v] மாறுவதற்கு இடையில் குரலொலி பெற்ற பகரமே [b] இருந்திருக்கலாம் எனக் கொள்வது பொருத்தமானதே.

இம்முறைகளால் பண்டைத் தமிழொலிகளை ஓரளவு அறியலாமாயினும் இவற்றிலும் சிக்கல் இல்லாமலில்லை.

2.21.3. உயிர்ப்புத் தடையொலிகள். இவை தமிழில் மொழிமுதலிலும் வலிப்பின்னும் வலிமுன்னும் இரட்டுகிறபோதும் அமைகின்றன. பிரஞ்சு மொழியியலறிஞர் யூலி பிளாஹ்[198] தமிழிலும் மற்ற திராவிடமொழிகளிலும் வழங்கும் குதிரை, கழுதை, தமிழ் எனும் மூன்று திராவிடச்

---

198. Jules Blach

சொற்களும் வடமொழியில் முறையே *ghoṭaka-*, *gǎrdabha-*, *draviḍa* என வழங்குவதைக் கொண்டு தொல்காப்பியருக்கு முந்திய தமிழில் மொழி முதலில் குரல்தடையொலிகள் (g-, d-, b-......) இருந்தன என வாதிடுவர். இச்சொற்கள் தெலுங்கில் குரல் முதற் சொற்களாகவே வழங்குகின்றன. இம்மூன்று சொற்கள் மட்டுமல்ல; இன்னும் ஏராளமான சொற்கள் தெலுங்கிலும், கன்னடத்திலும் குரல்முதற் சொற்களா-கவே வழங்குகின்றன. [ஆனல் தமிழில் அவ்வாறில்லை. மலையாளம், தமிழ் போன்ற எழுத்தொலிகள் பெற்றுள்ளது.] ஆனல் அவற்றில் திராவிட மொழிகள் எல்லாவற்றிற்கும் பொதுவாகக் காணப்படும் எண்ணற்ற திராவிடச் சொற்களில் ஒருசொல்லில்கூடக் குரல்தடையொலி சொல் முதலில் காணப்படவில்லை. ஒரு திராவிட மொழியில் குரல் தடையொலி பெற்ற ஒருசொல் மற்ற திராவிட மொழிகளில் அவ்வாறில்லை; உயிர்ப்புத் தடையொலியே பெற்றுள்ளது. ஆகவே முதல்திராவிடத்தில்[199] சொல்லின் முதலில் குரல்தடையொலியே இருந்திராது எனலாம். எனவே தமிழ் அன்று முதல் இன்று வரை முதல் திராவிடப் பண்பு கெடாது போற்றி வருகிறது எனக் கொள்ள வேண்டும். ஆனல் தெலுங்கு, கன்னடம் போன்ற மற்ற திராவிடமொழிகள் முதல்திராவிடத் திலிருந்து பிரிந்த பின்பு தம் உயிர்ப்புமுதற்சொற் களைக் குரல்முதற்சொற்களாக மாற்றிக் கொண்டிருக்க வேண்டும்; அல்லது அவற்றைப் புதியனவாகப் பெற்றி-ருக்க வேண்டும்.

---

199 Proto-Dravidian; முதல் = அடி = மூலம்

சங்க காலத்தில் தமிழகம் வந்த கிரேக்க வழிச் செலவினர் குறித்து வைத்த தமிழ்ச்சொற்கள் அன்று சொல்முதலில் உயிர்ப்புத் தடையொலிகளே வழங்கின என்பதை வற்புறுத்தும்.[200] ஏழாம் நூற்றாண்டில்

---

200. தாலமி (Ptolemy), பிளினி (Pliny) முதலிய கிரேக்கச் செலவினர் கி.பி. முதல் நூற்றாண்டளவில் தமிழகம் வந்தபோது தாம் கண்டும் கேட்டும் தம் கிரேக்க மொழியில் குறித்து வைத்த தமிழ்ப்பெயர்கள் கீழே தரப்படுகின்றன. இவற்றைக் கால்டுவெல் தம் நூலுள் தந்து ஆராய்கிறார். (பக். 88 - 105, CGDL.)

| | | | | |
|---|---|---|---|---|
| பாண்டியன் | Pandioon | P- | -nd- | |
| சோழ | Soorai | S- | | |
| | Sooreeton | S- | | |
| சோழகம் ? | Soorigoon | S- | | -g- |
| சோழிங்கன் ? | Sooringoon | S- | -ng- | |
| ஆர்க்காடு | Arkatou | | | -t- |
| கரூர் | Karoura | K- | | |
| தமிழகர்? | Damirice | D- | | -c- |
| | Dimirica | D- | | -c- |
| முசிறி | Mouziris | | | -z- |
| தொண்டி | Tyndis | T- | -nd- | |
| குட்டநாடு | Cottonara | C- | | |
| | Kottonarikee | K- | | |
| கோட்டாறு | Kottiara | K- | | |
| குமரி | Komaria | K- | | |
| | Komar | | | |
| | Komarci | | | |
| பஃறுளி ? | Paralia | P- | | |
| கரை | Kareoi | K- | | |
| பெருங்கரை | Perinkarei | P- | -nk- | |

(அடுத்த பக்கம்)

வாழ்ந்த வடமொழியறிஞர் குமாரிலபட்டர் 'சோறு' என்ற தமிழ்ச்சொல்லை 'cōr' எனக் குறித்துள்ளார். இதுவும் உயிர்ப்பு முதலையே வற்புறுத்தும்.[201] பல்லவர், சோழர், பாண்டியர் காலத்து வடமொழிக் கல்வெட்டுக்களும் நெடுக அன்றுமுதல் இன்றுவரை உயிர்ப்பு முதல் கருத்தினையே வற்புறுத்துகின்றன.

---

| | | | | |
|---|---|---|---|---|
| பொதிகை | Beettigo | B- | | -g- |
| கொல்கை | Kolchoi | K- | -lch- | |
| கோடி | Kooru | K- | | |
| கோடி? | Koolis | K- | | |
| மதுரை | Modoura | | | -d- |
| புதுப்பட்டணம்? | Poudupatana | P- | -p- | -d- |

இத்தமிழ்ச்சொற்களல்லாது கிரேக்கச் செலவினர் தமிழகத்தில் வழங்கிய வடசொற்களையும் வடமொழியில் வழங்கிய தமிழ்ச்சொற்கள் சிலவற்றையும் குறித்துள்ளனர். கால்டுவெல் இச்சொற்களைத் தந்திருந்தாலும் வல்லின மெல்லின ஆராய்ச்சிக்கு இவற்றைப் பயன்படுத்தவில்லை

201. யூலி பிளாஹ் அவர்கள், குமாரிலபட்டர் தன் தந்த்ரவார்த்திகாவில் எடுத்துக்காட்டும் தமிழ்ச்சொற்களை அடிப்படையாகக் கொண்டு உயிர்ப்பொலி குரலொலி வழக்குக்களை ஆராய்கிறார். இது 196-ஆம் அடிக்குறிப்பில் சுட்டப்பட்டது. குமாரிலபட்டர் கி.பி. ஏழாம்நூற்றாண்டைச் சார்ந்தவர். அவர் தன் தந்த்ரவார்த்திகா என்னும் நூலில் ஐந்து தமிழ்ச்சொற்களைத் தந்து அவை திராவிடச் சொற்கள் எனச் சுட்டிக்காட்டி அவற்றின் சொற்பொருள் இயல்பினை ஆராய்கிறார். அவ்வைந்து தமிழ்ச்சொற்களும் coor (சோறு), atar (அதர் = வழி), paap (பாப் < பாம்பு) maal (மால் < மாள் < மகள்), vair (வயிறு) என்பவை. இவற்றுள் முதற்சொல்லும் மூன்றும்சொல்லும்

வலி முன்னும் பின்னும் இரட்டுகிறபோதும் தமிழில் தடையெழுத்துக்கள் உயிர்ப்பொலியே பெற்றிருந்தன என்பதை மேல்தரப்பட்ட எல்லாச் சான்றுகளும் தெளிவாக்குகின்றன.

தமிழில் பண்டை வரலாறு இவ்வாறிருக்க இன்று வடதமிழகத்தில் சொல்முதலில் குரல்தடையொலிகள் இட்டுப்பேசுதல் பரவி வருகிறது. இது அங்குமிங்குமாகக் காணப்படும் ஒரு போக்குத்தானே ஒழிய ஒரு விதியாக அமையவில்லை. இந்நிலைக்கு வடதமிழகத்தைச் சுற்றிச் சொல்முதலில் குரல்தடையொலி கொண்டு பேசும் தெலுங்கு கன்னட மொழிகள் வழங்குதல் ஒரு காரணமாகலாம்.

---

தமிழ்ச்சொல் முதலில் உயிர்ப்புத்தடையொலிகள் வழங்குவதைச் சுட்டுகின்றன. இரண்டாம் சொல் உயிரிடை உயிர்ப்புத் தடையொலியே வழங்குவதைச் சுட்டுகிறது. முதற்சொல்லும் ஐந்தாம் சொல்லும் வல்லின றகரம் r என்னும் ஒலி என்பதைச் சுட்டுகின்றன. இக்கருத்துக்களே இந்த ஆராய்ச்சிக்குத் தேவைப்படுகின்றன. இவ்வியலில் அடுத்தடுத்தும் இக்கருத்துகள் சுட்டிப்பேசப்படும். paap என்பது வேற்றுமைக்குத்திரிந்த வடிவம்.

ஆனால் குமாரிலபட்டர் தந்ததாக nade (நடை) என்ற சொல்லைக் கால்டுவெல் சுட்டிக் காட்டுகிறார். (CGDL., P. 133). இச்சொல்லில் உயிரிடைக் குரலொலி இருப்பதைக் காணுகிறோம்! எங்கே தவறு என்பது தெரியவில்லை.

குமாரிலபட்டர் தமிழ்மொழியை மிலேச்சர் மொழி என வழங்கியதைக் கால்டுவெல் எடுத்துக் காட்டுகிறார்! (CGDL., P. 116)

எ. கா. :-

| | | | |
|---|---|---|---|
| *guḍisai* | (குடிசை) | *daaḍi* | (தாடி) |
| *guṇḍu* | (குண்டு) | *diṭṭam* | (திட்டம்) |
| *guuṇḍu* | (கூண்டு) | *balli* | (பல்லி) |
| *gaamay* | (காயம்) | *dondi* | (தொந்தி) |
| *gummi* | (கும்மி) | *bondu* | (பொந்து) |
| | | *beeḍi* | (பேடி) |

ஒரு சிக்கல். தமிழ் என்ற தமிழ்மொழிக்குரிய சொல்லை வடமொழியாளர் Draaviḍa என்றே பண்டுதொட்டு ஆண்டு வந்துள்ளனர். சமண, பவுத்த நூல்களில் மிகப்பழங் காலத்திலேயே தமிழ் மொழிக்குரிய எழுத்துக்களை (நெடுங்கணக்கை) Draaviḍii என்றும் Daamiilii என்றும் அன்னோர் வழங்கி வந்துள்ளனர். கிரேக்க வழிச்செலவினரும் தமிழகத்தை Damirice எனவும் Dimirice எனவும் தம் குறிப்புக்களில் குறித்து வைத்துள்ளனர். இங்கெல்லாம் குரலொலித் தகரத்தையே (D-) மொழி முதலில் காணுகிறோம். இந்நிலை மொழி முதலில் உயிர்ப்பொலியே வழங்கியது என்னும் கொள்கைக்கு மாறாக இருக்கிறது. அவ்வாறே 'பொதியில்' என்னும் தமிழ்ச் சொல்லைக் கிரேக்க வழிச்செலவினர் Beettigo எனக் குறித்துள்ளனர். இதுவும் ஒரு விளங்காத புதிரே.[202] இந்திய மொழியியல் பேரறிஞர் சுநீதி குமார் சட்டர்ஜி மற்றொரு கருத்தைப் பெரிதாக வற்புறுத்துகின்றனர். அது இது. 'கன்னட மொழியியலறிஞர் **கிட்டல்,** இன்றைய வடமொழி தென்மொழி

---

**202. Damirice, Beettigo ஆகியவை ஒருகால் வட மொழியின் செல்வாக்கால் குரலொலி பெற்றிருக்கலாம். வடமொழியாளரிடமிருந்து கிரேக்கர் கேட்டிருக்கலாம்.**

யறிஞர் பரோ முதலானோர் திராவிட மொழிகளிலிருந்து வடமொழிக்குக் கடன் சென்றனவாக நூற்றுக்கணக்கான சொற்களை எடுத்துக் காட்டியிருக்கின்றனர். அவற்றுள் பலப்பல, குரல் தடையொலிகளைச் சொல்முதலில் பெற்றனவாக விளங்குகின்றன. இத்தகைய சொற்களைப் பொறுத்தவரையில் திராவிட மொழிகளிலேயே அவை குரல்தடையொலிகளைப் பெற்றிருக்க வேண்டும் எனக் கொள்வதே ஏற்புடையது. இந்தச் சொற்களெல்லாம் ஏறத்தாழ கி.மு. 1000 அளவில் வடமொழிக்குச் சென்றன. ஆகவே அந்தக்காலத்தில் திராவிடமொழிகள் சொல்முதலில் குரல்தடையொலிகளை வழங்கின எனல் வேண்டும். தமிழ் இந்த நிலையினைக் கி.பி. முதல் நூற்றாண்டு வரையாவது போற்றி வந்திருக்கவேண்டும். மேலே காட்டப்பட்ட கிரேக்க வழிச்செலவினர் குறிப்புக்களும் சமண பவுத்த நூற்குறிப்புக்களும் இதற்குச் சான்று தருகின்றன.' இவ்வாறு அறிஞர் சட்டர்ஜி வாதிடுகிறார். ஆனால் தமிழகத்தில் கிடைத்த கி.மு. குகைக்கல்வெட்டுக்களும், திராவிட மொழிகளின் ஒப்புமையாராய்ச்சியும் இம்முடிவிற்கு எதிராகின்றன. குகைக் கல்வெட்டுக்களில் சொல்முதல் குரல்தடையொலிகளைக் காண முடியவில்லை; குரல்தடையொலியினைச் சொல்முதலில் பெற்று இன்று பல திராவிட மொழிகளிலும் வழங்கிவரும் ஒருசொல்கூட அகப்படவில்லை!

### 2. 21. 4. குரல்தடையொலிகள்

இவை இன்றைத் தமிழில் மெலிப்பின் ஒலிக்கின்றன. கால்டுவெல் தந்த கிரேக்கத்தமிழ்ச் சொற்களில் நாலிடங்களில் மெலிப்பின் வலி அமைந்துள்ளது. அவற்றுள் மூன்றிடங்களில் குரல்தடையொலியும், ஓரிடத்தில் உயிர்ப்

புத்தடையொலியும் அமைந்துள்ளன. அவ்வோரிடம் "பெருங்கரை" என்ற சொல்லில் ஆகும். இப்பெருங்கரை என்ற சொல் இருசொற்களால் ஆகிய ஒரு தொகை. கரை, தனியே வழங்குகின்றபோது ககரம் உயிர்ப்புத் தடையொலியே. இந்நிலையே இச்சொல் பெருங் - என்னும் பண்படியை அடுத்து வருகின்றபோதும் அமைந்துள்ளது. இரண்டிற்கும் இடையில் விட்டிசைப்பு இருத்தல் வேண்டும். இவ்விட்டிசைப்பே இத்தொகையில் ககரம் உயிர்ப்பொலி பெறுதற்குக் காரணம் போலும். மற்ற மூன்றிடங்களிலும் (அக்கிரேக்கத் தமிழ்ச் சொற்களில்) மெலிப்பின் வலி குரலொலியே. ஆகவே சங்க காலத்தில் மெலிப்பின் தடையெழுத்துக்கள் குரலொலியே பெற்றிருந்தன எனக் கொள்ள வேண்டும். ஆனல் மற்ற சான்றுகள் இவ்வாறு கொள்ளத் தடையாகின்றன.

கி.மு. மூன்று, இரண்டாம் நூற்றூண்டுகளில் தமிழகத்தின் சில குன்றுகளில் சமண சாக்கியத் துறவியர்க்குக் குகைப்பள்ளிகள் அமைக்கப்பட்டன. இவற்றை அமைத்த அரசரும் செல்வரும் அவ்வறத்தை அப்பள்ளிக் கற்சுவர்களில் பொறித்து வைத்தனர். இக்கல்வெட்டுக்கள் ஏறத்தாழ எழுபது கிடைத்துள்ளன.[203] அவற்றின் மொழி வடமொழிப் பாகதம் கலந்த தமிழ் என்றும் தனித்தமிழே என்றும் அறிஞர்கள் பலவாறு கருது-

---

203. இக்கல்வெட்டுக்களைப் பற்றிப் பல அறிஞர்கள் ஆய்ந்து கருத்துக்கள் வெளியிட்டுள்ளனர் அவற்றுள் பேர். தெ. பொ. மீ. (HTL., பக் 40 – 50), டாக்டர் கமில் சுவலபில் (TC. Vol. XII. 1, பக். 18 - 50), ஐராவதம் மகாதேவன் (TBISA). ஆகியோர் கருத்துக்கள் குறிப்பிடத்தக்கன.

கின்றனர். இக்கல்வெட்டுக்கள் எல்லாம் திராவிடப்பிராமி என வேறுபடுத்தி வழங்கப்படும் நெடுங்கணக்கில் அமைந்தவை. இத்திராவிடப்பிராமி தமிழ்மொழியினை எழுதுவதற்கு என வடநாட்டுப்பிராமியிலிருந்து கூட்டியும் குறைத்தும் அமைக்கப்பட்டது என்பர் அறிஞர். அவ் வடநாட்டுப் பிராமியில் உயிர்ப்பொலி குரலொலி வேறுபாடுகள் தெளிவாக அமைந்துள்ளன. ஆனால் திராவிடப்பிராமியில் எழுதப்பட்ட எந்தத் தமிழ்ச்சொல் லிலும் ஒருகுரல் தடையொலி கூடப் பயன்படுத்தப் படவில்லை; எல்லாச் சூழல்களிலும் தடையெழுத்துக்கள் உயிர்ப்பொலிகளே! இதனால் சங்க காலத்தில் தடை யெழுத்துக்களுக்குக் குரலொலிகளோ உரசொலிகளோ இல்லை என்பது தெளிவுபடுகிறது.

பல்லவர் காலத்திலும் சோழப் பேரரசர் காலத்தி லும் வெளியிடப்பட்ட வடமொழிக் கல்வெட்டுக்களில் கிரந்த எழுத்துக்களால் எழுதப்பட்ட தமிழ்ப்பெயர்கள் மிகப்பல காணப்படுகின்றன. அக்கிரந்த நெடுங்கணக்கில் உயிர்ப்பொலி குரலொலி வேறுபாடுகள் உண்டு. ஆனாலும் அந்தத் தமிழ்ப் பெயர்களில் வழங்கும் தடை யெழுத்துக்கள் எல்லாச் சூழல்களிலும் பெரும்பாலும் உயிர்ப்பொலிகளாகவே எழுதப்பட்டுள்ளன. சோழப் பேரரசர்கள் காலத்திற்குப்பின் வெளியிடப்பட்ட வட மொழிக் கல்வெட்டுக்களில் இத்தகைய தமிழ்ப்பெயர்கள் பெரும்பாலும் குரலொலி இட்டு எழுதப்பட்டுள்ளன. ஆகவே கி.பி. முதலாயிரம் முடிகின்ற வரையில் தமிழ் மொழியில் தடையெழுத்துக்களுக்கு எல்லாச் சூழல் களிலும் உயிர்ப்பொலிகள் மட்டுமே இருந்தன எனக்

கொள்ள வேண்டும், அதற்குப் பின்னர் அவ்வுயிர்ப் பொலிகளே மெலிப்பின் குரலொலி பெற்றன எனலாம். 204 அன்றுமுதல் இன்றுவரை மெலிப்பின் குரல்தடையொலிகளே வழங்கி வருகின்றன.

---

204. பல்லவர் காலத்துக் கல்வெட்டு மொழியை ஆராய்ந்த திருமதி ஐயக்குமாரியவர்கள் கால்டுவெலின் வல்லொலி மெல்லொலி மாற்ற விதியின் வன்மை மென்மையினையும் ஆராய்கிறார்கள். தமிழில் குரல்தடையொலிகளின் தோற்றம் வழக்கு ஆகியவற்றைச் சான்றுகளோடு விளக்குகிறார்கள். அவர்கள் கருத்து இங்குக் கருதத்தக்கது :

"...... even in 673 A. D Dr. Caldwell's law in a sense seems to apply in Telugu only for a few words, and it cannot be a general rule for the 7th centuary where there was only a free variation in certain places." (P 89)

"In the inscriptions of the later Pallavas, the plosives are written as voiced after the nasals in most of the instances.

As far as the ninth centuary inscriptions are concerned one finds that this law is not uniformly applicable though there is a frequent tendency to change according to this law ... .. In the inscriptions of the succeeding centuaries also this law is not found to work uniformly in the language." (P. 99)

"Pirinta, *vantaṭi paṇinta*, *erintu*
the plosive is voiceless after the nasal, thus proving the law to be not well-established even in the 11th centuary A.D.

[ P. T. O. ]

So we can conclude that this so-called 'Law of convertibility of Surds and Sonants' operates in a few examples and not of regular phonetic change and hence it is not a phonetic law.

But one may argue that these are the mistakes of the scribes. Again it may be argued that the Tamil system of writing has influenced the scribes of these inscriptions. Allowing for such mistakes, one finds a rise in the frequency of instances following the law, first with voicing of the velar plosives after the nasals, later the voicing of other plosives, still later the voicing of the intervocal plosives. These tendencies might have been much more pronounced in some areas than in others and these starting as dialectic variations perhaps spread to other parts of the country. The statistical predominance is the important thing and this problem must be pursued from the point of the dialectic differences traceable in these inscriptions." (P. 102), —SLTI.

பல்லவர் சோழர் காலங்களில் வெளியிடப்பட்ட கல்வெட்டுக்கள் பல வடமொழிக்கிரந்த எழுத்துக்களில் உள்ளன. அந்தக் கல்வெட்டுக்களில் வழங்கப்பட்ட தமிழ்ச் சொற்களும் தமிழ்ப் பெயர்களும் அந்தக் காலங்களில் தமிழில் வல்லெழுத்துக்களுக்கு எல்லாச்சூழல்களிலும் உயிர்ப்புத் தடையொலி மட்டுமே இருந்திருக்க வேண்டும் என்பதைத் தெளிவுபடுத்துகின்றன. ஒரு சில எடுத்துக் காட்டுகள் காண்க:

*aimpaetteḷaṉa caṉannooṟṟa cantirananti*

*aacirikaṟ niciitikai*

(திருநாதர் குன்றுக்கல்வெட்டு, கி. பி 5-ஆம் நூற்றுண்டு)

(அடுத்த பக்கம்)

*kiiḷ veempanaaṭu; kuṭikaaval; vaṭakaḷa vaḷi; ceṅkuṭi;* (சின்னமனூர்ச் செப்பேடு)
*kooccenkaṇaan; nallaṭi koon; Ariñcika* (அன்பில் செப்பேடு)
*kuuṭal sangama; tontaaviḷakku nandaa viḷakku; uuttukaaṭu; kaantaluurcchaalai; Nuḷampapaaṭiun taṭikaipaaṭiyum.*
(கன்னியாகுமரிக் கல்வெட்டு கி. பி. 11-ஆம் நூற்றுண்டு)

கி. பி. ஏழாம் நூற்றண்டுப் பல்லவர்க்குரிய வல்லம் கல்வெட்டு Gunabhara, Maheendra என்னும் வடசொற்களை முறையே Kunapara Mayeentira எனத் தருகின்றது. இங்கு வடமொழி வல்லெழுத்துக்கள் எவ்வாறு தமிழ் ஒலிகளுக்கு ஏற்பத் திரிந்து எல்லாச் சூழல்களிலும் உயிர்ப்புத் தடையொலிகளாக வழங்கின என்பதை அறிய முடிகிறது.

இவ்வாறு பிற சான்றுகள் ஒன்று கூறக் கிரேக்கவழித் தமிழ்ச் சொற்கள் வேறு கூறுதல் சிந்திக்கத்தக்கது. கிரேக்கவழிச் சான்றுகள் ஓரளவு பிற சான்றுகளோடு ஒத்தும் ஓரளவு ஒவ்வாதும் செல்லுதலேயுமே காணுகின்றேம். ஒருமொழி பிற மொழியிலிருந்து சொற்களை ஏற்கின்றபோது அவ்வவ்வாறே ஏற்றுப்போற்றுவதில்லை; தன் எழுத்தியல் அமைப்புக்கு ஏற்பப் பிறமொழிச் சொற்களை அது மாற்றுதல் இயல்பு அவ்வாறு கிரேக்க மொழியின் எழுத்தியலமைப்பு எந்த அளவு தமிழ்ச் சொற்களைப் பாதித்துள்ளது என்பது விளக்கமாக ஆராயப்பட வேண்டும். அந்தப் பாதிப்பு இவ்வேறுபாட்டுக்குக் காரணம் ஆகலாம். சொற்கள் மொழி மாறுதலில் சில மரபுகளும் இருக்கலாம். அதுவும் இதற்குக் காரணம் ஆகலாம்.

(அடுத்த பக்கம்)

### 2. 21. 5. உரைவொலிகள்

உரைவொலிகள் இன்றைய பேச்சில் உயிரிடையும் இடைப்பின்னும் வழங்குகின்றன. இந்நிலை தமிழ் எழுத்தியல் வரலாற்றில் என்று முதல் நிகழ்ந்து வருகிறது?

முன்னர்க் காட்டிய கிரேக்கத் தமிழ்ச் சொற்களில் உயிரிடைத் தடையெழுத்துக்கள் உரைவொலி அல்லாது குரலொலி பெற்றிருப்பதைக் காணலாம். (அடிக்குறிப்பு 200 காண்க) கி. மு. குகைக் கல்வெட்டுக்களிலும் பல்லவர் சோழப் பேரரசர் கால வடமொழிக் கல்வெட்டுக்களிலும் குமாரிலபட்டர் எடுத்துக் காட்டுக்களிலும் (atar = அதர் 'வழி' என்னும் சொல்) காணப்படும் தமிழ்ச் சொற்களில் இச்சூழல்களில் தடையெழுத்துக்கள் உயிர்ப்புத் தடையொலியே பெற்றிருத்தலைக் காணுகிறோம். ஆதலால் பழந்தமிழின் நிலை இன்றைய பேச்சுத் தமிழிலிருந்து வேறுபட்டது என்பது தெளிவு.

பழந்தமிழில் உயிரிடைச்சகரம் குரலொலி யகரமாகவும் (எ. கா. தேசம் > தேயம்). உயிரிடைப் பகரம் குரலொலி வகரமாகவும் (எ. கா. தபு > தவறு) திரிந்ததைக் காணுகிறோம். இத்திரிபுகள் சகரமும் பகரமும் ஒருபோது குரல் தடையொலிகளாக வழங்கிப் பின்னர்த்தான் குரலுரைவொலிகளாக மாறின என்பதைச் சுட்டுகின்றன. உயிரிடைக் ககரம் சில பழந்தமிழ்ச் சொற்களில் மறைந்துவிட்டது. (எ. கா. மான் < மகன், சேரமான்; பால் < பகல்,

---

**திரு. சுநீதி குமார் சட்டர்ஜி அவர்கள் சகரம் பற்றிக் குறிப்பிடுவது இங்கு மனங் கொள்ளத் தக்கது. அடிக் குறிப்பு 208 காண்க.**

ஒன்றன்பால்; ஆய் < ஆகி). உயிரிடை றகரம் ரகரமானது ஒருகால் இத்திரிபுகளும், தடையெழுத்துக்கள் இச்சூழல் களில் உரைவொலியாக இருந்திருத்தல் வேண்டும் என்பதை உணர்த்தும் குறிப்புக்களாகலாம். ஆனால் மேல் சுட்டப்பட்ட கல்வெட்டுச் சான்றுகள் இவ்வாறு கருது வதற்கு அரணாகவில்லை.

எவ்வாறாயினும் உயிரிடை இடைப்பின் தடை யெழுத்துக்கள் பின்னர் உரைவொலிகள் ஆயின. அக் காலம் 18 ஆம் நூற்றாண்டாகலாம் எனத் தோன்றுகிறது. அதற்கு முன்னர்த் தடையெழுத்துக்கள் அச்சூழல்களில் உரைவொலிகள் பெற்றிருந்தமைக்கு வேறு சான்றுகள் இல்லை.

## 2.21.6. முடிவுகள்

இதுகாறும் ஆராய்ந்தவற்றால் நிலைபெறும் கருத்துக்கள்:

1 தமிழ்த் தடையெழுத்துக்கள் பண்டுதொட்டுக் கி.பி. முதலாயிரம் வரை எல்லாச் சூழல்களிலும் உயிர்ப் பொலிகள் மட்டுமே பெற்றிருந்தன. இக் கருத்தினைப் பழந்தமிழகக் குகைக் கல்வெட்டுத் தமிழ்ச் சொற்களும் குமாரிலபட்டர் எடுத்துக் காட்டிய தமிழ்ச் சொற்களும் பல்லவர் சோழப்பேரரசர்கள் காலத்து வடமொழிக்கிரந்த எழுத்தில் எழுதப்பட்ட தமிழ்ச்சொற்களும் வலியுறுத்து கின்றன.

2 கி. பி. முதலாயிரத்துக்குப் பின்னர்த் தமிழ்த் தடையெழுத்துக்கள் சூழல்களுக்கு ஏற்ப உயிர்ப் பொலிகளும், குரலொலிகளும், உரைவொலிகளும் பெற்றன.

## 2. 21. 7. இலக்கண அரண்

தொல்காப்பியரும் பிற்காலத்து வந்த நன்னூலார் போன்ற இலக்கண ஆசிரியர்களும் தமிழ் எழுத்துக்களை விரிவாக ஆராய்ந்துள்ளனர். குற்றியலுகரம், ஆய்தம் போன்ற சார்பெழுத்துக்களில் அமைந்த நுண்ணிய வேறுபாடுகளையும் கண்டு கூறியிருக்கின்றனர். அத்தகையோரும் தடையெழுத்துக்களுக்குச் சூழல்களுக்கேற்ப வேறுவேறொலிகள் உண்டு எனக் கூறவேயில்லை. தடையெழுத்துக்களுக்கு இவ்வொலிவேறுபாடுகள் இருந்திருக்குமாயின் இவ்விலக்கண ஆசிரியர்களுக்கு அவை புலப்படாமல் போயிருக்க மாட்டா. இவ்விலக்கண ஆசிரியர்கள் அவை பற்றி ஒன்றும் கூறாமை மேற்கண்ட கருத்துக்களுக்கு அரணாகின்றன.

தொல்காப்பியர் காலத்திற்கு முன்பிருந்தே தமிழில் வல்லெழுத்துக்கள் ஆறு எனக் கொள்ளப்பட்டு வந்திருக்கின்றன. தொல்காப்பியருக்கு முன்னர்த் தமிழெழுத்துக்கள் –தமிழ்நெடுங்கணக்கு– வகுக்கப்பெற்றிருக்க வேண்டும் தொல்காப்பியருக்கும் தொல்காப்பியர்காலத்து அறிஞர்களுக்கும்கூட இவ்வகுப்பில் பங்கிருந்திருக்கலாம். தமிழெழுத்துக்கள் வகுக்கப்பெற்ற அக்காலத்தில் குரல் தடையொலிகளும் உரைவொலிகளும் தமிழ்ப்பேச்சில் கேட்கப்பட்டிருக்குமானால் தமிழ் நெடுங்கணக்கில் அவை இடம் பெற்றிருக்கும். அவை அவ்வாறு இடம் பெறாமையால் தடையெழுத்துக்களுக்கு வேறு ஒலிகள் இருந்ததில்லை என்பதே பொருள். சங்ககாலத்திலும் அதனையடுத்தும் பிற மொழிகளுக்குரிய பிராமி, கிரந்தம் போன்ற எழுத்துக்கள் தமிழகத்தில் வழங்கின. தமிழ்

மொழியினை எழுதுவதற்கும் இவை பயன்படுத்தப்பட்டன. கி.மு. குகைக் கல்வெட்டுக்கள் இதற்குச் சான்று. இப்பிற மொழி நெடுங்கணக்கில் குரல்தடையொலிகளும் உரை வொலிகளும் இருந்தன. இருந்தும் தமிழ் நெடுங்கணக்கில் தமிழர் அவற்றைச் சேர்க்கவில்லை; சேர்க்க வேண்டும் என்று அன்று ஒருவர்கூட முயன்றதாகத் தெரியவில்லை. இவ்வாறாகத் தமிழ் நெடுங்கணக்கில் நெடுங்காலமாக ஆறு வல்லெழுத்துக்களே இடம்பெற்றுவந்தமை - இன்றில்லாமல் போனாலும்- பழங்காலத்தில் வல்லெழுத்துக்களுக்கு ஆறு ஒலிகளே இருந்தன என்பதை வலியுறுத்தும்.

கி.பி. 13-ஆம் நூற்றாண்டில் தோன்றிய நன்னூல் "ஐ வருக்கத்து இடையில் மூன்றும் அவ்வம் முதலும்" (நன். 147) என விதி வகுத்திருக்கிறது. வடமொழிச்சொற்கள் தமிழுக்கு வருகின்றபோது வடமொழி வல்லெழுத்துக்கள் தமிழில் அடையும் திரிபுகளை இந்நூற்பா குறிக்கிறது. வடமொழியில் உள்ள ஒவ்வொரு வல்லெழுத்து வரிசையிலும் அமைந்த நந்நான்கும் உயிர்ப்பொலி வல்லெழுத்துக்களாகவே தமிழில் திரியும் என்பதே இங்குக் குறிக்கப்படும் விதி. வடமொழியில் வல்லெழுத்து வரிசைகளில் முதலெழுத்து உயிர்ப்புத்தடை; இரண்டாவது உயிர்ப்புத் தடையுரைவு; மூன்றாவது குரல்தடை; நான்காவது குரல் தடையுரைவு. இவையெல்லாம் தமிழில் முதலாவதாகிய உயிர்ப்புத்தடை யெழுத்தாகவே வழங்கும் என்பதே இவ்விதியின் விளக்கம். இவ்விதியால் நன்னூலின் காலமாகிய 13-ஆம் நூற்றாண்டுவரை எல்லாச்சூழல்களிலும் உயிர்ப்புத்தடையொலிகளே வழங்கிவந்தன எனக் கொள்ள முடியும். பவணந்தியார் போன்ற இலக்கணப் பேராசிரியர்கள் தேவையிருந்திருக்குமானல் தமிழுக்குக் குரல்

தடையொலியெழுத்துக்களைப் படைக்க முயன்றிருக்கலாம். அவர்கள் அவ்வாறு முயலாமை உயிர்ப்புத் தடையொலி ஒன்றே அன்று உண்டு என்ற கருத்தை அரண் செய்கின்றது.

உயிர்ப்பொலி, குரலொலி வேறுபாடுகள் பண்டு தொட்டே திராவிடமொழிகளில் அமைந்துள்ளன என்ற கால்டுவெலின் கருத்து தவறுதல் தெளிவு. அவர் கூற்று இன்றைய தமிழிற்கும் மற்ற இன்றைய திராவிட மொழிகளுக்கும் மட்டிலுமே ஏற்புடையது. தெலுங்கு கன்னடம் போன்ற மொழிகளில் குரல்தடையொலிகளும், உயிர்ப்புத் தடையொலிகளும் இன்று தனித் தனியே எழுத்துக்களே. ஆனாலும் தொன்முதல் திராவிடத் திற்கு எழுத்துக்களை அமைத்த திராவிட மொழியியலறிஞர்கள் அதற்கு உயிர்ப்புத் தடையொலிகளை மட்டிலுமே அமைத்திருக்கின்றனர்; குரல் தடையொலிகள் தொன்முதல் திராவிடத்தில் இருந்திருக்க மாட்டா என்பது அவ்வறிஞர்கள் கருத்துப்போலும்.[205] அதனால் பழந்தமிழும் இடைக்காலத் தமிழும் தொன்முதல் திராவிடத்தின் பண்பையே போற்றி வந்தன எனலாம். மற்ற திராவிடமொழிகள் தொன்முதல் திராவிடத்திலிருந்து பிரிந்து தனிவாழ்வு பெற்றபின் உயிர்ப்புத்தடையொலிகளிலிருந்து குரல்தடையொலிகளைக் காலப்போக்கில் அமைத்துக் கொண்டன எனலாம். தெலுங்கும் கன்னடமும் வடமொழிச் சொற்கள் மிகப்பலவற்றைத் தற்பவமாகவே கொண்டு தேவநாகரி எழுத்து முறையையும் பின்பற்றிப் பிற்காலத்தில் உயிர்ப்புத்தடையொலிகளுக்கும் குரல் தடையொலிகளுக்கும் தனித்தனியே வரிவடிவங்களையும்

---

205. Dravidian Comparative Phonology-A Sketch by M.B Emeneau.

வகுத்துக்கொண்டன. இம்மொழிகளில் குரல்தடையொலிகளும் உயிர்ப்புத்தடையொலிகளும் தனித்தனி எழுத்துக்களே. ஆனால் இன்றைத்தமிழில் இக்குரல்தடையொலிகளும் உயிர்ப்புத் தடையொலிகளும் ஓரெழுத்தின் சூழல் வேறுபாட்டொலிகளே.

## 2. 22. சகரம்

தமிழ்ச் சகரம் வல்லெழுத்து எனத் தமிழிலக்கண வாசிரியர்களால் வகுக்கப்பட்டுள்ளது. ஆனால் க, ட, த, ப போன்று இது தடையொலி அல்ல என்பதும், தடையுரை வொலியே என்பதும் மேலே காட்டப்பட்டன. (2.2. காண்க.) இந்நிலை வல்லெழுத்துக்களில் சகரம் பெற்ற ஒரு வேறுபாடு; அது மட்டும் அல்ல; இதனிடம் வேறொரு வேறுபாடும் உண்டு. மொழிமுதலில் வல்லெழுத்துக்கள் தடையொலிகளாகவே ஒலிக்கச் சகரம் உரைவொலியாக ஒலிக்கிறது. இம்மொழிமுதல் உரைவொலியின் வரலாறு ஆராயத்தக்கது. கல்லாப் பொதுமக்கள் பேச்சிலும், தென்தமிழகத்தில், எல்லோருடைய பேச்சிலும், ஈழநாட்டுத் தமிழ்ரிடத்திலும் இம்மொழி முதல் சகரம் தடையுரைவொலியே பெறுகிறது என்பது மேலே உரைக்கப்பட்டது. அறிஞர் கால்டுவெலும் இவ்வாறே கண்டு கூறியுள்ளார். சில நூற்றாண்டுகளுக்கு முன் தமிழகம் வந்த போர்த்துகீசியர் சோழமண்டலம் என்ற சொல்லை **choramandel** எனக் குறித்துள்ளனர்.[205] ஏறத்தாழ முந்நூறாண்டுகளுக்குமுன் வாழ்ந்த ஐரோப்பியத் தமிழ்த்தொண்டர் சீகன்பால்கு ஐயர், சூத்ரா என்ற சொல்லை **Tshuddira** எனக் குறித்துவைத்துள்ளர்.[205] நூறாண்டு-

205. CGDL. சகரம் பற்றிய பகுதி காண்க; பக்.140-141

களுக்கு முன் தென்தமிழகத்தில் வாழ்ந்த போப்பையர் சகரத்தைத் தடையுரைவொலியாகவே குறித்து வைத்துள்ளார்.[206] இவை, அவர்கள் தம் காதால் கேட்டவாறே குறித்தனவாகலாம். கி. பி. ஏழாம் நூற்றாண்டினரான வடமொழியறிஞர் குமாரிலபட்டர், சோறு என்னும் தமிழ்ச் சொல்லை வடமொழி வரிவடிவில் cōr எனவே எழுதி வைத்துள்ளார். தெலுங்கிலும், இடைக்காலத் தமிழிலிருந்து கிளைத்த மலையாளத்திலும் மொழிமுதற்சகரம் உயிர்ப்புத் தடையுரைவொலியாகவே ஒலிக்கவும் எழுதவும் படுகிறது. தமிழ்ச்சகர முதற்சொற்கள் பல கன்னடத்தில் ககரமுதற் சொற்களாக வழங்குகின்றன.

எ. கா. : செம்பு(த) ... கெம்பு(க) [207]

---

206. 'ச் = c is not a sibilant, but a very soft palatal: e.g. மாசு (maacu), a blemish. 1. But ச்ச = c c a (c being pronounced as ch in church) : e.g. அச்சம் (accam), fear. 2. ச் after ட் or ற் = c : e.g. ஆட்சி (aadci), possesion; முயற்சி (muyarci), effort. 3. ச் after ஞ் = j : e.g. அஞ்சு (anju), fear thou ; five., — HBODTL., P. 9.

207. ஆனால் தமிழகம் வந்த கிரேக்கச் செலவினர் சோழ என்னும் சொல்லை S இட்டே குறித்திருக்கின்றனர். இப்புதிருக்கு விடை இதுதான்:

" The use of S for Tamil C in Greek and Latin transcriptions of a few of what may be described as 'Ancient Tamil' names of places (e.g. Sornatos = *Cooz-naatu, Sa'lour = ?Caaliyuur, Mou'zlris = Mucirl or Mucur'l pronounced *Mujir'i ?) is no indication or proof of the occurrence of an S pronunciation for C

(அடுத்த பக்கம்)

கன்னடத்தில் பல சொற்களின் முதற்சகரம் உரைவொலியாக ஒலிக்கிறது; ஆனாலும் மேலும் பல சொற்களில் தடையுரைவொலியாகவே ஒலிக்கிறது. இவ்வாறாகத் தமிழின் அகச்சான்றுகளும் புறச்சான்றுகளும் மொழிமுதற் சகரத்தின் ஒலி தொன்முதல் திராவிடம் தொடங்கிப் பழந்தமிழிலும் இடைக்காலத் தமிழிலும் (இன்றும் கூட) தடையுரைவொலி என்பதையே குறிக்கும். ஆனால் சென்ற நூற்றாண்டில் அறிஞர் கால்டுவெல் கண்டவாறும் இந்த நூற்றாண்டில் நாம் காணுகின்றவாறும் கற்றோர் பேச்சில் மட்டும் மொழிமுதற்சகரம் உயிர்ப்புரையொலியாக (S கரமாக)த் திரிந்து ஒலிக்கிறது எனலாம்.[208]

---

**in 'Ancient Tamil' of the early centuaries of the Christian era, as the Indian unvoiced palatal stop is represented by S in Greek and rarely by ti." — S.K. Chatterjee, OTATPD., TC. V, P. 158**

**208. "In the Southern group Tamil has only c- and no s-. This was originally an affricate corresponding to Sanskrit c-, but is nowadays a kind of sibilant most nearly corresponding to Sanskrit s-=(sh), and it is often transliterated so. Malayalam, like Tamil, has only c- and has preserved the affricate pronunciation. Kanarese has both c- and s-, but the latter is the more common...... Telugu also has both c- and s-...... in Telugu c- is the usual and s- the exceptional treatment." —Prof. T. Burrow in his "The Loss Of Initial C/S in South Dravidian," Dravidian Studies, VI, BSAOS, XII (1947).** **(அடுத்த பக்கம்)**

இதுவல்லாது மொழிமுதற் சகரத்துக்கு வேறொரு வரலாறும் உண்டு. தமிழில் மொழிமுதற்சகரம் பல சொற்களில் கெட்டுள்ளது. சகரம் கெட்ட சொற்களும் கெடாத சொற்களும் ஆகிய இருவகைச் சொற்களுமே தமிழில் வழங்குகின்றன :

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சமை | : | அமை | சனை | : | இனை |
| செல்லல் | : | அல்லல் | சிற | : | இற |
| சளி | : | அளி | சிறகு | : | இறகு |
| சரி | : | அருவி | சிப்பி | : | இப்பி |
| சாய் | : | ஆய் | சுழல் | : | உழல் |
| சான்றோர் | : | ஆன்றோர் | சுருள் | : | உருள் |
| சிமிழ் | : | இமிழ் | சுளுக்கு | : | உளுக்கு |
| சிலிர் | : | இலிர் | | | |

சகரம் கெட்ட தமிழ்ச்சொற்களின் தாய்ச்சொற்கள் பல (சகரம் கெடாதவை) பிற திராவிட மொழிகளில் வழங்குவதைப் பேர். பரோ **மொழிமுதற் சகரக்கேடு** என்னும் தன் கட்டுரையில் எடுத்துக்காட்டுகிறார். மொழி முதலில் சகரம் கெட்டதைப்போல மொழியிடையிலும் ஒரு சில இடங்களில் கெட்டிருக்கின்றது. வடமொழி யிலும் பாகதமொழியிலும் பாலி மொழியிலும் வழங்கிய சொற்கள், பல தமிழுக்கு வந்தபோது முதற்சகரமும் பிற

---

**சதியமான் என்ற தமிழ்ச்சொல், கன்னட நாட்டில் வெட்டப்பட்ட அசோகரது கல்வெட்டில் Satyaputra என உரைவொலி பெற்றுள்ளது. கன்னடத்தின் மொழிமுதற் சகரத்தின் உரைவொலிப்புண்பு இதற்குக் காரணம் ஆகலாம்.**

சகரமும் கெட்டுள்ளன; இந்த மொழிகளிலிருந்து வந்து கெட்ட சகரங்கள் ச, ஸ, ஷ ஆகிய அனைத்துமே:

| | | | |
|---|---|---|---|
| *śaraṇ* | : அரண் | sabhaa | : அவை |
| *śaalaa* | : ஆலை | siisa | : ஈயம் |
| *śulka* | ; உல்கு | simhala<br>siihala | : ஈழம் |
| *samaṇa*<br>*śramaṇa* | : அமணர் | suuci<br>deeśa | : ஊசி<br>: தேயம் |
| *śraavaṇa* | : ஆவணி | tapas | : தவம் |
| *seṭṭhi*<br>*sreeṣṭhin* | : எட்டி | havis | : அவி |
| *sandhi* | : அந்தி | | |

இத்தகைய சகரக்கேடு தென்திராவிட மொழிகளுக்கு உரியவை என்கின்றனர் அறிஞர். இக்கேடு இந்த மொழிகளில் ஒருபோக்குத்தானே ஒழிய ஒரு விதியாக அமைந்து நிகழவில்லை. தமிழைப் பொறுத்த வரை இந்தக் கேடு சங்க காலத்தின் தொடக்கத்தை ஒட்டி நிகழ்ந்திருக்கலாம். சங்க இலக்கியங்களில் **அதியமான்** ( < அதியமகன் ) என வழங்கிய சொல் அசோகரது தென்னிந்தியக் கல்வெட்டு ஒன்றில் **சதிய புத்ரா** என்ற வடிவத்தில் இடம் பெற்றுள்ளது. இச்சொல்லின் வரலாறு. அசோகரது காலத்தில் அது சகரத்துடன் வழங்கிச் சங்ககாலத்தில் கெட்டுவிட்டது என்பதையே காட்டுகிறது. பிற சொற்களும் இவ்வாறு அசோகர் காலத்தை ஒட்டி முன்பின்னாகச் சகரம் கெட்டு வழங்கத் தலைப்பட்டிருக்கலாம். இத்தகைய மாற்றம் பெரும்பாலான தமிழ்ச்சொற்களைத் தாக்கவும் இல்லை; நெடுங்காலம் நிகழவும் இல்லை.

பண்டைத்தமிழில் சகரம் கெட்டிருக்க இன்றைத் தமிழில் அது தோன்றி வருவதாகத் தெரிகிறது.

எ. கா. : வரி : வரிசை
குடி : குடிசை
புரி : புரிசை
கடை . கடைசி
அரி : அரிசி
அலை : அலசு
பொடி : பொடிசு

சொல்லின் ஈற்றில் முன்னண்ணவுயிர்களை அடுத்து இச்சகரம் தோன்றுதல் கவனிக்கத்தக்கது. இவ்வண்ண உயிர்களே அண்ணமெய்யாகிய சகரமாகத் திரி-கின்றதோ என்பது ஆராய்தற்கு உரியது.

## 2. 23. பகரம்

பகரம் இடைப்பின்னும் உயிர்ப்பின்னும் பேச்சுத் தமிழில் மிகப்பல நூற்றாண்டுகளுக்கு முன்னரே திரிந்து வகரமாயிற்று எனலாம்.

தடையெழுத்துக்கள் உயிரிடை உரைவொலிகளாக வழங்குகின்றன என முன்பு விளக்கப்பட்டது. அதன்படி பகரம் உயிரிடை உரைவொலியாக வழங்க வேண்டும். ஆனால் ஒருசில இடங்களிலும் சொற்களிலும் தவிர உயிரிடை உரைவொலிப் பகரமல்லாமல் வகரமே வழங்கு-கிறது.[209] தொல்காப்பியர் காலம் முதலே இவ்வழக்கு

---

209. காண்பவன் உகரச்சாரியை பெற்றுக் காணுபவன் என இலக்கியத்தில் வழங்குகிறது. காண்பவன் என்ற

(அடுத்த பக்கம்)

உண்டு எனல் வேண்டும். அவர் காலத்தில் உயிரிடை-யில் தபு அளபு போன்ற சில சொற்களில் மட்டுமே பகரம் வழங்கியது. அவர் காலத்திலேயே பகரம் திரிந்த சொற்கள் பல வழக்கிற்கு வந்துவிட்டன. அவர் காலத்தை அடுத்து உயிரிடைப் பகரம் தமிழில் இல்லாமலே மறைந்தது எனல் வேண்டும்.

எ. கா. : தபு > தப்பு : தவறு
அளபு > அளவு
முடிபு > முடிவு

இது தமிழ்மொழிக்கு மட்டும் உரிய ஒரு பண்பல்ல; பெரும்பாலான திராவிட மொழிகளுக்கும் உரிய ஒரு பண்பேயாகும். ஆகவேதான் எமனோ அவர்கள் தொன் முதல் திராவிடத்திற்கு உயிரிடைப் பகரம் [-P-] அமைக்க வில்லை.[210]

உயிரிடைப் பகரத்தை ஏலாத இப்பண்பு காரண மாகத்தான் உயிரிடைப் பகரம் பெற்ற அயல் மொழிச் சொற்கள் உயிரிடைப் பகரத்தை வகரமாகத் திரித்துக் கொண்டு வழங்குகின்றன.[211]

---

சொல்லை ஒட்டியே காணுபவன் வழங்குவதே இதற்குக் காரணம். அதாவது காண்பவன் இல்லையானால் காணுபவனும் இல்லை.

210. DCPK. P. 7

211. உயிரிடைப்பகரம் குரலொலிப் பகரமாக வழங்க அதன் பின்னர்த்தான் அது வகரமாகத் திரிந்திருக்க வேண்டும் என்பது முன்னரும் சுட்டிக் காட்டப்பட்டது.

(அடுத்த பக்கம்)

எ. கா: சாப > சாவம்
கோப > கோவம்
பாப > பாவம்

பகரம் ஈரிதழொலியாகும். ஆனால் வகரமோ கீழிதழ் மேற்பல்லுரைவொலியாகும். உயிரிடைப் பகரம் ஈரிதழுரைவொலியாகத் திரிய அதனைப் பல்லிதழுரைவொலியாகிய வகரத்தோடு சேர்த்துத் தமிழர் ஒன்றாகவே கொண்டனர் போலும். அல்லது பண்டைக்காலத்தில்—தொல்காப்பியத்துக்கும் முன்னர்—வகரம் ஈரிதழுரைவொலியாகவும் வழங்கியிருக்கலாம். வகரம் ஒன்று தனியெழுத்தாகத் தமிழில் இருக்கின்ற காரணத்தால் உயிரிடைப் பகரம் ஒன்று கொள்ள முடியவில்லை; மற்ற தடையெழுத்துக்களுக்கு உயிரிடை ஒலிகள் உண்டு.

உயிரிடைப் பகரம் வகரமானது போன்றே இடைப்பின் பகரமும் இடைக்காலம் தொட்டு — சங்க காலத்தை அடுத்து — வகரமாகத் திரிந்தது எனல் வேண்டும். இன்றைய பேச்சில் இடைப்பின் பகரம் வழங்கவில்லை.

எ. கா: மார்பு > மார்வு > மார்

---

உயிரிடை மட்டுமல்ல; மொழிமுதலில் குரலொலிப் பகரம் பெற்ற அயல் மொழிச் சொற்கள் தமிழில் வழங்க வருகின்றபோது கூட அது வகரமாகத் திரிகிறது.

எ. கா: பாண > வாணம்
ப்ருந்தாவன > விருந்தாவனம்
பாங்க் > வங்கி

## 2. 24. றகரம்

### 2. 24. 1. றகர வழக்கு

தமிழகத்தின் பெரும்பகுதியில் றகரத்திற்கு உரியது என வழங்கும் ஓர் ஒலி இல்லை என்பது முன்னர்க் கூறப்பட்டது; அது பல சூழல்களில் ரகர ஒலியே பெறுகிறது என்பதும் எடுத்துக் காட்டப்பட்டது. (காண்க 2. 6.) ஆனால் சில கிளைமொழிகளில் அது ரகரத்தினின்றும் வேறுபட்டு ஒலிக்கிறது என்பதும் தெரிகிறது. தமிழிலக்கண ஆசிரியர்கள் அன்றுதொட்டு இன்றுவரை ரகரமும் றகரமும் இருவேறெழுத்துக்கள் என்றே வகுத்து வந்திருக்கின்றனர். இக்கருத்துக்கள் றகரத்திற்கு ஒருவரலாறு உண்டு என்பதையே குறிக்கின்றன.

றகரம் தனக்கெனப் பெற்று வழங்கும் ஒலிவேறுபாடுகள், பல்வேறு தமிழ்க்கிளை மொழிகளில் எவ்வாறு உள்ளன என்பது கீழ்வரும் பட்டியில் தரப்படுகிறது:

| | -ற்ற்- | -ன்ற்- | -ற்- | (-ற்க்-) (-ற்ச்-) (-ற்ப்-) |
|---|---|---|---|---|
| ஈழத்துத் தமிழ்ப்படிப்பு | -ṯṯ- | nḏ | — | |
| ஈழத்துப் பேச்சு | -ṯṯ- | -nrr- | | |
| நாஞ்சில் தமிழ் | -ṯṯ- | nḏ | -ṟ- | |
| வடதமிழகப் பேச்சு | -tt- | ṇ/ṇṇ<br>n/nn | r | |
| வடதமிழகப் படிப்பு | -ṯṯṟ- | ṇṟ<br>ṇḏṟ | -r- | -ṟs-<br>(s=stop) |
| மலையாளப் படிப்பு | -ṯṯ- | -nḏ- | -ṟ- | |
| மலையாளப் பேச்சு | -ṯṯ- | -ṉṉ- | | |

மலையாளம் 800 ஆண்டுகளுக்குமுன் தமிழின்கிளை யாகவும் 1500 ஆண்டுகளுக்கு முன் பழந்தமிழாகவும் இருந்தது. அம்மொழியின் றகர வழக்குத் தமிழ் றகரத்தின் வரலாற்றினை அறியத் துணையாகலாம்.

ஆகவே மலையாள றகரவழக்கும் இங்குத் தரப்பட்டது.

மேற்கண்ட பட்டியால் விளக்கமுறும் கருத்துக்கள்சில:

1 எல்லா மொழிகளிலும் றகரம் உயிரிடைத் துடிப்பொலியாகவே விளங்குகிறது.

2 -ன்றகரம் சில மொழிகளில் முன்னுள்ள மூக்கொலியின் (னகரத்தின்) ஆற்றலால் மூக்கொலியாகவே மாறிவிட்டது.

3 இரட்டை றகரம் (ற்றகரம்) எல்லா மொழிகளிலும் இரட்டைத் தடையொலியாகவே வழங்குகிறது. -ன்ற கரத்திலும் றகரம் சில மொழிகளில் தடையொலியாக இருத்தலைக் காணலாம். இத்தடையொலிகள் ஒலிப்பிடத்தால் வேறுபடுகின்றன; இவ்வேறுபாட்டின் காரணம் ஆராய்தற்குரியதே. ஆனாலும் இவையெல்லாம் தடையொலிகளே.

னப்பின் றகரம் இன்றைப் பேச்சுமொழிகளில் வளைநா முன்வல்லண்ண மூக்கொலியாகவோ, நுனிநா விற்றண்ண மூக்கொலியாகவோ மாறுகிறது. இவ் ணகரமும் னகரமும் தமிழில் உண்டு. றகரம் இவ்விரண்டிலிருந்தும் பண்டுமுதல் வேறுபட்டது என்பதில்

சிறிதும் ஐயம் இல்லை. றகரம் உயிரிடைத் துடிப் பொலியாகவும் இரட்டிக்கும்போது தடையொலியாகவும் விளங்குகிறது. இவ்விரண்டு ஒலிகளில் (துடிப்பொலி தடையொலிகளில்) எது றகரத்தின் உண்மையொலி? அல்லது எது அதன் பண்டையொலி? எது அதன் திரிபு?

## 2. 24. 2. றகரத்தின் ஒலி

கீழ்க்கண்ட கருத்துக்கள் றகரத்தின் பண்டையொலி தடையொலியே என்பதற்குச் சான்றுகின்றன:

1 பழந்தமிழின் தடையெழுத்துக்கள் இன்றைத் தமிழில் உயிரிடை உரைவொலிகளாகவும் இரட்டிக்கின்ற போது தடையொலிகளாகவும் வழங்குகின்றன றகரமும் இன்று உயிரிடை (உரைவொலியாக இல்லாது போனாலும் கூட) துடிப்பொலியாகவும் இரட்டிக்கின்றபோது தடையொலியாகவும் வழங்குகிறது. இங்ஙனே, றகரமும் பண்டு மற்ற தடையெழுத்துக்களைப் போன்று தடையெழுத்துத் தான் என்பதையே வற்புறுத்தும்

2 தொல்காப்பியர் றகரத்தை க, ச, ட, த, ப என்பவற்றோடு சேர்த்து வல்லினம் எனக் குறிக்கிறார். இவையெல்லாம் தடையொலிகளேயாதலால் றகரமும் தொல்காப்பியர்காலத்தில் தடையொலியாக இருந்திருத்தல் வேண்டும்.

3 வல்லின எழுத்துக்களாகிய தடையொலிகள் சொல்லின் ஈற்றில் வழங்குவது இல்லை; வழங்கும்போது குற்றியலுகரம் பெறுகின்றன. இப்பண்பும் றகரத்துக்கு

முற்றிலும் பொருந்தும். ஆகவே றகரம் தடையொலியாக வேண்டும். மற்ற மெல்லின இடையின எழுத்துக்கள் ஈற்றில் வழங்குகின்றன; ஆனால் உகரமும் பெறுவதில்லை.

4 மற்ற தடையெழுத்துக்களுக்கு உரிய புணர்ச்சி விதிகள் றகரத்திற்கும் பொருந்தும். ஆதலால் றகரம் தடையொலியே.

| | | | |
|---|---|---|---|
| 1 | ஆடு | : | ஆட்டம் |
| | ஏறு | : | ஏற்றம் |
| 2 | வெருகு+பூனை | : | வெருக்குப்பூனை |
| | களிறு +யானை | : | களிற்றியானை |
| 3 | பேசு | : | பேச்சு |
| | கூறு | : | கூற்று |

5 றகரம் செய்யுளில் மற்ற தடையெழுத்துக்களோடு தான் எதுகையாக அமைகிறது; ரகரத்தோடு அமைவது இல்லை. இதனாலும் றகரம் தடையொலி என்றாகிறது.

6 இரட்டை றகரம் (ற்ற்) ஈழத்துப் பேச்சில் தடையொலியாகிய இரட்டைட் டகரமாகவும் தமிழகத்துப் பேச்சில் தடையொலியாகிய இரட்டைட் டகரமாகவுமோ அல்லது இரட்டைத் தகரமாகவுமோதான் திரிந்து வழங்கு -கிறது. ஒரு தடையொலியே மற்ற ஒருதடையொலியாக எளிதில் திரியும் எனக் கொள்ளலாம். ஆதலால் இரட்டைட் டகரமாகவும் இரட்டைத் தகரமாகவும் திரிவதற்கு முன் இரட்டை றகரம் தடையொலியாகவே இருந்திருக்கலாம்.

7 தமிழின் -ன்றகரத்திற்கும் -ற்றகரத்திற்கும் ஏற்ற வழக்குக்கள் மற்ற திராவிட மொழிகளில் -ண்டகரமாக-வும் -ட்டகரமாகவும் அமைந்திருக்கின்றன. இக்கருத்துப் பழந்திராவிட மொழிக்கு உரிய தடையொலி றகரம் அதன் சேய் மொழிகளில் தடையொலி டகரமாகத் திரிந்தது என்பதையே குறிக்கும்.

8 தமிழில் உயிரிடை றகரம் பல சொற்களில் டகரமாகத் திரிந்துள்ளது. ஒரு தடையொலியே ஒலிப்பிடம் மாறி மற்ற ஒருதடையொலியாக வழங்குகிறது என்று எளிதாகக் கொள்ளலாம். றகரம் டகரமாகிறபோது ஈற்-றண்ண ஒலிப்பிடம் வல்லண்ண ஒலிப்பிடமாக மாறியது எனக் கொள்ள வேண்டும்.

எ. கா: அயறு > அசடு
முயிறு > முசுடு

மேல்வந்த கருத்துக்களால் றகரத்தின் பண்டையொலி தடையொலி யாகலாம் என்பதும் அதுவே உயிரிடைத் துடிப்பொலியாக மாறியது என்பதும் தமிழகத்தின் பெரும் பகுதியில் அத்துடிப்பொலி ரகரமானது என்பதும் விளக்க முறும்.

### 2. 24. 3. இரட்டை றகரத்தில் ரகரம்

இவ்விரட்டை றகரம் தமிழகத்து இலக்கிய வழக்கில் *ṭṛr* (அல்லது *ṭr*) என வழங்குவதாக மேலே காட்டப் பட்டது. மற்ற கிளைமொழி வழக்குக்களில் இவ்விரட்டை றகரம் துடிப்பொலியாகிய *r* பெருமல் தடைவெடியொலி யாகவே வழங்குகிறது. தமிழகத்து இலக்கிய வழக்கில்

மட்டும் ஏன் துடிப்பொலி கூட வேண்டும்? தமிழ்ச்சகரம் உயிரிடை உரைவொலியாகவும் இரட்டிக்கின்றபோது தடையுரைவொலியாகவும் வழங்குகின்றது. அது போன்றே றகரமும் உயிரிடைத் துடிப்பொலியாகவும் இரட்டிக்கின்றபோது தடைத்துடிப் பொலியாகவும் வழங்குகிறது போலும். அல்லது உயிரிடை றகரம் துடிப்பொலியாக வழங்குவதை உணர்ந்த மக்கள் இரட்டிக்கின்றபோதும் அத்துடிப்பொலி இருத்தல் வேண்டும் எனக் கருதித் துடிப்பொலி கூட்டியிருக்கலாம். இது ஒருபிறழ் வுணர்ச்சியே.

## 2. 24. 4. இன்றைய பேச்சில் றகரம்

றகரத்தின் பண்டையொலி தடையொலியே எனக் கண்டோம். தொல்காப்பியர் காலத்திலோ அதற்கு முன்போ அவ்வாறு இருந்திருக்கலாம். மற்ற வல்லெழுத்துக்களைப் போன்றே இதுவும் எல்லாச் சூழல்களிலும் உயிர்ப்புத் தடையொலியே பெற்று அன்று வழங்கியிருக்கலாம். இன்றைய பேச்சுத்தமிழில் அந்நிலை கீழ்க்கண்டவாறு மாறிவிட்டது:

1 -ற்ற்- → -த்த்- அல்லது -ட்ட்-

2 குறில்] ன்ற்- → -ன்ன்-
அல்லது
குறில்] ன்ற்- → -ண்ண்-
நெடில்] ன்ற்- → -ன்-
அல்லது
நெடில்] ன்ற்- → -ண்-

3 -ற்- → -ர்-

4 -ற் [தடை → -ர்-

-ற-, -ற், -ற் [ஒ] திரிதல்

இவ்வாருக றகரம் இன்றைய பேச்சில் எல்லாச் சூழல்களிலும் மாற்றம் உற்று முழுவதும் மறைந்தே போனது. இவ்வாறு றகரம் வழக்கிறப்பு எப்போது ஏற்பட்டது? கி. பி. 7-ஆம் நூற்ருண்டில் வாழ்ந்த வடமொழியறிஞர் குமாரிலபட்டர் வயிறு சோறு என்னும் இரண்டு சொற்களையும் முறையே vair, coor என வடமொழியெழுத்துக்களில் எழுதிவைத்துள்ளார். அவரே அதர் என்னும் தமிழ்ச் சொல்லையும் atar எனக் குறித்துள்ளார். ஆகவே அவர் காலமாகிய கி. பி. 7-ஆம் நூற்ருண்டிலேயே ஈற்று றகரம் திரிந்து ரகரமாயிற்று எனல் வேண்டும்.

சங்ககாலத்திலேயே உயிரிடைப் பகரம் வகரமாகத் திரிந்தும் உயிரிடைக் ககரம் கெட்டும் உயிரிடைச் சகரம் யகரமாகத் திரிந்தும் வழங்கின என அறிகிருேம்.

தபு : தவல்

ஆக : ஆ (<ஆக)

ஆதலால் றகரமும் அக்காலத்திலேயே துடிப்பொலியாக மாறத்தொடங்கியிருத்தல் கூடும். இதை மெய்ப்பிப்பது போன்றே கிரேக்க வழிச்செலவினர் குறிப்பும் உள்ளது. அவர்கள் முசிறி என்ற தமிழ்ச்சொல்லை mouziris என ரகரம் இட்டே எழுதிவைத்துள்ளனர். இதனுல் அவர்கள் றகரத்தை ஒருகால் துடிப்பொலியாகவே ஒலிக்கக் கேட்டிருக்கலாம்.[212]

---

**212. இக் கிரேக்க வழிச்செலவினர் உயிரிடை டகரத்தையும் r எனவே குறித்துள்ளனர். ஆனுல் டகரம்**

**(அடுத்த பக்கம்)**

கி. பி. 9, 10, 11, 12-ஆம் நூ... வெளியிடப்பட்ட தமிழ்க் கல்வெட்டுக்களில் ... சொற்கள் காணக்கிடைக்கின்றன:

| | |
|---|---|
| நீற்வாற்த்து | (= நீர்வார்த்து) |
| பதிநாரும் | (= பதினறும்) |
| பட்டற் | (= பட்டர்) |
| பண்ணுகுரபெற்கள் | (= பண்ணுகிற பேர்கள்) |
| மேற்க்கு | (= மேற்கு) |
| மேர்க்கு | (= மேற்கு) |
| ருசருச | (= ராஜராஜ) |
| வீறனருயண | (= வீரநாராயண) |
| முப்பத்திறெண்டரையும் | (= முப்பத்திரண்டரையும்) |
| தம்பிருனற்க்கு | (= தம்பிரானர்க்கு) |
| ஏவற்ப்படி | (= ஏவற்படி) |

இக்காலத்தில் வலிமுன் றகரமும் திரிந்து ரகர மாயின என்பது தெளிவாகிறது.[213]

---

**துடிப்பொலியாக இருந்திராது. அது என்றும் அவ்வாறு ஒலித்ததில்லை. கிரேக்க மொழியில் வளைநா வல்லொலி இல்லை என்பதை இங்கு நினைவுகொள்ள வேண்டும்.**

**213. ஆனல் தென்தமிழகத்தின் இப்பதினென்ரும் நூற்ருண்டில்கூட உயிரிடை றகரம் தடையொலியாகவே இருந்திருக்கலாம் எனத் திரு. ஐயக்குமாரியின் ஆராய்ச்சி யுரை கூறுகிறது.**

**"The Kanyakumary Inscription of Vira Rajendra mentions the name of பெருநற்கிள்ளி in verse 47 and it is very significant to note that this name is transcribed in Skt. as பெருநட்கிள்ளி where (ற) has got the phontic value of (ட) the nearest to be found in Skt. to alveolar (ற) with retroflexion" — PP.7—11, SLIT.**

## 2. 24. 6. -ற்ற- திரிதல்

பதினோராம் நூற்றாண்டுக்குரிய வீரசோழியம், ஆற்றுக்கால், சேற்றுநிலம் என்பன போன்ற சொற்கள் ஆத்துக்கால், சேத்துநிலம் என்பன போன்று பேச்சிலே திரிந்த திரிபை எடுத்துக் காட்டுகிறது. ஆகவே அக்காலத்திற்கும் முன்பாகவே இரட்டை றகரம் (-ற்ற-) இரட்டைத் தகரமாகத் (-த்த-) திரியத் தொடங்கிவிட்டது எனல் வேண்டும். கீழ்க்கண்ட பத்தாம் நூற்றாண்டுக்குரிய கல்வெட்டு வழக்குக்கள் இதனை உறுதிப்படுத்தும்:

திருவையாத்து (= திருவையாற்று)
முன்னெத்தி (= முன்னெற்றி)
திருச்சித்தம்பல (= திருச்சிற்றம்பல)

இக்காலத்துக் கல்வெட்டுக்களிலேயே இரட்டை றகரம் திரியாது 'திருவையாற்று' போன்று வழங்கும் வழக்குக்கள் பலப்பல. இத்திரிபின் தொடக்கம் பத்தாம் நூற்றாண்டுக்கு முன்னரே அமைந்திருக்கலாம்.[214]

## 2. 24. 7. -ன்ற- திரிதல்

இரட்டைறகரம் இரட்டைத்தகரமாகத் திரிந்த அதே காலத்திலேயே மெலிப்பின் றகரம் (-ன்ற-)

---

214. திரு. ஜயக்குமாரியவர்கள் 'பல்லவர் காலத்துக் கல்வெட்டு மொழியாராய்ச்சியில்' அக்காலத்திலேயே இரட்டை றகரம் இரட்டைத் தகரமாக மாறி வழங்கிய வழக்குக்களைச் சுட்டிக் காட்டியிருக்கிறார்கள்.

கெட்டது எனலாம்; அதாவது -ன்ற்- >-ன்ன்- / -ன்-/ -ண்ண்- / -ண்-. கீழ்க்கண்ட 10, 11, 12 - ஆம் நூற்றாண்டுக்குரிய கல்வெட்டு வழக்குக்கள் இதனைத் தெளிவாக்குகின்றன:

| | |
|---|---|
| கொன்ன | (= கொன்ற) |
| நாற்பத்தொன் | (= நாற்பத்தொன்று) |
| மூனும் | (= மூன்றும்) |
| கொண்ண | (= கொன்ற) |
| குன்னு நாட்டு | (= குன்று நாட்டு) |

மெலிப்பின் றகரம் திரியாது வழங்கும் வழக்குக்களும் பலப்பல இக்காலக் கல்வெட்டுக்களில் உண்டு.

## 2. 24. 8. றகரத்தின் ஒலிப்பிடமாற்றம்

றகரத்தின் ஒலிப்பிடம் பற்றி முன்னர்க் (2. 6. 1.) கூறப்பட்டது. தொல்காப்பியர் கூற்றுப்படி அது வளை நுனிநா வல்லண்ணவொலி. ஆனால் இன்று தமிழகத்தில் ஈற்றண்ணவொலியாக ஒலிக்கிறது. (நாஞ்சில் நாட்டிலும் ஈழத்திலும் மட்டிலுமே நுனிநா முன்வல்லண்ணவொலியாக ஒலிக்கிறது.) இவ்வொலிப்பிடமாற்றம் எப்போது ஏற்பட்டிருக்கும்? றகரம் எப்போது ரகரமாகத்திரிந்ததோ அப்போதே இம்மாற்றம் ஏற்பட்டிருக்கலாம். ஈழத்தில் றகரம் இன்று முன்வல்லண்ண ஒலியாக ஒலிக்க, ரகரம் முன்னீற்றண்ண வொலியாக ஒலிக்கிறது. இங்கு றகரமும் ரகரமும் வேறு வேறே. தொல்காப்பியர் காலத்தில் டகரம் இன்று ஒலிப்பதுபோல வளை நுனிநா வல்லண்ணவொலியாக ஒலிக்காது நுனிநாவீற்றண்ணவொலியாக ஒலித்திருக்கலாம்

என்பது மேலே (2. 3. 4) குறிக்கப்பட்டது. தமிழ்மொழி வரலாற்றின் ஒருகாலத்தில் டகரம், றகரம் போன்று வளை நுனிநா வல்லண்ண வொலியாகவும் றகரம், டகரம் போன்று நுனிநாவல்லண்ண ஒலியாகவும் மாறி ஒலிக்கத் தொடங்கின என்று கருத வேண்டும். அந்தக்காலம் வடமொழி செல்வாக்குப் பெற்ற பல்லவர் காலமாகலாம் எனவும், வடமொழியிலுள்ள டகரம் வளை நுனிநா வல்லண்ண வொலியாக ஒலிப்பது போன்று தமிழ் டகரமும் ஒலிக்கத் தொடங்கியிருக்கலாம் எனவும் ஒரு சிலர் கருதுகிறார்கள்[215].

ஆனால் 11-ஆம் நூற்றாண்டினதான வீரராஜேந்திரன் காலத்தில் வெளியிடப்பட்ட கன்னியாகுமரி வடமொழிக் கல்வெட்டு ஒன்றில் பெருநற்கிள்ளி என்னும் தமிழ்ச் சொல் **perunaṭkilli** எனக் காணப்படுகிறது. ஆகவே இக்காலத்தில் இத்தென்தமிழகத்தில் றகரம் வளை நுனிநா வல்லண்ணவொலியாக இருந்திருத்தல் வேண்டும் எனக் கருதலாம்.

---

215 "ṭ and t. The retroflex *ṭ* in Tamil which was not really retroflex in Tolkāppiyam becomes a real retroflex because of the Sanskrit influence. This may be seen in the Sanskrit transliteration of Tamil ṯ. Alveolar ṯ is also found transcribed as *ṭ* in Sanskrit. This must have disturbed the pronunciation of the alveolar which, when long, becomes one with the dental."—HTL., PP. 127—128.

## 2. 24. 9. பிற திராவிடமொழிகளில் றகரம்

தொல்பழங்காலத்தில் றகரம் வளைநுனிநா வல்லண்ணவுயிர்ப்புத்தடையொலியாக –[ ṭ ]- இருந்திருக்கலாம். அக்காலம் இன்றைத்திராவிட மொழிகள் எல்லாம் ஒருமொழியாக வழங்கிய காலமாகலாம்.[216] அடுத்துக் காலம் செல்லச் செல்ல றகரம் பல்வேறு திராவிட மொழிகளிலும் பல்வேறு ஒலிகளாகத் திரியத் தொடங்கியது. அத்திரிபுகளைத் தொகுத்துப் பொதுப்பட முத்திறத்தன வாகக் கூறலாம்.

1 உயிரிடைறகரமும் வலிமன்றகரமும் இன்றைத் திராவிட மொழிகள் பெரும்பாலனவற்றில் துடிப்பொலியாகவோ தட்டொலியாகவோ திரிந்துவிட்டது. இன்று மலையாளத்தில் றகரம், நுனிநா முன்னிற்றண்ணத் தட்டொலியாகிய ரகரத்தினின்றும் வேறுபட்டு நுனிநா முன்வல்லண்ணத் துடிப்பொலியாக வழங்குகிறது. பழந்-

---

216. திராவிட மொழியியல் பேறிஞர் எமனோ அவர்கள் தொன்முதல் திராவிடத்திற்கு (Proto – Dravidian) வலிய துடிப்பொலி றகரமே (ṟ) அமைத்துள்ளார். பெரும் பாலான முன்னைய இன்றைய திராவிட மொழிகளில் இந்த றகரமே (ṟ) வழங்குவது இதற்குக் காரணம். வரலாற்றுக் காலத்திற்குட்பட்ட மொழிகளில் அது துடிப் பொலியாக இருந்தாலும் வரலாற்றுக்கு முற்பட்ட தொன் முதல் திராவிடத்தில் அதுவே தடையொலியாக இருந் திருத்தல் கூடும். தொன்முதல் திராவிடத்தின் காலம், இவ்வறிஞர் கருத்துப்படி கி. மு. 1000 ஆகும். (DED முன்னுரை காண்க.) — DCPk. பக். 7 காண்க.

தமிழிலும் இடைக்காலத் தமிழிலும் பழந்தெலுங்கிலும் பழங்கன்னடத்திலும் இவ்வாறு மலையாளத்தில் போன்றே றகரம் வழங்கியிருக்கலாம். இன்றைய பேச்சுத்தமிழிலும் இன்றைத்தெலுங்கிலும், இன்றைக்கன்னடத்திலும் இது ரகரமாகவே வழங்குகிறது. பழங்கன்னடத்திலும் பழந்தெலுங்கிலும் அம்மொழி இலக்கண ஆசிரியர்கள் இவ்வெழுத்திற்குத் தனி வரிவடிவம் தந்து, ரகரத்தினின்றும் வேறுபட்டது இது எனவே குறித்துள்ளனர். கி. பி. 17 அல்லது 18-ஆம் நூற்றாண்டளவில் கன்னடத்தில் றகரமும் ரகரமும் ஒன்றாயிருத்தல் வேண்டும் எனக் கன்னடப் பேரறிஞர் கிட்டல் கூறியுள்ளார். பழங்காலத்திலேயே தெலுங்கில் றகரமும் ரகரமும் ஒன்றாயின. ஆனாலும் தெலுங்கு மொழியறிஞர் இலக்கியத்தில் றகர ரகர வேறுபாட்டினைச் செயற்கையாகப் போற்றி வருவதாகத் தோன்றுகிறது.

2 இரட்டை றகரம் (-ற்ற-) இலக்கியத் தமிழிலும் நாஞ்சில் நாட்டுப் பேச்சுத்தமிழிலும் யாழ்ப்பாணத் தமிழிலும் ஈற்றண்ணவுயிர்ப்புத் தடையொலியாக வழங்குகிறது. மற்ற எல்லாத் திராவிடமொழிகளிலும் இரட்டை அல்லது ஒற்றை வளைநா வல்லண்ணத்தடையொலியாகவோ -[ -ṭ- ], [ ṭṭ ]- அல்லது நுனி நாவண்பல் தடையொலியாகவோ -[ t ], [ tt ]- திரிந்து வழங்குகிறது.

3 மெலிப்பின் றகரம் (-ன்ற-) இன்று பல் வேறு திராவிட மொழிகளில் எழுத்திலும் பேச்சிலும், -ன்ன்-, -ன்-, -ண்ண்-, -ண்-, -ந்ந்-, -ண்ட்-, -ந்த்-, -ஞ்ச்-, -ற்-, -ḍ- எனப் பலவாறாகத் திரிந்து வழங்குகிறது. இச்-

சூழலில் றகரம் மூவகைத் திரிபுகள் உற்றதை இங்குக் காணுகின்றோம். அவை :

1 றகரம் கெடல்
2 றகரம் டகரமாதல்
3 றகரம் தகரமாதல்

இவ்வாறுகக் காலவெள்ளத்தில் றகரம் உற்ற தவிப்புப் பெருங்கதையாகும்.

## 2. 25. மெல்லின மெய்கள்

தமிழிலக்கணவாசிரியர்கள், மூக்கின் வளிபால் தோன்றி மெல்லென ஒலிக்கும் மெய்யெழுத்துக்கள் ஆறு என்று கொண்டனர். அவை ங, ஞ, ண, ந, ம, ன என்பவை. இவற்றை அவர்கள் மெல்லின **மெய்கள்** எனப் பெயரிட்டழைத்தனர். தொல்காப்பியர் காலத்துக்கும் முற்பட்டிருந்தே இவ்வழக்கு உண்டு. இவ்வெழுத்துக்களை — மூக்கின் வளியிசை யாப்புறத் தோன்றும் எழுத்துக்களை — மொழியியலார் **மூக்கொலி யெழுத்துக்கள்** அல்லது சுருக்கமாக **மூக்கெழுத்துக்கள்** என்பர் என்பது முன்னர் விளக்கப்பட்டது. [*1.13* காண்க]. தமிழ்மொழியில் உள்ள ஆறு தடையொலிமெய்களின் ஒலிப்பிட ஒலிப்புறுப்பு ஒலிப்புமுயற்சிகளுக்கு ஏற்ப அமைந்த மூக்கொலி மெய்களே இவ்வாறும் என்பது தெளிவு. ஆகவேதான் தமிழிலக்கணவாசிரியர்கள் இவற்றை இன **மெல்லெழுத்துக்கள்** என வழங்கினர்[217].

---

217. **Homorganic Nasals** என இவை மொழியியலில் குறிக்கப்படும்.

தமிழ்மொழியில் மூக்கொலி மெய்கள், மற்ற பல உலக மொழிகளில் உள்ள மூக்கொலி மெய்களைக் காட்டிலும் எண்ணிக்கையில் பலவாகும் உலகமொழிகள் பலவற்றில் இதழ் மூக்கொலி யெழுத்தாகிய மகரமும் நுனிநா விற்றன்ன மூக்கொலியெழுத்தாகிய னகரமும் தான் பெரு வழக்கு. இவ்விரண்டு மூக்கொலி மெய்களும் இல்லாத மொழியே இவ்வுலகில் இல்லை என்று கூடக் கூறிவிடலாம் என மொழியியலறிஞர் கருதுகின்றனர். மற்ற மூக்கொலிகள் இவ்விரண்டு மெய்களின் திரிபொலிகளாகவே — எழுத் தொலிகளாகவே — வழங்குகின்றன எனலாம். தமிழும் இப்பொதுக்கருத்துக்கு விதிவிலக் கல்ல. தமிழில் உள்ள ஆறு மூக்கொலி யெழுத்துக்களும் பெரும்பாலும் தன்னினத் தடையெழுத்துக்களுக்கு முன்னேதான் வழங்குகின்றன; அதாவது -ங்க்-, -ஞ்ச்-, -ண்ட்-, -ந்த்-, -ம்ப்-, -ன்ற்- எனவே பெரும்பாலும் வழங்குகின்றன; மற்ற சூழல்களில் இவை வழங்குவது குறைவாகவே உள்ளது. இப்பெரும்பான்மை வழக்குப் பண்டு ஒருகால் ஒலியிசைபின்[218] விளைவால் நிகழ்ந்திருக்கலாம். அதாவது தடை யெழுத்துக்களுக்கு முன்னிருந்த மற்ற எழுத்துக்கள் (வ, ய, ர, ல, ழ, ள போன்றவை) பின்னுள்ள தடையெழுத் துக்களோடு இயைந்து இவ்வின மூக்கொலியெழுத்துக்கள் தோன்றியிருக்க வேண்டும். மகரம், ககர சகர தகரங்களுக்கு முன் ஙகர ஞகர நகரங்களாகத் திரிதல் தமிழிலக்கண விதியாகும். மற்ற ணகர னகரங்கள்கூடக் ககர சகர தகரங்களுக்கு முன் இன மூக்கெழுத்துக்களாகத் திரிந்

---

218. Assimilation.

திருக்கின்றன.[219] இக்காரணங்களால் வரலாற்று முறைப் படி நோக்கினுல் சில மூக்கொலியெழுத்துக்களை மற்ற சில மூக்கொலியெழுத்துக்களின் திரிபாகக் கொள்ளலாம். எடுத்துக்காட்டாக ஙகரம் பல இடங்களில் மகரத்தின் திரிபு எனக்கொள்ளலாம். ஆகவே எழுத்துக்கள் என்ற முறையில் தமிழில் ஆறு மூக்கொலியெழுத்துக்கள் வைத்துக்கொள்ள வேண்டியதில்லை எனச்சில மொழியியலறிஞர்கள் கருது-கின்றனர்.[220] மேலும் இவையாறும் ஒரே சூழலில் வழங்கிப் பொருள்வேறுபாடு செய்வதற்குப் பயன்படு-வதில்லை.

இன்றைத்தமிழில் எட்டு மூக்கெழுத்தொலிகள் உண்டு என முன்னர் வரையறை செய்யப்பட்டது. இவ் வெட்டெழுத்தொலிகளே நான்கு எழுத்துக்களாக வகுத்துக் காட்டப்பட்டன. (2.19 காண்க). பழந்தமிழில் ஆறு மூக்கொலியெழுத்துக்களே உண்டு என இலக்கணங்கள் கூறுகின்றன. அன்று தொட்டு இன்று வரை மூக்கொலி யெழுத்துக்கள் பல வகைத் திரிபுகள் உற்று வந்துள்ளன. அவற்றைத் தனித்தனியே காணலாம்.

## 2. 26. ஙகரம்

தமிழில் அன்றும் இன்றும் மிக அருகி வழங்கும் மூக்கொலியெழுத்து இதுவே. முன்னர் இவ்வியல் 99-ஆம் அடிக்குறிப்பில் எடுத்துக் காட்டப்பட்ட ஐந்து சொற்கள் தவிர மற்ற எல்லா இடங்களிலும் இது ககரத்தின்

---

219. வன்-சினம்=வஞ்சினம், ஆன்-கு= ஆங்கு, வன்/ண்-கு=வங்கு முதலியவை காண்க.

220. P. 205, HTL.

முன்னர் மட்டுமே வழங்குகிறது; உயிர்மெய்யெழுத்தாகவே இது என்றும் எங்கும் இந்நாள் வரை வாழ்வு பெற்றதில்லை. இடைக்காலத்தில் அங்கனம் முதலிய சொற்கள் தமிழின் ஏதோ ஒருகிளைமொழியில் அங்ஙனம் முதலியனவாகத் திரிந்தன. ஆனால் இத்திரிபு ஒருவிதியாகித் தமிழில் பரவவில்லை. மலையாளத்தில் இவ்வாறு ஒரு விதியாக இது பரவியுள்ளது. வடமொழியைப் பின்பற்றி இங்ஙகரத்திற்கு வாழ்வுதரச் சிலர் முயன்றனர்; அவர்கள் தோல்வியே கண்டனர். பிரயோகவிவேக நூலார் ''திங்ஙு'' ''திஙந்தம்'' என இரண்டு சொற்களைப் படைத்துத் தம் நூலுள் ஆண்டுள்ளார். ''திங்'' என்றால் வடமொழியில் வினைமுற்று விகுதி என்பது பொருள். ஆனால் இந்தச் சொற்கள் அந் நூலாசிரியரோடு மறைந்தொழிந்தன.

ஙகரத்தின் பண்டைவரலாறு இவ்வாறாக, இன்றைய பச்சுத் தமிழில் அது எழுத்தாகும் நிலை பெறுகிறது போலும். சிலருடைய பேச்சுமொழியில் முன்னண்ணவுயிர்கள் அடுத்து வருகின்றபோது ஙகரககரம், ஙகரஙகரமாக ஒலிக்கின்றது எனச் சிலர் உணர்கின்றனர்.[221] எடுத்துக் காட்டாக அவர்கள் **எங்ஙே** (எங்கே) ***சிங்ஙி*** (சிங்கி) முதலியவற்றைக் குறிப்பிடுகின்றனர். மேலும் பலருடைய பேச்சில் கீழ்க்கண்ட சொற்களைக் கேட்க முடிகிறது:

| | |
|---|---|
| ஙொம்மா | ஙம்மா |
| ஙொப்பன் | ஙப்பன் |
| ஙொண்ணன் | ஙண்ணன் |
| ஙொக்கா | ஙக்கா |

---

221. கலைக் களஞ்சியம் 'ஙகரம்'

இவை உங்க ( <உங்கள்). எங்க ( <எங்கள்) ஆகிய தன்மை முன்னிலைப் பெயர்களும் உயிர்முதலாகிய முறைப் பெயர்களும் புணர்ந்து ஒருசொல் நீர்மைப்பட்டுத் திரிந்து வழங்கும் பேச்சு வழக்குச் சொற்கள். ஒலியெடைப் பெயர்ச்சியால்[222] இத்தொடர்கள் இவ்வாறு திரிந்து வழங்குகின்றன. இங்கெல்லாம் ஙகரம் மற்ற மூக்கொலி யெழுத்துக்களைப்போன்று மொழிமுதலில் வழங்குகின்றது. இக்காரணங்களால் ஙகரத்தைப் பேச்சுத் தமிழிற்கு ஓரெழுத்தாக வகுக்கவேண்டியிருக்கிறது.

## 2. 27. ஞகரம்

### 2. 27. 1. ஞகரத்தின் இன்றைய வழக்கு.

தமிழில் ஙகரத்திற்கு அடுத்தபடி மிகமிகக் குறைந்த வழக்குடைய மூக்கொலியெழுத்து இதுவே தமிழில் மிகப்பல மாற்றங்கள் அடைந்த மூக்கொலியெழுத்தும் இதுவே. இம் மாற்றங்கள் தமிழ் மொழியில் இதன் வாழ்வையே கெடுத்து விட்டன. இதன் வழக்கில் பெரும்பகுதி சகரத்தின் முன்தான். சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்ப் பேரகராதி. ஞகரம் மொழிமுதலாக வருஞ்சொற்கள் இருநூற்றுப் ப்திஞன்கு தருகிறது. இவற்றில் நூற்றுக்கு மேற்பட்டவை வடசொற்கள். ஞானம் என்ற சொல்லால் அமைந்த தொகைச் சொற்கள்மட்டும் நூற்றுக்கு மேல் உள்ளன. எஞ்சியவையே தமிழ்ச்சொற்கள். இவ் வடசொற்களும் ஒருசில தமிழ்ச் சொற்களும்தான் இன்றைய இலக்கியத் தமிழில் ஞகர

---

222. Accent Shift. `கால்டுவெல் இத் திரிபினை Euphonic Displacement of Vowels என்பர்.—GGDL. P. 186.

முதலோடு வாழ்ந்து கொண்டிருக்கின்றன. மொழியிடை-யில் தனித்தும் இரட்டித்தும் ஒருசில சொற்களில் ஞகரம் முன்பு வழங்கியது. அந்தச் சொற்களும் பல இன்று வழக்கிழந்தும் திரிந்தும் போயின. (காண்க: மஞ்ஞை, மிஞிறு, மிஞிலி அஞ்ஞை > அன்னை?; புஞை > புனை?) மொழியிற்றில் தொல்காப்பியர் காலத்திலேயே ஒரே ஒருசொல்லில் மட்டும்தான் ஞகரம் வழங்கியது.[223] அச்சொல் உரிஞ் என்பது இவ்உரிஞ் என்பதும் உரை (= பரவு) என்னும் முன்னைய சொல்லின் திரிந்த வடிவம். அந்த வடிவமும் பின்னர் வழக்கிழந்தது.

இன்றைய இலக்கியத்தமிழில் ஞகரம், மொழி முதலிலும் உயிரிடையும் இரட்டித்தும் சம்முன்னும் வழங்குகிறது. சம்முன் ஞகரத்தின் ஒலி மற்ற சூழல் ஞகரங்களின் ஒலியினின்றும் வேறுபட்டது என்பது முன்னர் விளக்கப்பட்டது. சம்முன்தான் இது பெரு வழக்காக வழங்குகிறது. பேச்சுத்தமிழில் ஞகரம் ஒரெழுத்தாகவே இல்லை எனலாம். இலக்கியத்தமிழில் ஞகரம் பெற்று வழங்கும் வடசொற்கள் பேச்சுத்தமிழில் அருகி விடுகின்றன. ஞகரமுதல் தமிழ்ச் சொற்கள் பேச்சு மொழியிலும் படிக்கின்ற போதும் னகர முதல்களாகத் திரிந்து ஒலிக்கின்றன:

| | | |
|---|---|---|
| ஞாயிறு | .... | னாயிறு |
| ஞான்று கொண்டாள் | | னானுக் கொண்டாள் |
| ஞொள்ளை | .... | னொள்ளை |
| ஞண்டு | .... | னண்டு |
| ஞெகிழ் | .... | னெகிழ் |

223. தொல். எழு. 80

மொழியிடையில் — உயிரிடையில் — பலருடைய பேச்சில் ஞகரம் னகரமாகவே ஒலிக்கிறது.

அறிஞர் — அறினர்
கலைஞர் — கலைனர்
கவிஞர் — கவினர்

ஒருசிலர் ஞகரத்தை இவ்வாறு னகரமாக வழங்க வேறு சிலர் அதனை -ஞ்ச்- எனவே ஒலிக்கின்றனர், எழுதுகின்றனர்: அறிஞ்சர், கலைஞ்சர், கவிஞ்சர். இக்குழப்பங்கள் எல்லாம் ஞகரம் தன் பண்டைய ஒலியை இழந்து திரிந்ததையே குறிக்கின்றன.

## 2. 27. 2. ஞகரத்தின் வரலாறு

ஞகரம் இன்று னகரமாக ஒலித்தாலும் நகரமாகத்தான் எழுதப்படுகிறது. நகரம், தகரத்தின் முன்னர்த் தவிர மற்ற சூழல்களில் னகரமாகத்தான் ஒலிக்கிறது என்பது முன்பு காட்டப்பட்டது. ஞகரம் நகரமாக எழுதப்படுவது, ஞகரம் முதலில் பல்லொலிநகரமாகத் திரிந்தது என்பதையே காட்டுகிறது. இத்திரிபுக்குப்பின்னர்த்தான் மொழிமுதல் நகரம் னகரமாகத் திரிந்தது எனலாம். ஞகரம் நகரமாகத் திரிந்தது பிற்காலப் பல்லவர்காலம் எனத் தோன்றுகிறது.[224] இக்

---

**224. ஞகரம் நகரமாகத் திரிந்தது தமிழின் வரலாற்றில் எப்போது என வரையறுப்பது எளிதாக இல்லை. அதிலே சிக்கல்கள் உள்ளன. ஒரே சொல் சங்க இலக்கியங்களில் நகரத்தோடு சில இடங்களிலும் காணப்படுகிறது.**

**(அடுத்த பக்கம்)**

காலத்திலும் இதற்கடுத்த சோழப்பேரரசர்கள் காலத்திலும் வெளியிடப்பட்ட கல்வெட்டுக்களில் 'ஞாயிற்று' என்ற சொல் 'நாயிற்று' எனவே பல இடங்களில் எழுதப்பட்டுள்ளது[225].

ஞகரம், தமிழில் பிற எழுத்துக்களாகத் திரிந்தும் பிற எழுத்துக்கள் அஞ்ஞகரமாகத் திரிந்தும் வழங்குவதைக் காணுகின்றோம்:

---

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| 1. | அகம்: | நெகிழ் | 45 இடங்களில் | ; | ஞெகிழ் | 4 | இடங்களில் |
| | குறுந் தொகை: | ,, | 17 ,, | ; | ,, | 8 | ,, |
| | நற்றிணை: | ,, | 20 ,, | ; | ,, | 8 | ,, |
| | ஐங்குறு நூறு: | ,, | 7 ,, | ; | ,, | 4 | ,, |
| | கலி: | ,, | 25 ,, | ; | ,, | 1 | ,, |
| 2. | புறம்: | நிணம் | 16 ,, | ; | ஞிணம் | 1 | ,, |
| 3. | ,, | மிஞிறு | 2 ,, | ; | ஞிமிறு | 1 | ,, |
| | கலி: | ,, | 3 ,, | ; | ,, | 1 | ,, |
| | அகம்: | ,, | 2 ,, | ; | ,, | 3 | ,, |

சங்க காலத்திலேயே இக்குழப்பம். நகரத்திற்கும் ஞகரத்திற்கும் தனித்தனியே வரையறுக்கத்தக்க சூழல்களும் இவ்விலக்கியங்களில் இல்லை; இவ்விலக்கியங்கள் நல்ல முறையில் பதிப்பிக்கப் படவில்லை என்பதையே ஒருகால் இக்குழப்பம் குறிக்கலாம்.

225. "ñ / n. In the later perled of Pallavas the dentalization of / ñ / is found to take place. This tendeucy seems to have begun in Tondai Naadu at first and spread to other places later on in coola period" ( Jayakumari in her Thesis ).

நாடு—ஞாடு; நயம்—ஞயம்

நாண்—ஞாண்; நாஞ்சில்—ஞாஞ்சில்

யமன்—ஞமன்; யாம்—ஞாம்

யாளி—ஞாளி—நாளி

யாத்தல்—ஞாத்தல்; யான்—நான்

ஞெமன்—ஞமன்—சமன்

காயா—காசா—காஞா

இந்திரசாலம்—இந்திரஞாலம்

பூனை—பூஞை—பூசை

அன்னை—அஞ்ஞை—அம்மை

இத்திரிபுகள் எல்லாம் சங்ககாலத்தை அடுத்துத் தேவார திவ்வியப் பிரபந்த காலத்தில் ஏற்பட்டவை போன்று தோன்றுகின்றன. இத்திரிபுகளில் எது எதுவாகத் திரிந்தது? எவ்வாறு? என விதிகள் வகுப்பது முடியவில்லை. மேலும் சான்றுகள் கண்டு ஆராய்ந்து முடிவு செய்யப்பட வேண்டியவை இவை.

ஞகரம் இன்றைய இலக்கியத் தமிழிலும் பழந்தமிழிலும் மலையாளத்திலும் குடகிலும் துளுவிலும் மட்டுமே உண்டு. மற்ற எந்தத் திராவிட மொழியிலும் இது ஓரெழுத்தாக இன்று வழங்கவில்லை. ஆனால் முதல் திராவிடத்தில் இதனை ஓரெழுத்தாகக் கொள்ள வேண்டும்.[226] முதல் திராவிடத்தில் ஞகரமுதற்சொற்கள் பல உண்டு. பழந்தமிழ் ஞகர முதற்சொற்கள் பலவற்றை மேலும் படைத்துக் கொண்டிருக்கலாம்.

---

226. DCPK. P 7; TVB. P. 237.

### 2. 27. 3. தமிழில் தோற்றம்

தமிழில் ஞகரம் கீழ்க்காணும் முறைகளில் பல்கியிருக்கலாம்.

1 முன்னர் யகர முதற் சொற்களாக இருந்தவை பின்னர்ப் பழந்தமிழில் ஞகரமுதற் சொற்களாகத் திரிந்திருக்கலாம்.

எ.கா.: யாளி> ஞாளி ; யாழ்> ஞாழ்

தொல்காப்பியர் யாத்தல் என்னும் வினைச்சொல் ணகரனகர மூக்கொலிகளையடுத்து ஞகரமாகத் திரிதலை எடுத்துக் காட்டுகிறார்:

ணனவென் புள்ளிமுன் யாவும் ஞாவும்
வினையோ ரனைய என்மனார் புலவர்.[227]

யாத்தல் என்னும் ஒருசொல் தவிர மற்ற எந்தச் சொல்லும் அவ்வாறு திரிதல் இல்லை என உரையாசிரியர்கள் குறிப்பிடுகின்றனர். ஆகவே இத்திரிபு ஒருகிளைமொழி வழக்காக வழங்கி யாத்தல் போன்ற சில சொற்களைத் திரித்திருக்க வேண்டும். இத் திரிபும் தொல்காப்பியர் காலத்தோடு நின்றிருக்க வேண்டும். காரணம், பின் வந்த நன்னூலார்போன்ற இலக்கணவாசிரியர்கள் இதனை இறந்தது என விலக்கியிருக்கின்றனர்.

---

227. தொல். எழு. 146.

2 முன்னர் முன்னண்ணவுயிர் முதற்சொற்களாக இருந்தவையும் உடம்படுமெய் போன்று முன்வீழொலியாக[228] ஞகரத்தையோ நகரத்தையோ பெற்றிருக்கலாம். நகரம் பின்னர் ஞகரமாகத் திரிந்திருக்கலாம்:

எ. கா.: ஈர், ஈரம் — நீர்
நாடு > ஞாடு

3 இந்நிகழ்ச்சிகள் எல்லாம் வரலாற்றுக் காலத்துக்கு முற்பட்டவை. முன்னண்ண ஒலிகளையடுத்து வழங்கும் நகரம் பல இடங்களில் ஞகரமாகத் திரிந்ததைத் தமிழின் வரலாற்றுக் காலத்தில் காணுகிறோம்.

எ. கா.: அறிஞர் < அறிநர் < அறியுநர்
பைஞிணம் < பைநிணம்
செய்ஞின்ற < செய்நின்ற[229]

இடைக்காலத்து இலக்கண நூல்களான வீரசோழியமும் நன்னூலும் அண்ணவொலிகளையடுத்து நகரம், ஞகரமாதலைக் குறிக்கின்றன. நன்னூல் இத்திரிபினைப் போலி என எடுத்துக்காட்டுகிறது; விதியாக வரையறுக்கவில்லை;

---

228. On - glide

**229.** பல்லவர்காலக் கல்வெட்டுக்களில் முந்நாழி என்னும் சொல் முஞ்ஞாழி எனவும் நகர் என்னும் சொல் ஞகர் எனவும் எழுதப்பட்டிருக்கின்றன.

ஏழரைநாட்டுச்சனி என ஒரு தொடர் நம்மிடை வழங்கிக் கொண்டிருக்கிறது. இங்கு நாட்டு என்னும் சொல் யாட்டை (யாண்டு) என்பதன் திரிபுதான் போலும். ஏழரை நாட்டுச்சனி < ஏழரைஞாட்டுச்சனி < ஏழரையாட்டு (யாட்டை)ச் சனி. ஐகாரத்தை அடுத்து யகரம் ஞகரமாகவும் பின் நகரமாகவும் திரிந்ததை இங்குக் காணுகிறோம்.

தன் கூற்ருகவும் கூருது "என்மரும் உளரே" எனவும் "சில் வழி" எனவும் குறிக்கிறது.

ஐகான் யவ்வழி நவ்வொடு சில்வழி
ஞஃகான் உறழும் என்மரும் உளரே.[230]

நன்னூலின் கருத்துப்படியே இத்திரிபு தமிழில் ஒரு விதியாக அமையவில்லை.

ஞகரம் உற்ற பல்வேறு திரிபுகளும் அவற்றுக்கான சான்றுகளும் ஞகரத்தின் வரலாறு எத்தகையது என அறிய உதவுகின்றன. இருந்தும் அதன் வரலாற்றை உறுதியாக வரையக் கூடவில்லை. ஆனாலும் சில கருத்துக்கள் தெளிவுபடுகின்றன. ஞகரம் தமிழின் பண்டைக் காலம் முதல் ஏறத்தாழக் கி.பி 1000 வரை இலக்கியத் தமிழிலும் பேச்சுத் தமிழிலும் ஓர்எழுத்தாகவே வாழ்ந்து வந்தது. அதன்பின்னர்ப் பேச்சுத்தமிழில் சிறிது ஒலி வேறுபட்டுத் திரிந்து ஓர்எழுத்தொலியாக மட்டுமே வாழ்கிறது. ஆனல் இலக்கியத்'தமிழ் பழமையைப் போற்றி வருகிற காரணத்தால் அவ்விலக்கியத்தமிழில் மட்டும் அது ஓர்எழுத்தாக இன்றும் வாழ்கிறது.

## 2.28. ணகரம்

பழங்காலந்தொட்டு இன்றுவரைதமிழில் ஓரெழுத்தாக இது வழங்கிவருகிறது. பெரும்பாலான திராவிடமொழிகளில் இது உண்டு. ஆகவே முதல் திராவிடத்திலும் இது உண்டு என அறிஞர்கள் கொள்ளுகின்றனர். இன்றைய இலக்கியத்தமிழுக்கு இது தேவை. ஆனல் பேச்சுத்தமிழில் சில வட்டாரங்களில் இது னகரத்தோடு

230. நன். 124.

ஒன்றாகிறது. குறிப்பாகக் கொங்கு நாட்டில் ணகரம், னகரம் போன்று நுனிநா விற்றண்ணவொலியாக ஒலிக்கிறது. இத்தகைய மாற்றம் ஏழெட்டு நூற்றாண்டுகளாகவே இவ் வட்டாரங்களில் நடைபெற்று வந்திருக்க வேண்டும் எனக் கல்வெட்டுச் சான்றுகளால் உணர்கிறோம்.

### 2. 29. மகரம்

தமிழில் அன்றும் இன்றும் மாறாது ஓரெழுத்தாக வழங்கிவருகிறது. அங்குமிங்குமாகச் சிலபோது இது திரிபுகள் உற்றதுண்டு. மொழிமுதல் வகரம் மகரமாகத் திரிந்ததுண்டு.

மீசை < விசை
மானம் < வானம்
முழுங்கு < விழுங்கு
முழி < விழி

நகரம் சிலபோது மகரமானதுண்டு.

முடம் < நுடம்
முடங்கு < நுடங்கு
முனை < நுனை
மொண்டு < நொண்டு

கிளைமொழி வழக்குக்களாலும் வேறு சில காரணங்களாலும் இத்திரிபுகள் ஏற்பட்டிருக்கலாம். இவை விதிகளாக என்றும் நடைபெற்றதில்லை.

### 2. 30. நகர னகரங்கள்

தொல்காப்பியர் இவை இரண்டையும் இருவேறு எழுத்துக்கள் எனக் கொண்டிருக்கிறார். இவை இரண்-

டிற்கும் தனித்தனியே ஒலிகள் உண்டு எனவும் அவர் எடுத்துக்காட்டுகிறார். அவர் விளக்கியமுறையில் நகரம் பல்லொலி; னகரம் ஈற்றண்ணவொலி. இவை இரண்டும் அவர் காலத்தில் பொருள்வேறுபாடு செய்யப் பயன்பட்டன; ஆகவே அவர்காலத்தில் இவற்றை இருவேறு எழுத்துக்களாகவே கொள்ள வேண்டும். அற்றின் வழக்குக்கள் இவையாகும்:

ந்-, -ந்-, —, -ந், -ந்[த்.
—, -ன்-, -ன்ன்-, -ன், -ன்[ற், பிற.[231]

உயிரிடை நகரம் தொல்காப்பியர் காலத்திலும் சங்க காலத்திலும் செய்யுநர் போன்ற வினையாலணையும் பெயர்களிலும் 'பழுநி' என்னும் வினையெச்சத்திலும் மட்டுமே பெருவழக்காக வழங்கியது. இச்சொற்களெல்லாம் சங்ககாலத்தையடுத்து வழக்கிறந்தன. இறுதி நகரம் 'பொருந்' 'வெரிந்' என்னும் இரண்டே சொற்களில் வாழ்ந்து வந்தது. சங்ககாலத்தையடுத்து இச்சொற்களும் வழக்கிறந்தன. ஆகவே கி.பி. முதலாயிரத்தின் இடைப் பகுதியில் இவ்விரண்டு எழுத்துக்களும் வழங்கிய வழக்குக்கள் கீழ்க்கண்டவாறு குறைந்துவிட்டன:

ந்-, —, —, —, -ந்[த்.
—, -ன்-, -ன்ன்-, -ன், -ன்[ற், பிற.

---

231. இந்நிலை : இன்னிலை. இச்சொற்களில் நகர னகரங்கள் இரட்டித்து வருகின்றன. ஆனால் இந்நிலை இருகிளவிகளால் அமைந்து இடையே விட்டிசைப்புப் பெற்றது ஆகவே இரண்டும் ஒருசூழல் எனல் ஆகாது.

இவ்விரண்டும் இவ்வாறு வெவ்வேறு சூழல்களில் வழங்குகின்ற காரணத்தால் இவ்விடைக்காலத்தில் இவ்விரண்டையும் ஒரெழுத்தெனவும் அவ்வெழுத்திற்கு இரண்டும் எழுத்தொலிகள் எனவும் கொள்ளலாம்.

பிற்காலப் பல்லவர்காலத்தில் — அதாவது கி.பி. முதலாயிரத்தின் பிற்பகுதியில்—இந்நிலை மாற்றமுற்றது. இதனை அக்காலத்துக் கல்வெட்டு வழக்குக்கள் தெளிவாக்குகின்றன. அக்காலத்தில் ஙகரம், னகரம் போன்று ஒலிக்கத் தொடங்கி விட்டது. அதாவது அது நுனிநா வற்றண்ணவொலியாகத் திரிந்தது. இதனல் ஙகர னகர வழக்குகளில் குழப்பம் ஏற்பட்டது. கீழ்க்கண்ட சோழர் காலத்துக் கல்வெட்டுச் சான்றுகள் இதனைத் தெளிவாக்குகின்றன:

| | |
|---|---|
| திருனளுக்கும் | 10ஆம் நூற்ருண்டு |
| பங்கிரண்டாவது | ,, |
| நாயநார்கள்க்கு | ,, |
| பதிநாரும் | ,, |
| இன்னிலத்துக்கு | ,, |
| ஞையனர் | ,, |
| இன்னுயிநார் | (11ஆம் நூற்ருண்டு) |
| இன்னுயருக்கு னுன் | (12ஆம் ,, ) |
| னுட்டான்னை | ,, |

இங்கர னகரக் குழப்பம் கல்வெட்டுமொழியில் இக்காலத்தில் எண்ணற்ற இடங்களில் காணப்படுகிறது. காலம் செல்லச் செல்ல இக்குழப்பம் மிகுந்தே காணப்படுகிறது. இந்நூற்ருண்டு வரையில் இதுதான் நிலை.

இன்றைய அறிக்கைப்பலகைகளிலும் மாணவர்கள்கட்டுரை-களிலும் இக்குழப்பம் மலிந்து காணப்படுகிறது. இக் குழப்பங்கள் எல்லாம் ஏறத்தாழ ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பே நகரம் னகரத்தோடு ஒன்றானது என்பதையே சுட்டுகின்றன. இன்று இலக்கியத்தமிழில் நகரம் வழங்கும் இடங்களில் தம்முன் தவிர மற்ற எல்லா இடங்களிலும் பேச்சில் நுனிநா வீற்றண்ணவொலியாகிய னகரமே ஒலிக்கிறது என்பது முன்னர் விளக்கப்பட்டது, ஆகவேதான் இன்றைய இலக்கியத்தமிழுக்கும் பேச்சுத் தமிழுக்கும் னகரம் ஓரெழுத்தே வகுக்கப்படுகிறது; அவ் வெழுத்திற்கு னகரம் நகரம் என இரண்டு எழுத்தொலிகள் உண்டு. இம்முறையே பல்லவர்காலத்துக்கும் சோழப் பேரரசர் காலத்துக்கும் அதனை அடுத்த காலத்துக்கும் கொள்ளப்பட வேண்டும்.[232]

தொன்முதல்திராவிடத்தில் நகர ஒலியும் னகர ஒலியும் உண்டு என அறிஞர்கள் குறிப்பிடுகின்றனர். ஆனால் அவ்விரண்டையும் ஓரெழுத்தாகவே அவர்கள் வகுத்திருக்கின்றனர்[233]. இன்று எல்லாத் திராவிடமொழி-

232. தமிழ்மொழி வரலாற்றின் ஆசிரியர், கி.மு குகைக் கல்வெட்டுத் தமிழுக்கும் தொல்காப்பியர் சங்ககாலத் தமிழுக்கும் நகர னகரங்களைத் தனித்தனியே எழுத்துக்-களாக வகுக்கிறார். பல்லவர் சோழர் நாயக்கர்காலத் தமிழுக்கும் 20ஆம் நூற்றாண்டுத் தமிழுக்கும் இவ்விரண்-டையும் ஓரெழுத்தாகவே வகுக்கிறார். (HTL. PP. 42, 57, 107, 120, 121, 205)

233. அவர்கள் அறிஞர் எமனோ, கிருஷ்ணமூர்த்தி; பக். 7, DCPK.; பக். 237, TVB.

களிலும் ணகரம் உண்டு, நகரமும் எல்லாத் திராவிட மொழிகளிலும் தம்முன் வழங்குகிறது. இன்று மலையாளம் நகர ணகரங்களை இருவேறு எழுத்துக்களாகவே போற்றி வருகிறது; ஆனால் வரிவடிவில் அம்மொழி இவ்விரண்டு எழுத்துக்களுக்கும் இருவேறு எழுத்துக்களைப் பெறவில்லை! தமிழின் சங்ககாலத்தில் நகரமும் ணகரமும் இருவேறு எழுத்துக்களே. இம்மரபினையே இன்றும் தமிழின் சேய் மொழியாகிய மலையாளம் போற்றி வருகிறது. ஆனால் தாய்மொழி அதனை இழந்துவிட்டது! தொன்முதல் திராவிடத்திலிருந்து பிரிந்த பின்னரும் தொல்காப்பியர் காலத்துக்கு முன்னரும் தமிழ், நகர ஒலியினை மொழி முதலிலும் உயிரிடையும் ஈற்றிலும் வழங்கத் தலைப்பட்டிருக்கவேண்டும். அவ்வாறு வழங்கத் தலைப்படவே நகரம் ணகரத்திலிருந்து வேறுபட்டுத் தனி ஓரெழுத்தாக அமைந்துவிட்டது. இந்நிலை அன்று வழங்கிய எந்தத் திராவிட மொழியும் வளர்த்துக் கொள்ளாத ஒருபண்பாகும்.

## 2. 31. இடையின மெய்கள்

ய, ர, ல, வ, ழ, ள என்னும் ஆறு மெய்யெழுத்துக்களும் தமிழிலக்கணவாசிரியர்களால் இடையினம் என வழங்கப்படுகின்றன. நச்சினார்க்கினியர் (வல்லினத்துக்கும் மெல்லினத்துக்கும்) "இடை நிகர்த்தாய் ஒலித்தலானும் இடை நிகர்த்தாய மிடற்றுவளியால் பிறத்தலானும் இடை யெழுத்தாயிற்று" என விளக்குகிறார்[234]. 'வல்லினத்துக்கும் மெல்லினத்துக்கும் இடை நிகர்த்தாய் ஒலித்தலான் இவை இப்பெயர் பெற்றன என்பதைவிட மெய் யெழுத்துக்களுக்கும் உயிரெழுத்துக்களுக்கும் இடைநிகர்த்-

234. தொல். எழு. 21.

தவாய் ஒலித்தலான் இப்பெயர் பெற்றன என்பது பொருத்தமாகலாம். இவ்வாறே டாக்டர் மு. வ. அவர்கள் கருதுகிறார்கள்.[235] ஆனால் இன்றைய மொழியியலார் வன்மை, மென்மை, இடைமை என்னும் சொற்களைப் பயன்படுத்தி ஒலிகளை விளக்குவதில்லை. இச்சொற்கள் தெளிவான வரையறைப் பொருள் இல்லாதவை என்பது அவர்கள் கருத்து. இந்த ஆறு மெய்யெழுத்துக்களையும் அறிஞர் கால்டுவெல் அரையுயிர்கள் அல்லது தெளிவோட்டமெய்கள் என வழங்குகிறார்.[236] இந்தக் கருத்தை இன்றைக்குப் பலரும் ஏற்றுக்கொள்ளுவதில்லை. யகர வகரங்கள் அரையுயிர்கள்தான். மற்றவை அவ்வாறு கருதப்படுவதில்லை. இன்றைய ஒலியியல் கருத்துக்களின்படி இந்த ஆறு மெய்களையும் எந்தவகையிலும் ஓரினம் எனக் கொள்வதற்கில்லை. இவற்றின் தன்மை பற்றியும் வகைமை பற்றியும் முன்பே விளக்கம் தரப்பட்டது. இவ்வெழுத்துக்களும் தமிழின் ஈராயிரமாண்டுக் கால வரலாற்றில் சில பல மாற்றங்களை அடைந்தன. அவற்றைத் தனித்தனியே காணலாம்.

## 2. 32. யகரம்

### 2. 32. 1. யகர வழக்கு

பழங்காலம் தொட்டு இன்று வரை யகரம் தமிழில் வழங்கி வருகிறது; ஆனால் ஒருசில மாற்றங்களை உற்றும் உள்ளது; சில இடங்களில் கெட்டும் உள்ளது. மொழி முதலிலும் உயிரிடையும் .மொழியிடை மெய்முன்னும்

---

235. மொழிநூல். பக். 18.

236. CGDL. P, 143.

மொழியிறுதியிலும் யகரம் இலக்கியத்தமிழில் அன்றும் இன்றும் வழங்கி வருகிறது.

மொழிமுதலில் தொல்காப்பியர் காலத்தில் யகரம் ஆகாரத்துடன் மட்டுமே கூடி வழங்கியது. அவ்வாறு வழங்கிய சொற்களும் ஒருசிலவே. தொல்காப்பியர் காலத்தை அடுத்து இந்த மொழிமுதல் யகரம் கெட்டு விட்டது.

யாறு > ஆறு, யாடு > ஆடு

யாண்டு > ஆண்டு, யாமை > ஆமை

இன்றைய பேச்சுத்தமிழில் 'யார்' என்னும் ஒரு சொல்லில் மட்டும் சிலபோது மொழிமுதல் யகரம் வழங்கி வருகிறது. இந்தச் சொல்லும் பலபோது 'ஆர்' எனவே வழங்குகிறது. ஆயிரத்தைநூருண்டுகளுக்கு முன் தமிழ்ச் சொற்களில் இவ்வாறு மொழிமுதல் யகரம் கெட்டுக் கொண்டிருக்க மொழிமுதல் யகரமுடைய வடசொற்கள் தமிழில் வந்து வழங்கத் தலைப்பட்டன. இவ்வடசொற்கள் தமிழிலக்கியத்தில் யகர முதலாக வழங்கிக் கொண்டிருக்கத் தமிழ்ப்பேச்சில் யகரம் கெட்டு வழங்கிவந்தன. (இன்றைய தமிழ்ப்பேச்சில் யகரமுதற்சொற்களை அவ்வப்போது கேட்கவும் முடிகிறது.)

யோசனை — ஓசனை

யுக்தி — உத்தி

யூகம் — ஊகம்

இன்றைய பேச்சில் உயிரிடையில் யகரம் பல சொற்களில் கெட்டுள்ளது:

பெயர் — பேர், வியர்வை — வேர்வை

மற்றுஞ்சில சொற்களில் சகரமாகத் திரிந்துள்ளது:

முயல் — முசல், அயல் — அசல்

மெய்களின் முன்னரும் யகரம் கெடுதல் உண்டு:

வாய்ப்பாடு — வாப்பாடு
வாய்ப்பேச்சு — வாப்பேச்சு

இத்திரிபுகள் எல்லாம் அங்கும் இங்குமாக ஏற்பட்டவை தானே ஒழிய விதிகளாக வரையறுக்கத் தக்க முறையில் பெருவழக்கான திரிபுகள் அல்ல.

இன்றைய பேச்சில் மொழியிறுதியில் யகரம், இகரம் பெற்று வழங்குகிறது:

நாய் — நாயி, பொய் — பொய்யி

மொழியிறுதியில் கெடுதலும் உண்டு:

வாய் — வா, பாகற்காய் — பாவக்கா

## 2. 32. 2. முன்னுயிர்முன் யகரம்

மொழிமுதல் யகரம் கெட்டது மேல் விளக்கப்பட்டது. ஆனல் வேறு முறையில் இன்றைய பேச்சுத்தமிழில் மொழிமுதலில் யகரம் இடம் பெறுவதாகத் தோன்றுகிறது. முன்னுயிர்களாகிய இ, ஈ, எ, ஏ ஆகியவை மொழிமுதலில் வழங்குகின்ற போது இவற்றுக்கு ***முன் வீழொலியாக***[237] யகரம் வந்து சேர்கிறது. ஆகவே இவ்வுயிரெழுத்துக்கள் மொழிமுதலில் யி, யீ, யெ, யே

237. On-glide

ளவே ஒலிக்கின்றன. இந்நிலை ஏறத்தாழ ஆயிரம் ஆண்டுகளாகத் தமிழகத்தில் இருந்திருக்க வேண்டும் எனத் தோன்றுகிறது. காரணம் சோழப்பேரரசர் காலத்துக் கல்வெட்டுக்களிலேயே '*யிந்த, யிக்கோயில், யெழுதிவிச்சு*' முதலிய வழக்குக்கள் கிடைக்கின்றன! சென்ற நூற்றுண்டில் இவ்வாறு வழங்கியதை அறிஞர் கால்டுவெல் போன்ற மேனுட்டறிஞர்கள் கேட்டுணர்ந்து குறித்து வைத்துள்ளனர்.[238] யகரம் முன்வீழொலியாக வழங்கல் மட்டு மன்று; *பின்வீழொலி* யாகவும் முன்னுயிர்களுக்குப்பின் வழங்குகிறது. இடைக்காலந் தொட்டுக் கல்வெட்டுக்களில் இதற்கு நிறையச் சான்றுகள் உள்ளன.[239]

### 2. 32. 3. பழந்திரிபுகள

தொல்காப்பியர் காலத்தில் சொல்லின் ஈற்றில் யகரம், இகரம் போன்று ஒலித்ததாகத் தெரிகிறது. இதனைத் தொல்காப்பியர் 'இகர யகரம் இறுதி விரவும்' என்னும் நூற்பாவில் குறிப்பிடுகின்றுர். நச்சினுர்க்கினியர் இவ் விதிக்கு எடுத்துக்காட்டாக நாய் : நாஇ என்பவற்றைத் தருகிறுர்.[240] போகி > போஇ, போய் எனத்திரிந்ததற்கும் இதுவே விதி இவ் யகர இகர மாற்றம் நெடில் தொடரிலும் தொடர்மொழியிலும் நிகழ்வதாகத் தெரிகிறது.

---

238. CGDL. P. 122

239. மாணவர்கள் எழுதும் கட்டுரைகளில் முன் பின் வீழொலிகளைக் காணமுடிகிறது.

240. தொல். எழு. 58

மொழிமுதல்யகரம் கெட்டதோடன்றிக் கீழ்க்கண்டவாறு சிலபோது திரிபுற்றும் உள்ளது:

யாழ் > ஞாழ
யாளி > ஞாளி > நாளி
யமன் > ஞமன் > நமன்

'மண்யாத்த மழகளிறு,' 'மண்ஞாத்த மழகளிறுக' த் திரிந்தது இவற்றோடு உறவுடையது போலும்.[241] இங்கெல்லாம் யகரம் மூக்கொலியும் பெற்றது.

## 2. 32. 4. மொழிமுதல் யகரத்தில் ஒருபுதிர்

இடைக்காலத்துக் கல்வெட்டுக்கள் மொழிமுதல் யகரத்தைப்பற்றி ஒருபுதுக்கருத்தினை அறிவிக்கின்றன. அக்கல்வெட்டுக்களில் "இயாதாமொருவன்" என்னும் ஒரு தொடர் அடிக்கடி வழங்கப்பட்டுள்ளது. இங்கு மொழிமுதல் யகரத்தின்முன் ஓர் இகரம் சேர்ந்துள்ளது. இது ஒரு விளங்காப்புதிராகவே உள்ளது. இம்மொழிமுதல் யகரத்திற்கு இவ்விகரம் ஒருமுன்வீழொலியாக அமைந்திருக்கலாம். அப்படியானால் இவ்விகரம் ஓரளபினும் குறைந்த ஒன்றாக இருக்க வேண்டும். ஒருகால் பண்டையிலக்கணவாசிரியர்கள் குறித்த குற்றியலிகரமாக அது இருக்கலாம். ஆனால் அவ்விலக்கணவாசிரியர்கள் மொழிமுதலில் குற்றியலிகரம் வழங்குவதாகக் கூறவில்லை. தொல்காப்பியர் நன்னூலார் கருத்துப்படி இருசொற்கள் தொடரும் தொடர்களில் நிலைமொழி வல்லெழுத்துக்குப் பின்னும் வருமொழி யகரத்துக்கு முன்னும் குற்றியலிகரம்

---

241. தொல்காப்பிய உரையாசிரியர்கள் இதனைத் தருகின்றனர். தொல், எழு 146. 2. 27. 3. காண்க.

தோன்றும். இவர்கள் இவ்வாறு கூறியிருந்த போதிலும் பழந்தமிழை ஆராய்ந்து பார்க்கின்றபோது எல்லா மெய்யெழுத்துக்களுக்குப்பின்னும் யகரம் வருகின்றபோது அக்குற்றியலிகரம் தோன்றுவதைக் காணலாம். இவ்விகரத்தைத் தனியே குற்றியலிகரம் எனப் பிரித்தெடுப்பதை விட அதனை அங்கு யகரத்தின் ஒருகூறு என்றே கொள்ளலாம். ஆகவே /ய/கரம் மெய்களையடுத்து [இய்] என வழங்குகிறது எனலாம். இந்த [இய்] என்பதே மொழிமுதலிலும் வழங்குகிறது எனக்கொள்ளலாம். இவ் வழக்கு இடைக்காலம் வரையில் வழங்கி வந்தது என்பதையே அந்தக் கல்வெட்டுக்கள் அறிவிக்கின்றன.[242]

2. 32. 5. தொன்முதல்திராவிடத்தில் யகரம்

முதல்திராவிடத்தில் யகரம் இருந்திருக்க வேண்டும் என எமனோ, பரோ போன்ற திராவிட மொழியியலறிஞர்கள் கருதுகின்றனர்.[243] யகரம் அப்போது மொழிமுதலில் ஆகாரத்தோடு கூடி மட்டுமே வழங்கியது. ஆனால் இன்று தமிழ் உட்பட எல்லாத் திராவிட மொழிகளிலும் அது கெட்டு விட்டது. அம்முதல்திராவிடத்துக்குரிய மொழிமுதல் யாகாரம் தமிழ்மொழியில் ஆகாரமாகவும் தெலுங்கு போன்ற நடுத்திராவிட மொழிகளில் ஏகாரமாகவும் வழங்குகிறது இக்காரணத்தால் அறிஞர்கள் சிலர் அம்முதல்திராவிட மொழிமுதல் யாகாரம் ஆகாரத்திற்கும் ஏகாரத்துக்கும் இடைப்பட்ட முன்னண்ணவுயிராக

242. குற்றியலிகரம் பற்றிய கருத்துக்களைச் சார்பெழுத்துக்கள் என்னும் பிரிவில் காணலாம்.

243. DED. காண்க; DCPK.. பக். 7; TVB. பக் 287.

அன்று வழங்கியிருக்க வேண்டும் எனக் கருதுகின்றனர்.[244] ஆனால் உறுதியாக ஒன்றும் கூறுவதற்கில்லை.

2.33. வகரம்

அன்று தொட்டு இன்றுவரையில் தமிழில் மாற்றங்கள் அடையாது வழங்கிவரும் எழுத்துக்களுள் இதுவும் ஒன்று. இது மொழிமுதலில் வழங்குகிறது; ஆனால் இதழ்குவி யுயிர்களாகிய உ, ஊ, ஒ, ஓ ஆகியவற்றோடு சேர்ந்து மொழிமுதலில் வழங்குவதில்லை. தொல்காப்பியரே இவ் வியல்பினைக் குறித்துள்ளார். உ-, ஊ-, ஒ-, ஓ-, ஆகிய-வற்றுக்கும் வு-, வூ-, வொ-, வோ- ஆகியவற்றுக்கும் இடையே போதிய வேறுபாடு இல்லை போலும். இதுவே அவ்வியல்புக்குக் காரணம். இன்றும் மொழிமுதலில் பின்னுயிர்களுக்குமுன் வகரம் முன்வீழொலியாக வந்து வழங்குவதைக் காணலாம்.[245]

சிலபோது மொழிமுதல் வகரம் மகரமாகிறது:

வானம் > மானம்
விழி > முழி
விழுங்கு > முழுங்கு

மகரம் சிலபோது வகரமானதாகவும் தெரிகிறது:

மழி > வழி

---

244. இவ்வாறு கருதுவர் திராவிட மொழியியறிஞர் கே. வி. சுப்பையா அவர்கள்: (Dravidic Studies II)

245. ஒருமுறை ' வுயிர் பசி ' என்னும் ஒருநாடகம் சென்னையில் விளம்பரப்படுத்தப் பட்டது.

உயிரிடையில் ஒற்றைப்பகரம் வகரமாகத்திரிந்துள்ளது. பழந்தமிழிலேயே இத்திரிபினைக் காண முடிகிறது:

| | | |
|---|---|---|
| அளபு | > | அளவு |
| முடிபு | > | முடிவு |
| தபு | — | தவறு |
| காண்பார் | — | (காணுபார்)—காணுவார்[246] |

உயிரிடைப் பகரம் பெற்ற வடமொழிச் சொற்கள் உயிரிடை வகரச் சொற்களாகவே தமிழில் திரிந்துள்ளன:

| | | |
|---|---|---|
| கோபம் | > | கோவம் |
| தபஸ் | > | தவம் |
| பாபம் | > | பாவம் |

வடமொழியில் மொழிமுதலில் குரலொலிப்பகரம் பெற்ற சொற்கள் தமிழில் வகர முதல்களாகத் திரிந்துள்ளன:

| | | |
|---|---|---|
| ப்ருந்தாவனம் | > | விருந்தாவனம் |
| பில்வம் | > | வில்வம் |
| ப்ருது | > | விருது |
| பாணம் | > | வாணம் |

ஆனல் வகரமுற்ற எந்தத் திரிபினையும் ஒருவிதியாக வரையறுக்க முடியவில்லை.

வகரம் தமிழில் மொழிமுதலிலும் மொழியிடையிலும் அன்றும் இன்றும் வழங்கிவருகிறது. பழந்தமிழில் மொழியிறுதியில் அது, அவ், இவ், உவ், தெவ் என்னும் நான்கு சொற்களில் மட்டும் வழங்கிவருகிறது. ஆனல்

246. இவ்வியலின் 2.28 காண்க.

சங்ககாலத்தையடுத்து அவையும் வழக்கிழந்தன. இன்றைய தமிழில் வகரம் மொழியிறுதியில் வழங்குவதில்லை.

## 2. 34. ரகரம்

இதுவும் தமிழில் நிலைபேறுற்ற ஓரெழுத்து. ஆனால் பண்டு பெற்ற ஒலிப்பு முறைகளுடனேயே இது இன்றும் வழங்குகின்றதா என்று உறுதியாகச் சொல்லமுடியாது. தொல்காப்பியர் பிறப்பியலில் ரகரத்தையும் ழகரத்தையும் வேறுபாடு செய்யாது ஒன்றாகவே கூறியுள்ளார். இவ்விரண்டு மெய்களும் உண்மையில் பலவகையில் உறவுடையன. ஒன்று மற்றொன்றாகத் திரிந்ததும் உண்டு:

இழு — ஈர்

தமிழ்மொழியின் வாழ்வில் றகரம் திரிந்து ரகரமான வரலாறு முன்பே விளக்கப்பட்டது. இவ்வியல் 2.24 காண்க

பழந்தமிழிலும் இடைக்காலத் தமிழிலும் ரகரம் மொழி முதலில் வருவதில்லை. ஆனால் இன்றைய தமிழில் தமிழ்ச் சொற்களே திரிந்து ரகரமுதல்கள் அமைந்துள்ளன:

ரெண்டு, ரொக்க, ரொம்பு, ராவு.

அயல் மொழிகளுக்குரிய ரகரமுதற்சொற்கள் பலப்பல இன்று தமிழில் ரகரமுதற்சொற்களாகவே வழங்கிக்கொண்டிருக்கின்றன. இவற்றின் வழக்கால் இன்றைய தமிழ்மக்கள் ரகரமுதற்சொற்களைப் பேசும்பயிற்சியினைப் பெற்றுவிட்டனர் எனலாம். ஆனால் கடந்த காலத்தில் ரகரமுதற்சொற்கள் அயல்மொழிகளிலிருந்து தமிழிற்கு வருமானால் அவை அ, இ, உ என்னும் மூன்றுயிர்களுள் ஒன்றை முன்பெற்று வழங்கி வந்தன. நன்னூல் இலக்கணமும் இதனை வரையறை செய்துள்ளது.

எ.கா.: இராமன், இராக்கதர்
அரம்பை, அருவம்
உரோகிணி, உரோமம்
உருவா, உருமாலை

இந்தவிதிகள் இன்று தமிழுக்குச் செயற்கையாகத் தோன்றுகின்றன. காரணம் தமிழ்ச்சொற்களே அவ்வாறு வழங்கத் தலைப்பட்டுவிட்டன.

2.35. லகரம்

தமிழில் இதுவும் ஒருநிலைபேறுடைய எழுத்தே தொல்காப்பியர் கருத்துப்படி இது பல்லொலியாகும் ஆனால் இன்று தமிழகத்தில் எங்கும் இது பல்லொலியாக ஒலிப்பதில்லை; நுனிநா விற்றொலியாகவே ஒலிக்கிறது. மேற்குத் தமிழகத்தின் —கொங்குநாட்டின்— பேச்சில் ழகரமும் ளகரமும் திரிந்து லகரமாயுள்ளன. ஆயிரமாண்டுகளுக்கு முன்பே கல்வெட்டுக்களில் ழகரமும் ளகரமும் லகரமாக எழுதப்பட்டன.[247] நாள் செல்லச்செல்ல இவை மூன்றும் ஒன்றாயின போலும்.

லகரம் தமிழில் மொழிமுதலில் வழங்குவதில்லை; முதல் திராவிடத்திலும் மொழிமுதலில் வழங்கியதில்லை. ஆனால் இன்று ஒருசில திராவிடமொழிகள் திராவிடச்சொற்களிலேயே லகரத்தை மொழிமுதலில் கொண்டு விளங்குகின்றன. இன்றைத்தமிழும் ஒருசில பேச்சுவழக்குச் சொற்களில் லகரத்தை முதலில் கொண்டிருக்கின்றது:

---

**247.** இவ் ழகரளகரக் குழப்பத்தினைத் திரு. ஜெயக்குமாரியவர்கள் தம் ஆய்வுரையில் எடுத்துக்காட்டுகின்றனர்

லாக்காத் தூக்கினன் (அலாக்காக...)
லாத்தினன் (உலாத்தினன்)
லாவாத்தா (நிலாவாத்தாள்)

அயல் மொழிகளுக்குரிய லகரமுதற்சொற்கள் பல இன்றைத் தமிழில் வழங்கிக் கொண்டிருக்கின்றன. அவை லகரமுதல்களாகவே உள்ளன. இடைக்காலத் தமிழிலும் பழந்தமிழிலும் இத்தகைய லகரமுதற்சொற்கள் இகர உகரங்களில் ஒன்றைத் தம்முன் பெற்று வழங்கின:

இலங்கை, இலேசு
உலோபி

மொழியிடையில் லகரம் அன்றும் இன்றும் வழங்கி வருகிறது. மொழியிறுதியில் அன்று வழங்கியது; இன்றைய பேச்சில் கெடுகிறது; சிலபோது உகரமும் பெறுகிறது:

வந்தால் > வந்தா
மயில் > மயிலு[248]

## 2.36. ளகரம்

லகரத்தைப் போன்று இவ்வளகா ளகரம் கிலேபே றுடையது என்று கூறமுடியாது. ஆனாலும் முதல்

---

248. ரகரமும் லகரமும் இன்று பெரும்பாலும் அயல் மொழிச் சொற்களிலும் சிறுபாலும தமிழ்ச் சொற்களிலும் மொழிமுதலில் வழங்கி வருகின்றன. இப்பண்பு தமிழர்கள் தம்பேச்சில் புதிதாகப் பெற்ற ஒருபழக்கம். ஆனாலும் இப்பழக்கத்தில் இன்னும் தடுமாற்றம் உண்டு என்பதைக் கீழ்வரும் வழக்குக்கள் காட்டுகின்றன.

ராரி (லாரி, ராந்தல் (லாந்தல்)
ரேபராபீசர் (லேபராபீசர்), ராவம் (லாபம்)
ரைட் (லைட்ட்), லயிலு (ரயில்)
லவிக்க (ரவிக்கை), லப்பர் (ரப்பர்)

திராவிடத்தின் காலந்தொட்டு இன்றுவரை இது தமிழில் வழங்கிவருகிறது. தென்தமிழகத்தில் ழகரம் திரிந்து ளகரமாகவே வழங்குகிறது. அங்கு ளகர லகர வேறுபாடு உண்டு. ஆனல் மேற்குத்தமிழகத்திலும் வடதமிழகத்திலும் ளகரமும் லகரமும் வேறுபாடற்று வழங்குகின்றன. அதாவது ளகரம் லகரமாகத்திரிகிறது. சிலபோது ளகரம் ழகரமாகத் திரிந்து ஒலிப்பதை இன்றைய பேச்சில் கேட்கமுடிகிறது:

கேழ்விப்பட்டேன்

இக்கேள்வி என்னும் சொல் பல நூற்ருண்டுகளாகவே 'கேழ்வி' என வழங்கியதாகத் தெரிகிறது. மேற்குறிப்பிட்ட எல்லாக் குழப்பங்களும் ஏறத்தாழ ஆயிரமாண்டுகளாகவே உண்டு என்பதைக் கல்வெட்டுவழக்குக்கள் தெரிவிக்கின்றன. பழந்தமிழில் லகர ளகர ழகரம் என மூன்று புறவளியெழுத்துக்கள் வழங்கிய நிலை இன்று மாற்றமுற்றது; பலகிளைமொழிகளில் (எவையாயினும்) இரண்டு புறவளியெழுத்துக்களே வழங்குகின்றன.

## 2.37. ழகரம்

இது தமிழுக்கே உரிய சிறப்பெழுத்து எனத் தமிழிலக்கணங்கள் போற்றுகின்றன. ஆனல் மிகப்பல திரிபுகளுக்கு ஆட்பட்ட எழுத்துக்களுள் இதுவும் ஒன்று. பண்டும் இன்றும் இது தமிழில் உண்டு எனலாம். ஆனல் மிகப்பெரும்பாலான தமிழர்கள் இதன் ஒலியையும் வழக்கையும் பள்ளியில்தான் கற்றுக்கொள்ளுகின்றனர்! சோழநாட்டு (தஞ்சாவூர் மாவட்டத்து)ப் பேச்சுத் தமிழில் இது இன்றும் ஓரளவு வழங்குகிறது.

தென்தமிழகத்தில் ளகரமாகத் திரிந்துவிட்டது ஈழத்திலும் அவ்வாறே ளகரமானது. வடதமிழகத்தில் யகரமாகவும் சென்னை தென்னார்க்காடு வட்டாரங்களில் ஷகரமாகவும் வழங்குகிறது.[249] ஆனால் தமிழகத்துப் பிராமணர் பேச்சுமொழியில் வாழ்கிறது; இன்றைய இலக்கியத் தமிழில் பரந்து வழங்குகிறது. ழகரம் உற்ற திரிபுகள் எல்லாவற்றையும் கடந்த நூற்றாண்டுகளில் தமிழகத்துக்கு வந்து வாழ்ந்த ஐரோப்பியர்கள் எடுத்துக்காட்டியுள்ளனர்.[250] ழகரம் ளகரமாகத் திரிந்ததற்குச் சான்று முதன் முதலில் கி. பி. 9-ஆம் நூற்றாண்டுக்கு உரிய பல்லவர் கல்வெட்டுக்களில் கிடைக்கின்றது; சோழப் பேரரசர்கள் காலத்தில் இத்திரிபு பரவிப் பெருவழக்காகியது.

ழகரம் ளகரமாகத் திரிந்ததைப் பதினோராம் நூற்றாண்டுக்குரிய *வீரசோழிய* இலக்கண ஆசிரியர் உணர்ந்து உடன்படுகிறார். அவர் தம் நூலில் ளகரத்துக்கு உரிய விதிகளையெல்லாம் ழகரத்துக்கும் வகுக்கிறார். அவர் விதிப்படி ழ் + த் = ட்/ட்ட் எனவும் ழ்+ந்=ண எனவும் திரிபுகள் அமையும். இவ்விதிகளுக்கு ஏற்ற வழக்குக்களும் பிறவும் அக்கால இலக்கியத்திலும் கல்வெட்டுக்களிலும் கிடைக்கின்றன :

திகழ் + தசக்கரம் = திகடசக்கரம்
(கந்தபுராணம், காப்பு)

---

**249. பழம் : பயம், திருவிழா : திருவிஷா என்பவை எடுத்துக்காட்டுக்கள்.**

**250. CGDL. P. 144**

வாழ் + நாட்கள் = வாணாட்கள்
(சிலம்பு, 28—125)
குமிழ் + சிரிப்பு = குமிண்சிரிப்பு (தேவாரம்)
புகழ் + பட = புகட்பட
கீழ் + நோக்கிய = கீணோக்கிய
சோழ + நாடு = சோணாடு[251]
(இவை கல்வெட்டுக்களில்)

தமிழிலிருந்து பிறந்த மலையாளம் இத்திரிபுகளை விதியாக ஏற்றுக்கொண்டது.

ழகரமும் ரகரமும் உறவுடைய ஒலிகள். தொல்காப்பியரும் ழகரத்தையும் ரகரத்தையும் இணைத்தே இரண்டுக்கும் ஒருபிறப்பே கூறியுள்ளார் என்பது முன்னர் விளக்கப்பட்டது. ழகரம் சிலபோது ரகரம் ஆவதைக் காண முடிகிறது:

இழு....ஈர்

ழகரமும் ரகரமும் மொழிமுதலில் வழங்குவதில்லை; மொழியில் இரட்டித்து வருவதும் இல்லை. மற்ற மெய்யெழுத்துக்களுக்கும் இவற்றுக்கும் இடையுள்ள வேறுபாடு இதுவாகும். சிலபோது மொழியிடையில் ழகரம் கெடுதலும் உண்டு. இது பேச்சில் மிகுதி:

பொழுது—போது
வாழ்வரசி—வாவரசி (நெல்லைவழக்கு)
குழந்தை—கோந்த (சென்னைவழக்கு)

---

251. 'தமிள்' 'தமிட்பாஷை' முதலியவழக்குகள் 16-ஆம் நூற்றாண்டில் இருந்திருக்கின்றன. (கிரீசித்தியானி வணக்கம் 1759) இன்று 'சூட்சி' என்று எழுதவும் பேசவும் கேட்கிறோம்.

வடமொழிக்குரிய வளைநாவெழுத்துப் பெற்ற சொற்கள் பண்டு தமிழுக்கு வந்தபோது அவ்வளைநாவெழுத்துக்கள் தமிழில் ழகரமாகத் திரிந்தன.[252]

| | | |
|---|---|---|
| நாழி | < | நாடி |
| உழை | < | உஷா |
| துழாய் | < | துளசி |
| பாழை | < | பாஷா |

ழகரம், திராவிட மொழிகளிலேயே தமிழில்தான் பெருவழக்காக வழங்கியது; தமிழில் மட்டுமல்லாது பழ மலையாளத்திலும் பழங்கன்னடத்திலும் பழந்தெலுங்கிலும் வாழ்ந்தது; இன்றை மலையாளத்திலும் துதமொழியிலும் படகமொழியிலும் இன்று வாழ்கிறது; மற்ற திராவிட மொழிகளிலும் ஒருகாலத்தில் இருந்திருக்க வேண்டும்; ஆனல் அம்மொழிகளில் எல்லாம் பல்வேறு ஒலிகளாகத் திரிந்து விட்டது. இக்காரணங்களால் இவ்ழகரத்தை முதல்திராவிடத்துக்கு உரிய ஓரெழுத்தாகக் கொள்ள வேண்டும்.[253]

ḏ ĭ ụ ṭ ḻ ì ś ṡ ũ
ô ε
ε̃ à
ā ž ụ ṡ ī ṙ ṣ í ž

---

252. ஒருகால் இந்தச்சொற்கள் தமிழுக்கே உரியன வாகவும் இருக்கலாம்.

253. Tamil ழ, LVR காண்க.

# உயிரெழுத்துக்கள்

3.0. தொல்காப்பியம் நன்னூல் முதலான எல்லா இலக்கண நூல்களும் தமிழில் உயிர்கள் பன்னிரண்டு எனக் கொள்கின்றன. இன்றைத்தமிழிலும் அவை உண்டு. மெய்யெழுத்துக்களை ஆராய்ந்தவாறே உயிரெழுத்துக்களையும் இங்கு ஆராயலாம். (காண்க: 2. 1. 0)

## 3. 1. குறில் நெடில் வேற்றுமை

தமிழுயிரெழுத்துக்கள் குறிலும் நெடிலுமாக அமைந்திருக்கின்றன. ஒருநொடிப்பொழுது (அல்லது ஓரிமைப் பொழுது) இயலுகின்றவை குறில்கள் அல்லது குற்றுயிர்கள்; இருநொடிப்பொழுது இயலுகின்றவை நெடில்கள் அல்லது நெட்டுயிர்கள். இந்நிலை இந்தியமொழிகள் எல்லாவற்றிலும் உண்டு எனத் தெரிகிறது; பிறஇன மொழிகளிலும் உண்டு. தமிழில் ஒரெழுத்தே குறிலாகவும் நெடிலாகவும் விளங்குகிறது. இவ்வாறு குறில் நெடிலாக விளங்குபவை ஐந்து எழுத்துக்கள் உண்டு. ஆகவே இவையே பத்து எழுத்துக்கள் என இலக்கணவாசிரியர்களால் கணக்கிடப்படுகின்றன. பன்னிரண்டுள் மற்ற இரண்டும் நெடில்களாம். குறில்-நெடிலாக விளங்குபவற்றை இன்றைய மொழியியலார் பத்து எனக்கொள்ளாது எளிமைப்படுத்தி எழுத்துக்களாக வகுப்பர். குறில்-நெடிலாக

விளங்கும் ஐந்தினையும் ஐந்து எழுத்துக்களாகவே வகுத்துக் கொண்டு "நெடில்" என்னும் கருத்தினை வேறு ஓரெழுத்தாக அவர்கள் வகுப்பர்.[1] அதற்கு இருபுள்ளிகளாலாகிய ஒரு குறியீடோ அல்லது எழுத்துக்கு மேலிடத்தக்க ஒரு படுக்கைக்கோடோ தருவர்.[2] இவ்வாறாக மொழியில் ஐந்து நெடில்கள் குறைந்து அவற்றிற்குப் பதிலாக 'நெடுமை' ஓரெழுத்தாக இடம் பெறுகிறது. இவ்வாறு உயிரெழுத்துக்களை வகுத்தல் ஒருமுறை. இவ்வாறல்லாது குறில்களையே எழுத்துக்களாக வகுத்துக்கொண்டு நெடில்களுக்கு அவற்றை இரட்டித்து எழுதுதல் மற்றொருமுறை. (எடுத்துக்காட்டாக 'ஆல்' என்பதை 'அஅல்' எனவும் 'ஏர்' என்பதை 'எஎர்' எனவும் எழுதுவது இம்முறை.) இம்முறையில் 'நெடுமை' ஓரெழுத்தாக அமைதலும் இல்லையாகிறது. (தமிழ் மெய்யெழுத்துக்களை இரட்டித்து எழுதுதலை இங்குக் கருதலாம். இரட்டித்து எழுதப்படும்

---

1. **Length is a phoneme, i. e., /:/**

2. **இன்றும் எழுதும் தமிழில் குறில்களை எழுதியே அவற்றுக்குக்கீழும் மேலும் விலங்கிடுதல் (எ.கா.: அ : ஆ, கி : கீ) சுழித்தல் (எ. கா.: ஒ : ஓ), காலிடுதல் (எ. கா.: க : கா) முதலிய குறியீட்டு முறைகளைக் கொண்டிருக்கிறோம். இவையெல்லாவற்றையும் ஒரே குறியீடாக அமைப்பது போன்றதே இங்குக் குறிக்கப்படும் முறை. தமிழ்ச்சொற்களை ஆங்கிலத்தில் பெயர்த்தெழுதும்போது தெளிவுக்காக இக்குறியீடுகளை இன்று நாம் பயன்படுத்துகிறோம். எ. கா.: காப்பியர் Kāppiyar. Tamil Lexicon நூல் முழுவதும் இம்முறையையே பின்பற்றுவது காண்க. இதனால் Tamil Lexicon-க்கு உண்மையில் ஐந்து உயிர்கள் குறைந்து விடுகின்றன, ஒரு நெடுமை இடம்பெறுகிறது. S P S T. இவ்வாறே கொள்கிறது.**

மெய்களை மெய் நெடில்கள் எனலாம். ஆனால் இலக்கண வாசிரியர்கள் அவ்வாறு கருதுவதில்லை. உயிர்களைப் போன்று அவற்றுக்கு வேறுகுறியீடுகளும் தருவதில்லை.) இந்தமுறையால் குறில் நெடிலாக விளங்கும் பத்து உயிர்கள் ஐந்து உயிர்களாகக் குறைந்து விடுகின்றன. இம்முறையே சிறந்தமுறை. இந்நூலுள் இம்முறையே மேற்கொள்ளப் படுகிறது. இதனால் உயிரெழுத்துக்களின் தொகை ஐந்து குறைகிறது.

## 3. 2. அகர ஆகாரங்கள்

இவை மொழிமுதலிலும் மொழியிடையிலும் மொழிக் கடையிலும் வழங்குகின்றன. அவற்றின் தன்மையில் வேறுபாடுண்டு.

மொழி முதல் அகரம். இதழ்கள் இயல்பு நிலையில் அமைந்திருக்கவும் நாவும் இயல்பு நிலையில் தாழ்ந்து படிந்திருக்கவும் வாயகம் சிறிதே திறக்கப்பட்டு மூச்சுக் காற்றுத் தடையேதுமின்றி வெளியேறுதலால் இவ் அகரம் பிறக்கிறது; ஓரிமைப்பொழுதே கால அளவுடையது. ஆகவே இதனை இயல்பிதழ்நாத்தாழொலி[3] எனலாம்; [A] என்னும் குறியீட்டால் எழுதலாம்.

மொழியிடை அகரமும் இவ்வாறே பிறக்கிறது.[4]

எ. கா. : அழகு

---

3. Lip-normal low vowel

4. உயிரெழுத்துக்கள் பற்றிய கால்டுவெலின் கருத்துக்கள் தெளிவாகவும் வரையறையோடு கூடியனவாகவுந் தோன்றவில்லை; அவை பொதுவான கருத்துக்களே

மொழிக்கடை அகரம் இதழ்கள் மிகச்சிறிதே விரிந்திருக்க முன்நா மிகச்சிறிதே மேலெழ வாயகம் சிறிதே திறக்கப்பட்டு மூச்சுக்காற்றுத் தடையேதுமின்றி வெளியேறுதலால் இவ் அகரம் பிறக்கிறது; ஓரிமைப்பொழுதே கால அளவுடையது. அதனை இதழ்விரிமுன்நா உயர் தாழொலி[5] எனலாம்; [a] என்னும் குறியிட்டால் எழுதலாம். மொழிக்கடை அகரம் மட்டுமல்லாது மெல்லின இடையின மெய்களுக்குமுன் ஈற்றசையில் விளங்கும் அகரமும் இவ்வாறே ஒலிக்கின்றது.[6]

எ. கா. : பல வந்தன; அவர் ஐயர்.

ஆகாரம் அகரத்தின் நீட்சியே; இரண்டு இமைப்பொழுதுடையது. இவ்வாகார நெடில் ஒருசிறுவேறுபாடும் கொண்டுள்ளது. அகரப்பிறப்பிற்கு அமைவதைவிட வாயகம் சிறிது மிகத் திறந்திருக்க ஆகாரம் பிறக்

---

அவற்றின் பிறப்பியல்புகளைக் கூறுது அவர் அவை உறும் மாற்றங்கள் பற்றிப் பெரிதும் பேசுகிறார். அகரம்பற்றிய அவர் கருத்தைக் காணலாம்: 'In Tamil *a* is the heaviest of all the simple vowels, and therefore the most liable to change.' —P. 133, CGDL.

5. Lip-spread front high low vowel

6. 'The vowel a occurring in the last syllable of a word ending in ன, ண, ர, ழ, ல, ள, acquires a slender sound resembling that of e —e.g., avar, Tamil, they (honorifically, he) is pronounced aver.'—P. CGDL.

Iyemperumal, Iyer முதலான வழக்குக்கள் இதனைத் தெளிவாக்குகின்றன.

கிறது. இதனை [AA] என இரண்டு அகரங்களால் எழுதலாம்.

எ. கா.: ஆண்புரு அழகானதா?

**அகர எழுத்தும் அதன் எழுத்தொலிகளும் :-**

/அ/ : [a] மொழிக் கடையில்
[A] மற்ற சூழல்களில்

**3. 3. இகர ஈகாரங்கள்**

இவை மொழியின் முதலிலும் இடையிலும் ஈற்றிலும் வழங்குகின்றன. ஈகாரம் மொழிக்கடையில் வழங்குதல் அரிது.[7] இவற்றின் தன்மையில் வேறுபாடுண்டு.

**மொழிமுதல் இகரம்.** இதழ்கள் விரிந்திருக்க முன்நா வல்லண்ணம் நோக்கி எழுந்து உயர்ந்து நிற்கப் பின் நாவின் இருபுற விளிம்புகளும் சிறிதே உயர்ந்து மேற் கடைவாய்ப்பற்களின் அடிவிளிம்புகளை மெல்லத் தொட்டு நிற்க வாயகம் இயல்பு நிலையில் திறந்திருக்க மூச்சுக்காற்று நெருக்கலுற்றுத் தடையேதுமின்றி வெளியேறுவதால் இவ் இகரம் பிறக்கிறது. இது ஓரிமைப்பொழுதே கால அளவுடையது; பின்நா உயர்ந்து மூச்சுக்காற்று நெருக்க லுறுதலால் சிறிதே உரைவுற்று இவ்இகரம் யகரப்பண்பு பெறுகின்றது. ஆகவே இதனை **யகரப் பண்புற்ற விரி**

---

7. ஈகாரம் நீ, தேனீ, ஈ என்னும் சொற்களில் கடையில் வழங்குகிறது, ஆனால் இது மொழிமுதல் எனவும் கொள்ளலாம். ஈகாரம் ஈற்றில் விளியில் வழங்குவது உண்டு. எ. கா.: உந்தீ பற.

யிதழ் முன்நாவுயரொலி[8] எனலாம். இதனை [ʸi] என்னும் குறியிட்டால் எழுதலாம்.

எ. கா. : இனிமை இன்பம்

மொழியிடை இகரம் இதழ்கள் விரிந்திருக்க முன்நா வல்லண்ணம் நோக்கி எழுந்து உயர்ந்து நிற்க வாயகம் இயல்புநிலையில் திறந்திருக்க மூச்சுக்காற்றுத் தடையேது மின்றி வெளியேறுதலால் இவ் இகரம் பிறக்கிறது. பின் நாவுயர்ந்து மூச்சுக்காற்று நெருக்கலுறல் பெரும்பாலும் இங்குஇல்லை. இதுவும் ஓரிமைப்பொழுதே கால அளவுடையது. இதனை விரியிதழ் முன்நா வுயரொலி[9] எனலாம்; [i] என்னும் குறியீட்டால் எழுதலாம்.

மொழிக்கடை இகரமும் மொழியிடை இகரம்போன்றே பிறக்கிறது.

எ. கா. : இவள் இனிய கனி

இகரம், தான் வழங்கும் சொல்லில் வல்லண்ண ஒலிகள், வளைநா ஒலிகள் அடுத்திருக்க வருமானால் தானும் நடுவல்லண்ண ஒலியாக விளங்குகிறது. அப்போது இதழ்கள் விரிந்திருக்க நடுநா வல்லண்ணம் நோக்கி எழுந்து உயர்ந்து நிற்க வாயகம் இயல்புநிலையில் திறந்திருக்க மூச்சுக்காற்றுத் தடையேதும் இன்றி வெளியேறுகிறது. நாவுயர்ந்து மூச்சுக்காற்று நெருக்கலுறல் இங்கில்லை. அதுமட்டுமல்ல; நா, தாழுயர்நிலைவரையில் தாழ்கிறது. இதழ்கள் மேலும் சிறிது விரிகின்றன. இதுவும் ஓரிமைப்

8. Palatalized lip-spread front high vowel
9. Lip-spread front high vowel

பொழுதே கால அளவுடையது. இதனை விரியிதழ் நடுநாத்தாழுயரொலி[10] எனலாம். [ i̱ ] எனக்குறிக்கலாம்.

வல்லண்ண ஒலிகள் இதனைப் பாதித்தலால் இது அவ்வாறு ஒலிக்கிறது. வளைநாஒலிகளை அடுத்து வருகின்ற போது இகரம் வளைநாப்பண்பினைப் பெறுகிறது. பொதுவாகவே வளைநாஒலிகளை அடுத்து வழங்கும் ஒலிகள் எல்லாம் இப்பண்பினைப் பெறுதல் உண்டு.

எ. கா. : கிண்ணி கிளர் ஒளி கீழே கிடந்தது.

ஈகாரம் இகரத்தின் நீட்சியே; இரண்டு இமைப் பொழுதுடையது; ஒரு வேறுபாடும் கொண்டது. இகரத்திற்கு விரிவதைவிட இதழ்கள் சிறிது மிக விரிந்திருக்க ஈகாரம் பிறக்கிறது. இதனை [i i] என இரண்டு இகரங்களால் எழுதலாம்.

எ. கா. : தேனீ ஈ

இகர எழுத்தும் அதன் எழுத்தொலிகளும் :-

/இ/ : [ʸi] மொழி முதலில்

[ i̱ ] வல்லண்ணஒலிச் சூழல்களில்

[i] மற்ற சூழல்களில்

### 3. 4. உகர ஊகாரங்கள்

உகரம் மொழிமுதலிலும் இடையிலும் கடையிலும் வழங்குகிறது. ஊகாரம் மொழிமுதலிலும் இடையிலும் மட்டுமே வழங்குகிறது; கடையில் (விளியில் தவிர) வழங்குதல் இல்லை.

---

10. Lip-spread central low high vowel

மொழிமுதல் உகரம். இரண்டிதழ்களும் இணைந்து நெருங்கிக் குவிந்திருக்கப் பின்நா மெல்லண்ணம் நோக்கிச் சிறிது எழுந்து உயர்ந்து நிற்க மூச்சுக்காற்றுத் தடையேதுமின்றி வெளியேறுதலால் இவ்உகரம் பிறக்கிறது. இதழ்கள் இணைந்து நெருங்கிக் குவிதலால் மூச்சுக்காற்றுச் சிறிதே உரைவுற இவ்உகரம் வகரப்பண்பும் சிறிதே பெறுகிறது. இது ஓரிமைப்பொழுதே கால அளவுடையது. ஆகவே இதனை *வகரப்பண்புற்ற குவியிதழ்ப்பின்நாவுயரொலி*[11] எனலாம்; [ᵛu] என்னும் குறியீட்டால் எழுதலாம்.

மொழியிடை முதலசை உகரம். இரண்டிதழ்களும் இணைந்து குவிந்திருக்கப் பின்நா மெல்லண்ணம் நோக்கி எழுந்து உயர்ந்து நிற்க மூச்சுக்காற்றுத் தடையேதும் இன்றி வெளியேறுதலால் இவ் உகரம் பிறக்கிறது. இதுவும் ஓரிமைப் பொழுதே கால அளவுடையது. இதழ்கள் நெருங்குதல் இதற்கு இல்லை. இதனைக் *குவியிதழ்ப் பின்நாவுயரொலி*[12] எனலாம்; [u] என்னும் குறியீட்டால் எழுதலாம்.

எ. கா. : குழந்தைக்கு நுங்கு

மொழியிடை முதலசை அடுத்த உகரம். இரண்டிதழ்களும் இயல்பு நிலையில் இருக்க நா தாழுயர்நிலையில் நிற்க மூச்சுக் காற்றுத் தடையேதுமின்றி வெளியேறுதலால் இவ் உகரம் பிறக்கிறது. இதழ்கள் நெருங்கலும் குவிதலும் இதற்கு இல்லை. இதுவும் ஓரிமைப் பொழுதே கால அளவுடையது. இதனை *இயல்நிதழ்ப் பின்நாத்*

---

11. Labialized lip-rounded back high vowel
12. Lip - rounded back high vowel

தாழுயரொலி[13] எனலாம்; [u̱] என்னும் குறியிட்டால் எழுதலாம்.

மொழிக்கடை உகரமும் மொழியிடை உகரம் [u̱] போன்றே பிறக்கிறது. ஆனால் ஒருசிறு வேறுபாடிருக்கலாம். இதற்கு நா உயர்நிலைக்கு உயர்கிறது எனலாம். மொழிக்கடையில் வலி மெலி இடை ஆகிய மூவின மெய்களின் பின்னும் இவ்வுகரம் வழங்கும். மொழிக் கடையில் வலிப்பின் உகரத்தை இலக்கணங்கள் குற்றியலுகரம் என்கின்றன. இன்று மொழிக்கடையில் எல்லா உகரங்களும் குற்றியலுகரம் போன்றே ஒலிக்கின்றன. அதாவது குற்றியலுகரத்தின் தலையாய பண்பான இதழ் குவிவின்மையைப் பிற உகரங்களும் பெறுகின்றன.[14]

ஊகாரம் உகரத்தின் நீட்சியே; இரண்டு இமைப் பொழுதுடையது; ஒருவேறுபாடும் கொண்டது. நா சிறிது உயர உகரத்திற்குக் குவிவதைவிட இதழ்கள் சிறிது மிகக் குவிந்திருக்க ஊகாரம் பிறக்கிறது. இதனை [uu] என இரண்டு உகரங்களால் எழுதலாம்; மொழிமுதலில் வகரப்பண்பு பெறும்.

---

13. Lip-normal back low-high vowel

14. கால்டுவெல் எல்லா உகரங்களையும் ஒன்றாகவே கருதுகிறார். மொழியீற்றில் வரும் உகரங்களை அவர் 'enunciative u' என்கின்றார். பொதுவாக உகரம் பற்றி அவர் கூறும் கருத்து இதுதான்: In the Dravidian languages, long u is sufficiently persistent; but short u is of all vowels the weakest and lightest, and is largely used, especially at the end of words for euphonic purposes, or as a help to enunciation. —P. 134. CGDL

[u̱] இவ்வுகரம் இரட்டித்தல் இல்லை; அதாவது இது இரட்டுகிறபோது இதழ்குவி பண்பைப் பெற்று விடும். அது அரிது.

எ. கா. : உருவும் திருவும்
உப்பும் உணவும்
ஊடுதலும் கூடுதலும்

உகர எழுத்தும் அதன் எழுத்தொலிகளும் :–

/உ/ : [ʸu] மொழி முதலில்
[u] மொழியிடையில் முதலசையில்
[u̱] மற்ற சூழல்களில்

3. 5. எகர ஏகாரங்கள்

இவை இன்றைத் தமிழில் மொழிமுதலிலும் இடை-யிலும் வழங்குகின்றன. ஏகாரம் கடையிலும் வழங்குகின்றது.

**மொழிமுதல் எகரம்.** இதழ்கள் சிறிது விரிந்திருக்க முன்நா வல்லண்ணம் நோக்கி எழுந்து இடைப்படும் உயரத்தில் நிற்கப் பின்நாவின் இருபுற விளிம்புகளும் சிறிதே உயர்ந்து மேற்கடைவாய்ப்பற்களின் அடி விளிம்-புகளை மெல்லத் தொட்டு நிற்க மூச்சுக்காற்று நெருக்-கலுற்று வாயகம் சிறிதே திறந்திருக்கத் தடையேது மின்றி வெளியேறுதலால் இவ் எகரம் பிறக்கிறது. இது ஓரிமைப்பொழுதே கால அளவுடையது. பின்நா உயர்ந்து மூச்சுக்காற்று நெருக்கலுறுதலால் சிறிதே உரைவுற்று இவ் எகரம் யகரப்பண்பு பெறுகிறது. ஆகவே இதனை

யகரப்பண்பு பெற்ற விரியிதழ் முன்நா விடையுய ரொலி[15] எனலாம்; [ʸe] என்னும் குறியீட்டால் இதனை எழுதலாம்.

மொழியிடை எகரம். இதழ்கள் சிறிது விரிந்திருக்க முன்நா வல்லண்ணம் நோக்கி எழுந்து இடைப்படும் உயரத்தில் நிற்க வாயகம் சிறிதே திறந்திருக்கத் தடையேதுமின்றி மூச்சுக்காற்று வெளியேறுதலால் இவ் எகரம் பிறக்கிறது. பின்நா உயர்ந்து மூச்சுக்காற்று நெருக்கஃஉறல் பெரும்பாலும் இங்கில்லை. இதுவும் ஒரிமைப் பொழுதே கால அளவுடையது. இதனை விரிபதழ் முன நா விடையுயரொலி [16] எனலாம்; [e] என்னும் குறியிட்டால் எழுதலாம்.

அகரப்பிறப்பிற்குரிய நாவின் தாழ்நிலைக்கும் இகரப் பிறப்பிற்குரிய நாவின் உயர்நிலைக்கும் இடைப்பட்ட நாவின் உயர்ச்சியே இங்கு இடையுயரம் எனப்படுகிறது.

ஏகாரம், எகரத்தின் நீட்சியே; இரண்டு இமைப் பொழுதுடையது; ஒருவேறுபாடும் கொண்டது: எகரத்திற்கு விரிவதைவிட இதழ்கள் சிறிது மிக விரிந்திருக்க ஏகாரம் பிறக்கிறது. இதனை [ee] என இரண்டு எகரங்களால் எழுதலாம்.

எ. கா. : எழில் ஏந்திழையே
செழுஞ் சேயிழை

---

15. Palatalized lip-spread front mid-vowel
16. Lip-spread front mid-vowel

எகர எழுத்தும் அதன் எழுத்தொலிகளும்:-

/எ/ : [$^{y}e$] மொழி முதலில்
: [$e$] மற்ற சூழல்களில்

3. 6. ஒகர ஓகாரங்கள்

இவை மொழிமுதலிலும் இடையிலும் வழங்குகின்றன. ஒகரம் மொழிக்கடையிலும் வழங்குகிறது; ஓரிடைச் சொல்லாக வழங்குதல் பெரும்பான்மை.

மொழி முதல் ஒகரம். இரண்டிதழ்களும் இணைந்து நெருங்கிக் குவிந்திருக்கப் பின்நா மெல்லண்ணம் நோக்கிச் சிறிது எழுந்து இடைப்படும் உயரத்தில் நிற்க மூச்சுக் காற்றுத் தடையேதுமின்றி வெளியேறுதலால் இவ் ஒகரம் பிறக்கிறது. இதழ்கள் இணைந்து நெருங்கிக் குவிதலால் மூச்சுக்காற்றுச் சிறிதே உரைவுற இவ்ஒகரம் சிறிதே வகரப்பண்பு பெறுகிறது. இது ஓரிமைப்பொழுதே கால அளவுடையது. ஆகவே இதனை *வகரப் பண்புற்ற குவியிதழ்ப் பின்நா விடையுயரொலி*[17] எனலாம்; இதனை [$^{v}o$] என்னும் குறியீட்டால் எழுதலாம்.

*மொழியிடை ஒகரம்* இரண்டிதழ்களும் இணைந்து குவிந்திருக்கப் பின்நா மெல்லண்ணம் நோக்கிச் சிறிது எழுந்து இடைப்படும் உயரத்தில் நிற்கத் தடையேதுமின்றி மூச்சுக்காற்று வெளியேறுதலால் இவ் ஒகரம் பிறக்கிறது இதுவும் ஓரிமைப் பொழுதே கால அளவுடையது. இதழ்கள் நெருங்கல் இதற்கு இல்லை. இதனைக் *குவியிதழ்ப் பின்நா விடையுயரொலி*[18] எனலாம். [o] என்னும் குறியீட்டால் எழுதலாம்.

---

17. Labialized Lip-rounded back mid-vowel
18. Lip-rounded back mid-vowel.

அகரப் பிறப்பிற்குரிய நாவின் தாழ்நிலைக்கும் உகரப் பிறப்பிற்குரிய நாவின் உயர்நிலைக்கும் இடைப் பட்ட நாவின் உயர்ச்சியே இங்கு இடையுயரம் எனப் படுகிறது.

ஓகாரம் ஒகரத்தின் நீட்சியே; இரண்டு இமைப் பொழுதுடையது; ஒரு சிறு வேறுபாடும் கொண்டது: ஒகரத்திற்குக் குவிவதைவிட இதழ்கள் சிறிது மிக நீண்டு குவிந்திருக்க ஓகாரம் பிறக்கிறது. இதனை [oː] என இரண்டு ஒகரங்களால் எழுதலாம்.

எ.கா. : ஒளியோ ஓசையோ
கொள்கை கோட்பாடு
நடந்து போ

ஓகர எழுத்தும் அதன் எழுத்தொலிகளும்:-

/ஓ/ : [ʷoː] மொழி முதலில்
[oː] மற்ற சூழல்களில்

### 3. 7. ஐகார ஔகாரங்கள்

இவை இன்றைய தமிழில் 'அய்', 'அவ்' எனவே ஒலிக்கின்றன. சங்ககாலம் முதல் அவ்வாறே எழுதப் பட்டுங்கூட வருகின்றன. அதற்கேற்ப—இவை நெடில்-களாகக் கருதப்பட்டாலும்—இரண்டளபினும் குறைந்தே ஒலிக்கப்பட்டன. ஐகாரம் மொழிமுதல் இடை கடைகளில் பரவலாக வழங்கினும் ஔகாரம் மொழிமுதலில் மட்டும் ஒருசில சொற்களில்தான் வழங்கியது. பெரும்பாலும் வடசொற்கள் வழங்குவதற்கே அது பயன்படுகிறது. இன்றைய தமிழ் இவ்விரண்டெழுத்துக்களும் இல்லா-

மலே நடைபெறலாம். ஐகார ஔகாரங்களை ஈரொலி யெழுத்துக்களாக[19] (சந்தியக்கரங்களாக)க் கருதுவது உண்டு. தொல்காப்பியர்,

அகர இகரம் ஐகாரம் ஆகும்[20]

எனவும்

அகர உகரம் ஔகாரம் ஆகும்[21]

எனவும் கூறுவது அவை ஈரொலியெழுத்துக்கள் எனக் கருத இடந்தருகின்றன. ஆனால் அவரே ஐகாரம் பற்றி மேலும்

அகரத் திம்பர் யகரப் புள்ளியும்
ஐஎன் நெடுஞ்சினை மெய்பெறத் தோன்றும்[22]

எனக் கூறுகிறார். நன்னூலாரும் தொல்காப்பியரை ஒட்டி,

அம்முன் இகரம் யகரம் என்றிவை
எய்தின் ஐயொத்து இசைக்கும்; அவ்வோடு
உவ்வும் வவ்வும் ஔவோ ரன்ன[23]

என வகுத்தார். இவற்றையெல்லாம் கருத்தில் கொண்டு ஐகார ஔகாரங்களை 'அய்' எனவும் 'அவ்' எனவுமே கொள்வதே சிறந்த முடிவாகிறது. ஆகவே தமிழ்நெடுங் கணக்கில் ஐயும் ஔவும் தேவையில்லாமல் போகின்றன.[24]

---

19 Diphthong
20 தொல். எழு. 54
21. தொல். எழு. 55
22. தொல். எழு. 56
23. நன். 125
24. அகர யகரம் ஐகாரமாகும் எனக்கூறியது

## 3. 8. உயிரெழுத்துக்களும் எழுத்தொலிகளும்

இதுவரை கண்ட விளக்கங்களை ஒட்டி. இன்றைத் தமிழுக்குரிய—எழுத்துத் தமிழுக்குரிய—உயிரெழுத்துக்களைக் கீழ்க்கண்டவாறு எழுதிக் காட்டலாம். அவை தொகை ஐந்தே :

இ உ

எ ஒ

அ

நெட்டுயிர்கள் இருகுறில்களால் எழுதப்படும். உயிரெழுத்துக்களின் எழுத்தொலிகளும் அவற்றின் சூழல்களும் வருமாறு:

1 /அ/ : [a] மொழிக்கடையில்
: [A] மற்ற சூழல்களில்

2 /இ/ : [ʸi] மொழிமுதலில்
[*i*] வல்லண்ண ஒலிச் சூழல்களில்
[*i*] மற்ற சூழல்களில்

---

போன்று தொல்காப்பியர் அகரவகரம் ஔகார மாகும் எனக் கூறவில்லை. ஆனால் அதற்கேற்ப ஒரு நூற்பா சில தொல்காப்பியப் படிகளில் சேர்க்கப்பட்டுள்ளது ஐகார ஔகாரங்களைக் கூறும் தொல்காப்பிய நூற்பாக்களில் (எழு, 54. 55, 56.) பல பாட வேறுபாடுகளும் சிக்கல்களும் உள்ளன (தொல். மூலம், கழகப்பதிப்பு காண்க) நன்னூலார் முதலானோர் இலக்கணங்களில் காணப்படும் இவ்வெழுத்துக்களைப் பற்றிய கருத்துக்கள் பல தொல் காப்பியத்தில் இல்லை. இச்சிக்கல்களுக்குக் காரணம் பின்னையோர் வடமொழி இலக்கணங்களைக் கண்மூடிப் பின்பற்றியதேயாகும். கால்டுவெலும் ஔகாரம் பற்றி இவ்வாறே கருதுவர். (அவர் நூல் பக். 136)

3 /உ/ : [ᵛu] மொழிமுதலில்
[u] மொழியிடை முதலசையில்
[u̱] மற்ற சூழல்களில்

4 /எ/ : [ʸe] மொழிமுதலில்
[e] மற்ற சூழல்களில்

5 /ஒ/ : [ᵛo] மொழிமுதலில்
[o] மற்ற சூழல்களில்

### 5. 9. இலக்கணங்கள் கண்ட உயிரெழுத்துக்கள்

தொல்காப்பியர் மெய்யெழுத்துக்களை விளக்குவது போன்றே உயிரெழுத்துக்களையும் பேச்சுறுப்புக்களின் ஒலிப்புமுறைகளால் விளக்குகிறார். ஆழமாகச் சென்று நுட்பமாக விளக்குதல் அவர் இயல்பாகத் தோன்றவில்லை. உயிரெழுத்துக்களின் பொதுவியல்புகளைச் சொல்லி அவற்றிடையே அமைந்த தலையாய வேறுபாடுகளை எடுத்துக்காட்டுவதே அவர் நோக்கம் எனத் தெரிகிறது.

உயிரெழுத்துக்களைப் பற்றிய அவரது முதல் கருத்து இது:

அவ்வழி
பன்னீ ருயிரும் தம்நிலை திரியா
மிடற்றுப் பிறந்த வளியின் இசைக்கும்.[25]

மிடற்றிலிருந்து பிறந்த வளியால் இசைத்தல் உயிர்களின் பொதுவியல்பு. உயிரெழுத்துக்கள் குரலொலிகள் என்ற கருத்தையோ அல்லது அவை தடையேதும் இன்றிப் பிறப்பன என்ற கருத்தையோ ஆசிரியர் இதனால்குறிக்கலாம்.

25. தொல். எழு. 84

தடையேதும் இன்றிப் பிறத்தல் உயிரெழுத்துக்களை மெய்யெழுத்துக்களிலிருந்து வேற்றுமைப்படுத்திக்காட்டும் தலையாய பண்பு என்பது முன்னர் விளக்கப்பட்டது.[26] தமிழ் உயிரெழுத்துக்கள் எல்லாம் குரலொலி கூடியவையே.

தொல்காப்பியர் உயிரெழுத்துக்களை மூன்று பிரிவாகக் காணுகிறார்; ஒவ்வொருபிரிவின் இயல்பினையும் சுட்டிக் காட்டுகிறார்.

அவற்றுள்
அ ஆ ஆயிரண்டு அங்காந்து இயலும்.[27]

இ ஈ எ ஏ ஐஎன இசைக்கும்
அப்பால் ஐந்தும் அவற்றோரன்ன
அவைதாம்
அண்பல் முதல்நா விளிம்புறல் உடைய.[28]
உ ஊ ஒ ஓ ஔஎன இசைக்கும்

அப்பால் ஐந்தும் இதழ்குவிந்து இயலும்.[29]

அங்காந்தியல்தல், அங்காப்போடு அண்பல் முதல் நா விளிம்புறல், இதழ் குவிந்தியலல் ஆகிய மூன் தொழிற்பாடுகளுமே மூன்றுபிரிவு உயிரெழுத்துக்களுக்கும் உரிய இயல்புகளாம் இன்றையமொழியியலும் உயிரெழுத்துக்களுக்கு உரிய இத்தகைய இயல்புகளைப் போற்றியுரைத்தலைக் காணலாம்.

---

26. 1. 15. 8. காண்க. 27. தொல். எழு. 35
28. தொல். எழு. 28. 29. தொல்: எழு. 87

ஒருபிரிவுள் அமைந்த உயிரெழுத்துக்களிடையே உள்ள வேறுபாடு யாது? இவைபற்றித் தொல்காப்பியர் ஒன்றும் கூறவில்லை. உரையாசிரியர்களும் 'இவற்றின் வேறுபாடு உணர்க' என ஒலிப்போர்க்கே இவ்வாராய்ச்சியை விட்டுவிட்டனர்! தொல்காப்பியர் இவற்றிடை உள்ள வேறுபாடுகள் சிறியன என எண்ணிப் புறக்கணித்திருக்கலாம்:

தத்தம் திரிபே சிறிய என்ப.[30]

நன்னூலாசிரியர் பவணந்தியாரும் முழுக்க முழுக்கத் தொல்காப்பியரைப் பின்பற்றியே உயிரெழுத்துக்களை விளக்கியிருக்கிறார்[31].

உயிரெழுத்துக்களின் பிறப்பு விளக்கத்துக்கு நாவின் பகுதியும் நாவின் உயர்ச்சியும் இதழ்நிலையும் அறியப்படல் வேண்டும்.[32] ஆனால் இலக்கண ஆசிரியர்கள் நாவின் பகுதிபற்றியும் நாவின் உயர்ச்சி பற்றியும் ஒன்றும் குறிப்பிடவில்லை; குறிப்பிடாதது குறையாகத் தோன்றுகிறது. 'தத்தம் திரிபே சிறிய என்ப' என்பதனுள் நாவின் தொழிற்பாடு அடங்கிவிடும் போலும்!

இன்றைய தமிழில் உயிரெழுத்துக்களுக்குப் பல எழுத்தொலிகள் உண்டு என்பது முன்னர் விளக்கப் பட்டது. ஆனால் இவை பற்றி ஒருகுறிப்பும் இலக்

---

30. தொல். எழு 88. நச்சினார்க்கினியர் இந் நூற்பா உயிரெழுத்துக்கள் மெய்யெழுத்துக்கள் இவற்றிடையே அமைந்த வேறுபாட்டினைப் பேசுவதாகக் கூறிக் குழப்பம் செய்கிறார்.

31 நன், எழு. 21, 22,23.

32. 1. 18. 0, காண்க.

கணங்களில் கிடைக்கவில்லை. இதன் பொருள் இவ்விலக்கணங்களின் காலங்களில் உயிரெழுத்துக்களுக்கு வேறு எழுத்தொலிகள் இல்லை என்பதா? அல்லது இலக்கண ஆசிரியர்கள் அவை இருந்தும் புறக்கணித்து விட்டனர் என்பதா? அல்லது அவர்கள் எழுத்தாராய்ச்சி முறையில் எழுத்தொலிகளுக்கே இடம் இல்லை என்பதா? இவை பற்றி இனி ஆராய்ச்சி நிகழவேண்டும்.

## 3. 10. உயிரொலிகளில் யகர வகரப் பண்புகள்

முன்னுயிர்கள் யகரப் பண்பும் பின்னுயிர்கள் வகரப் பண்பும் பெற்று மொழிமுதலில் வழங்குதலை முன்னர்க் கண்டோம். சென்ற சில நூற்றாண்டுகளாகத் தமிழரோடு உறவு கொண்ட கால்டுவெல் போன்ற மேலைநாட்டு மொழியியலறிஞர்கள் இதனை உணர்ந்து குறித்துள்ளனர்.[33] ஆனால் தமிழிலக்கண ஆசிரியர்கள் எவரும் இதுபற்றிக் குறித்ததாகத் தெரியவில்லை; தொல்காப்பியரும் குறிக்கவில்லை. ஆனால் தொல்காப்பியர் காலத்திலும் முன்னுயிர்கள் இவ்வாறே ஒலித்திருக்கலாம் எனக்கருதுமாறு அவர் நூற்பா அமைந்துள்ளது:-

---

33 P. 122, CGDL.

'In utterance-initial and after postvocalic word juncture when no other intervocalic glide is introduced the initial component of /i, ii. e / is a palatal frictionless continuant.

In utterance-initial and after postvocalic word juncture when no other intervocalic glide is introduced the initial component of /u/ and /uu/ is a bilabial frictionless continuant.' —SPST.

இ ஈ எ ஏ ஐஎன இசைக்கும்
அப்பால் ஐந்தும் அவற்றோ ரன்ன;
அவைதாம்,
அண்பல் முதல்நா விளிம்புறல் உடைய.[34]

முன்னுயிர்கள் ஒலிக்கும் போது 'அண்பல் முதல் நா விளிம்புறு'மாதலால் யகரப் பண்பு தோன்றும் எனக் கொள்ளலாம். மேலும் தொல்காப்பியர் முன்னுயிர்கள் யகரத்தோடு கூடியும் பின்னுயிர்கள் வகரத்தோடு கூடி-யும் மொழிமுதலாகா என விதிக்கிறார். இதற்குக் காரணம் இ. ஈ, எ, ஏ என்பவையும் யி, யீ, யெ, யே என்பவையும் தமக்குள் வேறுபாடில்லாதும் உ, ஊ, ஒ, ஓ என்பவையும் வு, வூ, வொ, வோ என்பவையும் தமக்குள் வேறுபாடில்லாதும் ஒலித்திருத்தல் வேண்டும். எவ்வாறு எனின் இவ்வுயிர்கள் உயிர்மெய்களே போன்று ஒலித்திருத்தல் வேண்டும். இன்றைய நிலை அவ்வாறுதான் உள்ளது. தொல்காப்பியர் காலநிலையே தொடர்ந்து இன்றும் உள்ளது எனலாம். இடைக்காலத்து இலக்-கியங்களில் இல்லாது போனாலும் இடைக்காலத்துக் கல்வெட்டுக்களில் இதற்குச் சான்றுகள் நிறைய உண்டு. "யிந்நாயனார்" "யிப்பூசைக்கி" முதலிய வழக்குக்களைச் சோழப் பேரரசர் கல்வெட்டுக்களில் காணுகிறோம்.[35]

---

34 தொல். எழு. ௬6

35 இன்றைய இலக்கியத் தமிழ் இவற்றை உடன் படாமற் போனாலும் மாணவர்கள் கட்டுரைகள், பொது மக்கள் அறிக்கைகள், மடல்கள் ஆகியவற்றில் இப் 'பிழை களைக்' காணுகின்றோம். மொழிமுதலிலேயே 'யிந்த உலகம்', 'வுயிர் பலி', சிறந்தயிலக்கியம்' ஆகிய வழக்குக்கள் சான்றாக நிற்கின்றன. 'தமிழ் 'ஏன்' ஆங்கிலத்தில் 'yeen' என விளம்பரப்படுத்தப்படுகிறது.

உயிரொலிகள் யகர வகரப்பண்பு பெறுதலைத் தமிழிலக்கணவாசிரியர்கள் ஏற்காது போனாலும் கன்னட தெலுங்கிலக்கணங்கள் உடன்பட்டுள்ளன. ஆகவே இப் பண்பு தென் திராவிட மொழிகளின் பண்பு எனக் கொள்ள வேண்டும். ஆனால் ஈழத்துத் தமிழ்க் கிளை மொழியில் இப்பண்பு இல்லை எனச் சிலர் குறிக்கின்றனர்.[36]

மொழிமுதலில் யகர வகர ஒலிகள் தோன்றுதல் போன்று முன்னுயிர்களின்பின் மொழியீற்றில் யகர வொலி தோன்றுதலும் உண்டு.[37] 'நீய்', 'இங்கேய்' முதலிய கல்வெட்டு வழக்குக்கள் இதனையே சுட்டுகின்றன.[38]

## 3. 11. பேச்சுத் தமிழில் உயிரொலிகள் மாறறம்

*3. 10. 0.* இந்நூற்றூண்டுத் தமிழ் எனக் கருதத்தக்க பேச்சுத்தமிழானது வடதமிழ்க்கிளை, தென் தமிழ்க்கிளை, ஈழத் தமிழ்க்கிளை எனச் சில கிளைகளாகப் பிளவுற்று வழங்குகிறது இவற்றுக்கு ஏற்ப உயிரெழுத்துக்களிலும் மாற்றங் கள் நிகழ்ந்துள்ளன; புதிய எழுத்தொலிகளும் தோன்றி யுள்ளன என்பது தெரிகின்றது. ஆனல் இவை பற்றித்

---

36 டாக்டர் பி. எஸ். சுப்பிரமணிய சாஸ்திரியார், HGTT, பக். 29.

37. மொழி முதலில் தோன்றும் யகரவகர ஒலிகளை on-glide எனவும் ஈற்றில் தோன்றும் யகரவகர ஒலிகளை off-glide எனவும் மொழியியல் விளக்குகிறது.

38 "The final component of /ee/ is an alveolo-palatal frictionless continuant." -SPST.

"The final component of /oo/ is a bilabial frictionless continuant." —SPST.

தெளிவான முறையான ஆராய்ச்சி இனித்தான் தோன்ற வேண்டும்.[39] ஒருசில மாற்றங்கள் இங்கே குறிக்கத் தக்கன.

*3 10. 1.* பழந்தமிழில் குற்றியலுகரம் தொல்காப்பியர் கூறியவாறு வழங்கியது. பின்னர் மொழியிற்று முற்றியலுகரமும் குற்றியலுகரம் போன்ருகி இரண்டும் இதழ்குவியா இயல்பிதழ் உயர் நடுவுயிராக[40] வழங்கி வந்தன. அதனை [ u̱ ] எனக்குறிக்கலாம். பின்னர் இத்தகைய குற்றியலுகரத்திற்கு முன் வழங்கிய மொழியிடை முற்றியலுகரமும் இதழ்குவியா இயல்பிதழ் உயர் நடுவுயிராகத் திரிந்தது. இதனுல் குற்றியலுகரம் முற்றியலுகரம் இகரம் ஆகியவை வேற்றுமை வழக்கில் வழங்கும் நிலை அமைந்தது. ஆகவே அவை மூன்றும் தனித்தனியே எழுத்துக்களாயின. இக்கருத்தினைத் தெளிவு படுத்தும் ஓரொலி வேறுபாட்டிணைச் சொற்கள்[41] இவை :

---

39. இன்றைய பேச்சுத் தமிழில் உற்ற உயிரொலி மாற்றங்கள் பற்றித் திரு முத்துச்சண்முகம் அவர்கள் "A Tamil Dialect in Ceylon", "Vowel Splits in Tamil Dialects" (இரண்டாம் உலகத்தமிழ்க் கருத்தரங்கின் கட்டுரை) என்னும் இரண்டு கட்டுரைகளிலும் அண்மையில்(1971) வெளிவந்த *இக்கால மொழியியல்* என்னும் நூலிலும் ஆராய்ந்திருக்கின்றனர். அவர் கருத்துக்களைப் பின்பற்றியே இங்குக் கருத்துக்கள் உரைக்கப்படுகின்றன டாக்டர் கமில் ஸ்வலபில் அவர்களும் சில கட்டுரைகள் எழுதியிருக்கிருர். (காண்க : The Vowels of Colloquial Tamil, Archiv Orientalni 31, 1963) மரே பவுளர் கட்டுரை இவ்வகையில் சிறப்பாகக் குறிக்கத்தக்கது. முன்பே இது சுட்டப்பட்டுள்ளது. அடிக்குறிப்பு 2. 192 காண்க,

40. High central vowel

41 இதனை மொழியியல் minimal pair என வழங்கும்.

திரும்பு > tir*u*mb*u* > t*u*r*u*mb*u*
துரும்பு > turumb*u* > tur*u*mb*u*

*3. 11. 2.* இரண்டாவதாகக் குறிக்கத்தக்க மாற்றம் ஐகாரம்பற்றியது. எழுத்துத்தமிழுக்குரிய தனி ஐகாரமொழி இகரம் பெறுதலும் தொடர்மொழியில் வழங்கும் ஐகார இறுதி *முன்னுயர்தாழ்வுயிரொலியாக*[42] [ε] எனத் திரிதலும் இன்றைய பேச்சுத்தமிழின் பண்புகள் :-

கை > கய்யி
வை > வய்யி
கொலை > *kolε*
மரத்தை > *marattε*

எழுத்துத்தமிழில் பலவகைச் சொற்களில் இரண்டாம் அசையில் அகரமோ ஐகாரமோ வழங்குமானால் முதலசையில் வழங்கும் இகரம் பேச்சுத்தமிழில் [ε] எனத்திரிகிறது:-

எ. கா. : கிழங்கு > *kεlangu*

எழுத்துத்தமிழில் தொடர்மொழியீற்றில் வழங்கும் ஆய், [ε] என நெடிலாகத் திரிகிறது.

வந்தாய் > *vandεε*

இத்திரிபுகள் எல்லாம் [ε] என்னும் ஒலியை இந் நூற்றாண்டுத் தமிழில் தனியே ஓரெழுத்தாக அமைந்து விட்டன என்பர் இன்றைய மொழியியலறிஞர்.

---

42. Front higher low vowel. இவ்வொலி bank, tank முதலிய ஆங்கிலச்சொற்களில் வழங்குகிறது.

*3.11.3.* இன்றைய பேச்சுத்தமிழில் மூன்ருவதாகக் குறிக்கத்தக்க மற்ரொரு பெருமாற்றம் *மூக்கொலியுயிர்கள்* தோன்றியதாம். எழுத்துத் தமிழில் ஈற்றில் மூக்கின எழுத்துக்களாகிய ணகரம், மகரம், னகரம் ஆகிய மூன்றும் வழங்குகின்றன. இவை பெரும்பாலும் தனிக் குறில் மொழிகளில் உகரவுயிர் பெறுதலும் தொடர் மொழிகளிலும் நெட்டுயிர் மொழிகளிலும் பெரும்பாலும் கெட்டு ஈற்றயலுயிரை மூக்கொலியுயிராகத் திரித்தலும் பேச்சுத் தமிழில் உற்ற மாற்றங்கள்:-

| | | |
|---|---|---|
| மண் > மண்ணு | ; | விண் > விணு |
| தின் > தின்னு | ; | மான் > மானு |
| கம் > கம்மு | ; | இரும் > இருமு |
| நான் > nã̃ã | ; | வரும் > varũ |
| மரம் > marõ | ; | குடம் > koḍõ |

உயிரொலிகளுக்கு மேல் இடப்படும் ◡ அல்லது ʌ மூக்கொலிக் குறியீடாகும். கீழ்வரும் சொற்கள் கவனிக்கத்தக்கவை:-

| | | |
|---|---|---|
| வந்தான் > vandaa | : | வந்தான் > vandãã |
| வந்தே > vandee | . | வந்தேன் > vandẽẽ |
| வந்தோ? > vandoo | : | வந்தோம் > vandõõ |
| கொடு > குடு > kuḍu | : | கொடும் > குடும் > kuḍũ |

இவற்ருல் வாயொலியெழுத்துக்களும் மூக்கொலி யெழுத்துக்களும் வேற்றுமை வழக்கில் வழங்கிப் பொருள் வேறுபாடு செய்கின்றன என்பது தெளிவாகிறது. ஆகவே இன்றையமொழியியலறிஞர்கள் மூக்கொலிகளேயும் தனித் தனியே எழுத்துக்களாக வகுக்கின்றனர்.[43] இவற்றைத்

---

**43. முன் சுட்டிய முத்துச்சண்முகம் கட்டுரை காணலாம். பேர். தெ. பொ. மீ. அவர்களும் எடுத்துக்காட்டுக்கள் தந்து இதனை வற்புறுத்துகிருர்:-** **[அடுத்த பக்கம்]**

தனித்தனியே எழுத்துக்களாக வகுத்து எழுத்துக்களின் தொகையைப் பெருக்குவதால் பயனில்லை. மூக்கொலி என்பதை மட்டும் ஒரெழுத்தாகக் கொள்ளலாம். அதாவது /∽/ எனக் கொள்ளலாம். அல்லது ணகர மகர னகர மூக்கொலியெழுத்துக்களின் எழுத்தொலியாக இம்மூக்கொலியைக் கொள்ளலாம்.

இத்தகைய மூக்கொலியுயிர்கள் இந்தியத் தமிழகத்தில்தான் வழங்குகின்றன. ஈழத்தமிழில் இவை இல்லை

---

"......... What is important is, the nasal vowels have become distinct phonemes in the nineteenth century.

avã 'he'
ava 'she'
vandẽẽ 'I came,
vandẽ 'you came'
ã 'yes'
ā 'interjection'
ũ [kāṭṭu] 'a ghost or something frightening child, a nursery word'.
ũ ũ 'interjection used when listening to a story to show that one is listening.'
õ õ 'yes'
ō 'interjection'
kombõ 'Pot'
kombō ∽kombo 'is it a stick?'
ĩ ĩ 'expression for cringing laughter with lips extended as in pronouncing i.'
ī 'fly'
va<u>nd</u>ũ vēlaiyaiccey 'come and do your work'
va<u>nd</u>u vēlaiyaiccey 'come and do the work"

—HTL., PP. 202 & 203.

என்கிறார் திரு. முத்துச்சண்முகமவர்கள். தமிழகத்தில் இவை எப்போது தோன்றின என உறுதியாகச் சொல்ல முடியவில்லை. சங்ககாலத்திற்கு முன்னமேர இவை இவ்வாறு தோன்றியிருக்கலாம் எனப் பேர். தெ. பொ. மீனாட்சி சுந்தரனார் அவர்கள் கருதுகிறார்கள்.[44] ஆனால் இடைக்காலத்து இலக்கண இலக்கியங்களில் இவை பற்றி யாதொரு குறிப்பும் கிடைக்கவில்லை. சென்ற நூற்றாண்டில் இவை வழங்கின என்பதற்குச் சான்றுண்டு. சென்ற நூற்றாண்டில் எழுதப்பட்ட நாடகங்களில் வரும் கொச்சைத்தமிழ் உரையாடல்கள் இவை பற்றி அறிவிக்கின்றன.[45]

*3. 11. 4* நாலாவதாகக் குறிக்கத்தக்க மாற்றம் திரு முத்துச்சண்முகமவர்கள் எடுத்துக் காட்டியவாறு ஈழத்துக்கிளை மொழியில் சில மெய்யெழுத்துக்களின் முன் வழங்கும் எகர ஏகாரங்கள் **நடுவொலியாக**[46]—அதாவது

---

44 'Nasal vowels must have been in existence in earlier times. Even in Tolkappiyam the falling together of m and n in the final position may be due to this nasalisation of the previous vowel. Nasalisation may explain the disappearance later of nasal ending in the final position. maram > marã, maran > marã; therefore maram ∽ maran.' —HTL. PP 201 & 202.

45. In the nineteenth centary, [the Tamil dramas trying to represent the speech of the lower class, represented the nasal vowels by the letter for the velar nasal inverted after the vowel nasalized. In the twentieth centuary our grand old dramatist Campanta Mutaliyar used a small circle after the vowel to denote its nasalization.' —HTL. P. 202.

46. Central vowel.

[ɔ, ɔɔ] எனத்திரிதலாகும். இவ்வாறே சில சூழல்களில் ஆகாரம் கூட [ɔɔ] எனத்திரிகின்றதாம். இவற்றால் எல்லாம் [e, ɔ, a] ஆகியவை மூன்றும் தனித்தனியே ஈழத்தமிழில் எழுத்துக்களாகின்றனவாம்.

எ. கா. : எடு > ɔṭu̱
ஏடு > ɔɔṭu̱
ஏணி > ɔɔṇi
எண்ணம் > ɔṇṇam
ஏய்ப்பாய் > eeppɛ
ஆப்பை > ɔɔppɛ

## 3.12. பேச்சுத்தமிழ் உயிரெழுத்துக்கள்

மேற்கண்ட விளக்கங்களை ஒட்டிப் பேச்சுத்தமிழுக்கு — இருபதாம் நூற்றாண்டுத் தமிழுக்கு – கீழ்க்கண்டவாறு எழுத்துக்களை அமைக்கலாம்:

| | | | |
|---|---|---|---|
| i | u̱ | u | மூக்கொலி |
| e | | ɔ | ஓரெழுத்து : /~/ |
| ɛ | - | | |
| | a | | |

ஆகவே எழுத்துக்களின் தொகை எட்டு. நெடில்கள் இருகுறில்களால் எழுதப்படும்.[47] u̱ எழுத்திற்கு நெடில் இல்லை.

47. திரு முத்துச்சண்முகமவர்கள் இன்றைய பேச்சுத் தமிழுக்குக் குறில் நெடில்களைத் தனித்தனியே எழுத்துக்களாக அமைப்பர். ஆகவே அவருக்கு உயிரெழுத்துக்கள் பதினான்கு. இவை வாயகவொலிகள். அவர் இன்றைய

## 13. 3. ஈழத்துத் தமிழ் உயிரெழுத்துக்கள்

இந்தியத் தமிழகத்துத் தமிழிலிருந்து ஈழத்துத் தமிழ்க்கிளை சிறிது வேறுபட்டது. அதன் பேச்சுத் தமிழுக்குத திரு. முத்துச்சண்முகமவர்கள் கீழ்க்கண்ட உயிரெழுத்துக்களை அமைக்கிறார். ஈழத்தில் மூக்கொலி யுயிர்கள் இல்லை.

| குறில்கள் | | | நெடில்கள் | | |
|---|---|---|---|---|---|
| i | | u | ii | | uu |
| e | ɘ | o | ee | ɘɘ | oo |
| ɛ | | | | | |
| | a | | | aa | |

---

பேச்சுத்தமிழுக்கே கீழ்க்கண்ட மூக்கொலி எழுத்துக்களையும் அமைக்கிறார்; அவை தொகை ஏழு:

| குறில்கள் | | நெடில்கள் | |
|---|---|---|---|
| ĩ | | ĩĩ | |
| ẽ | õ | ẽẽ | õõ |
| | | ãã | |

திரு.முத்துச்சண்முகம் அவர்கள் அண்மையில் தன் 'இக்கால மொழியியல்' என்னும் நூலிலும் இக்கருத்துக்களை வெளியிட்டுள்ளார்கள். 100-ஆம் பக்கம் காண்க

டாக்டர் கமில் சுவலபில் இன்றைப் பேச்சுத்தமிழுக்குப் பழந்தமிழுக்கு உரிய 5 குறில்களையும் 5 நெடில்களையுமே அமைக்கிறார்; ஐ. ஔ ஆகியவற்றை நீக்கிவிட்டார். ஆங்கிலச்சொற்களுக்கு æ என ஒன்றும் அமைக்கிறார். [ The Vowels of Colioquial Tamil, Aror 31, 1963 ],

மரே பவுளர் 5 உயிர்களே அமைக்கிறார். அடிக் குறிப்பு 2192. காண்க,

## இயல் நான்கு

# சார்பெழுத்துக்கள்

### 4.1. முதல் சார்பு எனும் பகுப்பு : தொல்காப்பியர் கருத்துக்கள்

தமிழ் மொழிக்குரிய எழுத்துக்களை முதல் எழுத்துக்கள் எனவும் சார்பெழுத்துக்கள் எனவும் இருவகைப் படுத்தி ஆராயும் மரபு இலக்கண நூல்களில் காணப் படுகிறது. ஆனால் தமிழில் உள்ள பலப்பல இலக்கண நூல்களும் இப்பாகுபாடு பற்றிப் பல்வேறு வகையான கருத்துக்களைக் கூறிவைத்துள்ளன. அவைகளுக்குள்ளே கருத்தொற்றுமை இல்லை. முதலெழுத்துக்கள், சார்பெழுத்துக்கள் என்னும் பாகுபாடு பற்றி நன்னூல்தான் முதல்முதலாகத் தெளிவுபடக் கூறுகிறது.

"மொழிமுதற் காரணம் ஆம்அணுத் திரளொலி
எழுத்து; அது முதல் சார்பு எனஇரு வகைத்தே."[1]

தொல்காப்பியர் எழுத்துக்களை இவ்வாறு முதல் சார்பு என வகைப்படுத்தவில்லை. தொல்காப்பியத்தில் முதல் என்னும் சொல் பல இடங்களில் ஆளப்பட்டுள்ளது.

---

1. நன். எழு. 3

மொழி முதலில் வழங்கும் எழுத்துக்கள் 'முதலாகெழுத்து' (எழு. 29) எனவும் 'முதனிலை' [எழு. 315] எனவும் சில இடங்களில் வழங்கப்பட்டுள்ளன. ஆனால் நன்னூலாரைப் போல எழுத்துக்களின் ஒருவகைக்கு முதல் என்னும் சொல்லைத் தொல்காப்பியத்தில் எங்கும் காணமுடியவில்லை. 'முதலெழுத்து' அல்லது 'முதலெழுத்துக்கள்' என்ற தொடரையே தொல்காப்பியத்தில் காணமுடியவில்லை. இது மட்டும் அல்ல; 'சார்பெழுத்து' என்னும் தொடரையும் கூடத் தொல்காப்பியத்தில் காணமுடியவில்லை, ஆனால் தொல்காப்பியர் குற்றியலிகரம், குற்றியலுகரம், ஆய்தம் என்னும் மூன்று எழுத்துக்களையும் 'சார்ந்து வரல் மரபினை' உடையன என்று மட்டும் குறித்துள்ளார். ஆகவே எழுத்துக்களை முதல், சார்பு எனப் பெயரிட்டு வகைப்படுத்தி வழங்குதல் தொல்காப்பியருக்குப் பின்னர்த் தமிழிலக்கணவாசிரியரிடத்தில் தோன்றியிருக்க வேண்டும். இவ்வாறு ஒருபுதிய வழக்கம் தோன்றியதற்குத் தொல்காப்பியரே ஆண்ட 'சார்ந்து வரல்' என்னும் தொடரே காரணமாக இருந்திருக்கிறது. தொல்காப்பியத்திலும் எழுத்துக்களை ஒருவாறு வகைப்படுத்தலைக் காணலாம். தொல்காப்பியர் கருத்துப்படி எழுத்துக்கள் முப்பத்துமூன்று. தொல்காப்பியத்தின் முதல் நூற்பாவே இவ்வெழுத்துக்களின் தொகையைத்தான் தருகிறது. அவ்வாறு தருகின்ற போது தொல்காப்பியர் மூன்று எழுத்துக்களை மட்டும் தனியே பிரித்துத் தருகிறார்:

"எழுத்தெனப் படுப
அகர முதல் னகர இறுவாய்
முப்பஃது என்ப,
சார்ந்து வரல் மரபின் மூன்றலங் கடையே."[2]

---

2. தொல். எழு. 1

"அவைதாம்
குற்றிய லிகரம், குற்றியலுகரம்,
ஆய்தம் என்ற
முப்பாற் புள்ளியும் எழுத்து ஓரன்ன"[3]

தொல்காப்பியர் எழுத்துக்களை இவ்வாறு இரண்டு நூற்பாக்களில் ஏன் தருகிறார் என்பதை எண்ணிப் பார்க்க வேண்டும். அவைகளுக்கிடையே அவர் ஒரு வேறு-பாட்டைக் காணுகிறார். குற்றியலிகரம் குற்றியலுகரம் ஆய்தம் என்னும் மூன்றையும் அவர்

"சார்ந்து வரல் மரபின் மூன்று"

எனவும்

"சார்ந்துவரின் அல்லது தமக்கியல்பு இலஎனத்
தேர்ந்துவெளிப் படுத்த ஏனை மூன்றும்"[4]

எனவும் இரண்டிடங்களில் காட்டுகிறார். இதனால் உயி-ரெழுத்துக்களும். மெய்யெழுத்துக்களுமாகிய முப்பதும் சார்ந்துவரல் மரபினை உடையவை அல்ல என்பது அவர் கருத்தாகும். இந்தக் கருத்தையும் அவர் வெளிப்படக் கூறவில்லை என்பது கருதத்தக்கது. 'சார்ந்து வரல் மரபினை' உடைய எழுத்துக்களை அவ்வாறு சுட்டினாரே ஒழிய அவர், எழுத்துக்களை வகைப்படுத்தும் முயற்சி ஒன்றும் மேற்கொள்ளவில்லை என்பதும் கருதத்தக்கது. 'சார்ந்து வரல் மரபு' இல்லாதவற்றை அவர் அவ்வாறு சுட்டவும் இல்லை; அவை முதலெழுத்துக்கள் எனக் குறிப்

3. தொல். எழு. 2 4. தொல். எழு. 101

பிடவும் இல்லை. அவைகளுக்குப் பொதுவாக வேறு பெயரும் வழங்கவில்லை. ஆனால் 'சார்ந்துவரல் மரபு' என்னும் கருத்தையும் தொடரையும் வைத்துக் கொண்டு பிற்காலத்து இலக்கணவாசிரியர்கள் ''சார்பெழுத்துக்கள்'' என்னும் வகையினை வகுத்துக் கொண்டனர். நன்னூலார் தான் சுருங்கிய எளிய அழகிய பெயர்த் தொடராகச் 'சார்பெழுத்து' என்பதைப் படைத்துத் தந்தார். ஆனால் 'முதலெழுத்துக்கள்' என்னும் பெயரையும் வகையையும் அவர் எங்கிருந்து பெற்றார் என்பது விளங்கவில்லை!

## 4. 2. 'சார்பெழுத்துக்கள்' வழக்கும் பின்னை இலக்கணங்களும்

தொல்காப்பியர் காலத்திற்குப் பின்னர்ப் பல்வேறாசிரி-யர்களால் முதல் சார்பெழுத்துக்களைப்பற்றிப் பல்வேறு கருத்துக்கள் வளர்க்கப்பட்டன. ஆனால் ஆசிரியர்கள் அனை-வரும் இவ்விருவகைப்பாகுபாட்டினை ஏற்றுக்கொண்டதாகத் தெரியவில்லை. பதினோராம் நூற்றாண்டில் தோன்றிய *வீரசோழியம்* தன் எழுத்திலக்கணத்தில் முதல் சார்பு என்னும் பாகுபாட்டினைக் குறிப்பிடவில்லை! பன்னிரண்டாம் நூற்றாண்டில் தோன்றிய நேமிநாதம் உயிர், மெய் ஆய்தம் ஆகியவற்றை ''நன்னு முதல் வைப்பாரும் நன்கு'' (நேமி-1) எனத்தொகுத்துப் பெயர் சுட்டுகிறது; ஆனால் இவ்வாறு சார்பெழுத்துக்களைச் 'சார்பெழுத்துக்கள்' எனப் பெயர் சுட்டி அது வழங்கவில்லை. நன்னூலில் முதலெழுத்துக்கள் சார்பெழுத்துக்கள் எனத் தரப்படும் எழுத்துக்களில் பெரும்பாலானவற்றை வீரசோழியமும் நேமிநாதமும் தமிழுக்குரிய எழுத்துக்கள் என மட்டுமே வரிசையாகத் தந்து செல்லுகின்றன. நன்னூலாருக்குப் பின்னர்த்

## இலக்கணங்கள் தரும் சார்பெழுத்துக்கள்

| | 1 குற்றியல் இகரம் | 2 குற்றியல் உகரம் | 3 ஆய்தம் | 4 உயிர் அளபெடை | 5 ஒற்றளபெடை | 6 ஐகாரக் குறுக்கம் | 7 ஔகாரக் குறுக்கம் | 8 மகரக் குறுக்கம் | 9 ஆய்தக் குறுக்கம் | 10 உயிர் மெய் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 தொல்காப்பியம் | உ | உ | உ | | | | | | | |
| 2 அவிநயம் | உ. | உ | உ | | உ | உ | உ | உ | | |
| 3 யாப்பருங்கலம் | உ | உ | உ | | | | | | | |
| 4 வீரசோழியம் | உ | உ | | உ (7) | | | | உ | | |
| 5 நேமிநாதம் | உ | உ | | உ (7) | உ (11) | உ | உ | உ | உ | உ |
| 6 நன்னூல் | உ (37) | உ (36) | உ | உ (21) | உ (42) | உ (3) | உ | உ (3) | உ (2) | உ |
| 7 தொன்னூல் விளக்கம் | உ (37) | உ (36) | உ | உ (21) | உ (42) | உ (3) | உ | உ (3) | | உ |
| 8 இலக்கண விளக்கம் | உ | உ | உ | உ (7) | உ (11) | உ | உ | உ | | உ |
| 9 முத்து வீரியம் | | | உ | | | | | | | உ |

உ = உண்டு

தோன்றிய இலக்கண விளக்கம், தொன்னூல் விளக்கம் முதலிய நூல்கள் நன்னூலின் முதல் சார்பு என்னும் பாகுபாட்டினை அவ்வாறே ஏற்றுக் கொண்டுள்ளன. கி. பி. பத்தாம் நூற்றாண்டுக்கு முன் தோன்றிய யாப்பி-லக்கண நூல்களிலும் முதல் சார்பு என்னும் பாகுபாடு தெளிவாக அமையவில்லை. யாப்பருங்கலமும், யாப்பருங்-கலக் காரிகையும் முதலெழுத்துக்கள் என்னும் பாகு-பாட்டினைப் பற்றி யாதொன்றும் குறிப்பிடவில்லை. ஆனால் யாப்பருங்கலம் மட்டும் 'சார்பிற்றோன்றும் தன்மை' [நூற்பா, 2] -யுடைய எழுத்துக்களைக் குறிப்பிடுகிறது. அவை தொல்காப்பியர் தந்த மூன்றுமே ஆகும்.

## 4. 3. சார்பெழுத்துக்களின் தொகை

முதல் சார்பு என்னும் பாகுபாடு இலக்கண நூல்-களில் இவ்வாறு அங்குமிங்குமாகக் காணப்படச் சார்பு எழுத்துக்களின் தொகை இத்தனை எனக் கணக்கிடு-வதிலும் அவ்விலக்கண நூல்களில் கருத்தொற்றுமை இல்லை. தொல்காப்பியர் சார்புஎழுத்துக்கள் மூன்று என்று கூறியிருக்க நன்னூலார் 'வகை பத்து' எனவும் 'விரி ஒன்றொழி முந்நூற் றெழுபான்'[5] எனவும் கூறு-கிறார். வீரசோழியமும் நேமிநாதமும் சார்பெழுத்துக்-கள் என வெளிப்படக் கூறாது முறையே ஐந்தும் ஒன்பதும் தருகின்றன. தொன்னூல் விளக்கமும் இலக்கண விளக்கமும் சார்பெழுத்துக்கள் ஒன்பது தரு-கின்றன. சென்ற நூற்றாண்டின் முத்துவீரியம் உயிர்

---

5. நன். எழு. 6

மெய்யும் ஆய்தமும் என **இரண்டை** மட்டுமே தருகிறது! இதிலே இன்னும் வேடிக்கை : தொல்காப்பியமும் மற்ற எல்லா இலக்கண நூல்களும் ஆய்தத்தைச் சார்பெழுத்து எனவே கொள்ள வீரசோழியமும் நேமிநாதமும் அதனை முதலெழுத்தாகக் கொள்ளுகின்றன !! நேமிநாதம் சார்பெழுத்துக்களை **இரண்டாம்வைப்பு** என்கிறது. இக்குழப்பங்கள் எல்லாம் தொல்காப்பியர் வகுத்த 'சார்ந்து வரல் மரபின் மூன்றின்' இலக்கணம் என்ன என்பதைப் பிறர் புரிந்து கொள்ளாமையின் விளைவே ஆகும். இவை பற்றித் தெளிவுபெற இனிச் சார்பெழுத்தின் இலக்கணத்தைக் காணலாம்.

## 4. 4. சார்பெழுத்தின் இலக்கணம்

**4. 4. 1.** சார்பெழுத்துக்களின் தன்மையை விளக்கும் முறையில் தொல்காப்பியர் இரண்டு நூற்பாக்களில் அவைபற்றிக் குறிப்பிடுகிறார். முதல் நூற்பா :

"எழுத்தெனப் படுப
அகரமுதல் னகர இறுவாய்
முப்பஃது என்ப
*சார்ந்துவரல் மரபின் மூன்று* அலங் கடையே."[6]

இரண்டாவது நூற்பா :

"சார்ந்துவரின் அல்லது தமக்கியல்பு இலஎனத்
தேர்ந்துவெளிப் படுத்த ஏனை மூன்றும்
தத்தம் சார்பின் பிறப்பொடு சிவணி
ஒத்த காட்சியின் தம்மியல்பு இயலும்."[7]

---

6. தொல். எழு 1    7. தொல், எழு. 101

முதற்நூற்பா தமிழெழுத்துக்களின் தொகை கூறுகிறது இரண்டாவது நூற்பா சார்பெழுத்துக்களின் பிறப்புக் கூறுகிறது. முதல்நூற்பாவின் ஈற்றடியும் இரண்டாம் நூற்பாவின் முதலடியும் "சார்ந்து வரல்" என்னும் தொடரை ஆண்டுள்ளன. இந்தத் தொடரே சார்பெழுத்-துக்களின் பண்பை விளக்குகின்றது. 'சார்ந்து' என்ற சொல்லுக்குச் 'சேர்ந்து', 'இணைந்து', 'உடனிருந்து', 'கூடி என்றெல்லாம் பொருள் கொள்ளலாம். இவ்வாறு கொள்-வதில் யாருக்கும் தடையில்லை. 'வருதல்' என்ற சொல்லைத் தொல்காப்பியர் தம் எழுத்ததிகாரத்தில் 'முற்பட இயங்-குதல்', 'தோன்றுதல்', 'வழங்குதல்' என்ற பொருள்களில் ஆண்டுள்ளனர். 'சார்ந்துவரின்' என்ற தொடரில் 'வரின்' என்ற சொல் வழங்கின் என்ற பொருளிலேயே ஆளப் பட்டது எனக்கொள்ளலாம். ஆகவே 'சார்ந்து வரல்' என்ற தொடருக்கு 'உடனிருந்து வழங்குதல்' என்று பொருள் கொள்ளலாம். ஆதலால் சார்பெழுத்துக்கள் 'எப்போதும் மற்ற அல்லது ஒரு சில குறிப்பிட்ட எழுத்துக்களுடனி-ருந்தே வழங்குவன' எனப் பொருள்படும்;[8] அதாவது அவை இன்றைய மொழியியல் கருத்துப்படி ஒரு குறிப் பிட்ட எழுத்தியற் சூழலிலேயே[9] வழங்கும். உரையாசிரி-யர்கள் இந்தச் சூழல், இடம், பற்றுக்கோடு, சார்பு ஆகியவற்றால் அமைவது என்பர்.[10]

---

8. இளம்பூரணர் சார்பெழுத்துக்களைச் சார்பிற்-றோற்றத்தெழுத்துக்கள் என வழங்குகின்றார். (நூ. 34, 101 ·

9. Phonological environment

10. தொல். எழு. நச். 34 முதல் 39 வரையிற் காண்க.

மற்ற முதலெழுத்துக்கள் சூழல்வரையறை செய்ய முடியாத எண்ணற்ற பலசூழல்களில் வழங்கும். சார்பெழுத்-துக்கள் முதலெழுத்துக்களைப் போன்று வரையறை செய்ய முடியாத எண்ணற்ற சூழல்களில் வழங்குவதில்லை. இக்-கருத்துத்தான் 'தமக்கு இயல்பு இல' என்னும் தொடரால் குறிக்கப்படுகிறது.[11] சார்ந்து வருதலுக்கு எதிர்மறை தான் தமக்கியல்பில என்னும் தொடராகும். (தமக்கு இயல்பில = சார்ந்து வாராமையாகிய தனித்து வருதலைத் தமக்குப்பண்-பாகக் கொண்டில.) முதலெழுத்துக்கள் பல்வேறு சூழல் களில் தனித்தும் பிறவற்றோடு கூடியும் வழங்க அவை தனியெழுத்துக்கள் என உணரப்படுகின்றன. சார்பெழுத் துக்கள் அவ்வாறு வழங்காமையால் தனித்தனியே அவை வழங்கக்கூடும் என்று உணரப்படவில்லை. அதனையே 'தமக்கியல்பில' என்னும் கருத்து வலியுறுத்துகிறது. இக்கருத்தைத்தான் இலக்கண உரையாசிரியர்கள் 'சார்-பெழுத்துக்கள் தனித்து வழங்கா' எனக் குறிப்பிடுகின்-றனர்.[12]

---

11. இளம்பூரணரும் நச்சினார்க்கினியரும் சார்பெழுத்-துக்களுக்கு இடமும் பற்றுக்கோடும் சார்பும் உண்டு எனக் குறிப்பிடுகின்றனர். மூன்று சார்பெழுத்துக்களுக்கும் எது எது இடம் பற்றுக்கோடு சார்பு எனத்தனித்தனியே எடுத்-துக்காட்டுகின்றனர். ஆனால் முதலெழுத்துக்களுக்கு இவ்-வாறு பற்றுக்கோடும் சார்பும் இல்லை. தொல். எழு 34 முதல் 39 வரையிற் காண்க.

12. இளம்பூரணர் 'சிலவற்றைச் சார்ந்துவரினல்லது தமக்குத்தாமே வரும் இயல்பில' என உரை வகுக்கிறார். (தொல். எழு. 101)

4.4.2. இரண்டாவது நூற்பா, சார்பு எழுத்துக்கள் மூன்றும் 'தத்தம் சார்பிற் பிறப்பொடு சிவணி ஒத்த காட்சியின் தம்மியல்பியலும்' எனக் குறிப்பிடுகிறது. "சார்பெழுத்துக்கள் தாம் தாம் சார்ந்து வழங்கும் எழுத்துக்களின் பிறப்பியல்புகளைப் பெற்று ஏற்ற இடத்தில் பிறந்து தம்மியல்போடு வழங்கும்" என்பது இதன் பொருள். தாம் சார்ந்து வழங்கும் பிற எழுத்துக்கள் (வல்லின மெய்யெழுத்துக்கள் ஆறும்) பலவாக விளங்குகின்ற காரணத்தால் சார்பெழுத்துக்களின் பிறப்பியல்பும் பலவாகும்.

ஆகவே ஒவ்வொரு சார்பெழுத்திற்கும் ஒரேபொரு குறிப்பிடத்தக்க பிறப்பியல்பு இல்லை என்பதாகிறது. ஆனால் ஒவ்வொரு சொல்லிலும் ஏற்ற (தான் சார்ந்து வழங்கும் வல்லெழுத்தின் பிறப்போடு கூடிய) பிறப்பை அது பெறுகிறது. இக்காரணத்தாலும் சார்பெழுத்துத் தனியே வழங்குதல் இல்லை தமக்கியல்பில—எனக் கூறப்படுகிறது. முதலெழுத்துக்களுக்கும் சார்பெழுத்துக்களுக்கும் இடையுள்ள தலையாய வேறுபாடு இதுவே யாகும்

4. 4. 3 இதுகாறும் கண்டவற்றால் தொல்காப்பியர் கருத்துப்படி 1) சார்ந்து வழங்குதலும் அதாவது ஒரு சில சூழல்களிலேயே வழங்குதலும் 2) சார்ந்து வழங்கும் எழுத்துக்களின் பிறப்பியல்பையே பெற்று அப்பிறப்பியல்பு ஒன்றல்லது சார்புக் கேற்பப் பலவாகி வழங்குதலும் ஆகிய இரண்டுமே சார்பெழுத்தின் இலக்கணமாகும்.

## 4. 5. பின்னையோர் பிறழ்வுணர்ச்சி

பிற்காலத்து இலக்கணவாசிரியர்கள் சார்பெழுத்துக்களின் இவ்விரண்டு பண்புகளையும் உணர்ந்து

கொள்ளவே இல்லை; அவர்கள் உணர்வதது மட்டுமல்லாது தொல்காப்பியர் கருத்துக்களைத் தவறாகவும் உணர்ந்து கொண்டனர். சார்பெழுத்துக்களைப் பற்றி நன்னூலிலும் அதன் உரைகளிலும் காணக்கிடக்கும் கருத்துக்கள் இதனை வலியுறுத்துகின்றன. நன்னூலின் முதலுரையாளர் மயிலைநாதர் "முதலெழுத்தாம் தன்மை அவற்றுக்கு இன்மையானும் சார்பிற்றோன்றுதலானும் இப்பத்தும் சார்பாகவே கொள்ள வேண்டும் என்பது" எனச் சார்பெழுத்துக்களுக்குப் பெயர்க் காரணம் கூறுகிறார். முதலெழுத்தாம் தன்மை யாது? என்பது விளக்கப்படவில்லை. "தமமொடு தாம் சார்ந்தும் இடம் சார்ந்தும் பற்றுக்கோடு சார்ந்தும் விகாரத்தால் வருதலின்........" என மற்றொரு குறிப்புரையாளர் குறிப்பிடுகிறார். 'தம்மொடு தாம்சார்தலின்' பொருள் தெளிவாக வில்லை! 'விகாரத்தால் வருதல்' மாத்திரை குறைந்து வருதலாகும். இதனை ஒருபண்பாகத் தொல்காப்பியர் கூறவில்லை. சங்கரநமச்சிவாயர் "உயிர்மெய் உயிரும் மெய்யும் கூடிப் பிறத்தலானும், ஆய்தம் உயிர்போல....அலகு பெற்றும் மெய் போல...அலகு பெறுதும் ஒருபுடை யொத்து அவற்றின் இடையே சார்ந்து வருதலானும், ஏனைய தத்தம் முதலெழுத்தின் திரிபு விகாரத்தாற் பிறத்தலானும் சார்பெழுத்தாயின எனக் கொள்க" என விளக்குகிறார். அலகு பெறுதலும் பெறாமையும் என்னும் அடிப்படையில் தொல்காப்பியர் சார்பெழுத்துக்களின் பண்பை விளக்கவில்லை மேலும் சிவஞான முனிவர் "அவ்வாறன்றி உயிர்மெய் ஒழிந்தன அகரம் முதலியன போலத் தனித்தானும் ககர முதலியன போல அகரமோடு சிவணியானும் இயங்கும் இயல்பின்றி ஒருமொழியைச்

சார்ந்து வருதலே தமக்கு இலக்கணமாக உடைமையின் சார்பெழுத்தாயின எனக் கோடலுமாம் என்க" என விரிவுரை செய்கிறார். (நன். எழு 5) அஃகேனம் என ஆய்தம் சாரியையொடு சிவணி வழங்குதலை மாதவச் சிவஞான முனிவர் அறியாமற் போனது வியப்பே! நன்னூலாசிரியர், இளம்பூரணர் உரையைப் பின்பற்றிச் சார்பெழுத்துக்களின் வகை விரி உணர்த்திய பின் அவற்றின் பிறப்புக் கூறுகிறார்:

"ஆய்தக்கு இடம்தலை; அங்கா முயற்சி;
சார்பெழுத்து ஏனவும் தம்முதல் அனைய."[13]

இவர்கள் விளக்கும்படி சார்பெழுத்துக்கள் பற்றிப் பெறப்படும் கருத்துக்கள் சில:

1) எழுத்து முதல் எனவும் சார்பு எனவும் இரு வகையானது "எழுத்து அது முதல் சார்பு என இருவகைத்து" என்னும் நன்னூலால் (எழு.3) இது தெளிவாகிறது.

2) சார்பெழுத்துக்கள் (ஆய்தம் தவிர) முதலெழுத்-துக்களின் திரிபு விகாரத்தால் அமைபவை. 'முற்றிய லுகரத்தின் திரிபுவிகாரத்தால் குற்றியலுகரம்'; 'மகரத்தின் திரிபு விகாரம் மகரக் குறுக்கம்'; 'முற்றாய்தத்தின் திரிபு விகாரம் குற்றாய்தம்' என்பன போல அமைபவை. அதாவது ஒவ்வொரு சார்பெழுத்துக்கும் ஏற்ற—உரிய—முதலெழுத்து உண்டு. அவர்கள் "தத்தம் முதல் தம் முதல்" எனக் குறிப்பதால் இக்கருத்துத் தெளிவாகிறது.

13. நன். எழு. 32

3) சார்பெழுத்துக்களுக்குத் தனித்தனியே வரையறுத்த பிறப்புமுயற்சியும் பிறப்பிடமும் உண்டு. அந்தப் பிறப்புமுயற்சியும் பிறப்பிடமும் அதனதனுக்கு உரிய முதலெழுத்தின் பிறப்பு முயற்சியும் பிறப்பிடமும் ஆகும். நன்னூல் (நூ.87) இதனை விளக்குகிறது.

4) சார்பெழுத்துக்கள் ஒரு மொழியினைச் சார்ந்தே (இடமும் பற்றுக்கோடும் பெற்று) வழங்குகின்றன.

தொல்காப்பியர், முதல் எனவும் சார்பு எனவும் எழுத்துக்களை வகுக்கவில்லை என முன்பு விளக்கப்பட்டது. ஆகவே முதலிரண்டு கருத்துக்களும் தொல்காப்பியர் கருத்துக்கு மாறானவை. அவை பிற்காலத்துத் தோன்றியவையாகக் கொள்ள வேண்டும். மூன்றாவது தொல்காப்பியர் கருத்துக்கு நேர்மாறானது; அவர் சார்பெழுத்துக்களுக்கு ஒரு குறிப்பிட்ட பிறப்பு, இடம் கூறவில்லை. அவர் கருத்துப்படி அவை தம் சார்புக்கு—சூழலுக்கு—ஏற்பப் பிறப்புவேறுபாடு கொள்ளுகின்றன. நான்காவது கருத்தொன்றே தொல்காப்பியர் கருத்தோடு ஒத்துள்ளது. மேலே விளக்கியவாறு சார்புக்கேற்ப ஓரளவு பிறப்பொற்றுமையும் ஓரளவு பிறப்பு வேற்றுமையும் கொண்ட ஒலிகளையே தொல்காப்பியர் சார்பெழுத்து என வகுத்தார். அவர் முறை இன்றைய மொழியியல் நெறிகளுக்கு மிக ஏற்றதேயாகும். அவ்வகையில் அவர் குற்றியலிகரம், குற்றியலுகரம், ஆய்தம் ஆகியவற்றை மூன்று சார்பெழுத்துக்கள் என வகுத்தது பொருத்தமே. யாப்பருங்கலத்தின் காலம் வரை இந்நிலையே நிலவியது. ஆனல் நன்னூலாருள்ளிட்ட பிற்காலத்து இலக்கணவாசிரியர்கள் இவ்வகை மொழியியல் நெறி ஏதுமின்றிப் பிறழ்வுணர்ச்சியால் வகுத்த சார்பெழுத்துக்கள் தவறுகின்றன.

## 4. 6. ஆய்தம்

*4. 6 1.* முன்னுரை:- தமிழெழுத்துக்களிலேயே பெரிதும் புதிரானது இவ்வாய்த எழுத்துத்தான். இது பற்றிப் பல்வேறு கருத்துக்கள் கூறப்பட்டுள்ளன; அப் பல்வேறு கருத்துக்களும் தமக்குள் முரண்பட்டனவாகவும் உள்ளன! இருந்தும் இவ்வெழுத்துப் பற்றிய உண்மையைக் கண்டதாகக் கூறமுடியவில்லை. ஆய்தம் பழந்தமிழில் வழங்கியது. கி. பி. 1000 வரை இலக்கியத்திலும் கல்வெட்டிலும் இயல்பாகப் பயின்று வந்தது.[14]

ஆய்தத்தின் ஒலி யாது? அதனை மட்டும் தனியாக ஓரெழுத்தாகக் கொள்ளலாமா? அதன் வழக்கு யாது? அதன் வரலாறு என்ன? என்ற கேள்விகளை இங்கு ஆராயலாம். இவ்வாராய்ச்சிக்குத் துணையாகப் பண்டை ஆசிரியர்கள் ஆய்தம் பற்றிச் சொன்ன கருத்துக்களை முதலில் உரைக்க வேண்டும்.

4. 6. 2. பெயர்களும் காரணங்களும்.

ஆய்த எழுத்திற்கே பல பெயர்கள் வழங்குகின்றன. அவற்றை அவிநயமுடையார் பெயரால் வழங்கும் ஒரு பழைய நூற்பா தொகுத்துத் தருகிறது:

"அஃகேனம் ஆய்தம் தனிநிலை புள்ளி
ஒற்று இப்பால் ஐந்தும் இதற்கே."[15]

---

14. திருமதி ஜயக்குமாரி அவர்களும், செல்வி பாகீரதியவர்களும் தம் கல்வெட்டு மொழியாராய்ச்சி யுரைகளில் இதனைச் சுட்டிக் காட்டுகிறார்கள்.

15. யாப்பருங்கல விருத்தி, நூற்பா, 2. "அக்கேனம்" என்பதும் பாடம்.

இப்பெயர்கள் எல்லாம் ஆய்தத்தின் தன்மை இன்னது என்பதை ஓரளவு விளக்குகின்றன.

## 4. 6. 3. ஆய்—தல் = ஆய்தம்

ஆய்தம் என்னும் சொல் 'சார்ந்தது' என்னும் பொருளுடைய ஆஸ்ரத[16] என்ற வடசொல்லின் திரிபு எனவும், வடமொழியில் ஜிஹ்வாமூலிய (அதாவது ககரத்தின் முன்வரும் விசர்க்க) ஒலியைச் சுட்டுவதற்கு அவ் ஆஸ்ரத என்னும் சொல் வழங்கியது எனவும், தமிழ் ஆய்த ஒலி அதனைப் போன்ற ஓரொலியாதலால் அவ்வட சொல் தமிழில் வழங்கப்பட்டது எனவும் வடமொழிப் பற்றாளர்கள் பலரும் வழக்கம் போல் உரைத்து வைத்துள்ளனர்.[17]

ஆனால், கால்டுவெல் முதலான அறிஞர்கள் ஆய்தம் தமிழ்ச் சொல்லே எனக் கருதுவதாகத் தெரிகிறது.[18] 'ஆய்தல' என்னும் வினைச் சொல்லோடு உறவுடையதே இவ்வாய்தம் என்னும் சொல் எனக்கொள்ளுகின்றனர்.

---

16. aashrata

17. திரு மு இராகவையங்கார், திரு. பி. எஸ். சுப்பிரமணிய சாஸ்திரி, திரு. வேங்கடராசுலு ரெட்டியார் முதலானோர் இவர்கள். மு. இராகவையங்கார்: 'தொல்காப்பியனாரும் புள்ளி எழுத்துக்களும்', *ஆராய்ச்சித் தொகுதி*, பக். 127—131; பி சுப்பிரமணிய சாஸ்திரி. HGTT., பக்.65-70 வேங்கடராசுலு ரெட்டியார்: தொல். எ. அ- ஆ., பக். 84—85.

18 கால்டுவெல் கருத்திற்கு அடிக்குறிப்பு 44 4 காண்க. பேர். தெ. பொ. மீ. டாக்டர் மு. வ., வெள்ளைவாரணர், பாவாணர் ஆகியோர் கருத்தும் இதுவே.

'ஆய்தல்', என்னும் சொல்லுக்கு "உள்ளதன் நுணுக்கம்" என்பது பொருள் என்பர் தொல்காப்பியர்:

ஒய்தல் ஆய்தல் நிழத்தல் சாஅய்
ஆவயின் நான்கும் உள்ளதன் நுணுக்கம்.[19]

ஆகவே ஆய்தஒலி ஒரு நுண்ணிய ஓசையினைக் குறிக்க வழங்கப்பட்டிருக்கலாம். ஆய்த எழுத்துப் பயிலும் வண்ணத்தைத் தொல்காப்பியர் '*நலிபு வண்ணம்*' என்கிறார்:

நலிபு வண்ணம் ஆய்தம் பயிலும்.[20]

'நலிந்தஓசையுடையதே நலிபு வண்ணம்'. 'நுண்ணிய ஓசையே நலிந்த ஓசை' எனலாம். இக்கருத்துக்களால் ஆய்தம் என்பது தமிழ்ச் சொல்லே என்பது மட்டுமல்லாது ஆய்தஒலி நுண்ணிய ஓசை என்பதும் தெளிவாகிறது.

### 4. 6. 4. புள்ளியும் ஒற்றும்

*புள்ளி* எனவும் *ஒற்று* எனவும் ஆய்தத்தைக் குறித்து வழங்குதல் அதன் வரி வடிவத்தைக் கருதியே எனலாம். புள்ளியும் ஒற்றும் தமிழில் புள்ளிபெறும் எழுத்துக்களையே குறிக்க வழங்குகின்றன, ஆதலால் இரண்டும் புள்ளிபெறும் மெய்யெழுத்துக்களைக் குறிக்கவும் வழங்குகின்றன. ஆய்தமும் புள்ளி வடிவினதாகவே தொல்காப்பியர் கால முதல் எழுதப்பட்டு வருகிறது. இக்கருத்துக்கள் ஆய்தமும் மெய்யெழுத்தினைப் போன்ற ஓரொலியே

19. தொல். சொல். உரி. 32
20. தொல். செய். 221

எனக் கருத இடந்தருகின்றன. ஆனால் ஆய்தம் மெய்யெழுத்து அல்ல என்பது தொல்காப்பியர் முதற்கொண்ட இலக்கண ஆசிரியர்கள் கருத்து. அவர்கள் ஆய்தம் நீங்கப் பதினெட்டே மெய்யெழுத்துக்கள் என்பதால் இது தெளிவாகிறது.

### 4. 6. 5. தனிநிலை

தனிநிலை என இடைக்காலத்து இலக்கண ஆசிரியர்கள் ஆய்தத்திற்குப் பெயரிட்டு வழங்குகின்றனர். ஆனால் இதன் காரணம் நன்கு விளங்கவில்லை.[21] "ஆய்தம் ('அற்றால் அளவறிந்துண்க அஃதுடம்பு' முதலிய இடங்களில் உயிர்போல அலகு பெற்றும் 'தோன்றிற் புகழொடு தோன்றுக அஃதிலார்' முதலிய இடங்களில் மெய் போல அலகு பெறாமலும் உயிர் மெய்களை ஒரு புடை ஒத்து) உயிருமாகாமல் மெய்யுமாகாமல் (அலி போலத்)[22] தனிநிற்றலால் 'தனிநிலை' எனப்பட்டது" எனவும், "உயிரும் மெய்யும் தம்மிற் கலத்தல் போல ஆய்தம் ஓரெழுத்தோடுங் கலத்தலின்றித் தனி நிற்றலால் தனிநிலை எனப்பட்டது என்றலும் ஒன்று" எனவும் நன்னூலுரையாசிரியர் சடகோப ராமானுசாச்சாரியார் கூறுதல் ஒருகால் தனிநிலை என்னும் பெயரின் காரணத்தை விளக்கலாம். ஆய்தத்தின் ஒலி பற்றிய கருத்து ஒன்றும் இதனால் விளக்கமுறவில்லை.

---

21. "உயிர்களோடும் மெய்களோடும் கூடியும் கூடாதும் அலி போலத் தனி நிற்றலின் தனிநிலை எனப்படும்."—நன். எழு. 5, சங்கர.

22. பாட்டியலுடையார் ஆய்தத்தை அலியெழுத்து என்றே வழங்குகிறார்.

### 4. 6. 6. அ:கேனம்

அ:கேனம் என்பது ககரம், மஃகான், ஆகாரம் என்பன போன்று சாரியை பெற்ற ஒலி. ஏனம் என்பது எழுத்திற்குத் துணைவரும் ஒருசாரியை. அ:கு என்பது ஆய்தத்தின் ஒலி. அஃகேனம் என்னும் பெயரால் ஆய்தத்தின் ஒலி இத்தகையது என அறிய முடிகிறது. இன்று இதுவே அக்கன்னு, அக்கு, அஃகு எனத் தொடக்கப் பள்ளிகளில் கற்பிக்கப்படுகிறது. இன்று எஃகு, அஃது என்னும் சொற்களில் ஆய்தம், ஹகர ஒலி போன்றே ஒலிக்கப்படுகிறது. அவ்வாருயின் அஃகன்னு என்பதில் முதலிலமைந்துள்ள அகரமும் சாரியையே ஆக வேண்டும். இதனுல் ஒருண்மை விளங்குகிறது : அஃகேனம் என்னும் பெயர் ஆய்தத்திற்கு வழங்கத் தொடங்கிய நாளிலிருந்து அதற்கு ஹகர ஒலி உண்டு என்பதே அது. (இக்கருத்தை ஒட்டியே சென்னைப் பல்கலைக்கழகத்தார் வெளியிட்ட தமிழ்ப் பேரகராதி ஆய்தத்தை $\underline{K}$ எனக் குறிக்கிறது.)

### 4. 6. 7. தொல்காப்பியர் கருத்து

ஆய்தத்தைப் பற்றித் தொல்காப்பியர் கருத்து யாது எனக் காணலாம். சார்பெழுத்துக்கள் பற்றித் தொல்காப்பியர் சொன்ன கருத்துக்கள் முன்பே எடுத்துக் காட்டப்பட்டன. (காண்க: 4. 4.) அவற்ருல் சார்பெழுத்துக்களுள் ஒன்ருகிய ஆய்தத்திற்கு ஒரு குறிப்பிட்ட பிறப்பு (ஒலிப்புறுப்பு, ஒலிப்பிடம்) இல்லை என்பதும் தான் சார்ந்து வழங்கும் எழுத்துக்களின் பிறப்பையே அது பெறும் என்பதும் தெளிவாகின்றன.

"குறியதன் முன்னர் ஆய்தப் புள்ளி
உயிரொடு புணர்ந்த வல்லாறன் மிசைத்தே"[23]

என்னும் அவர் நூற்பாவால் ஆய்தம் சார்ந்து வரும் எழுத்துக்கள் வல்லெழுத்துக்கள் என்பதும் தெளிவாகிறது. இதனால் ஆய்தத்திற்கு ஆறு பிறப்புக்கள் (ஒலிப்பிட ஒலிப்புறுப்புக்கள்) கொள்ள வேண்டும். எ.:கு என்னும் சொல்லில் மெல்லண்ணம் பின் நாவினையும், க.:சு என்னும் சொல்லில் நடுவண்ணம் நடுநாவினையும், க.:டு என்னும் சொல்லில் நடுவண்ணம் வளைநாவினையும், க.:று என்னும் சொல்லில் ஈற்றண்ணம் நுனிநாவினையும், அ.:து என்னும் சொல்லில் முன்மேற்பல் நுனிநாவினையும், க.:பு என்னும் சொல்லில் ஈரிதழ்களையும் ஆய்தத்தின் பிறப்புக்கு ஒலிப்பிட ஒலிப்புறுப்புக்களாகக் கொள்ள வேண்டும். ஆய்தத்தின் பிறப்புப் பற்றி இவ்வளவு விளங்கினாலும் அதன் ஒலிப்பு வகை,[24] குரல் நிலை ஆகியவை தெளிவாகவில்லை. ஆய்தம், தான் சார்ந்து வரும் வல்லெழுத்துக்களின் வகையாகித் தானும் வல்லெழுத்தானால் மற்ற வல்லெழுத்துக்களுக்கும் இதற்கும் வேறுபாடு இல்லாது போகும். போகவே தொல்காப்பியர் இதனைத் தனி ஓரெழுத்தாக வேறுபடுத்திக் கூறவேண்டிய தேவையும் இல்லாது போகும். ஆதலால் தொல்காப்பியர் கருத்துக்கள் ஆய்தம் இத்தகைய ஒலி எனத் தெளிவாக அறியத் துணை செய்யவில்லை.[25] ஆனாலும் ஆய்தம் மூக்கொலியாகவோ துடிப்

---

23. தொல். எழு. 38

24. Manner of articulation

25. "The statement of Tolkappiyam that the old Tamil Aytam had the same place of articulation as the following plosives, of which these were six (க, ச, ட, த,

பொலியாகவோ இருந்திருக்காது எனலாம். தொல்காப்பியர் ஆய்தம் பயிலும் வண்ணத்தை நலிபுவண்ணம் என்றமையாலும் 'ஆய்தம் உள்ளதன் நுணுக்கம்' எனப் பொருள்படும் ஆய்தல் என்னும் சொல்லினடியாகத் தோன்றியதாகத் தெரிவதாலும் அது ஒரு தொடர்வொலியாக இருந்திருக்கலாம். அல்லது குறிப்பாக அது ஓர் உரைவொலியாகவும் இருந்திருக்கலாம். அல்லது ஏதாவது ஒருவகையில் நலிவொலியாக இருந்திருக்கலாம். வல்லெழுத்துக்களில் இன்று வலிவொலி நலிவொலி வேறுபாடு (*tense vs. lax sounds*) அமைந்துள்ளது. இவ்வேறுபாடே உயிர்ப்பொலி குரலொலி வேறுபாடாக (*voiceless vs. voiced sounds*) முன்னர் விளக்கப்பட்டது.[26] வலிவொலி நலிவொலி வேறுபாடு கட்டாயமாக உயிர்ப்பொலி குரலொலி வேறுபாடாக இருக்க வேண்டும் என்பதில்லை. இத்தகைய நிலையில் ஆய்தம் சார்ந்த வல்லெழுத்து நலிவொலியாக விளங்கியிருக்கலாம்; தனிவல்லெழுத்து வலிவொலியாகும். தொல்காப்பியர் காலத்தில் வல்லெழுத்துக்களில் உயிர்ப்பொலி குரலொலி வேறுபாடு இருந்திருக்காது என முன்னர் விளக்கப்பட்டது; ஆனாலும் வலிவொலி நலிவொலி வேறுபாடு ஆய்தத்தின் துணையால் இருந்திருக்கலாம். இவ்வாறு கொள்வதே, தொல்காப்பியர் ஆய்தத்திற்கு அப்பெயரிட்டு அது சார்ந்த வண்ணத்தை நலிபுவண்ணம் என வழங்குவதற்கு ஒத்துள்ளது.

---

ற, ப). would seem to exclude any oral articulation."— F. B. J. Kuiper, TPOTP. II.

26. இந்நூல் 2. 21 காண்க.

தொல்காப்பியர் கருத்தின்படி ஆய்தப்புள்ளி குறியதன் முன்னர் உயிரொடு புணர்ந்த வல்லாறன் மிசையது என்பதால் அதன் எழுத்தியற் சூழலும் வழக்கும் தெளிவாகின்றன. அவர் கருத்தின்படியே ஆய்தம் கஃபு எனத் தனிமொழியிலும் அஃகடியே எனப் புணர்ச்சியிடத்துத் தொடர்மொழியிலும் வழங்கும் என்பதும் விளங்குகின்றது.

### 4. 6. ४. 1. நன்னூலார் கருத்து

ஆய்தம் பற்றிய கருத்துக்களில் நன்னூலார், தொல்காப்பியரிடமிருந்து பெரிதும் முரண்படுகிறார். 'சார்ந்துவரல் மரபின்' என்ற தொடரையும், சார்பெழுத்-துக்களின் தன்மையையும் நன்னூலார் தவருகப்புரிந்து கொண்டார் என்பது மேலே விளக்கப்பட்டது.(காண்க4.5.)

நன்னூலார்,

" ஆய்தக்(கு) இடம் தலை; அங்கா முயற்சி" [27]

என அதன் பிறப்புணர்த்துகிறார். தலையை இடமாகக் கொண்டு ஒலி எவ்வாறு தோன்றுகிறது என்பது இன்றைய மொழியியலுக்கு விளங்காத ஒருபுதிரே எனவும் அது ஒருபிறழ்வுணர்ச்சியே எனவும் முன்னரே சுட்டிக்காட்டப்பட்டது. (காண்க 1.23) ஆய்தம் தலையை இடமாகக் கொண்டு பிறக்கிறது. என்பதை முதன்முதல் இளம்பூரணர் தம் தொல்காப்பிய உரையில் கூறினர். (தொல். எழு . 101, இள.) நன்னூலார் அவர் கருத்தினை மேற்கொண்டுள்ளார். இளம்பூரணருக்கு முன்னரே

---

உ7. நன். எழு. 32

இக்கருத்துத் தமிழகத்தில் வழக்குக்கு வந்திருக்க வேண்டும். வடமொழியிலக்கணக் கருத்துக்களைப் பின்பற்றியதாலேயே தமிழிலும் தவருன இவ்வழக்குத் தோன்றியிருக்கலாம். இக்கருத்துக்களுக்கு மாருக நச்சினர்க்கினியர் ஆய்தம் நெஞ்சிடனகப் பிறக்கும் என்ருர். (தொல். எழு.101,நச்சி.) இவரைப் பின்பற்றித் தான் போலும் இலக்கண விளக்க முடையார் 'ஆய்தம் நெஞ்சோசையின் அங்காந்தியலும்' என்ருர். (இ.வி 13) வல்லெழுத்துக்கள் நெஞ்சினை இடமாகக் கொண்டு பிறக்கின்றன என்ற கருத்தை ஒட்டி அவ்வல்லெழுத்துக்களோடு உறவுகொண்டு நடைபெறும் ஆய்தமும் நெஞ்சை இடமாகக் கொண்டு பிறக்கிறது என்ற கருத்துத் தோன்றியிருக்கலாம். சென்ற நூற்ருண்டில் எழுந்த முத்து வீரியம் என்னும் இலக்கண நூல்,

''உந்தி தனிநிலை உற்று அங்காந்தியலும்''

என ஆய்தம் உந்தியைப் பொருந்தித் தோன்றும் என்று புதிய கருத்தைக் கூறுகிறது. ஆனல் இக்கருத்துக்கள் எல்லாம் தவறுடையனவே என்பதை இன்றைய ஒலியியலால் அறியலாம். (காண்க:1.20; 1.23) இவ்வாருக ஏறத்தாழ ஆயிரம் ஆண்டுகளுக்கு மேல் தொல்காப்பியர் சொன்ன கருத்துக்களுக்கு மாருக ஆய்தத்தின் பிறப்புப் பற்றி அதற்கெனக் குறிப்பிடத் தக்க ஒரு பிறப்புத் தரும் கருத்து வழங்கிவருகிறது.

### 4. 6. 8. 2. அங்காப்பொலி

நன்னூல் முதற்கொண்ட பின்னூல்களெல்லாம் ஆய்தத்திற்கு அங்காப்பினைப் பிறப்பு முயற்சியாகத் தருகின்றன இக்கருத்தும் தொல்காப்பியர் கூருத ஒருபுதுக் கருத்-

தேயாகும். இன்று ஆய்தம் "அஹ்" என ஒலிக்கப் படுகிறது; பள்ளிப்பிள்ளைகளுக்கும் கற்பிக்கப்படுகிறது. இவ்வொலியில் அங்காப்பு முயற்சியுண்டு. இவ்வொலியே ஆய்தத்தின் ஒலி எனக்கருதிக் கொண்டு அதற்கேற்ப உரைக்கப்பட்ட விளக்கமே நன்னூலாருடையது போலும். அங்காப்பு முயற்சியினை ஆய்தம் நன்னூலார் காலத்துக்கு முன்பே பெற்றிருக்க வேண்டும். "அஹ்" என்னும் ஒலிக்கு ஒரே ஒலிப்பிட ஒலிப்பு முயற்சியைத்தான் குறிப்பிட முடியும். அது எஃகு என்பதில் போன்று ககரத்தின் முன் வழங்கும் ஒலியாகும். ஆய்தம் ஒரு காலத்தில் மற்ற வல்லெழுத்துக்களின் முன் பெறும் ஒலிகளை இழந்து ககரத்தின் முன் பெறும் ஒலியினை மட்டும் பெற்றிருக்க வேண்டும்.[28] இது ஆய்தத்தின் வரலாற்றில் ஏற்பட்ட ஒரு பெரு நிகழ்ச்சி. ஆய்தம் உற்ற இம்மாற்றம் அது உற்ற திரிபாகவும் இருக்கலாம், அல்லது பிறர் அதனைப் பிறழ உணர்ந்ததன் விளைவாகவும் இருக்கலாம்.

---

28. இதன் காரணமாகத்தான் பழஞ்சுவடிகளில் ஆய்தம் கு அல்லது கூ எனவும் எழுதப்பட்டிருக்கிறது எ. கா அஃதை ∽ அகுதை; அஃது ∽ அகுது. ஆய்தம் இவ்வொலி பெற்றிருந்த காலத்தில் வாழ்ந்த கம்பர் அது ககரத்தோடு எதுகை கொள்ளுமாறு ஓர் அழகிய பாடல் அமைத்துள்ளார் :

அஃதைய நினைஎமது அரண்என உடையேம்
இஃதொரு பொருள்அல எமதுயி ருடன்ஏழ்
மகிதலம் முழுதையும் உறுகஅ மலரோன்
உகுபகல் அளவென உரைநனி பகர்வார்.

தொல்காப்பியர் காலத்தில் ஆய்தம் ககரத்தின் முன் பெற்றிருந்த ஒலியை நன்னூலார் காலத்தில் எல்லா இடங்களிலும் பெற்றது என்பதும் அவ்வொலியையே இன்றும் ஆய்தம் பெறுகிறது என்பதும் உண்மையானல் மேலே கண்டவாறு பண்டு ஆய்தம் ஓர் உரைவொலியே என்ற கருத்து வலியுறுகிறது. ஏனென்றால் இன்று அது உரைவொலியே பெற்று வழங்குகிறது.

ஆய்தத்தின் வழக்கில் தொல்காப்பியர்க்கும் பின் வந்த இலக்கண ஆசிரியர்களுக்கும் கருத்து வேறுபாடு ஒன்றும் இல்லை. பண்டும், இன்று அண்மை வரையும் அதன் வழக்குக்கள் மாறுதலவையே.

## 4. 6. 9. ஆய்தஒலிபற்றி உணர்த்தும் பிற சான்றுகள்

தொல்காப்பியரும் நன்னூலாரும் ஆய்தம் பற்றி நேரே கூறிய கருத்துக்களால் அதன் ஒலியியல்பு எத்-தகையது என்பது தெளிவாக விளங்காமற் போனாலும் தமிழிலக்கணங்களில் பிற இடங்களில் இதுபற்றிச் சில கருத்துக்களைக் குறிப்பாகப் பெறமுடிகிறது. ஒரு சில-வற்றை இங்குக் காணலாம்.

### 4. 6. 9. 1. புணர்ச்சியில் தோன்றும் ஆய்தம்

தமிழ்ப்புணர்ச்சிகளில் வன்புணர்ச்சி என்றும் மென் புணர்ச்சி என்றும் இரண்டு வகைகளைக் காணலாம். ஆய்தம் மென்புணர்ச்சிகளில் தோன்றுகிறது:

1) நற்றேழில் — வன்புணர்ச்சி
   பஃறேழில் — மென் புணர்ச்சி

2) அக்கடுமை — வன்புணர்ச்சி
அஃகடிய — மென் புணர்ச்சி
3) கற்றீமை — வன்புணர்ச்சி
கஃறீது — மென் புணர்ச்சி

இவ்வாறு மென்புணர்ச்சிகளில் தோன்றுகின்ற காரணத்தால் ஆய்தம் ஒரு மென்மையான ஒலியாக—ஒரு நலிவொலியாக அல்லது ஓர் உரைவொலியாக—இருக்கலாம். ஆய்தத்தை அடுத்து வரும் வல்லெழுத்தை ஒத்த நலிவொலியாக அது இருக்கலாம். இதனால் ஆய்தம் ஒரு நலிவொலி என்றோ அல்லது அதனை அடுத்து வரும் வல்லொலியை நலிவொலி யாக்குகிறது என்றோ கருதலாம். இச்சூழல்களில் உள்ள லகர வகரங்கள் நலிவோசையுடைய தொடர்வொலிகள் ஆகும். இவற்றின் இவ்வியல்பும் ஆய்தம் நலிவொலி என்பதையே வற்புறுத்துகின்றது.

## 4. 6. 9. 2. நீட்டல் விகார ஆய்தம்

நன்னூலுரையாசிரியர் ஆறுமுகநாவலர் ஆய்த அளபெடைக்கு எடுத்துக்காட்டாக இதனைத் தந்திருக்கிறார்:

"விலஃஃகி வீங்கிருள் ஓட்டுமே மாதர்
இலஃஃகு முத்தின் இனம்." [29]

'விலகி' 'இலகு' என்னும் சொற்களில் ஆய்தம் அளபெழுந்ததாகத்தோன்றவில்லை;அதுதான் அங்கில்லையே! ஆய்தத்திற்கு (முன்னருள்ள உயிரெழுத்து அளபெழாது)

29. நன், எழு. 87

அடுத்துள்ள ககரமெய்யே அளபெழுந்துள்ளது; அதற்கு அறிகுறியாகவே ஆய்தம் தோன்றியுள்ளது எனக் கொள்ள வேண்டும். ஆய்தம் புதிதாகத் தோன்றி அளபெழுந்ததே ஒழிய முன்னர் அங்கு அது இல்லை. இதனைச் செய்யுளில் 'விரித்தல் விகாரம்' என்பர். ஆனால் உண்மையில் இவ்வாய்தம் ககரத்தின் நீட்சியாதலால் இதனை 'நீட்டல் விகாரம்' எனல் வேண்டும். ஆகவே—ஃஃக்— என்பது ஒரே ககரத்தின் நீட்சி எனலாம். அதாவது உயரிடைக் ககரத்தின் ஒலியே இங்குள்ள ஆய்தத்தின் ஒலியுமாகும். இக்ககரம் பின்மெல்லண்ண உயிர்ப்புரைவொலி. மேலும்

"ஓர்ந்துகண் ணோடாது இறைபுரிந்து யார்மாட்டும்
தேர்ந்துசெய் வஃதே முறை"[30]

என்னும் குறளும் இதற்குச் சான்று பகர்கிறது. இக்குறளில் 'செய்வதே' என்னும் தொழிற் பெயர் 'விரித்தல்' விகாரமாக ஆய்தம் பெற்றுள்ளது. அதாவது தகரமெய் அளபெழுந்துள்ளது. அதன் அறிகுறியாக ஆய்தம் தோன்றியுள்ளது. அவ்வாறானல் அத்தகரம் எத்தகையது? அளபெழுந்த தகரம் ஒருதொடர்வொலியாகத் தான் இருக்கவேண்டும். அத்தொடர்வொலி உரைவொலி வகையாகவோ அல்லது ஏதாவது ஒருவகையில் நலி வொலியாகவோ இருத்தல் வேண்டும். இன்று உயிரிடைத் தகரம், பல்லிடைப்பரவுரைவொலியாக ஒலிக்கிறது. அது தானே இவ்வாய்தம் சார்ந்த தகரம்

மேலும் எழுத்துச் சாரியைகளில் இவ்வாறாகவே ஆய்தம் தோன்றுகின்றது:

30. குறள், 541

'றஃகான் னஃகான் ஆயிரண்டும் பிறக்கும்'[31]
'கால்குறள் மஃகான் ஆய்தம் மாத்திரை'[32]

'கான்' என்பதே இங்குச் சாரியை. இது 'ஐகான்' 'ஔகான்' என வரும். ஆனல் அது குறிலுக்குச்சாரியை யாக வருகின்றபோதுதான் ஆய்தம் பெற்று வருகிறது.[33] 'விலகி' 'இலகு' ஆகியவற்றுக்குக் கூறியவை அனைத்தும் அதற்கும் பொருந்தும்.

தொல்காப்பியர், 'உருவினும் இசையினும் அருகித் தோன்றும் மொழிக்குறிப்பெல்லாம்' ஆய்தம் கொண்டு நடை பெறுதலைக் குறித்துள்ளார். (தொல். எழு, 40) இதற்கு எடுத்துக் காட்டுக்கள் "கஃஃறென்னும் கல்லதரத்தம் என நிறத்தின் கண்ணும் சுஃஃறென்னும் தண்டோட்டுப் பெண்ணை என இசையின் கண்ணும்" வருதலை நச்சினார்க் கினியர் எடுத்துக்காட்டுகிருர். இங்குக்கறுப்பு நிறத்துக்குக் 'கறு' என்னும் சொல்லும் தண்டோட்டுப் பெண்ணையின் காற்ரோசைக்குச் 'சுறு' என்னும் சொல்லும் வருகின்றன. (கறு-கறுப்பு என்பதன் வேர்; 'சுறு' ஒலிக் குறிப்புச் சொல்)[34], கறுப்பின் மிகுதியையும் ஓசையின் இயல்பையும் சுட்டுதலுக்கு விரித்தல் விகாரமாக ஆய்தம் பெற்று அதுவும் நீளப்பெற்று இவ்விரண்டு சொற்களும் வழங்கு கின்றன. (மேலே காட்டப்பட்ட 'விலகி : விலஃஃகி', 'இலகு : இலஃஃகு' என்னும் வழக்குக்களைப் போன்றவை

31. தொல், எழு. 94
32 நன். எழு. 14
33. நன். எழு. 71
34. ஒலிக்குறிப்புச் சொல் : onomotop

இவை.)[35] இவற்றால் றகரவல்லெழுத்தினை நீட்டுதல் பொருட்டே ஆய்தம் தோன்றியுள்ளது என எளிதில் உணரலாம். மேலே எடுத்துக்காட்டப்பட்ட ஆய்த அளபெடை எடுத்துக்காட்டுக்கள் இத்தகையவையே பெண்ணையின் ஊடே செல்லும் காற்றுச் 'சுர்ர்....ர்ர்....ர்' என்னும் ஓசையோடு (அல்லது அதுபோன்ற ஓர் ஓசையோடு) விசுகிறது எனக் கொள்ளலாம். (இவ் வெடுத்துக்காட்டுத் தோன்றிய காலத்தில் வல்லின றகரம், ரகரம் போன்று துடிப்பொலியாக வழங்கி யிருக்கலாம்.) இவ்வாறு கொள்வதால் ஆய்தத்திற்கு எனத் தனிஒலி இல்லையாகிறது. ஆய்தம் சார்ந்த வல்லெழுத்தே ஓரெழுத்து எனக் கொள்ள வேண்டி நேர்கிறது.

ஒற்றளபெடை பற்றி இலக்கணங்கள் பேசுகின்றன. மெல்லின இடையின மெய்கள் (ர, ழ நீங்க) அளபெடுத்தலை நன்னூல் (எழு. 37) விளக்குகிறது. ஆனால் வல்லெழுத்துக்கள் அளபெடுத்தல் இல்லை. வல்லெழுத்துக்களாகிய தடையொலிகள் அளபெழுந்தால் ஓசை கேட்காது. ஆகவே அவை அளபெழுதலில் பயனில்லை எனலாம். ஆனால் அவற்றை நலிவொலிகளாக்கி அளபெடுக்கச் செய்யும் தேவை ஏற்பட்டது போலும். அப்பணியைச் செய்யவே ஆய்தம் பயன்படுத்தப்பட்டது.

---

35. ஆராய்ச்சியாளர் சிலர் 'கஃஃஃறு', 'சுஃஃஃறு' என்பவை 'கல் (<ன்)+து', 'சுல்+து' என்பவற்றால் தோன்றியவை எனக்காட்ட முயல்கின்றனர்; இவற்றைப் பொருத்திக்காட்டத் திணறிக்கொண்டு விளக்கங்கள் கூறி இடர்ப்படுகின்றனர். இவை [illegible]ரில் வருவனவாகத் (அடுத்த பக்கம்)

இங்குக் குறிக்கத் தக்கது எல்லாம் ஆய்த எழுத்துத் தடையொலி ஒன்றைத் தொடர்வொலியாக்கி நீட்டுகிறது என்பதே ஆகும். இங்கு அது ஒருகுறியீடாகவே நிற்கிறது என்றோ அல்லது வல்லெழுத்துக்களுக்கு ஏற்ற தொடர்வொலியாக விளங்குகிறது என்றோ கொள்ள வேண்டும்.[36]

'எஃஃஃகின் அஃஃகிய வெஃஃஃகுணர் நாவினர்
வெஃஃகின் வெஃஃகுவர் வீடு'[37]

என்பன போன்ற ஆய்த அளபெடைக்கான எடுத்துக் காட்டுக்களுக்கு மேலே கண்டவாறே விளக்கங்கள் சொல்ல வேண்டும்.

## 4. 6. 9. 3. ஒருரையாசிரியர் துணிபு

உரையாசிரியர் நச்சினார்க்கினியர் ஆய்தத்தை மெய் யெழுத்து எனக் குறிப்பிடுகிறார்.[38] அவர் அதை உயிராக உணரவில்லை என்பது இதனால் தெளிவாகிறது: "இது

---

தெரிகின்றன, ஒன்று ஒலிக்குறிப்புச் சொல்லுமாகும். இவை விரித்தல் விகாரம் எனக் கொள்ளுதல் எளிதும் பொருந்தியதும் ஆகும்.

36 "They (சார்பெழுத்துக்கள்) have been analysed and made clear as having no specific characteristic feature of their own except that of occurring in combination with other sounds in a word. Their articulation is one with the articulation of the sounds with which they occur. They become one with them when recognised. That is how they behave and get themselves manifested."–PP.171&172, MEN.

37. யாப்பருங்கல விருத்தி, நூற்பா, 8

38. "கஃறீது முஃடீது என்பனவற்றை மெய் பிறி

லகர ளகர மெய்கள் திரிந்து ஆய்தமாதலால், அவ்வாருகிய ஆய்தமும் மெய்யாகவே ஆதல் வேண்டும்'' என்பது அவர் கருத்து. அவர் கருத்தும் ஏற்றுக் கொள்ளத் தக்கதே. ஆய்தம் சார்ந்த வல்லெழுத்து நாம் முன் கண்டவாறு நலிவோசை பெற்ருே உரைவோசை பெற்ருே திரிந்தாலும் அதுவும் மெய்யாகத்தான் இருக்கும். (இத்தகைய புணர்ச்சிகளில் லகர, ளகர வகரங்கள், அடுத்த வல்லெழுத்தோடு இயைந்து[39] வலிவொலியையும் நலிவொலியாக மாற்றிவிடுகின்றன. வன்புணர்ச்சிகளில் அவை இரட்டை வல்லெழுத்துக்களாகின்றன; மென்புணர்ச்சிகளில் ஆய்த நலிவெழுத்துக்களாகின்றன.) இன்றைய மொழியியலார், உயிர், மெய் என இருவகை எழுத்துக்களையே காண்கின்றனர். இவ்வகையில் ஆய்தம் உயிராகவோ மெய்யாகவோ அடங்குதல் வேண்டும்.[40]

## 4. 6. 10. ஆய்தஒலி உரைவொலியே: இன்றைய வழக்கு

மேற்கண்ட கருத்துக்களால் ஆய்தம் ஒரு நலிவுவல்லெழுத்தாகவோ (தடையெழுத்தாகவோ) அல்லது

தாகிய புணர்ச்சி என்றதனுலும் ஈண்டுப் புள்ளி என்றதனுலும் ஆய்தமும் மெய்யாயிற்று.''—தொல், எழு. 38, நச்சி.

39. Assimilated.

40. நேமிநாத ஆசிரியர் ஆய்தத்தை முதலெழுத்து எனக்கொள்ளுகிருர் (1. 2. 3); (காண்க: 4.2). ஆய்தக் குறுக்கத்தைச் சார்பெழுத்தாகக் கொள்ளவே, அதற்கு முதலாக முற்ருய்தத்தைக் கொள்ளுகிருர் போலும் அவர். நன்னூலார் இவ்வகையில் தொல்காப்பியரைப் பின்பற்றுகிருர்.

ஒருரைவொலியாகவோ இருந்திருக்கலாம் என்பது புலனாகிறது. ஆய்தம் வழங்கிய சொற்கள், எஃகு தவிர மற்றவையெல்லாம் வழக்கிறந்து விட்டன. எஃகு என்னும் சொல்லும் [exxu], [eggu], [ekku] எனப் பலவாறு ஒலிக்கப்படுகிறது. ஆய்தம் வழங்கும் மற்ற பழஞ் சொற்களைப் படிப்போர் ஆய்தத்தினையும் அதனை அடுத்த வல்லெழுத்தினையும் சேர்த்து ஒருரைவொலியாகவோ அல்லது ஹகர ஒலியும் உரைவொலியுமாகவோ ஒலிக்கின்றனர்.

இவற்றைக் கருதுகின்ற போது ஆய்தமும் அடுத்த வல்லெழுத்தும், அவ்வல்லெழுத்தின் ஒலிப்பிட ஒலிப் புறுப்புக்களுக்கு ஏற்ற உரைவொலியே எனக் கொள்ளலாம். ஆகவே ஆய்தத்திற்கு ஆறு உரைவொலிகள் (அது சார்ந்து வரும் வல்லெழுத்திற்கு ஏற்ப) அமையும். அவை ஆய்தமும்ககரமும் பின்னுப் பின்னண்ண உரைவொலியாகவும், ஆய்தமும்சகரமும் நடுநா நடுவண்ண உரைவொலியாகவும், ஆய்தமும்டகரமும் நுனி நாநடுவண்ண உரைவொலியாகவும், ஆய்தமு தகரமும் நுனிநாப் பல்லுரை வொலியாகவும், ஆய்தமும் றகரமும் நுனிநா விற்றண்ண உரைவொலியாகவும், ஆய்தமும்பகரமும் ஈரிதழுரைவொலியாகவும் விளங்கலாம் என ஒருவாறு கொள்ளலாம்.[41] இவ்வாறு கொள்வது தொல்காப்பியர்

---

41 பேர். தெ. பொ. மீ. அவர்கள் இம்முடிவிற்கே வந்து அவ்வுரைவொலி ஆறு வல்லெழுத்துக்களின் முன்னும் ஆறு வகையாகக் கீழ்க்கண்டவாறு இருக்கலாம் எனக் கருதுகின்றனர்:

—ஃக்— : —XX—, —ஃற்— : —SS—,

கருத்தினை ஒத்ததேயாகும். இந்நிலையில் ஆய்த வல்லெழுத்து இரட்டை வல்லெழுத்தோடு முரணி வழங்கினது; அதாவது இரண்டும் பொருள் வேறுபாடு செய்து வேற்றுமை வழக்கில்[42] வழங்கின :

| | | | | |
|---|---|---|---|---|
| - ஃக் - | : | - க்க் - | அஃகடிப | : அக்கடிப |
| - ஃச் - | : | - ச்ச் - | கஃசு | : கச்சு |
| - ஃட் - | : | - ட்ட் - | கஃடு | : கட்டு |
| - ஃத் - | : | - த்த் - | | |
| - ஃப் - | : | - ப்ப் - | | |
| - ஃற் - | : | - ற்ற் - | | |

ஆய்த வல்லெழுத்துக்கள் மென்புணர்ச்சிக்கு — பெரும்பாலும் அல்வழிப் புணர்ச்சிக்கு — உரியன; இரட்டை வல்லெழுத்துக்கள் வன்புணர்ச்சிக்கு — பெரும்பாலும் வேற்றுமைப் புணர்ச்சிக்கு — உரியன. இந்நிலை தொல்காப்பியர் காலத்தில் இருந்திருக்க வேண்டும்.[43] பின்னர்

---

—ஃச்— : —š š—, —ஃத்— : —θ θ—,

—ஃட்— : —ṣ ṣ—, —ஃப்— : —Φ Φ—.

இப்பேராசிரியரவர்கள் கருத்துக்கு நச்சினார்க்கினியர் "கஃறென்னும் தண்டோட்டுப் பெண்ணை" என்பதால் விளக்கும் கருத்தும் வடமொழியில் விசர்க்கம் சார்புக்கு ஏற்ப ஒலிவேறுபட்டு வழங்குவதும் அடிப்படை போலும். திருவாளர்கள் மு. இராகவையங்கார், வே. வேங்கடராஜுலு ரெட்டியார், டாக்டர் பி. எஸ். சுப்ரமணிய சாஸ்திரி, டாக்டர் மு. வ. ஆகியோர் கருத்துக்களும் ஏறத்தாழ இத்தகையனவே.

42. Contrastive distribution

43. "As far as āytam is concerned in muṭṭītu and mu:ṭītu, /—ஃṭ—/ is an allophone of /ṭṭ/. We find even

ஆய்தம் ஆறு உரசொலிகளில் ஒன்றை மட்டும் — ககரத்தின் முன்னதான பின்னைப்பின்னண்ண உரசொலி மட்டும் — பெற்றிருக்க வேண்டும். அந்நிலையிலேயே அதற்கு அஃகேனம் எனப்பெயரும் ஏற்பட்டிருக்க வேண்டும். அந்நிலையிலமைந்த ஒலியினையே அறிஞர் கால்டுவெல் போன்றோர் " உள்ளண்ண ஹகரஒலி " என்று குறிப்பிட்டனர்.[44]

## 4.6.11. யகர ஒலியாய்தம்

ஆய்தம் ஓருரசொலியாக இருக்கலாம் எனப் பல்வேறு சான்றுகளால் தோன்றினும் அக்கருத்தினையே

---

in Tolkappiyar's age the two forms available, one as the geminated plosive and the other as the combination of a fricative and a plosive which are being utilised for distinguishing declerasional compounds from phrases consisting of subject and predicate. But this cannot be said to be introducing a phonemic change. But forms like eஃku "steel" and ekku "to raise up oneself" certainly introduced phonemic contrast; but this is a later usage. Therefore in the middle ages these three mentioned by Tolkappiyar must have developed into phonemes and this must have justified some grammarians speaking of a difference in meaning. " — P. 325, MEN.

44. "It professes to possess a letter, half vowel, half consonant, corresponding in some respects to the sanskrit visarga, and called āydam (that which is subtle, minute). It is pronounced like a guttural h, but is only found in the poets, and is generally considered a pedantic invention of the grammarians." — CGDL. P. 130.

முடிந்த முடிபாகக் கொள்ள முடியவில்லை. ஆய்தம் பற்றிய வேறொரு கருத்து அதனைத் தீராப் புதிருடையதாக்குகிறது. பிற்கால இலக்கணங்களிலிருந்து கிடைக்கும் சில குறிப்புக்கள் ஆய்தம் யகரம் போன்று ஒருரைவொலியாகலாம் எனத் தெரிவிக்கின்றன. அழிந்த தமிழிலக்கணமான அவிநயம்

"ஆய்தமும் யவ்வும் அவ்வொடு வரினே
ஐயென் எழுத்தொடு மெய்பெறத் தோன்றும்"

என்ற ஒரு நூற்பாவினை விட்டுச் சென்றிருக்கிறது. இந்நூற்பாவினை யாப்பருங்கல விருத்தி, மேற்கோளாக எடுத்தாண்டு கீழ்க்கண்டவாறு எழுதுகிறது:

" சார்பிற் றோன்றும் தன்மைய என மிகுத்துச் சொல்லியவதனால் அகரத்தொடு யகரவொற்று வந்தும் ஆய்தம் வந்தும் ஐகாரத்தின் பயத்தவாய் நிற்கும்...... வரலாறு : அய்யன் கய்தை....... என ஐகாரத்தின் பயத்தவாயினவாறு. கஃசு கஃதம், கஃசம் என அகரத்தொடு ஆய்தம் வந்து கைசு, கைதம், கைசம் என ஐகாரத்தின் பயத்தவாயினவாறு.''[45]

இக்கருத்துக்கள் ஆய்தம் யகரவொலி பெற்றிருந்தமையை விளக்குகின்றன.[46] இடைக்காலத்துத் தமிழ்க் கல்வெட்டுக்களில் 'கஃசு' என்னும் சொல் 'கைசு' எனவே

---

45. யாப்பருங்கல விருத்தி, நூ. 2
46. நன்னூலாரும் இக்கருத்தினையே கூறியிருந்திருக்கலாம் எனக்கருத இடமிருக்கிறது, ஆனால் அவர் கருத்துத் திரிக்கப்பட்டிருக்கலாம். "அம்முன் இகரம் யகரம் என்றிவை எய்தின் ஐ ஒத்திசைக்கும்... " என்னும் நன்னூல்(124) நூற்பாவிற்குத் தம் பதிப்பில் டாக்டர்

பல இடங்களில் ஆளப்பட்டுள்ளது. "பைசல் கைசு நோய் முக்கைசு" (பையன் காற்பலம்; அவனுக்கு வந்த நோய் முக்காற் பலம்) என்னும் தமிழ்ப் பழமொழியும் இதனையே விளக்கி நிற்கிறது. கி. பி. முதலாயிரத்தில் தோன்றிய இலக்கியங்கள் பல ஆய்தத்தையும் யகரத்தையும் ஐகாரத்தையும் எதுகையாகப் பயன்படுத்தியுள்ளன:-

எஃகிருள் அகற்றும் ஏமப் பாசறை,
வைகறை அரவம் கேளியர்! 'பல கோள்
செய்தார் மார்ப எழுமதி துயில்' என........

—புறம். 397

செய்க பொருளைச் செறுநர் செருக்கறுக்கும்
எஃகதனிற் கூரியது இல்.

— குறள். 759.

இங்கெல்லாம் ஆய்த எழுத்தின் ஒலி யகரம் எனத் தெளிவாக உணரலாம்.[47] 'தொடிப் புழுதி கஃசா உணக்கின்'

---

உ. வே. சாமிநாதையர் எழுதிய அடிக்குறிப்பு இதனைத் தெளிவாக்குகிறது: " அம்முன் இகரம் ஆய்தம் என்று இவை எய்தின் ' என மூலமும் ' அகரமுன் இகரமும் ஆய்தமும் வரின் ' என உரையும். ' அஇவனம், ஐவனம் கஃசு, கைசு ' என உதாரணமும் மிதிலைப்பட்டி ஸ்ரீ அழகிய சிற்றம்பலக் கவிராயரவர்கள் வீட்டுப்பிரதியிலும் வேறு மூன்று பழைய பிரதிகளிலும் காணப்பட்டன." இப்பாட வேறுபாடுகளே சரி எனக்கருதலாம். காரணம் " அ ஐ முதலிடை ஒக்கும் சஞய முன் " என நன்னூலார் அம் முன் யகரம் எய்துதலைக் கூறிவிட்டாராதலால், (நன். 123, உ. வே. சா. பதிப்பு)

47 புறநானூற்றிலிருந்து மேலும் சில சான்றுகளைக் காணலாம் :

"தன்னும் தூக்குவன் போலும்; இனியே ஒன்னலர்
எஃகுடை வலத்தர் மாவொடு பரத்தர,
கையின் வாங்கித் தழீஇ
மொய்ம்பின் ஊக்கி, மெய்க் கொண்டனனே."

—புறம். 274

"வைகல் யாணர் நன்னாட்டுப் பொருநன்
எஃகுவிளங்கு தடக்கை இயல்தேர்ச் சென்னி."

—புறம். 61

"எஃகுறு விழுப்புண் பல என
வைகுறு விடியல் இயம்பிய குரலே."

—புறம். 213

ஆய்த எழுத்துப் பற்றிப் பல கருத்துக்களைத் திரு. மு. இராகவையங்கார் அவர்கள் எடுத்துக்காட்டியுள்ளனர். (*தொல்காப்பியரும் புள்ளியெழுத்துக்களும், ஆராய்ச்சித் தொகுதி*). அவர்களே ஆய்த எழுத்து யகர ஓசை பெறுதலை '*ஆய்தவோசை*' என்னும் தலைப்பில் கட்டுரையாக வரைந்துள்ளார் (*கட்டுரை மணிகள்*), அதில் குறள், சூளாமணி, சீவக சிந்தாமணி, நம்மாழ்வார் பாசுரம், நீலகேசி முதலியவற்றிலிருந்து ஆய்தம் ஐகாரத்திேனாடும் யகரத்திேனாடும் எதுகையாக வருதலை எடுத்துக்காட்டியிருக்கிறார்கள்:-

அஃதே யஃதே யங்கார வேகனுங்கோர் அயல்
வாளால்
வெய்தாங் குற்று வீடினானன்றே நன்றே மனுமாற்றம்
மைதோய் மலையும் மண்ணகமும் நமதாச் செய்வன்
செய்யேனேல்
செய்தார் அமருலகாள்வன் இரண்டில் ஒன்று
திண்ணமிதே,"

—சூளாமணி, அரசியல், 205

'அஃதே அடிகளும் உளரோ என்றாற்கு அருளுமாறு
இஃதா இருந்தவாறு என்றார்க்கு என்னைப் பெறவல்லார்க்கு
எய்தா இடருளவே எங்கெங்கு, என்று அத் திசைநோக்கி
வெய்தா அடிதொழுது வேந்தன் கோயிற்கு எழுந்தானே'

—சிந்தாமணி, 1884

என்னும் குறள் (1037) அடிக்குத் 'தொடிப்புழுதி கைசா உணக்கின்' என்றே காளிங்கர் பாடம் கொள்ளுகிறார். இது பின்னர் ஏற்பட்ட திரிபு போலும். ஆய்தத்திற்கு, முன்னர் யகர ஓசை இருந்தது என்பதையே இது வலியுறுத்துகிறது. சிலர் கொள்ளுவதுபோல் ஆய்தத்திற்கு இவ்யகர ஒலி இடைக்காலத்தில் அமைந்த ஒலி எனக் கொள்ளுவதும் கூடவில்லை. காரணம் புறநானூற்றுச்சான்றுகள் தொல்காப்பியம் அளவுபழமையுடையன. மற்றுஞ்சிலர் பண்டு தமிழகத்தில் வழங்கிய நெடுங்கணக்கில் ஏற்பட்ட குழப்பம் காரணமாக ஆய்தம் யகரவொலி பெற்றது என்பர். இடைக்கால இலக்கியங்களிலும் இலக்கணங்களிலும் ஆய்தத்தின் யகரவொலி யல்கிப் பரவிப் பெற்றிருக்கும் இடத்தை எண்ணுகின்ற போது இவ்வாறு கொள்ளுவது பொருந்துமோ என ஐயம் நிகழ்கிறது.[18] சில

'செய்க பொருள் யாரும் செறுவாரைச் செறுகிற்கும்
எஃகு பிறிது இல்லை இருந்தே உயிரை உண்ணும்
ஐயம் இல்லை இன்பம் அறனோடு அவையும் ஆக்கும்
பொய்யில் பொருளே பொருள் மற்றல்ல பிறபொருளே.'
—சிந்தாமணி, 497

(திருத்தக்கதேவர் இங்குக் குறளையே எடுத்தாண்டு அதற்கேற்ப ஆய்தவோசை எதுகை அமைத்திருத்தலைக் காணலாம்)

'அஃதே உய்யப்புகு மாறுஎன்று கண்ணன் கழல்கண்மேல்
கொய்பூம் பொழில்சூழ் குருகூர்ச் சடகோபன் குற்றேவல்
செய்கோலத்து ஆயிரம் சீர்த்தொடைப் பாடல் இவைபத்தும்
அஃகாமல் கற்பவர் ஆழ்துயர் போய் உய்யற் பாலரே.'
—திருவாய் மொழி, 4—.

48. ஆய்தம் யகரவொலி பெற்றமைக்குப் பண்டைத் தமிழ் நெடுங்கணக்கில் ஏற்பட்ட ஒரு குழப்பமே காரணம் என்பர் பேர் தெ. பொ. மீ. அவர்கள். சங்க காலக் குகைக்

சான்றுகளால் அது நலிவொலியாகத் தோன்றுகிறது; வேறு சில காரணங்களால் உரைவொலியாகத் தோன்றுகிறது. இவையெல்லாம் ஆய்தத்தின் ஒலியைக் காண்பதில் அடங்கிய சிக்கல்களையே குறிக்கின்றன. இன்றைய அறிவு நிலையில் ஆய்தத்தின் ஒலி பற்றி உறுதியாக அறிதல் கூட வில்லை என்று மட்டும்கூறி அமைதலே தக்கது. இவ்வறியாமை காரணமாகத்தான் போலும் அறிஞர் கால்டுவெல் "ஆய்தம் இலக்கணஆசிரியர்கள் புலமை நடைக்காகப் படைத்துக் கொண்ட கற்பனை" எனக் குறிப்பிட்டுச் சென்றார்.[49]

## 4. 6. 12. ஆய்தத்தின் வழக்கு

ஆய்தத்தின் வழக்கைக் கீழ்வருமாறு இலக்கண ஆசிரியர்கள் சுருங்க விளக்குகின்றனர்:

"ஆய்தம் தானே குறியதன் கீழ்த்தாய்
வலியதன் மேல்வந்து இயலும் என்ப."

---

கல்வெட்டுக்களில் இகரத்துக்கு வழங்கிய ஒரு வடிவமே பின்னர் ஆய்தத்திற்கு வழங்கியது; தமிழ் மொழியில் சில போது இகரம் யகரமாதலால் ஆய்தம் யகரவொலி பெற்றது என்பர் அவர்கள். நெடுங்கணக்கில் ஏற்பட்ட ஒரு குழப்பம் மொழி முழுவதும் பரவி எவ்வாறு ஆட்சி பெற்றது என்பதை இனி ஆராய வேண்டும். அவர்கள் கருத்து இது'.

"In the inscriptions this aytam is shown by the symbol for the i noted in our cave inscriptions but turned 90 degrees. We also know that y=i. Therefore the inscription may be taken to give us this value of y or i for this aytam." —HTL. P, 138

49. அடிக்குறிப்பு 4.44 காண்க.

இதனை இன்றைய மொழியியல் வழக்கப்படி இவ்வாறு எழுதிக்காட்டலாம்.

-(ஒற்று) குறில்—வலி 50

ஆய்தத்தை அடுத்து வழங்கும் வல்லெழுத்துக்கள் ஆறு. இவ்வாறு வல்லெழுத்துக்களுக்கு ஏற்ப ஆய்தம் ஒலிநிலையில் ஓரளவு வேறுபடும் என்பது முன்னர்க் காட்டப்பட்டது. இக்கருத்துத் தொல்காப்பியருக்கும் உடன்பாடே என்பதும் எடுத்துக்காட்டப்பட்டது. பவணந்தி முதலான பின்னை இலக்கண ஆசிரியர்கள் ஆய்தத்தை எட்டாக வகைசெய்து காணுகின்றனர். 'வல்லின வகையான் இயல்பாக வந்த ஆய்தம் ஆறனோடு புணர்ச்சி விகாரத்தான் வரும் ஆய்தமும் செய்யுள் விகாரத்தான் வரும் ஆய்தமும் கூடி எட்டாய் வருமாறு காண்க' என்கின்றனர்[51] அவர்கள். தமிழில் ஆய்தம் தோன்றும் முறையினை ஒட்டிச் செய்த பாகுபாடாகவே இது தோன்றுகிறது. இது ஆய்தத்தின் இயல்பை விளக்குவதாகவும் இல்லை: அதனை ஒட்டியதாகவும் இல்லை. தமிழ்மொழியின் புணர்ச்சி விதிகளின் விளக்கத்துக்கு வேண்டுமானால் இது பயன்படலாம். ஆய்தத்தின் பாகுபாடுபற்றிய கருத்து அதன் தோற்றத்தைப் பற்றிச் சிந்திக்கத் தூண்டுகிறது.

### 4. 6. 13. தமிழில் ஆய்தத்தின் தோற்றம்

ஆய்தத்தின் தோற்றம் இருமுறைகளில் அமைந்திருக்கலாம் என்று தோன்றுகிறது. ஒருமுறை செய்யுள்

---

50. -(c)v—s-.
51. நன். எழு. 35, சங்கர.

விகாரத்தான் தோன்றுவது; இரண்டாவது புணர்ச்சி விகாரத்தான் தோன்றுவது.

செய்யுள் விகாரத்தான் தோன்றுவதென்பது, விரித்தல் விகாரத்தான் தோன்றுவதாகும். 'இலகு' என்பது 'இலஃகு' என விரிவதும் 'செய்வதே' என்பது 'செய்வஃதே' என விரிவதும் இத்தகையவை. ஆய்த அளபெடையாகக் காட்டப்படுபவையும் இத்தகையவை. 'கான்' சாரியையோடு 'றஃகான்' போன்று தோன்றுவதும் இத்தகையது. ஆனால் இது செய்யுளில் தோன்றும் கட்டாயம் இல்லை. 'கஃஃறென்னும் கல்லதர் அத்தம்'— இங்குத் தோன்றிய ஆய்தம் சொல்லின் பொருள் மிகுதியைச் சுட்டுவதற்கு விரிக்கப்பட்டது. 'சுஃஃறென்னும் பெண்ணை'— இவ்வொலிக் குறிப்புச் சொல்லில் விரிக்கப்பட்ட ஆய்தம் ஒலியியல்பினை எடுத்துக்காட்டுதல் பொருட்டாகும். இவையெல்லாம் ஒற்றில் வழி ஒற்றாய் விரிக்கப்பட்டன. ஆய்தம் வெறுங்குறியீடாக அமைந்திருக்கலாம் என்ற கருத்தை இவை தருகின்றன.

புணர்ச்சியில் தோன்றும் ஆய்தம், புணர்மொழியில் ல, ள, வ ஆகியவை வலிமுன் திரிதலால் தோன்றுவது:

கல் + தீது = கஃறீது
முள் + தீது = முஃடீது
அவ் + கடிய = அஃகடிய

இப்புணர் மொழிகள் அல்வழிக்குரிய எழுவாய்த் தொடர்கள்; மென்புணர்ச்சிக்குரியவை. இப்புணர் மொழிகள்

கற்றிமை, முட்டீமை, அக்கடுமை

என்னும் வேற்றுமைக்குரிய வன்புணர்ச்சிப் புணர்மொழி-

களிலிருந்து வேறுபடுகின்றன. இவ்வகையிரண்டும் வேற்றுமை வழக்கில் வழங்குதல் தெளிவு. (மேலே காண்க 4. 6. 10.) இவை போன்றே இன்னும் பல புணர் மொழிகளை எடுத்துக்காட்டாகத் தரலாம். அஃறிணை (அல் + திணை), பஃறுளி (பல் + துளி), பஃறொடை வெண்பா (பல் + தொடை வெண்பா), பஃறாழிசை (பல் + தாழிசை), மரங்கொஃறச்சன் (மரங்கொல் + தச்சன்) என்பவை ஒரு சில. இத்திரிபு பற்றிய கருத்துக்கள், தனி மொழியிலும் இத்திரிபுகள் இருக்கின்றன என்பதைச் சுட்டிக் காட்டுகின்றன:[52]

| | | |
|---|---|---|
| அஃகு | — | அல் + கு (= சுருங்கு) |
| எஃகு | — | எல் + கு (எல் = ஒளி) |
| வெஃகு | — | வெவ் + கு (வெவ் = விரும்பு; கவர்) |
| வெஃகா | — | வெவ் + கா (= விரும்பும்கா) |
| அஃது | — | அவ் + து |
| பஃறி | — | பல் + தி |
| கஃபு (= கவை) | | கவ் + பு[53] |

### 4. 6. 14. ஆய்தம் தோன்றுதலின் காரணம்

இவ்வாறு ஆய்தம் தோன்றுதலின் காரணத்தைத் தெளிவாகவும் எளிதாகவும் விளக்க முடியவில்லை. தமிழிலக்கணம் கூறும் எழுத்து மயக்க விதிகள் இதற்குக் காரணமாகத் தோன்றவில்லை. தமிழ் மயக்க விதிகளின்

---

52. ஜூலியன் வின்சன் என்பார் இக்கருத்தினை முதன் முதல் எடுத்துக்காட்டுகிறார்.

53. ஆய்தம் கொண்ட எல்லாச் சொற்களையும் இவ்வாறு விளக்க முடியவில்லை. பலவற்றின் வேர் மறைந்திருக்கலாம். ஒரு சிலவற்றில் ல, ள, வ அல்லாது வேறு மெய்கள் கூட இருக்கலாம்.

படி கல்+தீது, முள்+தீது, பல்+தொடை, அவ்+கடிய முதலியவை கற்றீது, முட்டீது, பற்றொடை, அவ்கடிய, என்றே புணரலாம். அல்+கு, அல்கு என்றே புணர லாம்; ஆனால் அஃகு என வழங்குகிறது. தமிழ்ப்புணர்ச்சி விதிகள் பலவற்றுக்கு ஓசை வழக்கும்,[54] விட்டிசைப்பும்[55] காரணங்களாக உள்ளன.[56] இவையே ஆய்தத்தின் தோற்றத்திற்குங் காரணமாக வேண்டும்.[57]

---

54. எடுத்தலோசை, படுத்தலோசை, நலிதலோசை முதலிய வழக்குகள். (Distribution of Accent or stress)

55. Juncture or Pause.

56. ஆனால் இலக்கணவாசிரியர்கள் இதனை அறிந்து உடன்பட்டுப் புணர்ச்சி விதிகளில் சேர்க்கவில்லை. அஃதா அன்றம்ம, இதா அன்றம்ம (தொல். எழு. 258) முதலியன ஆய்தமில்லாதபோது அளபெடுத்தும் அஃதான்று (தொல். 423, 1339) என ஆய்தம் உள்ள போது அளபெடாதும் வழங்குதல் ஓசையழுத்தம் வேறுபட்ட அசைகளில் அமைதலால் எற்படுவதே.

57. இதுபற்றி எல். வி. ஆர் கூறும் கருத்துக்கள் கருதத்தக்கன :-

'The production of $\bar{a}$ytam was connected with the distribution of the accent, when the accent is thrown straight upon the syllable containing the short demonstrative and the immediately following plosive, the $\bar{a}$ytam is generated. All such instances are associated with Sandhi where the meaning leads necessarily to the association of accent with the syllable mentioned above aஃtu, iஃtu, aஃtuur, —L.V.R., 'Dravidic Probloms.'

லெய்டன் பல்கலைக்கழகத் திராவிட மொழியியலறிஞர் எப். பி. ஜெ. கிப்பர் இது பற்றிச்சிறிது வேறுபட்ட காரணங்களை வேறுபட்ட நடையில் கூறுவதும் இங்குக் கருதத் தக்கது: [அடுத்த பக்கம்]

லகரமும் தகரமும் புணர்கின்ற போது வன்புணர்ச்சித் தொடர்களில் -ற்ற்- எனவும் மென்புணர்ச்சித் தொடர்களில் குறிலை அடுத்து -ஃற்- எனவும் நெடிலை அடுத்தும் தொடர் மொழியிலும் -ற்- எனவும் திரிகின்றன. ளகர தகரமும் டகரமாக இவ்வாறே திரிகின்றன. இந்நிலை மேலே கண்ட கருத்துக்களுக்கு அரண்செய்கின்றது.

## 4. 6. 15. ஆய்தம் தனியே ஓர் எழுத்தா?

ஆய்தத்தைப் பற்றி இவ்வளவு கருத்துக்கள் கிடைத்திருந்த போதிலும் அதன் எழுத்தாந்தன்மையை வரையறுப்பது எளிதாக இல்லை. சங்ககாலத்திலேயே அது திரியத் தொடங்கிவிட்டமை இதற்கு ஒரு காரணம். டாக்டர் மு. வ. அவர்கள் ஆய்தம் வல்லெழுத்துக்களின் பிறிதோரெழுத்தொலி எனவும் பேர். தெ. பொ. மீ. அவர்கள் இரட்டை வல்லெழுத்துக்களின் பிறிதோரெழுத்

" 1. Under certain conditions the combination of h plus a following plosive may serve as a substitute for a geminate, whether this geminate be the result of assimilation or of compensatory lengthening. 2. If the geminate is the result of assimilation, the substitution of h plus plosive for the geminate can take place both when the first word is a subject.(e.g கஃறிது) and when it is a determinans ( e.g அஃறிணை ) this substitution is mostly optional 3. If the geminate would have been the result of compensatory lengthening, substitution of h plus plosive is obligatory if the first word is not a determinans. (After the determinans a- this substitution is optional, but the compensatory character of this geminate is questionable.)" — F.B.J. Kuiper, TPOTP., II

தொலி எனவும் கொள்ளுகின்றனர். டாக்டர் வி. ஐ. சுப்பிரமணியம் அவர்கள் ஆய்தம் தனித்தனியே ல, ள, வ ஆகியவற்றின் பிறிதோரெழுத்தொலி எனக் கொள்ளு-கின்றனர்.[58] ஆராய்ச்சியின் வளர்ச்சி இது பற்றிய கருத் தொற்றுமையை வருங்காலத்தில் தோற்றுவிக்கலாம்.

## 4. 6. 16. ஆய்தம் திரிதலும் வழக்கு வீழ்தலும்

ஆய்த வழக்குப் பழந்தமிழுக்கும் முன்னைத் தமிழுக்-கும்[59] உரியது. சங்க காலத்திலேயே அது தன் வாழ்வை

---

58. எழுத்து, எழுத்தொலிகள் என்னும் குறியீடுகள் Phoneme, Allophone என்னும் பொருளில் ஆளப்படுகின்-றன. டாக்டர் மு. வ. அவர்கள் கருத்து; "மெய்களுள் வல்லினமாகிய ஆறு முதலொலிகளுக்கும் (Phonemes) வகையொலிகளாக (allophones) வருவனவற்றை உணர்த்த ஆய்தம் வழங்கப்பட்டிருக்க வேண்டும்." — மொழிநூல், பக், 69. பேர். தெ. பொ. மீ அவர்கள் கருத்து:" ......the aytam is the allophone of the long plosive." —HTL P. 73.

டாக்டர் வி. ஐ. சுப்பிரமணியம் அவர்கள் ஆய்தம் ல, ள, வ என்பவற்றின் திரிபு என்பதைக் கொண்டும், அதன் வழக்கினைக் கொண்டும், அதனைத் தனித்தனியே இம்மூன்று மெய்களுடன் சேர்த்து மூன்று எழுத்துக்கள் என வழங்குகின்றனர். "By applying the concept of overlap he can successfully group Aaytam under ல, வ and ள." என்பது அவர்கள் "மொழியியல்" நூலுக்கு எழுதிய மதிப்புரையில் காணப்படுவது. அவர்கள் கருத்துப் படி :—

| | | |
|---|---|---|
| /ல/ | = | [ல], [ஃ] |
| /வ/ | = | [வ], [ஃ] |
| /ள/ | = | [ள], [ஃ] |

59. old Tamil and Pre-Tamil,

இழக்கத் தொடங்கி விட்டது. ஆய்தமும் வல்லெழுத்தும் சேர்ந்து வழங்கிய வழக்கு வல்லெழுத்தும் வல்லெழுத்தும் சேர்ந்து வழங்கும் (இரட்டை வல்லெழுத்து வழக்காக)ச் சங்க காலத்தை அடுத்து மாறத் தொடங்கியது. தொல்காப்பியரே கல் + தீது, முள் + தீது என்னும் புணர்ச்சிகள் உறழ்ந்து வரும் எனக் குறித்துள்ளார்[60]

கஃறீது — கற்றீது

முஃடீது — முட்டீது

இவற்றில் 'கஃறீது' 'முஃடீது' முந்தியவை என வேண்டும்; 'கற்றீது' 'முட்டீது' பிந்தியவை என வேண்டும். பின் வந்த தொல்காப்பியர் இரண்டையும் உடன்பட்டுக் கூறுகிறார் எனலாம். சங்ககாலத்தை அடுத்துப் படிப் படியாக ஆய்தம் மறைந்தது எனலாம். தனிமொழியில் வழங்கிய ஆய்தத்திற்கும் இக்கதியே நேர்ந்தது:

அஃகு — அக்கு

எஃகு — எக்கு

அஃகேனம் — அக்கேனம்

மஃகான் — மக்கான்

அஃகம் — அக்கம்

கஃசு — கச்சு

பஃறி — பட்டி

கஃபு — கப்பு

அஃதை — அத்தை

அஃதோடு — அத்தோடு

60. தொல். எழு. 369, 399.

இறுதியிரண்டும் வேற்றுமை உருபு ஏற்றவை; இன்றைய பேச்சுத் தமிழுக்குரியவை.[61] இத்திரிபுகள் ஏற்பட்டமைக்குத் தமிழர் பேச்சில் ஓசை வழக்கில் ஏற்பட்ட மாற்றங்களே காரணமாகலாம்.

இத்திரிபுகளால் ஆய்தம் மறைந்தது மட்டுமல்லாது ஆய்தம் வழங்கிய சொற்கள் பலவும் வழக்கிறந்தன. இக்காரணங்களால் இன்றைய தமிழில் ஆய்தம் இல்லை என்னும் நிலை அமைந்தது. இடைக்காலத் தமிழில் அது செயற்கையாகப் புலவர் நடையில் வழங்கி வந்தது. கல்வெட்டு மொழியில் அது ஏறத்தாழக் கி. பி. 1000 வரை காணப்படுகிறது; அதன்பின் அங்கும் இடம் பெறவில்லை. மற்ற திராவிட மொழிகளில் இது போன்று ஓரெழுத்துக் காணக் கிடைக்கவில்லை.[62] ஆதலால் இது தொன் முதல் திராவிடத்திலும் இருந்திருக்காது. இவ்வகையில் இதனைத் தமிழுக்கே உரிய ஒரு சிறப்பெழுத்து எனலாம்

## 4. 6. 17. ஆய்தம் வைப்பு முறை

இன்று தமிழ் நெடுங்கணக்கில் ஆய்தம் உயிரெழுத்துக்கள் பன்னிரண்டையும் அடுத்து வைக்கப்பட்டுள்ளது. அதன் பின்னரே மெய்யெழுத்துக்கள் தொடங்கு-

---

61. "அத்தொடு நின்றது அலைச்சல்; கொட்டோடு நின்றது குலைச்சல்", "எத்தால் வாழலாம், ஒத்தால் வாழலாம்" என்னும் பழமொழிகளில் அஃது, எஃது என்பவை திரிந்து வழங்குதலை இங்குக் குறிப்பிடலாம்.

62. திரு. பிரச். கிருஷ்ணமூர்த்தி, தமிழ் ஆய்தத்தையும் தெலுங்கு ஹகர ஒலியையும் இணைத்துத் தொன்முதல் திராவிடத்திற்கு ஓரெழுத்தைப் படைக்க முயலுகிறார். ஆனால் அவர் சான்றுகளும் வாதங்களும் பொருந்தியவையாக இல்லை.

கின்றன. பன்னிரண்டாம் நூற்றாண்டில் தோன்றிய நேமிநாதம் என்னும் தமிழிலக்கணம் இவ்வாறே ஆய்தத்தை உயிருக்கும் மெய்க்கும் இடைவைத்தே வழங்குகிறது:-

ஆவி அகரமுதல் ஆறிரண்டாம்; ஆய்தம் இடை
மேவும்; ககரமுதல் மெய்களாம் — மூவாறும்
கண்ணும் முறைமையால் காட்டியமுப் பத்தொன்றும்
நண்ணு முதல் வைப்பாகும் நன்கு.[63]

பதினோராம் நூற்றாண்டில் தோன்றிய வீரசோழியம் இக்காரணம் பற்றியே ஆய்தத்தை "நடுவாய்தம" எனக் குறிக்கிறது.[64] ஆனால் நன்னூலும் தொல்காப்பியமும் இவ்வாறு இடைப்படும் வைப்பு முறை கூறவில்லை. தொல்காப்பியர் "அகர முதல் னகர இறுவாய் முப்பஃது' என உயிரையும் மெய்யையும் கூறி முடித்த பின்னரே சார்பெழுத்துக்களைக் "குற்றியலிகரம், குற்றியலுகரம். ஆய்தம்" என்று கூறுகிறாராதலால் அவர் காலத்தில் ஆய்தம் முதலிய சார்பெழுத்துக்கள் நெடுங்கணக்கின் இறுதியில் வைக்கப்பட்டிருந்தன எனக் கருதலாம்; தொல்காப்பியர் இவ்வாறு கூறியதை உரையாசிரியர்கள் ஏற்றுக் கொண்டு "எழுத்துக்கட்குக் கிடக்கை முறையாயினவாறு"[65] கூறுகிறார்கள். சார்பெழுத்துக்களைப் பற்றி நச்சினார்க்கினியர் "இப்பெயர்களே பெயர்; இம்முறையே முறை: தொகையும் மூன்றே' என்கின்றார்.[66] தொல் காப்பியர் வைப்பு முறையையே நன்னூலாரும் பின்பற்றி-

---

63. நேமிநாதம். 1. 2. 3
64 வீர சோழியம் 1, 2.
65. தொல். எழு. 1, நச்சி
66. தொல். எழு 2. நச்சி

யிருக்கிறுர். இன்று நெடுங்கணக்கில் காணப்படும் வைப்பு முறை ஏறத்தாழ ஆயிரமாண்டுகட்குமுன் அவிநயனுர், நேமிநாதமுடையார் காலத்திலிருந்து வழக்கிற்கு வந்திருக்கலாம். வந்திருந்தும் நச்சினர்க்கினியர் காலம் வரை தொல்காப்பியர் வைப்பு முறையும் வழக்கிலிருந்தது எனலாம். ஆகவேதான் நச்சினர்க்கினியரும் தொல்காப்பியர் முறையை -யே வற்புறுத்தியுள்ளார். வடமொழியின் செல்வாக்கு மிக்க இடைக்காலத்தில் ஆய்தம் நடுவில் உயிரை அடுத்து வைக்கப்பட்டிருக்கவேண்டும். அக்காலத்தில் ஆய்தம் வடமொழியின் விசர்க்கம் போன்றது என மயங்கி உணரப்பட்டிருக்க வேண்டும். வடமொழியில் விசர்க்கம் உயிரெழுத்துக்களை அடுத்து வைக்கப்பட்டிருக்கிறது. இதுவே 'நடுவாய்தம்' அமையக் காரணம்.

## 4. 6. 18. ஆய்தக் குறுக்கம்

நன்னூல் நேமிநாதம் முதலிய பின்னை இலக்கண நூல்கள் குற்றுய்தம் என்னும் ஒரு சார்பெழுத்துப் பற்றிப் பேசுகின்றன. நன்னூல் "லள ஈற்றியையின் ஆய்தம் அஃகும்"[67] எனவும் அது கால் அளவுடையது[68] எனவும் கூறுகிறது. ஆனல் தொல்காப்பியர் இது பற்றி ஏதும் பேசவில்லை. அவர்,

> உருவினும் இசையினும் அருகித் தோன்றும்
> மொழிக்குறிப் பெல்லாம் எழுத்தின் இயலா
> ஆய்தம் அஃகாக் காலையான[69]

---

67. நன். எழு. 42 68. நன். எழு. 44
69. தொல். எழு. 40

எனப் பேசுதலால் ஆய்தம் அஃகும் காலையும் உண்டு என்னும் நிலை தோன்றுகிறது போலும். (இந்நூற்பா-விற்கு எல்லாரும் ஏற்றுக்கொள்ளத்தக்க ஒருரையினை அன்றும் இன்றும் உரையாசிரியர்கள் வகுக்க முடிய வில்லை.) 'ல ள ஈற்றியைபின்' தோன்றும் ஆய்தம் பற்றி அவர் குறிப்பிட்டிருந்தாலும் அது அஃகும் எனக் குறிப்-பிடவில்லை. தொல்காப்பியர் குறிப்பிடாது நன்னூலார் குறிப்பிடுவதன் நோக்கம் கருதத் தக்கதே. ஆய்தமோ நுண்ணிது; ஆய்தக் குறுக்கமோ நுண்ணிதின் நுண்ணிது; ஆய்தத்தின் இயல்பே தெளிவில்லாத போது ஆய்தக் குறுக்கம் பற்றி என்ன கூற முடியும்? மேலும் ஆய்வது தேவை.[70]

---

70 ஆனால் ஆய்தக் குறுக்கத்தின் உண்மையை விளக்கச் சிலர் முயற்சி மேற்கொள்ளுகின்றனர் :

"As far as aytam is concerned Tolkappiyam differentiates between the Sandhi aytam and the aytam in the individual words. The aytam in individual words are always murraytam "full aytam." But the Sandhi aytams are either murraytam or shortened aytam. Where they are the alternants of the /v/ they are murraytam. Where they are the alternants of /ல/ or /ள/ they are shortened aytam according to some......... There is a two fold distinction in the later day pronunciation of aytam...... Aytam becomes /i/ or /y/; in all those cases they are pointed out as murraytam. aஃtu > aitu, aஃkatiya > aykatiya. In those cases described by some as shortened aytam it cannot be reduced to the pronunciation of /i/ and /y/ because Tamil allows no clustering of /y/ with the alveolar or cerebral plosives. Therefore evidently there must have been two different pronunciations. When it was more or less like a /y/ it was considered as full and other cases perhaps it was no more than a juncture." — P. 329, MEN.

## 4. 7. குற்றியலிகரம்

*4. 7. 1.* ஒலி. குற்றியலிகரம் பற்றித் தொல்காப்பியர் நன்னூலார் ஆகியோரிடையே கருத்து வேற்றுமை உண்டு. பின்னைய இலக்கணவாசிரியர்கள் கருத்துக்கள் பெரும்பாலும் நன்னூலார் கருத்துக்களை ஒத்து அமைந்துள்ளன. இவர்களிடையே அமைந்த கருத்துவேற்றுமை தொல்காப்பியரின் "சார்ந்துவரல் மரபினைப்" பின்னையோர் தவருகப் புரிந்து கொண்டமையால் அமைந்ததே ஆகும். 'குற்றியலிகரம்' என்னும் தொடருக்கு, "குறுகிய இயல்பினையுடைய இகரம்" என உரையாசிரியர்கள் விளக்கம் உரைக்கின்றனர். "குறுகி இயலுகின்ற— ஒலிக்கின்ற— இகரம்" எனவும் அதற்குப் பொருள் கூறலாம். முற்றியலிகரத்தை நோக்கியே இதற்கு இவ்வாறு பெயர் அமைந்திருக்கலாம். தொல்காப்பியரே குற்றியலிகரம் என்னும் குறியீட்டை ஆளுகின்றார். அரையளவு உடையதாகக் குற்றியலிகரம் வழங்கும் என்னும் குறிப்பினையுடையனவே இத்தொடர்கள். முற்றியலிகரத்தின் இயல்புகளைப் பெற்றதே இக்குற்றியலிகரம். இதனைப் குற்றியலிகரம் முன்னண்ண உயருயிரொலி எனவும் அரையளவுடையது எனவும் தெளிவாகின்றது. எல்லா இலக்கணவாசிரியர்களுக்கும் இது உடன்பாடே.

தொல்காப்பியர் குற்றியலிகரத்தை முற்றியலிகரத்தோடு உறவுபடுத்தவில்லை; அதாவது குற்றியலிகரத்திற்கு முதலெழுத்து முற்றியலுகரம் என்பது போன்று அவர் கூறவில்லை. அவ்வாறு உறவுபடுத்தாமை ஒரு பொருத்தம் கருதித்தான் போலும். முற்றியலிகரம் முன்னண்ண உயருயிரொலியாகி ஓரளபுடையது. ஆகவே

ஒரு குறிப்பிட்ட பிறப்பிடத்தையும் பிறப்பு முயற்சியையும் கொண்டுள்ளதாகும். குற்றியலிகரமோ தொல்காப்பியர் கருத்துப்படி அத்தகையதல்ல. அதற்கு ஆறு பிறப்பு உண்டு. குற்றியலிகரம் சார்ந்துவரல் மரபினையுடைய தாதலாலும் அதன் சார்பு ஆறு வல்லெழுத்துக்களாதலாலும் இது தெளிவாகிறது. (மேலே காண்க: 4. 4.). இவ்வாறு குற்றியலிகரம் அளவாலும் பண்பாலும் முற்றியலிகரம் நோக்கக் குறையுடையதாகிறது. இக்குறையினைக்குறித்தே குற்றியலிகரம் என்னும் குறியீடு தொடக்கத்தில் அமைக்கப் பட்டிருக்கலாம். ஆகவே குற்றியலிகரம் முற்றியலிகரத்தைப் போன்று ஓரொலி எனக் கொள்ளக்கிடக்கிறது. வல்லெழுத்துக்களை அடுத்து இது தோன்றுவதாக இலக்கண வாசிரியர்கள் குறிக்கின்றனர். ஆதலால் குற்றியலிகரத்தைப் போன்றே இதுவும் வல்லின மெய்களுக்குத் துணையாகத் தோன்றும் ஈற்றுத் துணையுயிரொலியே.[71]

### 4. 7. 2. சூழல்

குற்றியலிகரம் தனிமொழியிலும் புணர்மொழியிலும் தோன்றும் என இலக்கணநூல்கள் கூறுகின்றன. வல்லெழுத்துக்களை அடுத்துச் சொற்களின் இறுதியில் வழங்கும் குற்றியலுகரமே யகரம் வரக் குற்றியலிகரமாகத் திரிகிறது என அந்நூல்கள் கூறுகின்றன. குற்றிய-லுகரம் கெட அவ்விடத்தில் குற்றியலிகரம் தோன்றுகிறது என்பதும் ஒருகருத்து.[72] இரண்டு கருத்துக்களிடையேயும்

---

71. Vowel release

72 "There are three views regarding this kurriyalu-karam, viz. (1) that it is lost (2) that it is there acting

[அடுத்த பக்கம்]

ஒரு வேறுபாடும் இல்லை. குற்றியலுகரத்தையும் குற்றியலிகரத்தையும் உறவு படுத்திப் பேச வேண்டிய தேவை ஒன்றும் இல்லை; அது வேறு; இது வேறு எனவே கருதலாம். இலக்கணவாசிரியர்கள் கருத்துக்களால் குற்றியலிகரம் பற்றி இருகருத்துக்கள் அமைகின்றன :

ஒன்று, குற்றியலிகரம் புணர்மொழியில் வல்லெழுத்துக்களை அடுத்துத் தோன்றுகிறது.

இரண்டு, வருமொழியில் யகரம் வர அது தோன்றுகிறது.

இக்கருத்துக்களையே உரையாசிரியர்கள் "யகரம் இடம்;...வல்லெழுத்துப் பற்றுக் கோடு" என விளக்குகின்றனர்.[73] அவர்கள் எடுத்துக்காட்டுக்களாக வரகியாது, காசியாது, நாடியாது.......என்பவற்றைத் தருகின்றனர். (குற்றியலிகரத்தின் வகைகளாக இலக்கணவாசிரியர்கள் குற்றியலுகரத்திற்குத் தந்த முப்பத்தாறு வகைகளையும் தருகின்றனர். குற்றியலுகரத்திற்கு இவ்வகை தேவையில்லாதது போன்றே குற்றியலிகரத்திற்கும் தேவையில்லை.)

---

like a consonant to combine with the following vowel and (3) that it is altered into some other vowel. Ilampuranar holds the second view. The commentator of Neminatam follows the first view, Nannul follows the third view, which... is held by Yapparunkala Virutti." —P 103, MEN.

73. தொல். எழு. 35, நச்சி.

## 4. 7. 3. பிற மெய் முன் இகரம்

பழந்தமிழ் இலக்கியங்களைப் படிக்கின்றபோது வல்லெழுத்துக்களல்லாத மற்றமெய்யெழுத்துக்களை அடுத்து யகரத்தின் முன் ஓர் இகரம் வழங்குவதைக் காணுகின்றோம்:

'இவளியார் என்குவை யாயின்.... '—புறம், 13.

'இவரியார் என்குவை யாயின்.......'—புறம், 201.

'ஒப்பா ரியாங்கண்ட தில்' —குறள், 1071.

'ஆரப் பேரியாற்று மாரிக் கூந்தல்'

—சிலம்பு. இந்திர, 2.

'இன்குரற் சீறியாழ் இடவயின் தழீஇ.......'

—சிறுபாண், 35

'துறையமை நல்லியாழ்த் துணைமையோர் இயல்பே.

—தொல். பொருள்.92.

இவற்றைக் கருதுகிறபோது (மொழிக்கு ஈறாகும்) அனைத்து மெய்களை அடுத்தும் யகரம் வருமானால் ஓர் இகரம் தோன்றுகிறது எனக் கொள்ள வேண்டும் போலும். ஒருசில இலக்கணவாசிரியர்கள் இதனை ஒரு விதியாகவே கொள்ளுகின்றனர். கீழ்க்கண்ட நன்னூல் நூற்பா இதனை உறுதி செய்கிறது:

'தன்னொழி மெய்முன் யவ்வரின் இகரம்
துன்னும் என்று துணிநரும் உளரே.'[74]

உரையாசிரியர்கள் இங்கு எடுத்துக்காட்டுக்களாக "வேளி யாவன்" "மண்ணியாது"........முதலியவற்றைத்

---

74 நன். 206

தருகின்றனர். இந்நூற்பாக் கருத்து நன்னூலாசிரியருக்கு உடன்பாடில்லை என்பதும், ஆனால் அவர்காலத்தில் இக் கருத்துக்கொண்ட இலக்கணவாசிரியர்கள் இருந்தார்கள் என்பதும் 'துணிநரும் உளரே' என்னும் தொடரால் தெளிவாகின்றன. இத்தகைய ஆசிரியர்கள் கருத்தினையே பழந்தமிழிலக்கியங்கள் உறுதிப்படுத்துவனபோன்றுள்ளன.

இலக்கணவாசிரியர்களே 'கேண்மியா' 'சென்மியா' என்னும் சொற்களில் இகரம் வழங்குதலை எடுத்துக் காட்டுகின்றனர். இங்கெல்லாம் மகரத்தை அடுத்து இவ் இகரம் வழங்குதலைக் காணுகின்றோம். இது குற்றியலிகரம் எனவே கொள்ளப்படுகிறது. யகரத்தின் முன், வல்லெழுத் துக்கள் மகரம் ஆகியவற்றை அடுத்துத் தோன்றும் இகரம் (இலக்கண ஆசிரியர்கள் கருத்துப்படி) குற்றியலி-கரமானால் ரகர னகர ணகர ளகரம் போன்ற மற்ற மெய்களை அடுத்துத் தோன்றும் இகரமும் குற்றியலிகர மாகவே இருக்கலாம் எனக்கருதத் தோன்றுகிறது. ஆகவே தொல்காப்பியர் நன்னூலார் கருத்துப்படி குற்றியலிகரம் வல்லெழுத்துக்களை அடுத்து மட்டும் தோன்றும் எனக் கூறுவது குன்றக் கூறலாகும். இவ்வாறு இவ்வாசிரியர்-கள் குற்றம்படுதலுக்குக் காரணம் குற்றியலிகரத்தைக் குற்றியலுகரத்தோடு உறவுபடுத்தி அது இதன் திரிபே எனக் கருதியதே எனலாம். அக்குற்றியலுகரம் ஆறு வல்-லெழுத்துக்களை அடுத்து மட்டுமே வழங்குகின்றது.

### 4. 7. 4. மொழி முதலிலும் இகரம்

இடைக்காலத்துத் தமிழ்க் கல்வெட்டுக்களில் காணப் படும் ஒருவழக்கு யகரத்தின் முன்னர்த் தோன்றும் இகரம்

பற்றி மற்ளுரு கருத்தினைத் தருகிறது. கல்வெட்டுக்களில் " இயாதாமொருவன் " என்னும் சொல்லாட்சி காணப் படுகிறது. இது மொழி முதல். இங்குத்தோன்றிய இகரமும் குற்றியலிகரமே ஆதல் வேண்டும்; காரணம் இதற்கு வேறு விளக்கம் காணமுடியவில்லை; யகரத்தின் முன்னரும் அமைந்துள்ளது. யகரத்துக்கு இது ஒருமுன் தாழொலியே.[75]

இதுவரை கண்டவற்ருல் ஒருமுடிவிற்கு வரலாம்: மெய்யெழுத்துக்களையடுத்தும் மொழி முதலிலும் யகரம் ஓரிகரத்துடனேயே வழங்குகிறது என்பதே அது. இவ் இகரத்தையே தொல்காப்பியர் முதலான ஆசிரியர்கள் ஓரளவு ஒருவாறு குற்றியலிகரம் என வகுத்தனர்.

## 4.7 5 எழுத்து நிலை

குற்றியலிகரத்தைத் தனியே ஓரெழுத்தாக வகுக்-கலாமா என்பதை இனிக்காணலாம். இதற்குத் தேவையான ஒலியின் தன்மையும் சூழலும் மேலே விளக்கப்-பட்டன. இக்குற்றியலிகரம் எப்போதும் யகரத்துடன் இணைந்தே வழங்குகின்ற காரணத்தால் இரண்டையும் கூட்டி ஓரொலியாகவே கொள்ளலாம். அது [இ்ய்] அதாவது [ịy].[76] இது அல்லாத யகரம் வேறுண்டு.

---

75. on-glide

76. மொழிமுதல்யகரம் எப்போதும் ஆகாரத்துடனேயே கூடி வருகிறது. பேர். தாமஸ் பரோ அவர்கள் இவ்-யகரத்தை ஆகாரத்துடன் சேர்த்தே ஒரு சந்தியக்கரமாக வகுத்துக் கொள்ளுகிருர்கள்; அதாவது [ịā / iịā] இதிலே குற்றியலிகரமும் சேர்க்கப்படுகிறது. —P. 119. CPDL.

அது மற்ற சூழல்களில் வழங்குகிறது. அதாவது உயிர்ப்பின் (உயிரிடையும் மொழியீற்றிலும்). ஆதலால் இவ்விரண்டு யகரங்களுக்கும் தனித்தனியே வரையறுத்த சூழல்கள் அமைகின்றன. ஆகவே இவ்விரண்டு யகர ஒலிகளையும் ஓரெழுத்தாகவும் ஈரெழுத்தொலிகளாகவும் கொள்ளலாம்:

/ய்/ : [இ்ய்] மொழி முதலிலும் மெய்ப் பின்னும்
: [ய்] மற்ற சூழல்களில்

இவ்வாறு கொள்ளாது குற்றியலிகரத்தைக் குற்றிய லுகரத்தோடு உறவுபடுத்தி, குற்றியலிகரம் குற்றியலுகரம் முற்றியலுகரம் ஆகிய மூன்றும் மூன்றெழுத்தொலிகள் எனவும் இவற்றை /உ/ கரம் என ஓரெழுத்தாகக்கொள்ளலாம் எனவும் சிலர் கருதுவர்.[77] இக்குற்றியலிகரம் யகரத்தோடு கொண்ட பிரியா உறவை இவர்கள் உணர்ந்ததாகத் தோன்றவில்லை. மற்ற மெய்கள் முன்னும் மொழிமுதலிலும் இவ் இகரம் தோன்றுதலையும் இவர்கள் கணக்கில் கொண்டதாகவும் தோன்றவில்லை.

4. 7. 6. வரலாறு

இதுவரை மேலே கண்ட கருத்துக்கள் பழந் தமிழுக்கும் ஓரளவு இடைத்தமிழுக்கும்தான் பொருந்தும். காரணம் இடைத்தமிழ்க் காலத்தின் தொடக்கத்திலேயே

---

77. "These peculiar sounds, kuttiyalukaram, kuttiyalikaram and aytam, are not phonemes. They are merely positional variants of the phonemes already discussed. Shorter u, and shorter i, when not mere releases, are allophones of u and the aytam is th lophone of the long plosive." —P. 73, HTL.

யகரம் மொழி முதலில் வழங்காது கெடத் தொடங்கியது. மொழி முதல் யகரம் கெடுமாயின் குற்றியலிகாம் இல்லை என்பது பொருள். [இ்ய்] வழங்கும் சூழல்களில் ஒன்று மொழிமுதல் ஆதலாலும் மற்றொன்று மெய்ப்பின் ஆதலாலும் இது தெளிவு. [இ்ய்] மெய்ப்பின் வழங்குதல் எப்போதும் புணர்மொழியில்தான்; அதாவது இருமொழியில்: நிலை மொழியிறு மெய்; வருமொழிமுதல் யகரம்; ஆகவே அதுவும் மொழி முதலேயாகிறது.

பழந்தமிழ்க்காலமான தொல்காப்பியர் காலத்திலேயே மொழிமுதல்யகரம் கெடத்தொடங்கியிருக்கலாம். 'ஆறுதல் (<யாறுதல்; தெ. ஏறு).' 'ஆத்திரை (<யாத்ரா, வ.மொ.)' 'ஏமம் (<யாம, வ. மொ.)' முதலியவை இதனைச் சுட்டு-கின்றன. ஆகவே குற்றியலிகரம் வழங்கல் தொல்காப்-பியர்க்கு முந்திய முன்னைத் தமிழுக்குரிய சிறப்பியல் பாகலாம். ஆகவேதான் தொல்காப்பியர் 'கேண்மியா,' 'சென்மியா' போன்ற அரிதாக மகரத்தையடுத்து வழங்கும் குற்றியலிகரத்தைக் குறிப்பிடுகிறார்; மற்ற மெய்களை அவரால் குறிப்பிடமுடியவில்லை. 'கேண்மியா,' 'சென்மியா' முதலிய வழக்குக்கள் பழந்தமிழில் வழங்கும் முன்னைத் தமிழுக்குரிய எச்சங்கள் எனல் வேண்டும். முன்னைத் தமிழுக்குரிய இப்பண்பு பின்னரும் கிளைமொழி வழக்காக வழங்கி வந்திருக்க வேண்டும். இதுவே நன்னூலாரின் மாற்றுக் கட்சியினர்க்கு வாய்ப்புத் தந்திருக்கலாம்.

பண்டைநிலை இவ்வாறிருக்க இன்றைத்தமிழிலோ குற்றியலிகரத்திற்குச் சிறிதும் இடமில்லை. காரணம் யகர முதற் சொற்களெல்லாம் ஒன்று திரிந்தன; அல்லது வழக்கு வீழ்ந்தன. 'யார்' என்னும் வினுச்சொல் மட்டும்

'ஆர்' என்பதும் வழங்கத் தானும் வழங்கிவருகிறது மேலும் பேச்சுத்தமிழில் மொழியீற்று மெய்களெல்லாம் மாறின: ஒன்று கெட்டன; அல்லது இகர உகரச்சாரியை-கள் பெற்றன. இந்நிலையில் மொழிமுதல். மெய்ப்பின் குற்றியலிகரங்களுக்கு இடமேது?

## 4. 8. குற்றியலுகரம்.

*4. 8. 1.* ஒலி. தொல்காப்பியருக்கும் பின்னைய இலக்கணவாசிரியர்களுக்கும் இடையே குற்றியலிகரம் பற்றிக் கண்டவாறு போன்றே குற்றியலுகரம் பற்றியும் கருத்து வேறுபாடு உண்டு. (காண்க: 4. 7. 1.) குற்றியலிகரம் என்னும் குறியீடு பற்றிக் கூறியது போன்றே முற்றியலுகரத்தை நோக்கக் குற்றியலுகரமும், அரையள-பாகக் குறுகி ஒலிக்கின்ற உகரம் என்றோ குறுகிய (குறையுடைய) இயல்பினையுடைய உகரம் என்றோ பொருள்படும். தொல்காப்பியர் கருத்துக்கு மாறாக நன்னூலார் முதலெழுத்தாகிய முற்றியலுகரத்திற்கு உரியதே குற்றியலுகரம் என்கிறார். ஆனால் குற்றியலுகரம் முற்றிய-லுகரம் போன்ற ஓரொலிதானே யொழிய அதுவே அரையளபு குறைந்த ஒலி அல்ல. காரணம் தொல்காப்பியர் கருத்துப்படி சார்பெழுத்தாகிய இது ஆறு வல்லெழுத்-துக்களையும் சார்ந்து ஆறு ஒலிப்பிட ஒலிப்புறுப்புக்களைக் கொண்டது; முற்றியலுகரம் இதழ்குவிபின்னுயருயிரொலி. குற்றியலுகரம் ஆறு வல்லெழுத்துக்களைச் சார்ந்து ஆறு பிறப்புக்களைக் கொண்டிருக்குமானால் அதனை ஓர் ஈற்றுத்துணையுயிரொலி எனக் கூறுதலே ஏற்புடைய-தாகும். தொல்காப்பியர் காலத்துக்கு முன்னர் வல்லெழுத்-துக்களை ஒலிப்பதற்குத் துணையாக இக் குற்றியலுகரம் தோன்றியிருக்கலாம்; சங்க காலத்தில் உகரம் போன்று ஆனால் அரையளபுடையதாக நிலை பெற்றிருக்கலாம்.

இந்நிலையில் முற்றியலுகரத்திற்கும் குற்றியலுகரத்திற்கும் இடையே வேறொரு வேறுபாடும் இருந்திருக்கலாம். நச்சினார்க்கினியர் ஐநூறாண்டுகளுக்கு முன்னர் எடுத்துக் காட்டியது போன்று குற்றியலுகரம் இதழ் குவியா — இயல்பிதழ் — ஒலியாக இருந்திருக்கலாம்.[78] இன்று அது இயல்பிதழ்நடுநோத்தாழுயருயிரொலியாக ஒலிக்கிறது.[79] இதனை [ u̠ ] எனக் குறிக்கலாம்.

4. 8. 2. சூழல்

இக்குற்றியலுகரமோ வரையறுத்த சூழல்களையுடையது. தொல்காப்பியர் இவற்றை,

> 'நெட்டெழுத்து இம்பரும் தொடர்மொழி ஈற்றும்
> குற்றிய லுகரம் வல்லாறு ஊர்ந்தே'[80]

எனச் சுருங்கக் கூறுகிறார். இணைக்குறில் மொழி தவிர மற்ற மொழிகளின் ஈற்றில் வல்லெழுத்துக்களை ஊர்ந்து வரும் ஒலி குற்றியலுகரம் என்பது இதன் பொருள். தமிழில் வல்லெழுத்துக்கள் ஈற்றில் வழங்கா என்பதும் அவ்வாறு அவை வழங்க அவற்றுக்குத் துணையாகக் குற்றியலுகரம் தோன்றுகிறது என்பதும் இதனால் தெளிவாகின்றன.

எ. கா. : சுக்கு.

---

78. தொல், எழு. 68. நச்சி.
79 Central low higher unrounded vowel
80. தொல். எழு. 36.

### 4. 8. 3. வகை

பின்னைய இலக்கணவாசிரியர்கள் சிலர் குற்றியலுகரம் பல்வேறு சூழல்களில் வழங்குகிறது என எண்ணுவதாகத் தெரிகிறது. நன்னூலார் குற்றியலுகரம் 36 எனவும்[81] மற்றுஞ் சிலர் 42 எனவும்[82] கூறுவதால் இது விளங்குகிறது. இவர்கள் குற்றியலுகரம் வழங்கும் மொழியின் ஈற்றய லெழுத்தினை ஒட்டி இவ்வாறு வகையிடுகிறார்கள். ஒவ்வொரு வகையும் ஒரு சூழல் என்றாகிறது. இவை யெல்லாம் புணர்ச்சி வேறுபாடு கருதியும் யாப்பிலக்கணம் கருதியும் கொள்ளப்பட்ட வகைகள். தொல்காப்பியரும் குற்றியலுகரம் வழங்கும் தொடர்களை ஆறு என

---

81. நன்னூலார் 'உகரம் ஆறாறு' என அதன் தொகை கூறுகிறார். (எழு. 6) ; பின்னர் அதன் வகையினை,

நெடிலோடு ஆய்தம் உயிர்வலி மெலிஇடை
தொடர்மொழி இறுதி வன்மை ஊர் உகரம் அஃகும்
(பிறமேல் தொடரவும் பெறுமே) — எழு. 33.

என விளக்குகிறார்.

82. பல்காயனார் முதலான யாப்பிலக்கணவாசிரியர்கள் இவ்வாறு கணக்கிடுகின்றனர்:

எழுவகை இடத்தும் குற்றிய லுகரம்
வழுவின்றி வரூஉம் வல்லாறு ஊர்ந்தே

எனவும்

நெடிலே குறிலிணை குறில்நெடில்' என்றிவை
ஒற்றொடு வருதலொடு குற்றொற்று இறுதியென்று
ஏழ்குற் றுகரக்கு இடனென மொழிப

எனவும் யாப்பருங்கல விருத்தியுரையில் வழங்கும் நூற்பாக்கள் இதற்குச் சான்று.

என்னினராயினும் இவ்வாறு வகைப்படுத்தவில்லை. இந்நிலை எவ்வாறாயினும் முப்பத்தாறு அல்லது நாற்பத்திரண்டு ஆகிய வகைகள், குற்றியலுகரத்தின் இயல்பினை—ஒலி நிலையினை—அத்துணை வகைப்படுமாறு எங்ஙனமும் மாற்றுதல் இல்லை. மேலும் இவ்வகைகளால் இங்கு ஒரு பயனும் இல்லை. அதன் சூழல் "கெட்டெழுத் திம்பரும் தொடர்மொழியிற்றும் வல்லாறு" என ஆறும் அடங்கிய ஒன்றே.

### 4. 8. 4. மொழியிடைக் குற்றியலுகரம்.

இவ்வாறு தனிமொழியிற்றில் வல்லெழுத்துக்களை அடுத்து வழங்கும் குற்றியலுகரம் மொழியிடைப்பட்டால் [ 'சுக்கு நல்லது' என்பதிற் போன்று ] ஓரளபுடைய முற்றிய லுகரமாக ஒலிக்கும். இது தொல்காப்பியர் நூற்பாவால் விளக்கமுறுகிறது:

'அல்லது கிளப்பினும் வேற்றுமைக் கண்ணும்
எல்லா விறுதியும் உகரம் நிறையும்'.[83]

இந்த விதிக்கு விலக்காகச் சிறுபான்மை மொழியிடைப்பட்டால் குற்றியலுகரம் அரையளபுடையதாகவே ஒலித்தலும் உண்டு:

'இடைப்படின் குறுகும் இடனுமா ருண்டே
கடப்பாடு அறிந்த புணரிய லான'.[84]

என்னும் நூற்பா இதனைக் கூறுகிறது. அச்சிறுபான்மையிடம் யாது என்பதையும் தொல்காப்பியரே பின்னர்க் குற்றியலுகரப் புணரியலுள் கூறுகிறார்:

---

83. தொல். எழு. 408. 84. தொல். எழு. 37.

'வல்லொற்றுத் தொடர்மொழி வல்லெழுத்து வருவழி
தொல்லை யியற்கை நிலையலும் உரித்தே.[85]

வன்றொடர்க் குற்றியலுகரம் மட்டும் வல்லெழுத்து முதல் மொழி வரும் போது அரையளபாகவே நிற்கிறது. எ. கா. : சுக்குக் கோடு. மற்ற ஐந்தொடர்க் குற்றியலுகரங்களும் இடைப்படுகின்ற போது ஓரளபாகவே நிற்கின்றன. ஈற்றில் வழங்குவதே குற்றியலுகரம் என்பது விதியாதலால் இடைப்படுகின்றபோது ஈறன்மை தோன்றலால் அது குற்றியலுகரமாகாது என்பது முற்றவும் பொருத்தம்.[86]

## 4. 8. 5. 'உயிர் வரின் உக்குறள்'

மெய் முதன்மொழி வர இவ்வாறாக, உயிர் முதன் மொழி வந்து புணர மொழியிடைப்பட்ட குற்றியலுகரம் நில்லாது கெடுகிறது. நன்னூலார் இதனை அழகாக,

"உயிர்வரின் உக்குறள் மெய்விட்டு ஓடும்"[87]

என்கிறார். தொல்காப்பியர் இவ்வாறு வெளிப்படையொன்றும் கூறவில்லையாயினும் அவர் காலத்து மொழியியல்பு இது தான்.[88]

---

85. தொல் எழு. 49.

86. இந்நூற்பாக்களுக்கு இளம்பூரணர் இவ்வாறே பொருள் கொள்ளுவர். ஆனால் நச்சினார்க்கினியர், வன்றொடர்க் குற்றியலுகரம் வல்லெழுத்து வருவழிக் கால் அளபாகக் குறுகும் எனவும் மற்ற ஐந்தொடர்க் குற்றுகரங்கள் அரையளபாக விளங்கும் எனவும் பொருள் கூறுவர். காலளபு உகரத்தைச் சிலர் குற்றியலுகரக்குறுக்கம் என வகுப்பர். நன்னூலார் கூட இதனை உடன்படவில்லை.

87. நன். 164.

88. நச்சினார்க்கினியரும் (தொல். எழு. 105) வே. வேங்கடராசுலு ரெட்டியாரும் [அவர் நூல் : குற்றிய-

லுகரம். பக். 37] இங்கெல்லாம் குற்றியலுகரம் கெடாது நின்று உயிரேற இடங்கொடுக்கும் என்கின்றனர். எடுத்துக் காட்டாக 'நாகரிது' எனக் கூறுகின்ற போது குற்றியலுகரம் எங்குள்ளது? என்பது தெரியவில்லை. குற்றியலுகரம் ஈற்றில்தான் வழங்கும் என விதி காணுகிறபோது உயிர் வர இடைப்பட்டும் அது நிற்கும் என்பது வர்புரையே

ஆனால் 'உயிர்வரின் உக்குறள் மெய்விட்டோடாது நிற்றலுண்டு' என்றும் சங்கஇலக்கியங்களில் அதற்குச் சான்றுண்டு என்றும் அவ்வாறு ஓடுதல் பிற்காலத்தில் நிலைபெற்றது என்றும் பேர். தெ. பொ. மீ. அவர்கள் கருதுகிறார்கள். மேலும் அவர்களே மெய்வரின் உக்குறள் நாம் மேலே கண்டவாறு முற்றுகரமாகாது குற்றுகரமாகவே நிற்றலுண்டு எனவும் அதற்குத் தொல்காப்பியத்திலும் சான்றுண்டு எனவும் கூறுகிறார்கள். அவர்கள கருத்தை இங்கு முழுவதும் காண்க :—

"Language of the Cankam Age : Kuttiyalukaram. The second important change is that the Kuttiyalukaram becomes the *u* sound, not a mere release. Even Tolkapiyam in its chapter on prosody speaks of Kuttiyalukaram occurring in verse followed by a consonant : E.g.: akkulu. 'tortickle,' (Kalittokai. 94.) According to this, a root ending with Kuttiyalukaram may be followed by a consonant. Thus the shorter u was not restricted to the utterance-final position. In the derived word vikkul, 'hiccough,' vikku is the root and -ul the suffix of the verbal noun. The u here is the shorter u. He speaks of the short u also as being followed by a consonant (Tolkappiam, 1267). If so there must be some difference in pronunciation between these two kinds of u's. Probably the Kuttiyalukaram as today was the unrounded u. Usually word-final Kuttiyalukaram uni-

[அடுத்த பக்கம்]

4. 8. 6. மொழிமுதற் குற்றியலுகரம்.

வேறொரு சூழலிலும் குற்றியலுகரம் வழங்கியதாகத் தொல்காப்பியர் எடுத்துக் காட்டுகிறார். அது "முறைப் பெயர் மருங்கின் ஒற்றிய நகரமிசை நகரமொடு முதலுதல்"[89] ஆகும். அம்முறைப் பெயர் 'நுந்தை' என்பது; இங்கு

---

Uniformly disappears, in a later age when followed by a vowel. But there are cases in Cankam poetry where it does not so disappear. According to Toikappiam Kuttiyalu-karam occurs utterance-finally; else where it behaves like a Muttiyalukaram, which does not disappears. (Tol. 1267)" — PP. 108, 109, HTL.

இடைக்காலத்திலக்கியங்களான தேவார திருவாசகங்களில் உயிர்வரினும் உக்குறள் மெய்விட்டோடாது இரண்டும் நிற்க இடையில் உடம்படுமெய் வரும் புதுமையினையும் காணுகின்றோம். (இவ்வாறு ஒரு பாடத்தை எடுத்துக்காட்டுகிறார் மாகறல் கார்த்திகேய முதலியார்.)

'போதம் தருவது நீறு; புன்மை தவிர்ப்பது நீறு;
வோதத் தருவது நீறு; வுண்மையில் உள்ளது நீறு.'
—தேவாரம்

'பந்தமும் வீடும் ஆயினுர்க்கு
வாதியும் அந்தமும் ஆயினுர்க்கு
வாடப் பொற்சுண்ணம்இடித்தும் நாமே.'
—திருப்பொற்சுண்ணம், திருவாசகம்

இவ்விலக்கியங்கள் இசைப்பாட்டுக்கள். ஆகவே குற்றியலுகரமும் இசையில் நீண்டது போலும்! ஆயினும் பல்லவர் காலத்துக் கல்வெட்டுக்களில் (கி. பி. 600—950) உயிர்வரினும் உக்குறள் கெடாது நிற்றலைத் திருமதி ஜெயக்குமாரி தம் ஆய்வுரையில் எடுத்துக் காட்டுகிறார்கள்.

89. தொல். எழு. 67

மொழி முதல் உகரமே குற்றியலுகரம். இந்த ஒரு சூழலில் மட்டும் விதிவிலக்காக எவ்வாறு குற்றியலுகரம் தோன்றியது என்பது விளங்காத ஒரு புதிரே. இந்நுந்தை என்னும் சொல்லும் இடைக்காலத்திலேயே வழக்கு வீழ்ந்தது. ஆதலால் நன்னூலாசிரியரும் இதனைக் கூறாது விடுத்தார் போலும்.

## 4. 8. 7. எழுத்து நிலை

குற்றியலுகரத்திற்கு வரையறுத்த சூழல் உண்டு; முற்றியலுகரம் வழங்குகிற இடங்களில் அது வழங்குவதில்லை. குற்றியலுகரம் வழங்கும் சொற்களால் மொழியிடைப்படுகின்ற போது முற்றியலுகரமாகிறது. இக்காரணங்களால் இரண்டையும் ஓரெழுத்தாக வகுக்கலாம்.

/உ/ : [ụ] மொழியிற்றில் வல்லெழுத்தூர்ந்து.
: [u] மற்ற இடங்களில்.

## 4. 8 8 ஏவல் வினையில் குற்றியலுகரம்

இந்நிலை இலக்கியத் தமிழுக்கே பொருந்தியது. ஆனால் நச்சினார்க்கினியரின் சில அரிய கருத்துக்கள் குற்றியலுகரம் தனித்தே ஓரெழுத்தாகத் தக்கது என எடுத்துக் காட்டுகின்றன :—

“தருக்கு, அணுக்கு என்பன வினைக்கண் வந்த முற்றுகரம்” (தொல். எழு. 36); “காது, கட்டு, கத்து, முறுக்கு, தெருட்டு என்பன முற்றுகரமும் குற்றுகரமுமாய்ப் பொருள் வேறுபட்டு நின்றாற் போல ..... ” (தொல். எழு. 68).

இக்கருத்துக்களால் குற்றியலுகரம் பெயர்ச்சொற்களில் மட்டும்தான் வழங்கும் என்பதும் வினைச் சொற்களில் அதே சூழலில் முற்றியலுகரமே வழங்கும் என்பதும் அமைகின்றன. அவ்வாருனால் இரண்டும் பொருள் வேறுபாடு செய்து வேற்றுமை வழக்கில் வழங்கும் என்பது தெளிவு. ஆகவே அவ்விரண்டையும் தனித்தனியே இரண்டு எழுத்துக்கள் எனக் கொள்ளவேண்டும். நச்சினர்க்கினியர்தான் இக்கருத்தை அரிதாகக் குறிப்பிடுகிருரே ஒழியத் தொல்காப்பியருள்ளிட்ட மற்றெவ்விலக்கணவாசிரியரும் உரையாசிரியரும் குறிப்பிட்டதாகத் தெரியவில்லை நச்சினர்க்கினியர் இவ்வாறு கொள்ளுவதற்குச் சான்ருக வேறு ஒன்றும் கூறக்காணேம். ஒருகால் இந்நிலை அவர்காலத்து மொழியியல்பாகவே இருந்திருக்கலாம். பொதுவாகவே ஏவல்வினைகளின் ஈற்றசைகளை எடுத்தலோசையோடு பேசுகின்ற காரணத்தால் குற்றியலுகரம் நீண்டொலிக்கும். இதனையே கூடக் கருதி நச்சினர்க்கினியர் குறிப்பிட்டிருக்கலாம்.

குற்றியலுகரமும் முற்றியலுகரமும் ஒரே சூழலில் வழங்கிப் பெயர்வினைப் பொருள் வேறுபாடு செய்கின்றன என்னும் நச்சினர்க்கினியரின் இக்கருத்துத் தொல்காப்பியர்க்கும் உடன்பாடே என்பர் திரு. வே. வேங்கடராசுலு ரெட்டியார்.

குற்றியலுகரம்,

'முற்றிய லுகரமொடு பொருள்வேறு படாஅது
அப்பெயர் மருங்கின் நிலையிய லான.'[90]

---

90 தொல். எழு. 63

என்னும் நூற்பாவால் அது பெயர்ச் சொற்களில்தான் வழங்கும் எனவும்,

'.........................................................

குற்றிய லுகரத்து இறுதியும் உளப்பட
முற்றத் தோன்று முன்னிலை மொழிக்கே'[91]

என்னும் நூற்பாவால் முன்னிலை வினையாகிய ஏவலில் அது வழங்காது எனவும் தொல்காப்பியர் கூறுவதாக அவர் விளக்கம் தருகிறார். ஆனால் தொல்காப்பியர் இங்கு 'நுந்தை' என்னும் அந்தப் பெயரைத்தான் மொழி முதற் குற்றியலுகரத்திற்கான சூழல் எனக் குறிக்கிறாரேயொழியப் பொதுவாகப் பெயர் எனக் குறிக்கவில்லை என்பதைச் சிறிது ஆழ்ந்து நோக்கவும் உணரலாம். மேலும் முன்னிலை ஏவலில் குற்றியலுகரம் வாராது என இங்கு விலக்கிக் கூறியது புணர்ச்சியில் வருமொழி ஒன்று வர அது மொழியிடைப்படுதலால் (கூட்டு கொற்றா என்பது போல) முற்றியலுகரமாகத் திரியும் காரணத்தால் என்பதைக் கருத்தில் கொள்ள வேண்டும். (மொழியிடைப்பட்டால் அது முற்றியலுகரம் ஆகும் என்பது முன்னரே விளக்கப் பட்டது. காண்க 4. 8. 4.) ஆகவே நச்சினார்க்கினியர் கருத்துத் தொல்காப்பியத்தில் எங்கும் வெளிப்படக் கூறப் படவில்லை எனவே கொள்ளல் வேண்டும்.

### 4. 8. 9. இன்று ஓர் எழுத்து

இன்றைய பேச்சுத் தமிழில் குற்றியலுகரத்தின் எழுத்து நிலை மாறியுள்ளது எனலாம். இதற்குக் காரணம் பேச்சுத் தமிழில் உயிரொலிகளில் ஏற்பட்ட

---

91 தொல். எழு. 152

மாற்றங்களேயாகும். ஒன்று : இலக்கியத் தமிழில் மொழியீற்றில் வழங்கும் மெய்யெழுத்துக்கள் பேச்சுத் தமிழில் கெடுகின்றன; அல்லது இகரமோ உகரமோ பெறுகின்றன. இத்தகைய மாற்றங்கள் தெலுங்கு கன்னட மொழிகளிலும் ஏற்பட்டு இலக்கிய இலக்கணங்களும் அவற்றை உடன்பட்டுள்ளன.

எ. கா. : மக்கள் : மக்க
வால் : வாலு
காய் : காயி

இவ்வாறு தோன்றும் உகரம் குற்றியலுகரம் போன்று இயல்பிதழ்த்தாமுயரொலி [u̱]. ஆகவே இன்றைய பேச்சுத்தமிழில் ஈற்றில் மெல்லின இடையின மெய்களை அடுத்தும் குற்றியலுகரம் வழங்குகிறது எனக் கொள்ள வேண்டும்.[92] இரண்டு : மொழியிடையில் வழங்கும் இகர உகரங்கள் சிலபோது குற்றியலுகரமாகத் திரிகின்றன.

எ. கா. : திரும்பு > tu̱ru̱mbu̱

இச்சொல் துரும்பு > turu̱mbu̱ என்னும் சொல்லோடு பொருள் வேறுபாடு கொண்டுள்ளது. ‘அவனுக்கு’ என்பன போன்ற சொற்களில் உள்ள உச்சாரியை இத்தகைய குற்றியலுகரமே எனலாம். இவ்விரண்டு மாற்றங்களாலும் i, u, u̱ முதலியவை வேற்றுமை வழக்கில் வழங்குபவையாகித் தனித்தனியே எழுத்துக்-

---

92. இவ்வாறே டாக்டர் மு. வ (மொழி நூல, பக். :0), வே. வேங்கட ராசுலு ரெட்டியார் (குற்றியலுகரம் பக் 48), முத்துச்சண்முகம் (Vowel Splits in Tamil Dialects, IATR. Seminar Paper) ஆகியோர் கருதுகின்றனர்.

களாகின்றன.[93] மேலும் முற்றியலுகரங்கள் கொண்டு வழங்கும் வடசொற்களும் (ஏது < ஹேது) மக்கட் பெயர்களும் (பாலு = பாலன்) மற்ற தமிழ்ச் சொற்களோடு (ஏது < யாது, பாலு = பகப்பால்) பொருள் வேறுபாடு கொண்டு வழங்கவும் குற்றியலுகரம் தனியே ஓரெழுத்தா கிறது.[94]

## 4. 8. 10. வரலாறு

இத்தகைய வரலாறு பெற்ற குற்றியலுகரம் தொன் முதல் திராவிடத்தில் இருந்ததா என்பது தெரியவில்லை. முன்னைத் தமிழில் ஒலித்துணை யுயிராக விளங்கிச் சங்க காலத்திலும் இடைக்காலத்திலும் இயல்பிதழ்த்தாழுயருயி ரொலியாகிக் குற்றியலுகரம் எனப் பெயருடன் வழங்கி இன்றைய பேச்சில்தான் தனியே ஓர் எழுத்தாக வாழ்கிறது. இது மலையாளத்தில் மட்டும் உண்டு. மற்ற திராவிட மொழிகளிலேயோ வடமொழியிலேயோ இது பற்றிப் பேச்சில்லை.

## 4. 8. 11. வரி வடிவு

*4. 8. 11.* குற்றியலிகரம், குற்றியலுகரம் ஆகிய-வற்றுக்குத் தமிழ் நெடுங்கணக்கில் தனி வரிவடிவம் இன்று இல்லை. இன்றைய மொழியியல் முறையில் இவற்றுக்குத்

---

93. உயர்திரு முத்துச் சண்முகம் இதனை முதன் முதலில் தம் கட்டுரையில் தெளிவாக்கியுள்ளனர் (அ கு. 92)

94 "In modern colloquials, pairs like 'paalu' and paalu, a personal name, 'eedu' which and 'eedu' ( < Skt. heetu ) show the existence of the phonemic difference." —L. V. R., The Malaylam Representative of the Tamil Kuttugaram, QJMS. 29

தனி வடிவம் தேவையும் இல்லை; ஏனெனில் இவை இலக்கியத்தமிழில் தனியெழுத்துக்களாகக் கொள்ளப்படவில்லை. ஆகவே எழுத்து நிலை வரைவுக்கு[95] இந்நிலை ஏற்றதே. ஆனால் தொல்காப்பியர் காலத்திலும் இடைக்காலத்திலும் இவற்றை வேறுபடுத்தி எழுதிக் காட்டியிருக்கின்றனர். இவ்வெழுத்துக்கள் புள்ளி பெறுதலே அன்றைய வழக்கம். இவ்வழக்கத்தால் தொல்காப்பியரும் "குற்றியலிகரம் குற்றியலுகரம் ஆய்தம் என்ற முப்பாற் புள்ளியும்"[96] எனக் குறிப்பிடுகிறார். இவ்விரண்டையும் பின்னரும் அவர் புள்ளியெழுத்துக்கள் என வழங்கிச் செல்கிறார். அவர் குறிப்பாக மெய்யெழுத்துக்கள் புள்ளி பெறுதலை, 'மெய்யீறு எல்லாம் புள்ளியொடு நிலையல்'[97] என ஒரு நூற்பாவில் கூறிவிட்டு அடுத்த நூற்பாவில்,

'குற்றியலுகரமும் அற்றென மொழிப'[98]

எனக் கூறுதலால் இக்கருத்து நிலைபெறுகிறது.[99] யாப்பருங்கல விருத்தியில் மறைந்து போன சங்க யாப்பு என்னும் நூலிலிருந்து மேற்கோளாக எடுத்துக்காட்டப்படும்

'குற்றிய லிகரம் குற்றிய லுகரம்
மற்றவை தாமே புள்ளி பெறுமே'

---

95 Phonemic writing

96. தொல் எழு 2 97. தொல். எழு. 104

98. தொல். எழு. 105

99. "ஒற்றெழுத்து இயற்றே குற்றியலிகரம்" (தொல். (செய்) 1265) என்னும் தொல்காப்பிய நூற்பாவிற்கு உரையெழுத வந்த பேராசிரியர் "......... இவற்றையெல்லாம் ஒற்றெழுத்தியற்றே என்பதினால் புள்ளியிட்டு எழுதுக" என எழுதுதல் அவர் காலத்திலாதல் இவை புள்ளி பெற்று வந்தமையைக் குறிக்கலாம்.

என்னும் நூற்பாவும் இவற்றுக்குப் புள்ளியிடலின் பழமையை வலியுறுத்துகின்றன. ஆனால் இடைக்காலத்தில் இந்நிலை படிப்படியாக மறையத் தொடங்கியது. நன்னூலுரையாசிரியர் மயிலைநாதர் எழுதிய குறிப்பொன்று இதனைச் சுட்டுகின்றது :

"தாது ஏது என்றற்றொடக்கத்து ஆரிய மொழிகளும், எட்டு, கொட்டு என்றற்றொடக்கத்துப் பொது மொழிகளும், குன்றியாது, நாடியாது, எட்டியாண்டுளது என்றற்றொடக்கத்துப் புணர்மொழிப் பொருள் வேறுபாடுகளும் அறிதற் பொருட்டுக் குற்றுகரக் குற்றிகரங்களுக்கு மேற்புள்ளி கொடுப்பாரும் உளர் எனக் கொள்க".[100] மலையாளத்தில் குற்றியலுகரத்திற்கு மேல் குறியிடுதல் இன்றும் உண்டு. இது தமிழகத்தின் பழைய வழக்கத்தையே சுட்டிக் காட்டுகிறது.

### 4. 8. 12. புள்ளியிடலின் பொருள்

புள்ளியிட்டு எழுத்துக்களின் அளவினை வேறுபடுத்திக் காட்டுதல் தமிழ் நெடுங்கணக்கு முறையின் ஒருசிறப்பியல்பு. அளபு குறைந்தது என்பதைக் காட்டுதலுக்கே இப்புள்ளி இடுதல் பயன்படுகிறது.

உயிர்மெய் யெழுத்துக்கள் புள்ளி பெறாதபோது ஓரளபும் புள்ளி பெற்றபோது அரையளபும், மகரமெய் அரையளபும், மேலும் ஒரு புள்ளி பெற்றபோது மகரக் குறுக்கம் எனப்பட்டுக் காலளபும், எகர ஒகரங்கள் ஈரளபும் புள்ளி பெற்றபோது ஓரளபும் உடையனவாகத் தமிழிலக்-

100. நன். எழு. 43

கணங்கள் கூறுவது இக்கருத்தினைத் தெளிவாக்குகிறது. இவையெல்லாம் தொல்காப்பியருக்கு முந்திய வழக்கங்கள். இவ்வழக்கத்தை ஒட்டியே ஓரளபுடைய முற்றியலிகர உகரங்களிலிருந்து குறைந்த அளபுடையவை குற்றியலிகர உகரங்கள் என்பதை உணர்த்த இவை இரண்டும் தொடக்கத்தில் புள்ளி பெற்றிருக்க வேண்டும். ஆனால் ஆய்த வெழுத்தும் இவ்வழக்கத்தால் மூன்று புள்ளிகளைப் பெற்றிருக்குமோ எனக் கருதக்கூடவில்லை.

## 4. 9. மகரக் குறுக்கம்

அரையளபோடு வழங்கும் மகரமெய்யல்லாது காலளபோடு வழங்கும் மகரக்குறுக்கம் ஒன்றும் உண்டு எனத் தொல்காப்பியர்,

'அரையளபு குறுகல் மகரம் உடைத்தே
இசையிடன் அருகும் தெரியுங் காலை'[101]

என்னும் நூற்பாவில் குறிப்பிட்டனர்.

'ணகாரை முன்னர் மகாரம் குறுகும்,'[102]
'வகாரம் மிசையும் மகரம் குறுகும்'[103]

என மேலும் அது வழங்கும் சூழல்களையும் அவர் கூறினர். இவற்றுக்கு எடுத்துக்காட்டுக்களாகப் 'போன்ம்' 'தரும் வளவ்ன' என்பனவற்றை உரையாசிரியர்கள் தருகின்றனர். நன்னூலாசிரியர்,

---

101. தொல். எழு. 13 102. தொல். எழு. 52
103. தொல். எழு. 331

'ளமெய் திரிந்த ணனமுன் மகாரம்
நைந்துஈ ரொற்றும் செய்யு ளுள்ளே'[104]

என ணகரத்தையும் சேர்த்து விதிவகுக்கிறார். தொல்காப்பியர்க்குப் பின்னர்த் தமிழில் ஏற்பட்ட மாற்றங்களால் '*மருண்ம்*' '**சிலம்புள கொண்ம்**'[105] முதலிய சொற்கள் வழக்கிற்கு வந்தன. இவற்றை ஏற்றுக்கொண்டு நன்னூலார் இலக்கணம் எழுதியுள்ளார். ஆனால் இவ்வகையில் நேமிநாத உரையாசிரியர் நன்னூலாருக்கு வழிகாட்டுகிறார். இருந்தும் நேமிநாதரை ஒட்டி வந்த வீரசோழியமுடையார் 'தரும் வளவன்' என்பதில் உள்ள மகரக்குறுக்கம் ஒன்றை மட்டுமே உடன்படுகிறார். 'வண்மை' 'வன்மை' முதலிய பிறசொற்களில் வழங்கும் மகரம் குறுகாது போலும். ணகர னகரங்களை அடுத்து மகரம்குறுகுதல், செய்யும் என்னும் முற்றில்தான் என உரையாசிரியர்கள் வற்புறுத்துதலால் இது தெளிவாகிறது.[106] தொல்காப்பியர் மகரக்குறுக்கம் பற்றிக் குறிப்பிட்டாரேனும் அதனை அவர் ஒருசார்பெழுத்தாக வகுக்கவில்லை. ஆனல் நன்னூலார் அவ்வாறு கொண்டார். அவர் 'மகரம் நைதல்' செய்யுளுள்ளே எனக் கூறுதலால அவர் காலத்திலேயே அவை பேச்சுவழக்கு வீழ்ந்தமை தெளிவாகிறது. ஆகவே அவை இன்றைய தமிழிலும் இல்லை. மகர மெய்யும் மகரக்குறுக்கமும் தமக்கெனத் தனித்தனியே சூழல்களைக் கொண்டுள்ளமையால் அவையிரண்டையும் ஓரெழுத்து என வகுக்கலாம்:—

---

104 நன். எழு. 65 105. சிலப்பு, 9 : 78

106. நன். எழு 41, சிவஞான முனிவர்.

/ம்/ : [m̱] வகரம் முன்னும் செய்யும் முற்றுக்களில் னை அடுத்தும்

: [m] பிற இடங்களில்

4. 10. பிற சார்பெழுத்துக்கள்.

4. 10. 1. உயிர்மெய் யெழுத்துக்கள்

இவை உண்மையில் வரிவடிவில்தான் உண்டே ஒழிய ஒலிவடிவில் இல்லை. மெய்யும் உயிரும் இம்முறையில் தொடர்ந்து ஒலித்து வழங்குகின்ற போது அவற்றை நெடுங்கணக்கில் ஒரு கூட்டெழுத்தாக அமைக்கும் நிலை நேர்ந்தது. மெய்யும் உயிரும் அல்லாது வேறோரெழுத்து உயிர்மெய்யில் இல்லை. வரிவடிவையும் ஒலிவடிவையும் தனித்தனியே பிரித்தறியாது மயங்கிய குழப்பத்தால் தோன்றியதே இலக்கணம் கூறும் உயிர்மெய். அதனுல் இங்கு அதுபற்றிக் கருதத் தேவையில்லை. ஆனாலும் இங்கு ஒன்று குறிப்பிடத்தக்கது. மெய்க்குத் தனியே அரையளபும் உயிர்க்குத் தனியே ஓரளபுமோ ஈரளபுமோ உண்டு. இருந்தாலும் உயிர்மெய்க்கு ஒன்றரையளபோ இரண்டரையளபோ இருத்தல் இல்லை. மெய் தன் அளபினை உயிர்மெய்யாகக் கருதுகின்றபோது இழந்து விடுகின்றதாம். இவ்வொருவேறுபாடுதான் உயிர்மெய்யில் அடங்கியுள்ளது. இலக்கணவாசிரியர்களது இக்கூற்றின் பொருளினை இனி ஒலியியலார் நன்கு ஆராய்தல் வேண்டும். இவ்வாராய்ச்சியின் முடிவை ஒட்டியே உயிர் மெய்க்கு எழுத்தியலில் இடம் கிடைக்கும்.[107]

---

107. இதனோடு ஒத்த கருத்துக்குப் பக் 331, MEN

### 4. 10. 2. அளபெடைகள்

உயிர்கள்பன்னிரண்டும் மெல்லின இடையினமெய் கள் பன்னிரண்டும் ஆய்தமும் அளபெடுத்து—ஓசை நீண்டு—ஒலிக்கும் என நன்னூலார் கூறுகிறார். (நன்.எழு 46,47) செய்யுளில் இசைகெட்டால் மட்டுமே இவைதோன்றும் என்கிறார் அவர். தொல்காப்பியர் உயிரளபெடை(தொல். எழு 41) ஒற்றளபெடை (தொல். பொருள் செய். 330) ஆகியவை பற்றிக் குறிப்பிட்டிருந்தாலும் அவற்றைத் தனி எழுத்துக்களாகவோ நன்னூலார் வகுத்தது போன்று சார்பெழுத்துக்களாகவோ வகுக்கவில்லை. தொல்காப்பியர் ஒற்றளபெடையை எழுத்தியலுக்கு உரியது அல்ல எனவே ஒதுக்குகிறார். அவர் "மூவளபு இசைத்தல் ஓரெழுத்து இன்றே" (தொல். எழு. 5) எனக் கொள்ளுதலால் மூவளபுள்ளதாகக் கருதப்படும் உயிரளபெடையை ஓரெழுத்தாகக் கொண்டிருக்கமாட்டார். வீரசோழிய முடையார் ஒற்றளபெடையை உடன்படவே இல்லை. இவையெல்லாம் செய்யுளில் மட்டுமே யாப்பு நிறைத்தற் பொருட்டுத் தோன்றுதலால் இயல்பான மொழியினை ஆராயும் மொழியியலில் இவை பற்றிக் கருதத் தேவையில்லை.

### 4. 10. 3. ஐகார ஔகாரக் குறுக்கங்கள்

ஐகாரமும் ஔகாரமும் தனியே தம்மைச் சுட்ட ஒலிக்கப்படுகின்றபோதுதான் இரண்டளபுகள் பெறு-கின்றன. சொல்லில் வழங்குகின்றபோது இரண்டினும் குறைந்த அளவே பெறுகின்றன. இதனை நன்னூலார் விளக்குகிறார்.

'தற்சுட்டு அளபுஒழி ஐமூ வழியும்
நையும்; ஔவும் முதல் அற்றாகும்.' [108]

ஐயும் ஔவும் நைந்து எத்தனை அளபு பெறுகின்றன என்பதில் இலக்கணவாசிரியர்களிடைக் கருத்தொற்றுமை இல்லை; ஓரளபு என்பாரும் ஒன்றரையளபு என்பாரும் உண்டு.[109] தொல்காப்பியர் 'ஓரளபாகும் இடனுமாருண்டே' (தொல். எழு. 57) என ஐகாரம் பற்றி மட்டும் குறிப்பிடு-கிறார். தொல்காப்பியர் 'இடனும் உண்டு' என்பதால் ஒருசில இடங்கள் என்றே கொள்ளவேண்டும். நன்னூலார் போன்று' மூவழியாகிய முதல், இடை, கடை எனத் தொல்காப்பியர் கருதியிருக்கமாட்டார். காரணம் யாப்பில் ஐகாரம் மட்டுமே நெடில் போன்று தனித்து ஓரசைபாதல் உண்டு; நன்னூலார் கொள்கைப்படி இவ்வாறு அமைதல் இல்லையாகும். அது முறையல்ல.[110] தொல்காப்பியர் ஐகாரம் ஓரளபாகும் இடம்பற்றியும் ஒரு குறிப்பும் தராததும் வியப்பாக உள்ளது.

---

108. நன். எழு 40

109. 'ஒன்றே குறிலோடு ஐ ஔ குறுக்கம்'
—நன். எழு. 44
'ஒன்றரை யாகும் ஐ. ஔ' —வீரசோழியம், 5
'ஐ ஔ அளபு ஒன்றரை' —நேமிநாதம், 5
ஐ. ஔ குறுக்கம் குறில் ஒன்று' — இல. விள. 24
'குறிலே ஐ ஔ குறள் ஒற்றளபு ஒன்றே'
— தொன். விள. 19

110 ஐகாரக் குறுக்கம் மொழிமுதற்கண் ஒன்றரை மாத்திரையாயும் ஏனையிடங்களின் ஒருமாத்திரையாயும் ஔகாரக் குறுக்கம் மொழி முதற்கண் ஒன்றரை மாத்திரை-

[அடுத்த பக்கம்]

தொல்காப்பியர் ஔகாரம் குறுகுவது பற்றி ஏதொன்றும் கூறவில்லை, ஆனால் உரையாசிரியர்களே உரையில் (தொல். எழு. 57) இணைத்துக் கூறுகின்றனர். தொல்காப்பியர் அவ்வாறு கூறாதது அதன் வழக்குப் பயிற்சியின்மை பற்றியாகலாம்.

நன்னூலார் போன்ற இலக்கணவாசிரியர்கள் கருதுகின்றவாறு சொல்லில் எல்லா இடங்களிலும் ஐகாரம் குறுகியே ஒலிக்குமானால் அவ்வாறு ஒலித்தலே அதன் இயல்பு எனக் கொண்டுவிடலாம். இலக்கண நூல்களில் ஐகாரத்தை எடுத்துப் பேசுகின்ற போதுதான் அது தன்னைச் சுட்டும். அவ்வாறு தன்னைச் சுட்டும் நிலைக்கு இலக்கணம் வகுத்தல் முறையுமல்ல; தேவையு மில்லை; ஆகவே ஐகார நெடில் என ஒன்று கொள்ளத் தேவையில்லை. எனவே ஐகாரக் குறுக்கம் என்னும் வகுப்பும் தேவையில்லை. தொல்காப்பியர் கருத்துத்தெளிவு படாமையால் அதுபற்றி ஒன்றும் கூறுதற்கும் இல்லை. இக் கருத்துக்கள் ஔகாரத்துக்கும் ஒக்கும்.

---

யாயும் குறுகும் என்பது உய்த்துணர்ந்து கொள்க. அவ்வாறு உய்த்துணர்ந்து கொள்ளாக்கால்

> வைகலும் வைகல் வரக்கண்டும் அஃதுணரார்
> வைகலும் வைகலை வைகும் என்றின்புறுவார்
> வைகலும் வைகற்றம் வாழ்நாள் மேல் வைகுதல்
> வைகலை வைத்துணரா தார்

எனவும்

> கைவேல் களிற்றொடு போக்கி வருபவன்
> மெய்வேல் பறியா நகும்

எனவும்

> ஔவிய நெஞ்சத்தர் ஆக்கமும் செவ்வியான்
> கேடும் நினைக்கப் படும்

எனவும் வரும் இலக்கியங்கட்கு இலக்கணம் இன்றாய் முடியும் என்க. —நன். சிவஞான முனிவர் விளக்கம்.

# எழுத்து மயக்கம்

## 5. 1. மயக்க விளக்கம்

ஒவ்வொருமொழியிலும் உயிரெழுத்துக்கள் எனவும் மெய்யெழுத்துக்கள் எனவும் இருவகை எழுத்துக்கள் வழங்குகின்றன. ஆனல் அவற்றின் வகை தொகை முதலியன மொழிக்கு மொழி வேறுபடுகின்றன. சில மொழிகளுக்கே உரிய எழுத்துக்களும் உண்டு. ழகரம் திராவிட இனத்துக்கு மட்டுமே உரிய எழுத்தாக வழங்கியது ; இன்று தமிழ் மலையாளம் ஆகிய மொழி-களுக்குரியதாக அது வழங்குகிறது. மற்ற மொழிக் குடும்பங்களில் அது (பெரும்பாலும்) இல்லை எனவே கூறலாம். ஒரு சில மொழிகள் சிலவகை எழுத்துக்களைப் பெருந் தொகையாகப் பயன்படுத்துகின்றன. ஸ, ஷ, ஹ முதலிய உரைவொலிகள் வடமொழியில் உண்டு; ஆனல் இத் தகையவை தமிழில் இல்லை. வட இந்தியமொழிகளில் தடை-யெழுத்துக்கள் ஒவ்வொன்றிலும் நந்நான்கு வகைஉண்டு; அவையும் தமிழில் இல்லை. உயிரெழுத்துக்கள் ஒருசில வற்றையே பயன்படுத்தும் மொழிகளும், மிகப்பலவற்றைப் பயன்படுத்தும் மொழிகளும் உண்டு.

இவ்வாறு எழுத்துக்களின் வகை தொகைகளில் மொழிகள் ஒன்றுக்கொன்று வேறுபடுதல் போலவே எழுத்து மயக்கத்திலும் மொழிகள் வேறுபடுகின்றன. எழுத்துக்கள் ஒன்றோடொன்று சேர்தலே—கலத்தலே—தொடர்தலே மயக்கமாகும்[1]. எழுத்துக்கள் மட்டுமே மொழியாதல் இல்லை. எழுத்துக்கள் கிளவியாதலும், கிளவி[2] சொல்லாதலும், சொற்கள் தொடராதலும், தொடர் வாக்கியமாதலும் இவை எல்லாவற்றுக்கும் உரிய நெறி முறைகளும் மொழியில் உண்டு. இவையனைத்தும்தான் மொழி எனப்பட வேண்டும். எழுத்தே (பெரும்பாலான அறிஞர் கருத்துப்படி) மொழியின் முதற்கூறு ஆகிறது. எழுத்துக்கள் தனித்தோ தொடர்ந்தோ அமைந்து கிளவியாகின்றன இவ்வாறு தொடர்தலின் முறைகள் ஒவ்வொரு மொழிக்கும் தனித்தனியே சிறப்பாக அமையும். இம் முறைகளைத்தான் தமிழிலக்கணங்கள் முதல்நிலை, இடைநிலை, கடைநிலை மயக்கங்கள் எனப் பெயரிட்டு ஆராய்கின்றன.

இவ்வெழுத்து மயக்கத்தில் எல்லா மொழிகளைப் போன்றும் தமிழும் தனக்கென நெறி முறைகளைக் கொண்டுள்ளது. ஆங்கிலமும் தமிழும் பல எழுத்துக்களைத் தமக்குப் பொதுவாகக் கொண்டுள்ளன. ஆங்கிலம், சொல் முதலில் 34 இருமெய்மயக்கங்களையும் 8 மும்மெய்மயக்கங்களையும் கொண்டுள்ளது.[3] ஆனால் தமிழ், மொழிமுதலில்

---

1 இவ்வெழுத்துமயக்கத்தை இன்றைய மொழியியலார் Phonemic arrangement என்பர். கால்டுவெல் Syllabation என்றார். CGDL. பக். 182 காண்க.

2 Morpheme

3 & 4 Gleason, IDL. P. 336

பன்மெய்மயக்கம் ஒன்றுகூடக் கொண்டிருக்கவில்லை. திராவிடம், இந்தைரோப்பியம் முதலிய மொழிக் குடும்பங்கள் பெரும்பாலும் சொல்லிடையில் பன்மெய் மயக்கம் கொண்டு நடைபெறுகின்றன. ஆனால் பாலினேசிய மொழிகளில் பன்மெய்மயக்கமே இல்லை எனப்படுகிறது[3&4]. தெலுங்கு, கன்னடம் முதலிய திராவிட மொழிகளின் சொற்கள் உயிரெழுத்துக்களாலேயே முடிய வேண்டும். இத்தகையது ஓரெழுத்துமயக்க நெறியே. ஆங்கிலத்திலும் தமிழிலும் க், த், ப், ர் ஆகியவை உண்டு. ஆங்கிலத்தில் க்ர்-, த்ர்-, ப்ர்- ஆகியவை வழங்கும்; ஆனால் தமிழில் இவை இல்லை.

எழுத்துமயக்கத்திற்கும் எழுத்துக்களின் வகைதொகைகளுக்கும் உறவுண்டு.

| | 1 | 2 | 3 | 4 | 5 | 6 |
|---|---|---|---|---|---|---|
| வலி | க | ச | ட | த | ற | ப |
| மெலி | ங | ஞ | ண | ந | ன | ம |
| | | ய | | | வ | |
| | | | ள | | ல | |
| | | | ழ | | | |
| | | | | | ர | |

இவற்றுள் மூன்றாம் வகையும் ஐந்தாம் வகையும் சொல் முதலில் வழங்குவதில்லை. இதனையே 'நுனிநாவண்ண எழுத்துக்கள் தமிழில் முதலில் வழங்குவதில்லை' என வகையடிப்படையில் கூறலாம். இவ்வாறே 'தடையெழுத்துக்கள்(வலி) எவையும் சொல்லீற்றில் வழங்குவ

3&4. Gleason, IDL. P 336

தில்லை' எனவும் 'மெல்லெழுத்துக்கள் எவையும் சொல்லில் முதலசைதவிர மற்ற அசைகளில் இரட்டி வழங்குவதில்லை' எனவும் (மயக்க விதிகள் சிலவற்றைக்) கூறலாம். (யகரத்தை இரண்டாம் வகையிலும் வகரத்தை ஆறும் வகையிலும் அடக்கலாம்.)

ஒரு மொழி எவ்வளவோ உயிர், மெய் எழுத்துக்களைக் கொண்டிருந்தாலும் அவை எல்லாவற்றையும் அது பயன்படுத்துவதில்லை; எல்லாவகையிலும் பயன்படுத்துவதில்லை. தமிழ் பதினெட்டு மெய்களைக் கொண்டிருந்தாலும் அவை எல்லாவற்றையும் சொல்முதலில் பயன்படுத்துவதில்லை; ஒன்பதை மட்டுமே பயன்படுத்துகிறது: ஈற்றிலே பதினொன்றை மட்டுமே பயன்படுத்துகிறது (தொல்காப்பியர் குறித்தபடி).[5] அவ்வாறுதான் இருமெய் மயக்கங்களும் மும்மெய்மயக்கங்களும். தமிழில் இருமெய் மயக்கங்கள் கணக்குப்படி அமையுமானால் 324 ($18 \times 18 = 324$) அமையலாம்; மும்மெய்மயக்கங்கள் அமையுமானால் 5832 ($18 \times 18 \times 18 = 5832$) அமையலாம் ஆனால் தொல்காப்பிய இலக்கணப்படி இருமெய்மயக்கம் 86; மும்மெய்மயக்கம் 24 ! வேறுசில மொழிகளிற் போன்று நான்மெய்மயக்கம் தமிழில் இல்லவேயில்லை இவற்றால் எழுத்துக்களின் ஆட்சி எவ்வளவு சுருங்கியது என்பது புலனாகிறது. இத்தகைய மயக்கங்களுக்கு அமைந்த விதிகளை விளக்குவதே இப்பிரிவின் நோக்கம்.

---

5. தொல். எழு. 61 முதல் 65, 78.

## 5. 2. 1. மொழிமுதலெழுத்துக்கள்

உயிரெழுத்துக்கள் எல்லாம் மொழிமுதலில் வழங்கும். அவற்றுள் குறில்கள் மிகுதியாக வழங்க நெடில்கள் குறைவாகவே வழங்குகின்றன. அவற்றுள்ளும் அகர இகர உகரங்களின் வழக்கே மிகுதி.[6]

மெய்யெழுத்துக்கள் எல்லாம் மொழிமுதலில் வழங்குவதில்லை. பத்தே வழங்குகின்றன:

பன்னீ ருயிரும் கசதந பமவய
ஞஙஈ ரைந்துயிர் மெய்யும் மொழிமுதல்.

—நன், 102

இப்பத்து மெய்களும் உயிர்கள் தொடர்ந்து வரத்தான் மொழிமுதலில் வழங்குகின்றன. அதாவது இருமெய்கள் மொழிமுதலில் வழங்குவதில்லை.

நன்னூலாசிரியர் ஙகரம் மொழிமுதலாகும் என்கின்றார். ஆனால் தொல்காப்பியர் அவ்வாறு கூறவில்லை.

சுட்டுயா எகர வினவழி அவ்வை
ஒட்டி ஙவ்வும் முதலா கும்மே

– நன், 106

---

6. எடுத்துக்காட்டாக ஆண்டாள் பாடல்களில் ஒவ்வொரு மொழிமுத லுயிருக்கும் உரிய சொற்கள் எத்தனை எத்தனை என்பதை இங்குக் குறிக்கலாம். அ:221, ஆ:129 இ:161, ஈ:7, உ:174, ஊ:24, எ:92, ஏ:29, ஐ.5, ஒ:29, ஓ.16, ஔ...(தி முருகரத்தனம், ஆண்டாள் பாடல்கள் மொழியாராய்ச்சி, பக், 50 காண்க.)

என நன்னூலார் அ, இ, உ, எ, யா என்பவற்றைத் தொடர்ந்துதான் ஙகரம் வழங்கும் எனவும் அது 'ஙன'-தான் எனவும் கூறுகிறார் அங்கனம், இங்கனம்...முதலி சொற்கள் திரிந்து அங்ஙனம் இங்ஙனம்.... முதலியனவா வழங்குகின்றன. அங்கு, இங்கு முதலான சொற்களே அவை. ஆகவே அவர் 'ஙனம்' என்பதை ஒரு சொல்லாகப் பிரித்தது முறையில்லை. சுட்டுவினைக்களைத் தொடர்ந்தே வழங்கும் என்பதால் அதனை மொழிமுதல் வழக்கு எனக் குறிப்பிடுவதும் பொருத்தம் இல்லை. 'ஙனம்' என்பதும் தனித்து எங்கும வழங்குவதில்லை.

தொல்காப்பியருள்ளிட்ட தமிழிலக்கணவாசிரியர்கள் மொழிமுதல்மெய்கள் எவ்வெவ்வுயிர்கள் பின்தொடர வழங்குகின்றன என்பதுபற்றி ஆழ்ந்து ஆராய்ந்து சில உண்மைகளைக் கண்டு கூறியுள்ளனர். "உயிர்மெய்யல்லன மொழிமுதலாகா"[7] எனக் கண்டபோது, என்ன என்ன உயிர்கள் என்ன என்ன மெய்களைத் தொடர்ந்து வருகின்றன எனவும் அவர்கள் எண்ணிப் பார்த்திருக்க வேண்டும். இவ்வாறு அவர்கள் எண்ணிப்பார்ப்பதற்குத் தமிழ் நெடுங்கணக்கில் 'உயிர்மெய்' என ஓரெழுத்திருப்பது காரணம் போலும். க, த, ந, ப, ம ஆகிய ஐந்துமே எல்லா உயிரோடும் செல்லும். ச, ஞ, ய, வ என்பவை சிலவற்றோடு மட்டும் செல்லும் என்பர் தொல்காப்பியர்.[8] பின்வரும் பட்டி நன்னூலார் குறித்தவாறு மொழி முதலுயிர்மெய்களை எடுத்துக்காட்டுகின்றது:—

---

7. தொல். எழு. 60
8. தொல். எழு. 61 முதல் 65

## மொழிமுதல் உயிர்மெய்கள்

| | அ | ஆ | இ | ஈ | உ | ஊ | எ | ஏ | ஐ | ஒ | ஓ | ஔ |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| க் | க | கா | கி | கீ | கு | கூ | கெ | கே | கை | கொ | கோ | கௌ |
| ங் | | | | | | | | | | | | |
| ச் | ச | சா | சி | சீ | சு | சூ | செ | சே | சை | சொ | சோ | சௌ |
| ஞ் | ஞ | ஞா | | | | | ஞெ | | | ஞொ | | |
| ட் | | | | | | | | | | | | |
| ண் | | | | | | | | | | | | |
| த் | த | தா | தி | தீ | து | தூ | தெ | தே | தை | தொ | தோ | தௌ |
| ந் | ந | நா | நி | நீ | நு | நூ | நெ | நே | நை | நொ | நோ | நௌ |
| ப் | ப | பா | பி | பீ | பு | பூ | பெ | பே | பை | பொ | போ | பௌ |
| ம் | ம | மா | மி | மீ | மு | மூ | மெ | மே | மை | மொ | மோ | மௌ |
| ய் | ய | யா | | | யு | யூ | | | | | யோ | யௌ |
| ர் | | | | | | | | | | | | |
| ல் | | | | | | | | | | | | |
| வ் | வ | வா | வி | வீ | | | வெ | வே | வை | | | வௌ |
| ழ் | | | | | | | | | | | | |
| ள் | | | | | | | | | | | | |
| ற் | | | | | | | | | | | | |
| ன் | | | | | | | | | | | | |

மொழிமுதல் உயிர்மெய்கள் தொல்காப்பியர்கருத்துப்படி 81; நன்னூலார் கருத்துப்படி 90. தொல்காப்பியர் குறித்த எண்பத்தொன்றினையும் நன்னூலார் குறித்து மேலும் புதியனவாக ஒன்பதினைச் சேர்த்துள்ளார். நன்னூலார் காலத்தில் தமிழில் ஏற்பட்டிருந்த மாற்றங்களை இந்நிலை எடுத்துக்காட்டுகிறது. நன்னூலார் புதியனவாகக் குறித்த ஒன்பதும் இவை :-

ச- சை- சௌ-

ஞொ-

ய- யு- யூ- யோ- யௌ-

இவை ஒன்பதும் தொல்காப்பியர் காலத்தைஅடுத்துச் சங்ககாலத்தின் பிற்பகுதியில் வழங்கத் தொடங்கின. இவற்றெடு மிகப்பல சொற்கள் தோன்றின. (சங்ககாலத்திலேயே சகரக்கிளவியை முதலாகவுடைய சொற்கள் பல வழங்கின.) அதற்குக் காரணம் அயல்மொழிச் சொற்களின் வரவாகும். அவ்வயல் மொழிகள் குறிப்பாகப் பண்டு வடமொழி பாகதமொழிகளும் பின்னர்த் தெலுங்கு கன்னட மொழிகளுமாகும். இச்சொற்களை ஏற்றுக்கொண்ட நன்னூலார் அதற்கேற்ப இலக்கணம் அமைத்தார்.

## 5 2. 2. சகரக் கிளவி

சகரக்கிளவி மொழிமுதலில் வழங்குதல் பற்றி வேறுபட்ட கருத்துக்கள் நிலவுகின்றன. சங்ககாலத்தில் சில சொற்களும் பின்னர்ப் பல சொற்களும் சகரக்கிளவியை மொழிமுதலில் பெற்று வழங்குதலால் 'சகரக்கிளவி மொழி முதலில் வாராது' என்னும் தொல்காப்பியர் நூற்பா தவருக இருக்க வேண்டும் எனவும் சகரமுதற் சொற்கள்

பலவும் இன்றியமையாதனவாகவும் தனித் தமிழ்ச் சொற்களாகவும் இருத்தல் இதற்குத் தக்க சான்று எனவும் அறிஞர் சிலர் கருதுகின்றனர்.[9] ஆனால் முன்பே குறித்தவாறு பல சகரமுதற்சொற்கள் அயல் மொழிகளுக்கு உரியவை. ஒரு சிலவே தமிழ். அச்சில சொற்களும் தமிழ்க்கிளை மொழிகள் வழக்காக இருந்து பின்னர் இலக்கிய ஆட்சிக்கு வந்திருக்கலாம். எஞ்சிய சில முன்னைச் சொற்களின் திரிபுகளாகலாம் :-

எ. கா : ஞெமன் > ஞமன் > சமன், சமம்.

ஆகவே தொல்காப்பியர் காலத்தில் சகரமுதல் இல்லை எனக் கூறலாம். புதியன புகுந்த ஒன்பதின் வரலாற்றையும் ஒருங்கு எண்ணிப்பார்த்தால் இம்முடிவே வலியுறுகிறது. கீழ்க்கண்டவற்றைக் கருத்தில் கொள்ளலாம்.

---

9. பேரா தேவநேயப் பாவாணர் அவர்கள் எழுதிய குறிப்பு இவ்வகையில் சிறப்பாகக் குறிப்பிடத் தக்கது:

" சகரம் மொழிமுதல் வராதென்று கூறுவது தமிழுக்குச் சற்றும் பொருந்தாது. ' அ ஐ ஔ என்னும் மூன்றலங் கடையே' என்னும் நூற்பா அடிக்கு 'அவை ஔ என்னும் ஒன்றலங் கடையே' என்று பாடவேறுபாடும் உள்ளது. சக்கட்டி, சக்கை, சகடு. சகதி. சங்கு, சட்டெனெ, சட்டம் சட்டகம், சட்டி, சட்டை, சடசட, சடை, சடைவு, சண்டி, சண்டு, சண்டை, சணல், சதுப்பு, சப்பட்டை, சப்பென்று, சப்பாணி, சப்பு, சப்பை, சம்பு, சம்மட்டி, சமட்டு, சமம், சமழ், சமை, சரடு. சரள், சரி, சருகு, சருச்சரை, சரேல் என. சல்லடை. சல்லரி, சல்லி, சலசல, சலங்கை, சலி, சவ்வு, சவம், சவர், சவை, சளி, சளக்கென, சழக்கு, சள்ளென, சள்ளை, சளை, சற்று, சறுக்கு, சன்னம் முதலிய

[அடுத்த பக்கம்]

நூற்றுக்கு மேற்பட்ட தனித் தமிழ்ச் சொற்கள், அடிப்படையானவும், தொன்று தொட்டவும், இன்றியமையாதனவும், வேருன்றினவும், சேரிவழக்கினவுமாயிருக்க, அவற்றைப் பிற்காலத்தனவென்று கொள்ளுவது பெருந்தவரும். சக்கை, சட்டி, சண்டு, சண்டை, சதை, சப்பு, சலு, சற்று, சறுக்கு முதலிய சொற்கள் எத்துணை எளிமையும் இயல்புமானவை என்பது சொல்லாமலே விளங்கும். சண்டு, சருகு முதலிய சில சொற்கள் பண்டு சகர முதலானவாயிருந்திருத்தல் கூடுமெனினும், சக்கு சடார், சேடர், சரட்டு, சல சல, சரேல், சய்வு சளக்கு சளார், சள முதலிய ஒலிக்குறிப்புச் சொற்களும் அவற்றினடிப் பிறந்தவும், துவக்கந் தொட்டுச் சகர முதலானவாயே யிருந்திருத்தல் வேண்டும். சாப்பிடு என்னும் உலக வழக்கெளிமைச் சொல் சப்பு என்னும் மூலத்தினின்றே தோன்றியதாகும், சப்பு + இடு = சப்பிடு—சாப்பிடு. சுவை என்னும் சொல்லும் சவை என்பதன் திரிபாகவே தோன்றுகிறது. செத்தான் என்னும் இறந்த கால வினைமுற்று பண்டைக் காலத்தில் சத்தான் என்றே இருந்திருத்தல் வேண்டும், ஒ. நோ: காண்—கண்டான் நோ—நொந்தான். நெடில் முதலான வினைப்பகுதி இறந்தகால முற்றில் முதல் குறுகும்போது இனக் குறிலாய்க் குறுகுவதே மரபு. தெலுங்கிலும் சச்சினுடு (செத்தான்) சச்சிப் போயினுடு (செத்துப் போனான்) என்றே சொல்வர் மேலும் 'முழு முதல் அரணமும்' 'வருபகை பேணார் ஆரெயிலும்' அமைத்துக் கொண்ட தொல்காப்பியர் காலத் தமிழர் சட்டி செய்யத் தெரியாதிருந்தனர் என்பது பெருநகைக் கிடமானதாகும். சட்டி என்பது சமையலுக்கு இன்றியமையாததும், எளிநிலையானதும், மறுபெயரற்றதுமான கலவகை.

'சரிசமழ்ப்புச் சட்டி சருகு சவடி
சளிசகடு சட்டை சவளி—சவிசரடு

[அடுத்த பக்கம்]

சகரம் ஞகரம் யகரம் ஆகியவை வல்லண்ணவொலி யெழுத்துக்கள்; ஒரே ஒலிப்பிடமும் ஒலிப்புறுப்பு உடையவை. ஆகவே ஒத்த பண்பு பெற்றவை எனக் கருதலாம். அதனுல் ஞகரம் யகரம் ஆகியவை அகரத்தோடு கூடி மொழிமுதலாகா எனத் தொல்காப்பியர் கூறுகின்றபோது இவற்ருேடொத்த பண்பினதான சகரமும் ஆகாது எனக் கொள்ளலாமே! மக்கள் பேச்சுப் பழக்கம் ஒருதன்மையானதுதானே. ஐகாரமும் ஔகாரமும் உண்மையில் 'அய், அவ்' ஆதலால் அவையும் சகரத்தோடு கூடா என்பது பொருத்தமே.

அடுத்த காலத்தில் இவை மூன்றுமே மொழிமுதலில் வழங்கலாயின; ஒன்றுமட்டுமல்ல. இதனுல் வல்லண்ண வெழுத்துக்களையுடைய பேச்சுப்பழக்கத்திலேயே தமிழரிடை ஒரு மாற்றம் நேர்ந்தது எனல் வேண்டும்.

இவ்வல்லண்ணவெழுத்துக்கள் திரியுமாறும் ஒன்றே: முன்னிலையிடப்பெயர் நீ > நின் எனவும் படர்க்கையிடப் பெயர் தான், தாம் > தன் தம் எனவும் திரிதல் போல யான், யாம் > யன், யம் எனத்திரியாது என், எம் எனத்திரிகின்றன. காரணம் யகரமுதல் வழங்குதல் இல்லை என்பதே அதுபோலவே சா > செத்து) எனத் திரிகிறது. சகர முதல் இல்லாததலால். எகரமும் ஒரு வல்லண்ணவெழுத்தே என்பது இங்குக்கருதத்தக்கது. ஆதலால் ஒரு வல்லண்ண எழுத்து மற்றொருவல்லண்ண எழுத்தாக எளிதில் திரிந்தது.

---

சந்து சதங்கை சழக்காதி யீரிடத்தும்
வந்தனவாற் சம்முதலும் வை'

என்பது நன்னூல் மயிலைநாதருரை மேற்கோள்,'' தொல். எழு. 42. (அடிக்குறிப்பு, கழகப் பதிப்பு 1961)

தொல்காப்பியர் காலத்தில் ஞெகர முதல்களாக இருந்தவை பின்னர் ஞகரமுதல்களாயின:

ஞெண்டு > ஞண்டு

ஞெமலி > ஞமலி

இவ்வாறே சகரமும்:

ஞெமன் > ஞமன் > சமன்

ஆதலால் வல்லண்ணவெழுத்துக்கள் எல்லாம் (ச, ஞ, ய) அகரத்தோடுகூடி மொழிமுதலாதல் தமிழில் இடைக் காலத்தில் நிகழ்ந்த ஒரு மாற்றம்.

இக்கருத்துக்களால் கொள்ளத்தக்க வரலாறு இது தான்: வல்லண்ணவெழுத்துக்கள் மூன்றும் (ச, ஞ, ய) ஒரு காலத்தில்—அது தொல்காப்பியர் காலம்—அகரத்-தோடுகூடி மொழிமுதலில் வழங்காதிருந்து பின்னர்—இடைக்காலத்தில்—வழங்கும் நிலை எய்தின. தொல் காப்பியம் நன்னூல் ஆகிய இரண்டும் முறையே இரண்டு காலத்தையும் சுட்டி நிற்கின்றன.

## 6. 2. 3. அண்ணொலித் திரிபு

இலக்கணவாசிரியர்கள் மொழிமுதல் மெய்களிலும் அவற்றைத் தொடர்ந்து வழங்கும் உயிர்களிலும் அமைந்-துள்ள வரையறையைக் கண்டு கூறினர். அவர்கள் காணாத வரையறைகளும் இங்கு உண்டு. அவற்றிலே ஒன்றுதான் மொழிமுதற்ககரத்திற்கும் அதனைத்தொடர்ந்து வழங்கும் முன்னண்ண வுயிர்களுக்கும் அவற்றைத் தொடர்ந்து வழங்கும் மெய்களுக்கும் உள்ள உறவாகும். இங்கு ஒருவரையறையுண்டு. அது "தமிழ்ச் சொற்களில் மொழிமுதற்ககரத்தையடுத்து முன்னுயிர்களான இ, ஈ, எ,

ஏ ஆகியவற்றுள் ஒன்று வழங்குமானல் அம்முன்னுயிரை யடுத்து வளைநாவெழுத்துக்கள் ட, ண, ழ, ள ஆகியவற்றுள் ஒன்றுதான் வழங்கும்" என்பதே ஆகும். அதாவது, கி-, கீ-, கெ-, கே- ஆகியவற்றை அடுத்து ட, ண, ழ ள ஆகியவைதான் வழங்கும்: மற்ற 14 மெய்களும், வழங்கமாட்டா.'

எ. கா. : கிழக்கு கீண்டு கெடு கேளிர்

இவ்விதிற்கு விலக்காக அயல்மொழிச் சொற்களே உண்டு.

எ. கா. : கித்தான் கீசகன் கெஞ்சு கேவலம்

இவ்விதி தமிழில் அமைந்த நிலை தமிழின் பண்டை வரலாகும். இவ்விதி மலையாளத்திலும் உண்டு; ஆனல் கன்னடத்தில் இல்லை. திராவிடமொழிகளை ஒப்பிட்டு ஆராய்கின்றபோது தமிழின் இவ்வரலாறு விளக்கமுறுகிறது. தமிழில் இலக்கியங்கள் தோன்றுவதற்கு முன்னர்க் கி-, கீ-, கெ-, கே- ஆகியவற்றை அடுத்துப் பதினெட்டு மெய்களும் வழங்கின. பின்னர் ஒருபோது—இலக்கியம் தோன்றுதற்கு முன்னரே—அவை சி, சீ, செ, சே எனத் திரிந்தன; ஆனல் இத்திரிபு வளைநாவெழுத்துக்கள் முன்னர் நிகழவில்லை. இத்திரிபினையே தமிழ் வரலாற்றறிஞர்கள் அண்ணொலித்திரிபு எனக் குறிக்கின்றனர்;[10] தென்திராவிட மொழிகளின் வரலாற்றிலே இத்திரிபு ஒருமுக்கிய கட்டம் என்றும்

---

10. இத்திரிபு **Palatalization of Initial K** என வழங்கப்படுகிறது. இது பற்றிய விளக்கமான ஆராய்ச்சி **Dravidian Studies III Two Developments of Initial K in Dravidian by Prof. T. Burrow.**

அவர்கள் கருதுகின்றனர். அத்திரிபினை அவர்கள் ஒரு விதியாகவும் வகுத்திருக்கின்றனர். அந்த விதியினை இவ்வாறு குறிப்பர் :-

க் [முன் உயிர்] + வல்லா மெய் ——→ ச்-

இவ்விதியால் முதல்திராவிடச் சொற்கள் கன்னடத்தில் ககரமுதல்களாகவும் தமிழில் சகரமுதல்களாகவும் வழங்குகின்றன ;

| கன்னடம் | | தமிழ் |
|---|---|---|
| கெம்பு | — | செம்பு |
| கிரி | — | சிரி |
| கெரெ | — | சிரை |
| கேரள | — | சேரல் |

கன்னடத்தில் இம்மாற்றம் நிகழாமையால் அது தொன்முதல் திராவிடத்தின் சொற்களை இவ்வகையில் திரிக்காது அவ்வாறே போற்றிவந்திருக்கிறது. தெலுங்கு மொழியிலும் இவ் அண்ணொலித்திரிபு நிகழ்ந்தது. ஆனால் தமிழில் அமைந்த விதிவிலக்கும் அங்கில்லை.

## 5. 2. 4. புதுமைகள்

மொழிமுதலெழுத்துக்களில் பழையன கழிதலும் புதியன புகுதலும் உண்டு. தொல்காப்பியரும் நன்னூலாரும் குறித்த மொழிமுதல் மெய்கள் ஒன்பதும் அவர்கள்காலத்துக்கு ஏற்றனவே. இன்று சில வழக்குக்கள் திரிந்து கழிந்தன. —ஞகரம் னகரமாகத் திரிந்தது முன்-

னரே குறிக்கப்பட்டது. அதன்படி ஞ்— திரிந்து —ன் எனவே இன்றைய பேச்சில் வழங்குகிறது. இலக்கியத் தமிழில் மட்டும் இன்று ஞ— உண்டு. பல்லொலியாகிய நகரமும் மொழி முதலில் திரிந்து னகரமானது. நன்னூல் என எழுதப்பட்டாலும் படிக்கின்றபோது 'னன்னூல்' எனவே அச்சொல் ஒலிக்கப்படுகிறது. மொழிமுதல் யகர-மும் இன்றைத் தமிழில் கெட்டுவிட்டது. எ. கா : யாடு> ஆடு ; யாண்டு> ஆண்டு ; யாறு> ஆறு; யாமை> ஆமை ; யானை> ஆனை. ஒரே ஒருசொல்லில் மட்டும் யகரம் மொழி முதலில் வழங்குகிறது. அச்சொல் 'யார்' என்பது. அதுவும் விதிப்படி 'ஆர்' எனவும் ஒலிக்கப்படுகிறது. தமிழ்ச் சொற்களைப் பொறுத்தவரையில்தான் இம்மாற்றங்கள். வடசொற்களாட்சியால் ஞகரமும் யகரமும் இன்று, கற்ற தமிழரிடை மொழிமுதலில் வழங்கிக் கொண்டிருக்கின்றன.

எ. கா. : ஞானம் யஜமானன்

ஆனால் முன்னண்ணவுயிர்களான இ, ஈ, எ, ஏ ஆகியன யகரக் கூறுபெற்று யி, யீ, யெ, யே என மொழிமுதலில் இன்று வழங்குகின்றன என்பதை இங்கே நினைவுபடுத்திக் கொள்ளலாம். ( காண்க 3.10. )

புதியன புகுதலாகச் சில மெய்கள் இன்றைத்தமிழில் மொழி முதலில் வழங்குகின்றன. மொழிமுதல் ஞகரமும் நகரமும் திரிந்து ன் — ஆயின என்பது மேல் குறிக்கப்பட்டது. இத்திரிபுகளால் மட்டு மல்லாது வேறொருவகைத் திரிபாலும் னகரம் மொழி முதலிலாகிறது: எனக்கு, உனக்கு என்பன பிராமணர்

தமிழில் னேக்கு, ஞேக்கு எனத்திரிதலாலே அது நேர்கிறது. சில தமிழ்ச் சொற்கள் திரிதலால் ரகரம் மொழி முதலாகிறது:

நிரம்பு > ரொம்பு    நிரப்பு > ரொப்பு
அரவு > ராவு (வினை)    இரவு > ராவு (பெயர்)
இரண்டு > ரெண்டு    இரட்டை > ரட்டை
இறக்கை > ரெக்க

ரகரம் போன்றே லகரமும் சில சொற்கள் திரிதலால் மொழிமுதலாகிறது :

உலாத்து (உலவு) > லாத்து
நிலாவாத்தா > லாவாத்தா (ராவாத்தா?)
எல்லா > லே

ரகரலகரங்கள் இவ்வாறு மொழிமுதலில் வழங்குதல் ஒரு சில தமிழ்ச் சொற்களில் மட்டுமே. இத்திரிபுகள் தமிழில் ஒரு விதியாகவும் இல்லை ; பரவலாகவும் இல்லை. ஆனால் மிகப்பல அயல்மொழிச் சொற்கள் இன்றைத் தமிழில் மொழிமுதல் ரகரலகரங்களுக்குப் பெருவாழ்வு தந்துவிட்டன.

ரகரலகரங்கள் போன்றே ஒருவகைச் சொற்கள் திரிதலால் ஙகரமும் இன்றைத்தமிழில் மொழிமுதலாகிறது. எங்கள், உங்கள் என்னும் இடப்பெயர்களோடு அப்பன், அம்மா, அண்ணன், அக்கா, அத்தான் முதலிய முறைப் பெயர்கள் சேர்ந்த தொடர்கள் திரிந்து ஙகரமுதல்களாகின்றன :

ஙப்பா    ஙொப்பா
ஙம்மா    ஙொம்மா
ஙக்கா    ஙொக்கா

சிலருக்கு இவை ங்கப்பா, ங்கொப்பா........ முதலியன வாகவும் இருக்கலாம். எவ்வாறாயினும் ஙகரத்தை இன்றைத் தமிழுக்கு ஓரெழுத்தாகக் கொண்டு அது மொழிமுதலில் வழங்குகிறது எனக் கொள்ளலாம்.

இவை மட்டுமல்லாது அயல்மொழிச் சொற்களில் மட்டுமே மொழி முதலெழுத்தாக இன்று வழங்கிக் கொண்டிருக்கும் ஒரு தமிழெழுத்தும் உண்டு ; அது டகரம்:

எ. கா. : டமாரம் டாக்டர்

ஏடா என்னும் விளிச்சொல் டே, டேய் என வழங்குகிறது இதனைத் தமிழுக்குரியதாகக் கொள்ளலாம்

பழமையும் புதுமையும் கலந்து இன்றைத் தமிழில் கீழ்க்கண்ட 13 மெய்கள் மொழிமுதலில் வழங்குகின்றன:

| | | | | | |
|---|---|---|---|---|---|
| க் | ச் | ட் | த் | ப் | |
| ங் | ஞ் | | | ம் | ன |
| ய் | ர் | ல் | வ் | | |

## 5. 3 இடைநிலை மயக்கம்

5. 3. 0. இடைநிலை மயக்கம் உயிரும் உயிரும் மயங்கும் மயக்கமாகவோ, மெய்யும் மெய்யும் மயங்கும் மயக்கமாகவோ உயிரும் மெய்யும் மயங்கும் மயக்கமாகவோ இருக்கும். ' உயிர்மெய் மயக்கு அளவின்றே' (நன். 140) எனக் கூறி இலக்கண ஆசிரியர்கள் உயிர்மெய் மயக்குப் பற்றி ஆராயாது புறக்கணித்தனர். இம் மயக்கத்தில் அமைந்திருக்கும் விதிமுறைகளை இனித்தான்

அறிஞர்கள் ஆராய்தல் வேண்டும். விதிமுறை இல்லாமல் இருக்காது. தமிழ் உயிர்கள் எல்லாம், உயிர் மெய்களாக மொழிமுதலில் வழங்குகின்றன; அதாவது இடைநிலை மயக்கம் எனக் கொள்ளத் தக்கவாறு முதலசையில் (Syllable) வழங்குகின்றன. ஆனால் எகர ஏகாரங்களும் ஒகர ஓகாரங்களும் (இடைச் சொற்களாகவும் விகுதிகளாகவும் தவிர) மொழியிடையில் முதலசை நீங்கப் பிற அசைகளில் வழங்குவது அரிது. இவ்வாறு அமைந்த விதிகளை இனிநடைபெறும் ஆராய்ச்சிதான் தெளிவுபடுத்த வேண்டும்.

## 5. 5. 1. உயிரொலித் திரிபு

இவ்வாறு தமிழில் உயிரொலிகள் மயக்கத்தில் அமைந்து கிடக்கும் ஓர்அரிய விதியினை இன்றைய திராவிட மொழியியலறிஞர்கள் எடுத்துக் காட்டி விளக்குகின்றனர். "தமிழ் அடிச்சொற்களில் இரண்டாம் அசையில் அகரமோ ஐகாரமோ இடம் பெற்றிருக்குமானால் முதலசையில் இகரமோ உகரமோதான் இடம் பெறும்; எகரமோ ஒகரமோ இடம்பெறாது."[11] அதாவது (—) எ—அ-, (—) ஒ—அ- என்ற மயக்கங்கள் தமிழ் அடிச்சொற்களில் இல்லை. (—)இ—அ-, (—)உ—அ- என்ற மயக்கங்கள்தான் அமையும். ஐகாரம், அகரம் கொண்டதாகையால் (ஐ=அய்) தனியே குறிப்பிடத் தேவையில்லை. ஒருசில எடுத்துக் காட்டுக்கள் காணலாம்:

---

11. இங்கு அசை எனப்படுவது ஓர் உயிராலோ உயிர்மெய்யாலோ அமைவது. அதாவது ஒவ்வோருயிரும் ஓர் அசையாம்.

| | | | |
|---|---|---|---|
| இளமை : எளிமை | | உளவு : ஒளி | |
| பிணை : பெண் | | குழந்தை : கொழுந்து | |
| விளக்கு : வெள்ளை | | சுர : சொரி | |
| இலங்கு : எல் | | புதர் : பொதும்பு | |
| சிவப்பு : செம்மை | | முயங்கு : மொய் | |
| பிற : பெறு | | முழங்கு : மொழி | |

இரண்டிரண்டாகத் தரப்பட்ட இவை உறவுடையவை; ஓர் அடிச் சொல்லிலிருந்து கிளைத்தவை. இவற்றை ஒப்பிடுகின்றபோது இவ்விதியின் செயற்பாடு தெளிவுபடுகிறது. அதாவது ஒரு சொல்லின் இரண்டாம் அசையில் வழங்கும் அகரம் முதலசையில் அமைந்த இடையுயிரை (எ அல்லது ஒ) உயருயிராக (இ அல்லது உ) மாற்றுகிறது.[12]

---

12. இம்மயக்க விதியினைத் திராவிட மொழியியலறிஞர்கள் பலர் ஆராய்ந்து குறித்திருக்கின்றனர். பேர். பரோ அவர்கள், Dravidian Studies II : Notes on the Interchange of Short o and e with i and u in South Dravidian என்னும் கட்டுரையில் விளக்கமாகவும் விரிவாகவும் ஆராய்ந்துள்ளார்கள். அவர் உரை இவ்விதியினை ஆங்கிலத்தில் தருகிறது :

" In the above list of parallel forms it is obvious that in Tamil i and u, in the words in which they occur, must have arisen out of e and o. That conclusion is necessary because, as pointed out above, both i and e, also u and o, exist in words in which they are followed by i and u, whereas only i and u exist when there is a or ai in the

[ அடுத்த பக்கம் ]

அகரம் கொண்ட இடைச்சொல் (-அ என்னும் வினையெச்ச விகுதி, -அல் என்னும் தொழிற்பெயர் விகுதி முதலியன) அடிச்சொல்லுடன் புணரும் போது இவ்விதி அமைவதில்லை.

எ. கா :- பொரு : பொர ; பொரல்.

வேறு சில விதிவிலக்குக்களும் உண்டு.

இத்தகைய உயிர் மயக்கம் பழந்தமிழிலேயே அமைந்துள்ளது. இவற்றை எண்ணிப்பார்க்கின்றபோது அகரத்தின் முன்னர் அமைந்த இகர உகரங்கள் உண்மையில் எகர ஒகரங்களின் திரிபுகளாகும். ஏனெனில் அகரம் அல்லாத பிற உயிர்களான இகர உகரங்கள் இரண்டாம் அசையில் உள்ளபோது எகர ஒகரங்களே முதலசையில் இடம் பெறுகின்றன. ஆதலால் இரண்டாம் அசையில் அகரம் இடம் பெறுகிறபோது மட்டும் திரிபுகள் ஏற்படுவதாகக் கொள்ளலாம். தொன்முதல் திராவிடத்திலிருந்து பழந்தமிழுக்குக் காலமாறுபாடு ஏற்பட்டபோது இவ்வுயிரொலித் திரிபுகள் ஏற்பட்டதாகக் கொள்ளலாம்.

---

next syllable. Therefore, in the o-and e-forms there is nothing to cause a change out of u and i whereas the non-existence of e and o in Tamil in positions where an a-vowel appears in the next syllable, proves that there has actualy been a change e > i and o > u in the examples quoted above. Tamil விளக்கு, therefore, must be out of * வெளக்கு, உடை < * ஒடை and so forth, and in these cases the vocalization in Kannada and Telugu represeuts the original. ”

ஆனால் ஒருவேடிக்கை; வரலாற்று நிகழ்ச்சிகள் திரும்பத் திரும்ப நடைபெற்றுக் கொண்டிருக்கின்றன. இன்றைய பேச்சுத் தமிழில் மீண்டும் அகரத்தின் முன்னர் இகர உகரங்கள், எகர ஒகரங்களாகத் திரிந்து விட்டன:

| | |
|---|---|
| இலை : எலை | உனக்கு : ஒனக்கு |
| விளக்கு : வெளக்கு | உலகம் ; ஒலகம் |
| கிழங்கு : கெழங்கு | உயரம் : ஒசரம் |
| இரக்கம் : எரக்கம் | குடம் : கொடம் |

இத்தகைய திரிபுகள் இன்றைய பேச்சில் எந்த அளவு இடம் பெற்றுள்ளன? எப்போது நிகழ்ந்தன? விதி விலக்குக்கள் எவை? என்பவை பற்றி இனித்தான் முழுமையாக ஆராய்தல் வேண்டும்.

## 5. 3. 2. ஈருயிர் மயக்கம்

இரண்டு உயிர்கள் மயங்குதல் இன்று தமிழில் இல்லை. இரண்டு உயிர்கள் மயங்கிவர நேருமானல் இடையில் உடம்படுமெய் தோன்றும். இது பற்றி நன்னூல் கூறும் விதி இடைக்காலத் தமிழுக்கும் இன்றைத் தமிழுக்கும் ஏற்ற ஒன்று :

இ ஈ ஐவழி யவ்வும் ஏனை
உயிர்வழி வவ்வும் ஏமுன் இவ் விருமையும்
உயிர்வரின் உடம்படு மெய்யென் ருகும்.

— நன். 162.

நடுவண்ணவுயிர்களாகிய முன்னுயிர்களுக்கு நடு வண்ண மெய்யாகிய யகரமும் இதழ் குவியுயிர்களாகிய

பின்னுயிர்களுக்கு இதழ்மெய்யாகிய வகரமும் இயைபு (உடம்) படுத்த வருதல் இங்குக் குறிக்கத் தக்கது.

ஆனால் இந்த நிலை பழந்தமிழுக்கு ஏற்றதாக இல்லை. தொல்காப்பியர், உடம்படுமெய் வந்தால் அது நீக்கப் படாது எனவே குறிப்பிட்டுள்ளார் :

எல்லா மொழிக்கும் உயிர்வரு வழியே
உடம்படு மெய்யின் உருவுகொளல் வரையார்

— தொல்: எழு. 140.

அதற்கு ஏற்பவே சங்கத்தமிழில் உடம்படுமெய்கள் இடம் பெறாத உயிர்மயக்கங்கள் பரந்து வழங்கியிருக்கின்றன அவற்றில் பலவற்றை இலக்கண ஆசிரியர்களும் உரையாசிரியர்களும் உயிரளபெடைகள் எனக்கொண்டு விளக்குகின்றனர்.

எ. கா. : நகை + இ = நகைஇ

சங்கத்தமிழில் இரண்டு உயிர்கள் மயங்கி வழங்குதலும் உடம்படுமெய் பெறுதலும் மட்டுமல்லாது ஈருயிரிணைதலும் ஒருயிர் கெடலுமான மாற்றங்களும் நிகழ்ந்துள்ளன.

| | | |
|---|---|---|
| எ. கா. : | எல்லாம் | ( = எல்லா + உம் ) |
| | காணேன் | ( = காண் + அ + என் ) |
| | பலாஅம் | ( = பல + உம் ) |
| | சிலாஅம் | ( = சில + உம் ) |
| | அதாஅன்று | ( = அது + அன்று ) |

இவ்வெடுத்துக்காட்டுக்களில் ஈருயிரிணைதலும் கெடலும் நிகழ்ந்திருக்கலாம்.

சங்ககாலத்தை அடுத்துச் சில நூற்றாண்டுகளில் ஈருயிர் மயக்கம் மறையத் தொடங்கியது. தேவார திவ்வியப்பிரபந்தக் காலங்களில் அது மறைந்தது போலும். ஏனெனில் இவ்விலக்கியங்களில் அதனைக்காணல் அரிதாக உள்ளது; உடம்படு மெய்யே இடம் பெறுகிறது. (எடுத்துக்காட்டாக ஆண்டாள் பாடல்களைக் குறிப்பிடலாம். அவற்றில் ஈருயிர் மயக்கமும் அளபெடைகளும் இல்லை.) ஆயினும் 7, 8, 9-ஆம் நூற்றாண்டுகளுக்குரிய பல்லவர் கல்வெட்டுக்களில் ஈருயிர் மயக்கங்களை ஆராய்ச்சி மாணவர்கள் எடுத்துக்காட்டுகின்றனர்.[13] ஆனால் இக் கல்வெட்டுக்கள் எந்த அளவு அக்கால மொழியை ஒத்திருக்கின்றன என்பது தெளிவு படவில்லை.

## 5. 3. 3. மெய் மயக்கம்

தமிழ் மொழியின் இயல்பு இரு மெய்மயக்கம், மும்மெய்மயக்கம் ஆகியவை மட்டுமே கொண்டது. அவையும் மொழி இடையில் மட்டுமே வழங்கும்; மொழி முதலில் இல்லை. ஆங்கிலத்தில் நான்மெய் மயக்கம் கூட உண்டு. எ. கா. strength, twelfth. இத்தகைய பன் மெய் மயக்கம் தமிழில் இல்லை.

தமிழில் மும்மெய்மயக்கம் இருந்தாலும் அது தொகையில் குறைந்ததே. மயக்கத்தில் மெய்யின் பன்மை மிகமிகத் தொகை குறைந்தே வரும். இது பொது வாகவே மொழிகளின் இயல்பு. தமிழில் இருமெய்மயக்கம்

---

13. திருமதி ஜெயக்குமாரியவர்களது ஆராய்ச்சி யுரையில் இவற்றைக் காணலாம்,

## இருமெய்

| | க் | ங் | ச் | ஞ் | ட் | ண் | த் | ந் | ப் |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| க் | க்க | | | | | | | | |
| ங் | ங்க | ங்ங | | | | | | | |
| ச் | | | ச்ச | | | | | | |
| ஞ் | | | ஞ்ச | ஞ்ஞ | | | | | |
| ட் | ட்க | | ட்ச | | ட்ட | | | | ட்ப |
| ண் | ண்ச | | ண்ச | ண்ஞ | ண்ட | ண்ண | | | ணப |
| த் | | | | | | | த்த | | |
| ந் | | | | | | | ந்த | ந்ந | |
| ப் | | | | | | | | | ப்ப |
| ம் | | | | | | | | | ம்ப |
| ய் | ய்க | ய்ங | ய்ச | ய்ஞ | | | ய்த | ய்ந | ய்ப |
| ர் | ர்க | ர்ங | ர்ச | ர்ஞ | | | ர்த | ர்ந | ர்ப |
| ல் | ல்க | | ல்ச | | | | | | ல்ப |
| வ் | | | | | | | | | |
| ழ் | ழ்க | ழ்ங | ழ்ச | ழ்ஞ | | | ழ்த | ழ்ந | ழ்ப |
| ள் | ள்க | | ள்ச | | | | | | ள்ஞ |
| ற் | ற்க | | ற்ச | | | | | | ற்ப |
| ன் | ன்க | | ன்ச | ன்ஞ | | | | | ன்ப |

## மயக்கங்கள்

| ம் | ய் | ர் | ல் | வ் | ழ் | ள் | ற் | ன் |
|---|---|---|---|---|---|---|---|---|
| | | | | | | | | |
| | | | | | | | | |
| | | | | | | | | |
| | ஞ்ய் | | | | | | | |
| | | | | | | | | |
| ண்ம் | ண்ய் | | | ண்வ் | | | | |
| | | | | | | | | |
| | ந்ய் | | | | | | | |
| | | | | | | | | |
| ம்ம் | ம்ய் | | | ம்வ் | | | | |
| ய்ம் | ய்ய் | | | ய்வ் | | | | |
| ர்ம் | ர்ய் | | | ர்வ் | | | | |
| | ல்ய் | | ல்ல் | ல்வ் | | | | |
| | வ்ய் | | | வ்வ் | | | | |
| ழ்ம் | ழ்ய் | | | ழ்வ் | | | | |
| | ள்ய் | | | ள்வ் | | ள்ள் | | |
| | | | | | | | ற்ற் | |
| ன்ம் | ன்ய் | | | ன்வ் | | | ன்ற் | ன்ன் |

86 எனத் தொல்காப்பியர் கணக்கிட்டுள்ளார். தொல்காப்பியருக்கும் நன்னூலாருக்கும் இடையே இவ்வகையில் வேறுபாடில்லை. அவர்களே மும்மெய் மயக்கங்களாக 24 தருகின்றனர். தொல்காப்பியரும் நன்னூலாரும் கணக்கிட்டுத் தந்த இருமெய் மயக்கங்களை ஒரு பட்டியில் காணலாம்.

மெய்மயக்கங்களின் எல்லைக்கும் மொழியாக்கத்துக்கும் இடையே உறவு உண்டு எனத்தெரிகிறது. ஒரு சொல்லுள் நடைபெறும் மயக்கங்கள் சிலவாக உள்ளன; ஒரு சொல் கடந்து தொடர் மொழியில் நடைபெறும் மயக்கங்கள் பலவாக இருக்கின்றன.[14] எடுத்துக்காட்டாகத் தொல்காப்பியர் காட்டும் 86 மயக்கங்களும் அனைத்துத் தொடர் மொழிகளிலும் நடைபெறும் மயக்கங்களாகும். அதாவது சொற்கள் புணரும் புணர்ச்சியிடத்தும் அமைந்து கிடக்கும் மயக்கங்களே இவை. ஒரு சொல்லுள் அமைந்து கிடக்கும் மயக்கங்கள் மிகச் சிலவே. எடுத்துக்காட்டாகத் தமிழ் வினைப்பகுதிகளில் (பிறவினை விகுதிகளும் பிற இடைச் சொற்களும் நீங்கிய வினைப்பகுதிகளில்) நடைபெறும் இருமெய்மயக்கங்கள் ஏறத்தாழ 30 இருக்கலாம்!

---

14 "The importance of the microsegm nt in this context is that there seem to be few effective limitations on the distribu ion of vowel and co son nt phonemes, that operate across the boundaries between successive microsegments. That is, the vowels and consonants which can occur at the beginning of a microsegment are not in any significant way limited by the vowel or consonant at the end of the preceding microsegment, or vice versa. But within the bounds of a single microsegment there are mauy limitations." — P. 85, A Course in Modern Linguistics.

மெய்மயக்கங்கள் பற்றிய தொல்காப்பிய நூற்பாக்-களுக்கு உரை காண்பதில் இளம்பூரணரும் நச்சினார்க்கினியரும் கருத்து வேறுபாடு கொண்டு பூசலிடுகின்றனர். தொல்காப்பியர் கூறிய மெய்மயக்கங்கள் ஒருமொழிக்கு மட்டுமே உரியவை என்கின்றார் நச்சினார்க்கினியர். இளம்பூரணர் அவை தொடர்மொழிக்கும் ஆகும் எனக் கருதி எல்லா மயக்கங்களுக்கும் எடுத்துக்காட்டுக்கள் தருகிறார். நச்சினார்க்கினியர் எல்லா மயக்கங்களுக்கும் எடுத்துக்காட்டுக்கள் தரமுடியாது திண்டாடுகிறார். 'ஞ ந ம வ என்னும் புள்ளி முன்னர் யஃகான் நிற்றல் மெய் பெற்றன்றே' (தொல். எழு. 27) என்பன போன்ற மயக்கங்களுக்கு அவரால் ஒருமொழி எடுத்துக்காட்டுக்கள் தரமுடியவில்லை; ஆதலால் அவை 'இக்காலத்து இறந்தன' என வாதமிடுகிறார்! இம் மயக்கங்கள் எல்லாம் தொடர் மொழியுள் மட்டும் நடைபெறுவன எனக் கொள்ள வேண்டும். இவை பற்றி இளம்பூரணர் கூறும் கருத்-துக்களே ஏற்றுக் கொள்ளத்தக்கன.[15]

---

15. உச்சிமேற் புலவர்கொள் நச்சினார்க்கினியர் மெய் மயக்கம் பற்றிய மொழியியல் உண்மைகளைச் சரியாகப் புரிந்து கொள்ளவில்லை என்பது மட்டும் அல்லாமல் புரிந்து கொண்ட இளம்பூரணரையும் இகழ்கிறார் :

"இங்ஙனம் ஆசிரியர் சூத்திரஞ் செய்தலின், அக்காலத்து ஒருமொழியாக வழங்கிய சொற்கள் உள என்பது பெற்றாம். அவை இக்காலத்து இறந்தன.

இனி உரையாசிரியர் உரிஞ்யாது, திரும்யாது, தெவ்யாது என இருமொழிக்கண் வருவன உதாரணமாகக் காட்டினாரால் எனின் ஆசிரியர் ஒருமொழியாமாறு ஈண்டுக் கூறி, இருமொழி புணர்த்தற்குப் புணரியல் என்று வேறு

[ அடுத்த பக்கம் ]

## 5. 3. 4. மும்மெய் மயக்கம்

மும்மெய் மயக்கங்களைத் தருதலில் தொல்காப்பியரும் நன்னூலாரும் ஒத்துச் செல்லுகின்றனர். தொல்காப்பியர்

'யரழ என்னும் மூன்றும் ஒற்றக்
கசதப ஙஞநம ஈரொற்று ஆகும்'

(தொல். எழு. 48)

என எடுத்து மொழிகிறார். இருமெய் மயக்கத்தில் காணப்படாத ஒழுங்கமைப்பு இம் மும்மெய்மயக்கத்தில் அமைந்துள்ளது; அவை தொகை 24 ஆகும் :

| | | |
|---|---|---|
| ய / ர / ழ | + | க்க், ச்ச், த்த், ப்ப் / ங்க், ஞ்ச், ந்த், ம்ப் |

இவையெல்லாம் ஒருமொழியாயின் இடைச்சொல் புணர்ந்த ஒரு மொழியுள் மட்டுமே நடைபெறுகின்றன. எ. கா: வாய்ப்பு, வாழ்க்கை ; தீர்ந்தது. உரையாசிரியர்கள் தரும்

---

ஓரியலும் கூறி, அதன்கண் 'மெய்யிறு சொல்முன் மெய் வரு வழியும்' (தொல். எழு. 107) என்று கூறினர்...... ஆதலின் ஈண்டு இருமொழிப்புணர்ச்சி காட்டின் கூறியது கூறல் என்னும் குற்றமாம். அதனால் அவை காட்டுதல் பொருந்தாமை உணர்க ''

மெய்மயக்கத்தில் பகுபதம் பகாப்பதம் ஆகியவற்றிடையே (ஹாக்கிட் என்பார் எடுத்துக்காட்டியது போன்று) வேறுபாடு உண்டு; மெய்மயக்கம், புணர்ச்சியினின்றும் வேறுபட்டது என்பனவாகிய மொழியியல் உண்மைகளை நச்சினார்க்கினியர் தரும் இவ்விளக்கம் புறக்கணிக்கிறது,

எடுத்துக்காட்டுக்களும் இத்தகையவையே. இவை தொடர் மொழியுள்ளும் வழங்குகின்றன. எ. கா.: ஈர்ந் சடை ; பாழ்ங்கிணறு.

மெய்ம்மயக்கம், செய்ஞ்ஞின்ற, மெய்ங்நிலை ...முதலான வழக்குக்கள் புலவர் நடையில் காணப்படுகின்றன. இலக்கணங்களில் மயக்க விதிகளுக்கு வரையப்படும் உரைகளிலும் இவ்வழக்குக்கள் இடம் பெற்றுள்ளன. இவற்றில் -ய்ம்ம்-, -ய்ங்ங்- ஆகிய மும்மெய் மயக்கங்கள் அமைந்துள்ளன. இவற்றுக்கு உரையாசிரியர்கள் உரைகளில் இடம் இல்லை! நூலாசிரியர்கள் நூற்பாக்-களுக்கும் இவை அடங்குமாறு உரைகாணுதல் சிக்கலு-டையதாகிறது. ஆதலால் இவ்வழக்குக்கள் எங்ஙனம் ஆட்சிக்குவந்தன என்பது புதிராக உள்ளது.[16] உண்மையில் தமிழ்மொழியில் இவற்றுக்கு இடமில்லை. தமிழின் இயல்பு அத்தகையது.

தமிழ் மொழியில் நெடிலை அடுத்தும் ஈரெழுத்தினை அடுத்தும் தொடர்மொழியிலும் இரட்டை மெல்லெழுத்துக்கள் வழங்குவது இல்லை. எடுத்துக் காட்டாகத் தீம்மை, பாண்ணை, ஆன்னை, வறும்மை மரன்ன் முதலான வழக்குக்கள் தமிழுக்கு ஏலாதவை. தனிக் குறிலை அடுத்து மட்டுமே இரட்டை மெல்-

---

16 நச்சினார்க்கினியருக்கும் இது புதிராக உள்ளது. ' இனி வேய்ங்ஙனம் வேர்ங்ஙனம் வேழ்ங்ஙனம் என மொழிக்கு முதலாகாத ஙகரம் இடைவந்த சொற்கள் அக்காலத்து வழங்கின என்று உணர்க, ஆசிரியர் ஓதுதலின். இதனை ஙகரமொடு தோன்றும் எனப் பிரித்து ஓதினார் அக்காலத்தும் அரிதாக வழங்கலின்'-தொல்.எழு.26

லெழுத்துக்கள் வழங்குகின்றன.[17] எ. கா.: இம்மை அன்னை, மந்நை ........ தனிக் குறிலும் யகரமெய்யும் சேர்ந்த சொல் தொடர்மொழி போன்று நடைபெறு-கிறது போலும்.

யகரத்தை அடுத்து இரட்டை மெல்லெழுத்துக்கள் வழங்குவது போன்று ரகர ழகரங்களை அடுத்து இரட்டை மெல்லெழுத்துக்கள் வழங்காமை குறிப்பிடத் தக்கது. மயக்கவிதிகளில் ய, ர, ழ ஆகியவை ஓர் ஒழுங்கமைப்புக்கு (pattern) உட்பட்டு நடைபெறுகின்றன என்பது தெளிவு. யகரத்தை அடுத்து மட்டும் இரட்டை மெலிகள் வழங்குவது இவ்வொழுங்கமைப்பைச் சிதைக் கிறது. ஆதலால் அவ்வழக்குக்களின் மெய்மை பற்றி ஐயம் எழுகிறது!

மெல்லெழுத்துக்களைப் போன்றே இடையின மெய்களும் இவ்விதிக்கு உட்படுகின்றன. அவையும் நெடிலை அடுத்தும் தொடர்மொழிகளிலும் இரட்டிவழங்குவ தில்லை.

தமிழில் வல்லெழுத்துக்கள் மட்டும் நெடிலை அடுத்தும் தொடர்மொழியிலும் இரட்டி வழங்குகின்றன. எ. கா.: காக்கை, விருப்பு, செகுத்தல் .... இவற்றில் ஒருண்மையை உணருதல் வேண்டும். தனிக்குறில் அடுத்து வழங்கும் இரட்டை வல்லெழுத்துக்களைக் காட்டிலும் நெடிலை

---

17. இககருத்தினைப் பேர். முத்துச் சண்முகனார் 'ஙனமா? அனமா?' என்னும் தம் கட்டுரையில் ஆராய்ந்து விளக்கியிருக்கின்றார்கள், 'இக்காலத் தமிழ்' என்னும் அவர் நூல் காண்க,

அடுத்தும் தொடர் மொழியிலும் வழங்கும் இரட்டை வல்லெழுத்துக்கள் கால அளவு குறைந்தவை.[18] ஆதலால் அவற்றை ஒற்றை வலிகளாகவே கொள்ளலாம் போலும். இக்காரணம் பற்றித்தான் கன்னட மொழியில் நெடிலை அடுத்தும் தொடர்மொழியிலும் இரட்டை வல்லெழுத்துக்கள் கூட வழங்கமாட்டா என விதிக்கப்படுகிறது. அதாவது கன்னடத்தில் நெடிலை அடுத்தும் தொடர்மொழியிலும் எந்த மெய்யெழுத்தும் இரட்டி வழங்குவதில்லை.

தமிழ் கன்னட மொழிகளில் அமைந்த இம்மயக்கங்களுக்குச் சொற்களின் அசைகளில் அமையும் ஓசை வேறுபாடே (distribution of stress) காரணம் போலும்.

இங்குத் தமிழ் மயக்க விதிபற்றிய மற்றும் ஒருண்மையினையும் காணுகின்றோம். மெல்லின இடையின மெய்கள் இணையாக மயங்கும் மயக்கங்கள் உண்டானாலும்

---

18. " For all these sentences that were examined the closure durations of voiceless stops were found to range in magnitude between 75 and 150 milliseconds after short vowels, and between 60 and 120 milliseconds after long vowels, and between 60 and 125 milliseconds in clusters, These data indicate that there is no very striking relation between the position of a voiceless stop and the duration of its closure interval although the observed difference between duration ranges after short and after long vowels may possibly be of statistieai significance." —P. 296, Indian Lingnistics (Turner Jubilee Volume I ) 1958 in the Article ' The Tamil Occlusives : Short Vs. Long or Voiced Vs. Voiceless? by Leigh Lisker.

அவை வழங்கும் அசைகளுக்குக் கட்டுப்பாடு உண்டு என்பதே அவ்வுண்மை. மெல்லின இடையின மெய்கள் இணைந்த மயக்கம் தனிக்குறிலை அடுத்துத் தவிரப் பிற இடங்களில் இல்லை. தமிழ் மெய்மயக்கங்களில் அமைந்த ஒரு விதியாகவே இதனைக் கொள்ள வேண்டும்.

இக்காரணங்களால் –ய்ம்ம்-, –ய்ந்ந்-, யஞ்ஞ்- ஆகியவை தமிழின் மயக்க விதிகளுக்கு ஏலாதவை எனக் கொள்ள வேண்டும். புலவரிடை ஏற்பட்ட மயக்கமே அவற்றுக்கு வாழ்வு தந்தன போலும்! ஆகவே தொல்காப்பிய நூற்பாவிற்கு உரையாசிரியர்கள் தரும் 24 எடுத்துக்காட்டுக்களே ஏற்கத் தக்கன.

## 5. 3. 5. பழையன கழிதலும் புதியன புகுதலும்

இந்த மயக்கங்கள் பழந்தமிழுக்கும் இன்றைய இலக்கியத் தமிழுக்கும்மட்டுமே பொருந்துவன. காலம் செல்லச் செல்ல மயக்கங்களில் மாற்றங்கள் ஏற்பட்டுள்ளன. அம்மாற்றங்கள் 'பழையன கழிதலும் புதியன புகுதலும்' ஆகும். அவற்றை இனி முறைப்படி ஆராய்ந்து காண வேண்டும். ஒரு சிலவற்றை இங்குக் குறிக்கலாம்.

'டறமுன் கசப மெய்யுடன் மயங்கும்' (நன். 113) என்பது இன்றைய பேச்சுத்தமிழில் இல்லை. கட்கம் கக்கம் எனவும் கட்சி கச்சி எனவும் நிற்கிறான் நிக்கிறான் எனவும் நிற்பான் நிப்பான் எனவும் திரிந்து வழங்குதலைக் காணுகின்றோம். அதாவது

| | | | | |
|---|---|---|---|---|
| | | க் | | க் க் |
| ட் | + | ச் | ——→ | ச் ச் |
| ற் | | ப் | | ப் ப் |

பழந்தமிழில் மொழிக்கு ஈறுகும் 'ஞ ண ந ம ன யரலவழள' என்னும் பதினொரு மெய்களையும் அடுத்துத் தொடர்களில் மொழிமுதலாகும் யகரம் மயங்கிவரும். இன்றைத் தமிழில் மொழிமுதல் யகரம் கெட்டுவிட்டது. (எ. கா. : யாடு → ஆடு, யாறு → ஆறு) ஆகவே அப்பதினொரு மயக்கங்கள் இன்று இல்லையாகின.

மும்மெய் மயக்கங்கள் 24 இலக்கண ஆசிரியர்கள் தந்தனர்; ஆனால் இன்றைப் பேச்சில் இல்லை. மும் மெய்களில் முதல் மெய்யான யரழ மூன்றும் பின்னை மெய்களுடன் இயைந்து விட்டன (assimilated); அல்லது கெட்டு விட்டன எனல் வேண்டும்.

பல புதிய மயக்கங்களும் தோன்றியுள்ளன. ஏழாம் வேற்றுமை உருபு - இல் இன்றைய பேச்சில் உயிரிழந்து வழங்குகிறது. அதனால் பதினொரு மயக்கங்கள் புதியன வாகத் தோன்றியுள்ளன.

| | | | |
|---|---|---|---|
| -க்ல்- | : நாக்லே | -ண்ல்- | : கண்லே |
| -ச்ல்- | : பேச்லே | -ய்ல்- | : வாய்லே |
| -ட்ல்- | : வீட்லே | -ர்ல்- | : ஊர்லே |
| -த்ல்- | : பத்லே | -ழ்ல்- | : கூழ்லே |
| -ப்ல்- | : தோப்லே | -ள்ல்- | : முள்லே |
| | | -ன்ல்- | : தேன்லே |

'பால்லே தண்ணி,' 'பகல்லே வந்தா' என்னும் வழக்குக்கள் இணைலகரம் நெடிலை அடுத்தும் பலவசைச் சொற்களிலும் வழங்குவதைக் காட்டுகின்றன. இவை புதுமையாகி மேலே கண்டதைப் பழையதாக்கி விட்டன!

-க்கிறு-, -கிறு- என்றும் நிகழ்காலத்து இடைநிலைகள் இடைக்காலத்தில் வழங்கின. அவை இன்று பேச்சில் உயிர் கெட்டு வினைப்பகுதிகளின் மெய்களோடு இயைந்து புது மயக்கங்களாகி வழங்குகின்றன. இவ்வாறு புதியனவாகத் தோன்றியவை பதினான்கு :

| | | | | | |
|---|---|---|---|---|---|
| -க்ர்- | : | நிக்ரான் | -ய்ர்- | : | பாய்ரான் |
| -ச்ர்- | : | பாச்ரான் | -ர்ர்- | : | வர்ரான் |
| -ட்ர்- | : | காட்ரான் | -ல்ர்- | : | கொல்ரான் |
| -த்ர்- | : | ஊத்ரான் | -வ்ர்- | : | கவ்ரான் |
| -ப்ர்- | : | துப்ரான் | -ள்ர்- | : | கிள்ரான் |
| -ண்ர்- | : | காண்ரான் | -ழ்- | : | அழ்ரான் |
| -ம்ர்- | : | இரும்ரான் | -ன்ர்- | : | தின்ரான் |

ரகரமெய் இரட்டி வாராது எனத் தொல்காப்பியரும் நன்னூலாரும் குறிப்பிட்டுள்ளனர்; ஆனால் இன்று 'வர்ரதைப்' பார்க்கிறோம். கீழ்க்கண்ட மும்மெய்மயக்-கங்கள் ஐந்தும் புதியன :

| | | | | | |
|---|---|---|---|---|---|
| -ங்க்ல்- | : | சங்க்லே | -ந்த்ல்- | : | பந்த்லே |
| -ஞ்ச்ல்- | : | பஞ்ச்லே | -ம்ப்ல்- | : | நரம்ப்லே |
| -ண்ட்ல்- | : | கூண்ட்லே | | | |

புதிதாகத் தோன்றிய மயக்கங்களுள் ஒரு சிலவே இங்குச் சுட்டிக்காட்டப்பட்டன. முறைப்படி ஆராய்ந்தால் மேலும் பலவற்றைக் காணல் கூடும். ஆங்கிலமும் வட மொழியும் கற்ற அரைத்தமிழரால் மேலும் மயக்கம் ஏற்-படக் கூடும். சிலர் இவற்றையெல்லாம் உடன்படலாம்;

சிலர் மறுக்கலாம். அவரவர்கள் இன்றைத் தமிழை ஆராய்ந்து கண்டு அமைத்துக் கொள்வதைப் பொறுத்தது அது. ஆனால் எல்லோரும் மாற்றங்களை உடன்படுவர்.

## 5. 4. மொழியீற்றெழுத்துக்கள்

மொழிக்கு ஈருகும் எழுத்துக்கள் பற்றித் தொல்காப்பியர் கருத்துக்களையும் தாங்கி நன்னூலார் சுருக்கமாகத் தருகிறார்:

ஆவி ஞணநமன யரலவ ழளமெய்
சாயும் உகரம் நா லாறும் ஈறே.

—நன். 107

இவற்றின் வழக்குக்கும் சில கட்டுப்பாடுகள் உண்டு; அவற்றையும் நன்னூலார் அடுத்துத் தருகிறார் :

குற்றுயிர் அளபின் ஈறும்; எகரம்
மெய்யோடு ஏலாது; ஒந் நவ்வொடு ஆம்; ஔ
ககர வகரமோடு ஆகும் என்ப.

— நன். 108

இவற்றுள்ளும் அரிய வழக்குக்கள் உண்டு. தொல்காப்பியர் 'உச்சகாரம் இருமொழிக்கு உரித்தே' என்கிறார் (எழு. 75). அவை 'உசு, முசு' என்பன. 'உப்பகாரம் ஒன்றென மொழிப' என்கிறார் (எழு. 76). அது 'தபு' என்பது. ஞகரம் 'உரிஞ்' என்னும் ஒரு மொழியிலும் நகரம் 'பொருந், வெரிந்' என்னும் இருமொழிகளிலும் வகரம் 'அவ், இவ், உவ், தெவ்' என்னும் நான்கு மொழிகளிலும் வழங்கும் என்பர் தொல்காப்பியர். இவையெல்லாம் இடையில் வழக்கு வீழ்ந்தன. தொல்காப்பியர் காலத்தி-

லேயே இவை அருகி வழங்கியதால் அப்போதே செத்துக் கொண்டிருந்திருக்க வேண்டும். அல்லது கிளைமொழி வழக்குக்களாக இலக்கியத்தமிழில் ஏறியிருக்க வேண்டும். அல்லது 'அதிசயப் பிறவி'களாகப் பிறந்திருக்க வேண்டும்!

இவ்விறுதிநிலை இன்றைத் தமிழில் மாற்றமுற்று விட்டது. எந்த மெய்யெழுத்தும் இன்று மொழியின் இறுதியில் வழங்குவதில்லை. எல்லாம் உயிரீறுகளே. முன்னர் மெய்யீறுகளாக இருந்தவை எல்லாம் இன்று உகரம் பெற்று (நடு வண்ண இதழ் குவியா உகரம்) நடக்கின்றன. யகரஈறு மட்டும் இகரம் பெறுகிறது:

கல்லு, காலு; நெய்யி, வாயி.

தெலுங்கு கன்னட மொழிகளில் இன்று மெய்யீறு-களே இல்லை என அறிகிறோம். எல்லாம் உயிரீறுகளாம். ஆனால் பண்டு அங்கும் மெய்யீறுகள் இருந்தன. இன்றைய தமிழ்ப்பேச்சைப் போன்று அவையும் மாற்றமுற்றன. அம்மொழிகளின் இலக்கணங்கள் மெய்யீறுகளை உடன்பட்டு விதிகள் வகுத்துக்கொண்டன. தமிழில் இன்னும் அதற்குப் 'பக்குவம்' தோன்றவில்லை போலும். இவ்வாறு மெய்யீறுகள் உயிரீறுகளாகத் திரிதல் தென்திராவிட மொழிகளின் இயல்பு எனத் தெரிகிறது.

ḍ ü ṇ õ č ɛ̃ z̃ ṣ ṯ n̄ ä

ụ ṯ ç ḏ ẓ ṙ ō ṉ ã ı ô

ā ã

ñ ḻ ù ē j̄ ụ ṅ ë û â ù

[*தமிழ் எழுத்தியல்* என்னும் இந்நூலின் கருத்துக்கள், எழுத்துக்கள் விளக்கம், வகை தொகை ஆகியவை *இன்றைய விளக்க மொழியியலின்* (Modern Descriptive Linguistics) அடிப்படையில் அமைந்தவை. Phoneme, Allophone ஆகியவை பற்றிய கருத்துக்கள் இங்கு முழுமையாகப் பயன்படுத்தப் பட்டுள்ளன. Phoneme, Allophone பற்றிய கருத்துக்களை அறிந்து கொள்ளுதல் இந்நூலினை நன்கு உணர்ந்து கொள்ளுதலுக்கு இன்றியமையாதது. இவை பற்றிய கருத்துக்கள் Phonemic Analysis என இன்றைய மொழியியல் நூல்களில் தரப்படுகின்றன (A Course in Modern Linguistics by C. F. Hockett, Ch. 2) *எழுத்தாக்கம்* என அவை இங்கே விளக்கப்படுகின்றன.

Phoneme என்னும் சொல், பொதுவாக *ஒலியன்* எனத் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டு வழங்குகிறது. Allophone *மாற்றொலியன்* என வழங்குகிறது. ஆனல் இந்நூல் இவற்றுக்கு நேராக *எழுத்து*, *எழுத்தொலி* என்னும் பயின்ற பழஞ்சொற்களையே பயன்படுத்துகிறது கலைச்சொற்களில் ,' கலை ' யும் வேண்டும்.]

# எழுத்தாக்கம்

*1.* மக்கள் தங்கள் எண்ணங்களைப் பெரும்பாலும் மொழிவழியாகவே வெளியிடுகின்றனர். ஆகவே மொழி, எண்ணங்களுக்குக் குறிகளாகும்.[1] இத்தகைய மொழி, பேச்சொலிகளால் ஆகியதே. இந்தப் பேச்சொலிகளுக்கான குறிகள்தான் எழுதப்படும் வரிவடிவாம் எழுத்துக்கள்.[2] ஆகவே வரிவடிவாம் எழுத்துக்கள் நேரே எண்ணங்களுக்குக் குறிகள் அல்ல. பேச்சளவிலேயே எண்ணங்கள் புலப்படுகின்றன; ஆகவே பேச்சுக்கள் உள்ளபோது எண்ணங்கள் புலப்பட வரிவடிவங்கள் தேவையில்லை. பேச்சுக்கள் இல்லாதபோதுதான் வரிவடிவங்கள் எண்ணங்களைப் புலப்படுத்தத் தேவைப்படுகின்றன. நாகரிகவுயர்ச்சியடையாத மக்கள் பேச்சளவில் நின்றுவிடுகின்றனர். தமிழர் போன்று நாகரிகவுயர்ச்சி பெற்ற மக்களே பேச்சுக்குக் குறிகள் கண்டு எழுத்துக்கள்

---

1 Symbols 2 Alphabets; Scripts,

வருக்கின்றனர். ஆகவே எழுத்துக்கள் இல்லாமல் மொழிகள் நடைபெறும் என்பது தெளிவாகிறது. இதனால் எண்ணங்கள், பேச்சொலிகள், வரிவடிவங்கள் ஆகியவற்றை வேறு வேறு எனப் பிரித்தறியலாம்.

ஒரு மனிதன் பேசும் பேச்சொலிகளை நுட்பமாக ஆராய்ந்தால் அவை எண்ணற்ற வகைவேறுபாடுகள் கொண்டிருப்பது விளங்கும். எடுத்துக்காட்டாகக் ககரத்தில் எத்தனையோ வகை வேறுபாடுகளைக் கேட்கலாம்.[3] பேச்சொலிகளை என்வரையறைப் படுத்துவது எளிதல்ல. ஆனால் பேச்சொலிகளின் குறியீடுகளாம் வரிவடிவெழுத்-துக்கள் வரையறைப்பட்டவை என்பது தெளிவு. பல மொழிகளிலும் அமைந்துள்ள நெடுங்கணக்குக்கள் இதற்குச்சான்று. எண்ணற்ற வகை வேறுபாடுகள் கொண்ட பேச்சொலிகள் வரையறைப்பட்ட வரிவடிவங்களாக அமைதலை இங்குக் காண்கின்றோம். ஒரு மொழியில் ஒலிகள் பலவாகவும் வரிவடிவங்கள் சிலவாகவும் இருத்தல் தவிர்க்க முடியாத இயல்பு எனத் தோன்றுகிறது. இவ்வாறு பல ஒலிகள் சில வடிவுகளாக—குறிகளாக—வகுக்கப்படுதலுக்கு அடிப்படையான கொள்கைகள், நெறிமுறைகள் எவை? அவை எத்தகையவை?

2 தொல்காப்பியமே தமிழில் முதல் இலக்கணமாகக் கிடைத்திருந்தாலும் அதுவே தமிழுக்கு முதன் முதலில் எழுத்துக்களை வரையறுக்கவில்லை. தொல்காப்பியர்

---

3. ககரம் முன், நடு, பின் மெல்லண்ணம், குரல், உயிர்ப்பு, தளர்வு, செறிவு, உரைவு ஆகிய பண்புகள் பெற்றுத் தமிழில் அமைகின்றது. அறிஞர் பெர்த்தின் கருத்தைக் காண்க: 2-1.2

தமக்கு முன் வாழ்ந்த 'குறியறிந்தோர்' கண்டவாறே எழுத்துக்களை மேற்கொண்டு இலக்கணம் கூறுகிறார். அக்குறியறிந்தோர்தாம் தமிழுக்கு 33 எழுத்துக்களை வரையறுத்திருக்கின்றனர். அவர்கள் எந்தக் கொள்கைகளைக் கொண்டு அவ்வெழுத்துக்களை வகுத்தனர் என்பது நமக்குப் புலப்படவில்லை. ஒருகால் எழுத்துக்கள் வகுக்கப்பெற்றது பல நூற்றாண்டுகளாக ஏற்பட்ட வளர்ச்சியின்[4] விளைவாக இருக்கலாம். ஆனால் இன்றைய மொழியியலார் பல ஒலிகளைச் சில வடிவுகளாக வகுத்தலுக்கெனச் சில நெறிமுறைகளைக் கண்டுள்ளனர். அவற்றின் துணைக்கொண்டு இம்மொழியியலார் இந்நாள்வரை நெடுங்கணக்குக்கள் வரையறுக்கப் பெறாத மொழிகளுக்கு நெடுங்கணக்குக்கள் வரையறுத்துத் தந்துள்ளனர். நெடுங்கணக்குக்கள் வரையறுக்கப் பெற்றிருக்கும் மொழிகளுக்கே கூட அவர்கள் மீண்டும் நெடுங்கணக்கினை வரையறுத்து முன்பிருந்த நெடுங்கணக்கோடு ஒப்பிடுகின்றனர்; ஒப்பிட்டுக் குறை நிறை கண்டு சீர்திருத்துகின்றனர். இவ்வாறு பயன்படும் இந்நெடுங்கணக்காக்கம் இன்றைய மொழியியலின் ஒருசிறந்த துறையாகும். இன்றை மொழியியலில் இந்நெடுங்கணக்காக்கத்துக்குப் பயன்படும் நெறிமுறைகளை இனிக் காணலாம்.

3. இவ்வாராய்ச்சி இரண்டு நிலைகளையுடையது. ஒன்று தொகுத்தல்; மற்றொன்று வகுத்தல். நெடுங்கணக்காக்கத்துக்கு வேண்டியவற்றைத் தேடி அமைத்தலே தொகுத்தலாகும். தொகுத்தவற்றை ஒப்பிட்டொப்பிட்டாராய்ந்து எழுத்துக்களைக் காணலே வகுத்தலாகும்.[5]

---

4. Evolution.

5. Gathering and collation. See P.103 of CML.

ஒரு மொழியின் பேச்சொலிகளை அதன் நுட்பவகை வேறுபாடுகளோடு குறித்துக்கொள்ள வேண்டும். அவ்வாறு குறிக்கப்படுகின்றவை சொற்களாகவும் முழுத் தொடர்களாகவும் இருக்க வேண்டும். இத்தகைய மொழியாராய்ச்சிக்குத் தேவையான அளவும் குறித்துக் கொள்ள வேண்டும். இவ்வாறு குறிக்கப்படுகின்ற-வற்றுக்கெல்லாம் ஏதாவது ஒருமொழியில் பொருளையும் ( gloss ) குறித்துக் கொள்ள வேண்டும். பேச்சொலிகளைக் கேட்டவாறே குறித்துக் கொள்ளுவதற்கு **ஒலிநெடுங்கணக்கு**[6] என்னும் ஒரு முறையினை மொழியியலார் பயன்படுத்துகின்றனர். இவ்வொலி நெடுங்கணக்கால் எழுதப்பட்ட மொழியில் நூறு இருநூறு என வடிவுகள் அமைந்திருக்கலாம். இவ்வடிவுகள் எல்லாமே ஒரு மொழிக்குத் தேவைப்பட மாட்டா என்பது பொதுஅறிவால் மொழியியலாருக்குத் தெரியும். மொழி-யினைப் பேசுவோனது முறையால் வேறுபடும் சிறு சிறு வேறுபாடுகளை ஓரளவு புறக்கணித்துவிட்டே அவர்கள் பேச்சொலிகளைக் குறிப்பர். இதனால் நூறு, இருநூறு என விளங்கும் ஒலிகள் மேலும் குறையும். இதுவே தொகுத்தல்; இனி வகுத்தலைக் காணலாம்.

4. ஒரு மொழியில் ஒலிகள் பலவாக இருத்தல் இயல்பு. ஆனால் எல்லா ஒலிகளும் ஒருமொழிக்குப் பயன்படுவதில்லை; ஒருசில ஒலிகளே பயன்படுகின்றன.

---

**6. Phonetic Script.** காதால் கேட்ட ஒலிகளைக் கேட்டவாறே அனைத்து வேறுபாடுகளும் விளங்க எழுதிக் கொள்வதற்கு எனப் பலப்பல குறியீடுகளைக் கொண்டது இந்நெடுங்கணக்கு.

என்பது ஒரு மொழியியல் உண்மை. "ஓரொலி ஒரு மொழிக்குப் பயன்படுதல்" என்பது "அவ்வொலி அம் மொழியில் பொருள் வேற்றுமை செய்வதற்குப் பயன் படுதலே" ஆகும். இவ்வாறு பொருள் வேற்றுமை செய்தலைப் பொருட் குறிப்பு [7] என மொழியியல் வழங்கும். ஆகவே பொருட்குறிப்புள்ள ஒலிகள் ஒருமொழிக்கு இன்றியமையாதவை. அத்தகைய ஒலிகளையே எழுத்துக்-களாக வகுத்தல் வேண்டும். இக்கருத்துக்களை ஆங்கில மொழி எடுத்துக்காட்டுக்கள் கொண்டு விளக்கலாம் :

bad bat

இவ்விரண்டு சொற்களும் ஆங்கில மொழியில் இரு வேறு பொருளுடைய சொற்கள்; ஏறத்தாழ ஒலி ஒற்றுமை உடையன. இவற்றுக்கிடையில் அமைந்த பொருள் வேறு பாடு d, t என்பவற்றின் வேறுபாட்டால் அமைந்ததே என்பது தெளிவு. ஆகவே d, t இரண்டையும் இவ்வாறு பொருள் வேற்றுமை செய்யப் பயன்படுவதால் பொருட்குறிப் புள்ள ஒலிகள் எனல் வேண்டும். பொருட்குறிப்புள்ள இவ்விரண்டு ஒலிகளுமே ஆங்கில மொழிக்கு இன்றியமை யாதவை. அதாவது இவை இல்லாவிட்டால் இவையிரண்டு சொற்களுக்கும் இடையில் பொருள் வேறுபாடு புலப்படாது. மேலும் சில எடுத்துக்காட்டுக்கள் :-

| | | |
|---|---|---|
| bat | fan | noon |
| pat | van | moon |

இவை வேறுவேறு சொற்கள். ஆதலால் b, p: f v; n, m ஆகியவை பொருட் குறிப்புடையவையாதல் தெளிவு. இவை ஆங்கில மொழிக்கு இன்றியமையாதவை

---

7. Significance

யாகும். இவை போன்ற எடுத்துக்காட்டுக்கள் ஒவ்வொரு மொழியிலிருந்தும் தரலாம். தமிழிலும்

தோல் என்

தோள் எண்

என்பவற்றை ஒப்பிட்டுக்காணலாம். இதனல் தமிழில் ல, ள; ன, ண என்பவை பொருட் குறிப்புப் பெற்றன என்பது விளங்குகிறது. இவற்றுல் ஒருண்மை விளங்கும். மொழியில் அமைந்த பல்வேறு சொற்களை — மொழியின் கூறுகளை — ஒன்ருேடொன்று ஒப்பிட்டு ஆராய்ந்து பொருட்குறிப்புள்ள ஒலிகளைக் காணலாம். இவ்வாறு ஒப்பிட்டாராய்தல் இன்றைய மொழியியலாராய்ச்சிக்கு அடிப்படையான ஒரு நெறியாகும். ஒப்பிட்டாராய்ந்து பொருட்குறிப்புள்ளவை எனக் காணப்படும் ஒலிகளையே **எழுத்துக்கள்** என மொழியியலார் வகுப்பர். அவர்கள் முறையினை இனிக் காணலாம்.

5. ஒலி நெடுங்கணக்கால் எழுதப்பட்டிருக்கும் மொழியில் மேலே கண்டவாறு சொற்களை ஒன்ருேடொன்று ஒப்பிட்டொப்பிட்டு ஆராய்ந்து பொருட்குறிப்புள்ள ஒலிகளைத் தேர்ந்தெடுக்க வேண்டும். தேர்ந்தெடுத்துச் சூழல் வேறுபாட்டால் ஏற்படும் திரிபுகளைப் புறக்கணித்து மொழியின் ஒழுங்கமைப்புக்கு ஏற்ப எளிய முறையில் எழுத்துக்கள் வகுக்க வேண்டும். மொழியியலார் நான்கு நெறிகளின் அடிப்படையில் இவ்வகுப்பினைச் செய்கின்றனர். அவற்றுள் முதலிரண்டு தலையாயவை என்பர்.

6. *முதல்நெறி வழக்குநெறி* எனப்படும். ஓரொலி ஒரு சொல்லில் ஒரு குறிப்பிட்ட சூழலில்[8] வழங்குவதே வழக்கு[9] எனப்படும். சூழல் என்பது முன்னும் பின்னும் அமையும் ஒலிகளால் விளக்கமுறும். எடுத்துக்காட்டாக "மொழி முதல்," "உயிரிடை," "மொழிக்கடை," "குறிற்கீழ்," "நெடிற்கீழ்," "மெலிப்பின்," "வலிப்பின்," "இடைப்பின்," "உயிரிடையிரட்டித்தல்" முதலியவற்றைச் சூழல்கள் என்பர். இத்தகைய சூழல் வழக்குக்கள் பொருட் குறிப்புள்ள ஒலிகளைத் தேர்ந்தெடுப்பதற்கு உதவுகின்றன. அதாவது பொருட்குறிப்புள்ள ஒலிகள் பொருள் வேற்றுமை கொண்டுள்ள வேறு வேறு சொற்களில் ஒரே குறிப்பிட்ட சூழலில் வழங்குகின்றபோதுதான் அவை பொருட் குறிப்புள்ளவை எனத் தெளிவாகின்றன. அவ்வாறல்லாது வேறு வேறொலிகள் வேறுவேறு சொற்களில் வேறுவேறு சூழல்களில் வழங்குமானால் அவ்வேறு வேறு சூழல்களே அச்சொற்களில் பொருள் வேற்றுமை செய்கின்றன என அமையும்; அவ்வாறமைதலால் அவ்வொலிகள்தான் அச் சொற்களில் பொருள் வேற்றுமை செய்கின்றன என அறுதியிட முடியா நிலையேற்படுகிறது. இக்காரணத்தால் ஒரு கொள்கை அமைக்கலாம். ஒரு சில குறிப்பிட்ட ஒலிகள் பொருள் வேறுபாடு கொண்டுள்ள வேறுவேறு சொற்களில் ஒரே குறிப்பிட்ட சூழலில் வழங்குமானால் அவ்வொலிகள் பொருட்குறிப்புள்ளனவாக இருக்கும் என்பதே அக்கொள்கையாகும்.

7. இக்கொள்கையின் அடிப்படையில் வேறுபட்ட ஒலிகளுக்குள்ள பொருட்குறிப்பு ஒரே சூழலில் அந்த

---

8. Environment 9. Distribution

ஒலிகள் அளவிலே மட்டும் வேறுபட்டு மற்றெல்லா வகையிலும் ஒத்துள்ள சொற்களால் தெற்றென விளங்கும். எடுத்துக்காட்டாக மேலே தரப்பட்ட

bad bat

என்னும் இரு சொற்களேயும் காணலாம். இவை மொழிக் கடையில் மட்டும் ஒலி வேறுபட்ட சொற்கள்; வேறெவ் வேறுபாடும் பெற்றவை அல்ல; இவ்விரு சொற்களுக்கிடை அமைந்த பொருள் வேறுபாடு மொழிக்கடை வேறுபாட்டால் மட்டும் அமைந்ததாகும். ஆகவே d, t இரண்டும் பொருட் குறிப்புடையன என்பதில் கருத்து மாறுபாடே இல்லை. இவ்வாறு சிற்றளவே — மிகச்சிறிதே, ஓரொலியளவிலே — வேறுபட்ட இணைச் சொற்களே பொருட்குறிப்பினைக் கொண்டு வழங்கும் ஒலிகளைத் தெற்றெனப் பிரித்தெடுத்துக் காட்டுகின்றன. இணைச்சொற்களையே மொழியியலார் சிற்றிணை[10] என வழங்குகின்றனர். இத்தகைய சிற்றிணைகளை மொழியில் கண்டெடுத்துப் பொருட் குறிப்புள்ள ஒலிகளைப் பிரித்தறியலாம். இம்முறையே பிழைபடாச் சிறந்த முறையுமாகும். ஆனுல் பொருட்குறிப்புள்ள எல்லா ஒலிகளுக்கும் ஒரு மொழியில் சிற்றிணைகள் கிடைக்க மாட்டா. ஆகவே வேறுவேறு சொற்களில் ஒரே சூழலில் வழங்கும் வேறு வேறொலிகளை எழுத்துக்களாக வகுக்கும் முறையே நாம் மேற்கொள்ளத் தக்கது.

8. மேலே விளக்கப்பட்டவற்றுல் தெளிவாகும் கருத்து, வேறு வேறொலிகள் பொருள் வேறுபட்ட வேறு வேறு சொற்களில் ஒரே சூழலில் பொருள் வேற்றுமை செய்து

---

10 Minimal Pair

பொருட் குறிப்புடையனவாகி வழங்கினால், அவற்றை எழுத்துக்களாக வகுக்கலாம் என்பதாகும். இவ்வாறு பல்வேறொலிகள் பொருள் வேற்றுமை செய்யும் ஒரு சூழல் வழக்கிற்கே வேற்றுமை வழக்கு[11] என மொழியியலறிஞர் பெயர் தருகின்றனர். ஒலிகள் பொருள் வேற்றுமை செய்யும் குறிப்பினை அறிவித்து அவ்வொலிகளை எழுத்துக்களாக வேற்றுமைப்படுத்த உதவும் வழக்கு ஆகவே இதனை வேற்றுமை வழக்கு எனல் பொருத்தம். இனிக் கருத்துக்களைச் சுருக்கமாக வேற்றுமை வழக்குக் கொள்கை அடிப்படையில் விளக்கலாம். வேற்றுமை வழக்கில் வழங்கும் வேறுபட்ட ஒலிகள் எல்லாம் எழுத்துக்கள் ஆகும். எடுத்துக்காட்டாக

bat
cat
fat
hat
mat
pat
rat
sat
tat

ஆகிய ஆங்கிலச் சொற்களில் மொழிமுதலில் வழங்கும் எல்லா ஒலிகளும் வேற்றுமை வழக்கில் வழங்குகின்றன; ஆகவே அவையெல்லாம் ஆங்கில மொழிக்கு எழுத்துக்களாகக் கொள்ளப்பட வேண்டும். தமிழிலும்

---

11. Contrastive distribution

கால்
சால்
ஞால்
தால்
நால்
பால்
மால்
வால்

ஆகிய சொற்களில் மொழிமுதல் வழங்கும் மெய்கள் எல்லாம் வேற்றுமை வழக்கில் வழங்குகின்றன; ஆதலால் தமிழுக்கு அம்மெய்களை எழுத்துக்களாக வகுக்க வேண்டும்.

9 இக்கருத்துக்கள் முதல் நெறியின் விளக்கங்களாகும். அதனைச் சுருக்கமாகக் கூறலாம் :- வேறுபட்ட ஒலிகள் வேறுபட்ட சொற்களில் ஒரே சூழலில் வழங்குகின்ற போது பொருள் வேற்றுமை செய்கின்றன. இவ்வழக்கிற்கு வேற்றுமை வழக்கு என்பது பெயர். இவ்வாறு வேற்றுமை வழக்கில் வழங்கும் ஒலிகள் எல்லாம் எழுத்துக்களாக வகுக்கப்பெறும்.

10. இவ்வாறு ஒரு மொழியில் எழுத்துக்களாக வகுக்கப்பெறும் ஒலிகள் எல்லாம் வேற்றுமை வழக்கில் வழங்க வேண்டும். அதாவது ஓரெழுத்து மற்ற எல்லா எழுத்துக்களோடும் வேற்றுமை வழக்கு உறவே கொண்டிருக்க வேண்டும். ஒரே சூழலில் எல்லா எழுத்துக்களும் வழங்குதலைக் காண்பது அரிது. ஆகவே இந்நிலையை மெய்ப்பித்தலும் அரிதே. இருந்தும் இதனை உண்மை எனக் கொள்ள வேண்டும். இவ்வாறு வகுக்கப் பெற்ற

ஒன்றையே மொழியியலார் எழுத்து[12] என வழங்கு-கின்றனர். வேற்றுமை வழக்கில் வழங்கும் ஒலியின் குறியாக இவ்வெழுத்து அமைக்கப்படுகிறது; அமைக்கப் பட்டு எழுதிக்காட்டப்படுகிறது. மொழியின் பேச்சொலி-கள் சதுரக்கோடுகளிடையும் ( [........] என ) எழுத்-துக்கள் சாய்வுக்கோடுகளிடையிலும் ( /....../ என ) எழுதிக்காட்டப்பெறும். எடுத்துக்காட்டாக [k] என்பது ஒலி; /k/ என்பது எழுத்து. ஒலி நெடுங்கணக்கால் எழுதப்படும் ஒலிவரைவிலிருந்து[13] எழுத்துக்கள் அமைக்கப்படுகின்றன. இரண்டும் வேறுவேறு. ஆகவே இரண்டையும் பிரித்தறியும்படி இருவேறு எழுத்து முறைகள் தேவைப்படுகின்றன.

### 10. முதல்நெறி இதனோடு முடிவதில்லை

இவ்வாறு ஒலிவரைவிலிருந்து எழுத்துக்களைத் தேர்ந்து அமைத்த பின்னும் எவ்வகையிலும் வேற்றுமை வழக்கிற்கு உட்படாது வழங்கும் ஒலிகளும் பல இருக்கும். அத்தகைய ஒலிகள் எழுத்துக்களாக வகுக்கப்பெற்ற ஒலி-களோடு ஒலியொற்றுமை கொண்டவைகளாக இருக்கலாம். அவற்றின் திரிபுகளாக—சூழலுக்கேற்ற திரிபுகளாக—த் தோன்றலாம்; அவற்றோடு வேற்றுமை வழக்கில் வழங்காது தமக்கென உரிய வேறு சில சூழல்களில் வழங்கலாம். இத்தகைய ஒலிகளைப் புறக்கணிக்காது இவற்றை மற்ற எழுத்துக்களோடு உறவு படுத்தலாம். இவ்வாறு உறவு படுத்தி எழுத்துக்கள் வகுப்பதே முதல்நெறியின் அடுத்த பணியாகும்.

---

12. Phoneme 13. Phonetic transcription

12. ஒரு மொழியில் இரு வேறொலிகள் இரு வேறு சூழல்களில் வழங்குவதாகக் கொள்ளுவோம். ஒன்று வழங்கும் சூழலில் மற்றது வழங்குவதில்லை. அதாவது ஒவ்வொன்றுக்கும் தனித்தனியே வழங்குவதற்கு உரிய சூழல்கள் உண்டு. இதனால் ஓரொலியே மற்றொரு சூழலில் வேறோரொலியாக வழங்குகிறது எனக்கருத இடம் ஏற்படுகிறது. ஆகவே இவ்விரண்டு ஒலிகளையும் ஓரெழுத்து எனவே கொள்ளலாம். அதாவது ஓரெழுத்துக்குச் சூழல் வேறுபாட்டால் வேறுபடும் இரண்டு ஒலிகள் உண்டு என்பது இதன் பொருள். எடுத்துக்காட்டாகத் தமிழில் மொழிமுதலில் [k] என ஓரொலியும் மெலிப்பின் [g] என ஓரொலியும் வழங்குகின்றன. ஒன்று வழங்கும் சூழலில் மற்றது வழங்குவதில்லை. எடுத்துக்காட்டு : [kiḷaṅgu]; ஆனால் [giḷaṅku] என்பதில்லை. இங்கு மொழி முதல் உயிர்ப்புக் ககரமே மெலிப்பின் சிறிது வேறுபட்டுக் குரல் ககரமாக வழங்கிறது எனக் கொள்ளலாம். ஆகவே இரண்டையும் ஓரெழுத்தாக வகுக்கலாம். தமிழிலும் இவை இரண்டும் ஒரே ககர எழுத்தாக வழக்கப் பெற்றிருக்கின்றமை காண்க. எழுத்துக்கமைந்த ஒலிகளை **எழுத்தொலிகள்**[14] எனக்குறிக்கலாம். எழுத்தையும் எழுத்துக்களையும் மொழியியலார் கீழ்க்கண்டவாறு எழுதிக் காட்டுவர் :-

/K/ : [k] மொழி முதலில்
[g] மெலிப்பின்

இருவேறொலிகள் தமக்கென உரிய வேறு வேறு சூழல்களில் வழங்குமானால் ஒன்றுக்குரிய சூழலில்

14. Allophones

மற்றென்று வழங்காதிருக்குமானல் அவற்றை ஓரெழுத்தாக ஒற்றுமைப்படுத்துகின்றேம், ஆகவே இவ்வழக்கிற்கு ஒற்றுமைவழக்கு[15] என மொழியியலார் பெயரிட்டுள்ளனர். ஒற்றுமை வழக்கு, சூழல் வேறுபாட்டால் வேறுபட்ட ஒலிகளை—உறவுடையொலிகளை—எழுத்தொலிகளைக் கண்டறியும் வழியாகும். இவ்வொற்றுமை வழக்கு முன் குறிக்கப்பட்ட வேற்றுமை வழக்கிற்கு மறுதலையானது என்பது எளிதில் விளங்கும். ஒற்றுமை வழக்கில் வழங்கும் வேறுபட்ட ஒலிகள் பொருள்வேற்றுமை செய்யமாட்டா; அவை வேறு வேறு சூழல்களில் வழங்குகின்ற காரணத்தால் அவை பொருள்வேற்றுமை செய்யும் என மெய்ப்பிக்க முடியாது.

ஒற்றுமை வழக்குக் கருத்தினைத் தமிழ் மொழியில் அமைந்த வல்லொலிகளின் துணைக்கொண்டு தெளிவாக விளக்கலாம். 386-ஆம் பக்கத்தில் உள்ள பட்டியல் சில தமிழ் ஒலிகள் சில சூழல்களில் வழங்குவதை எடுத்துக் காட்டுகிறது.

அந்தப் பட்டியலை ஆராய்கின்றபோது உயிர்ப்பொலிகள் தனித்தனியே வேற்றுமை வழக்கிலும் உரைவொலிகள் தனித்தனியே வேற்றுமை வழக்கிலும் வழங்குவதைக் காண்கிறேம். உயிர்ப்பொலிகளும் குரலொலிகளும் உரைவொலிகளும் வேற்றுமை வழக்கில் வழங்கவில்லை. அதாவது இவை முன்கண்டவாறு தமக்கே உரிய வேறு வேறு சூழல்களில் வழங்குகின்றன. ஒருவகை, மற்றொருவகைக்குரிய சூழலில் வழங்குவதில்லை. இதனை 387-ஆம் பக்கத்துப் பட்டியல் காட்டும்.

15. Complementary distribution

| ஒலி கள் | மொழி முதல்; வலிப் பின் | இரட்டை | மெலிப் பின் | உயிர் இடை | எடுத்துக் காட்டுக்கள் |
|---|---|---|---|---|---|
| k | √ | √ | — | — | காக்கை வெட்கம் |
| g | — | — | √ | — | தங்கை |
| h | — | — | — | √ | காகம் |
| c | √ | √ | — | — | சொக்கப்பா பச்சை கட்சி |
| j | — | — | √ | — | பஞ்சு |
| s | — | — | — | √ | பசி |
| ṭ | — | √ | — | — | பட்டம் |
| ḍ | — | — | √ | — | பண்டம் |
| ḍ̇ | — | — | — | √ | படம் |
| t | √ | √ | — | — | தத்தை |
| d | — | — | √ | — | தந்தை |
| δ | — | — | — | √ | எது |
| p | √ | √ | — | — | பாப்பா திட்பம் |
| b | — | — | √ | — | பாம்பு |
| ḃ | — | — | — | √ | இருபது |

மொழி முதல்; மெலிப்பின் உயிரிடை
வலிப்பின்;
இரட்டை- குரல் உரைவு
உயிர்ப்பு

| | | | |
|---|---|---|---|
| க | k | g | h |
| ச | c | j | s |
| ட | ṭ | ḍ | ḍ̇ |
| த | t | d | δ |
| ப | p | b | ḃ |

இவ்வாறு தனித்தனியே வழங்கும் வழக்கே ஒற்றுமை வழக்கு என்பது, k, g, h என்பவை இவ்வாறு ஒற்றுமை வழக்கில் வழங்குகின்ற காரணத்தால் அவை மூன்றொலிகளையும் ஓரெழுத்தாக வகுக்கலாம். இவ்வாறே c, j, s முதலியவற்றையும் ஓரெழுத்தாக வகுக்கலாம். இவ்வாறாகத் தமிழில் வல்லெழுத்துக்களுக்கு மும்மூன்றொலிகள் அமைந்துள்ளதைக் காணுகிறோம். அவற்றை இவ்வாறு எழுதிக்காட்டலாம்:—

/க/ : [k] மொழி முதலும்
வலிப் பின்னும்
இரட்டித்தும்
: [g] மெலிப்பின்
; [h] உயிரிடை
/ச/ : [c] மொழி முதலும்
வலிப்பின்னும்
இரட்டித்தும்

: [j] மெலிப்பின்
: [s] உயிரிடை

/ட/ : [ṭ] இரட்டித்து
: [ḍ] மெலிப்பின்
: [ḍ̇] உயிரிடை

/த/ : [t] மொழி முதலும் இரட்டித்தும்
: [d] மெலிப்பின்
: [δ] உயிரிடை

/ப/ : [p] மொழி முதலும் வலிப்பின்னும் இரட்டித்தும்
: [b] மெலிப்பின்
: [ḃ] உயிரிடை

*14.* மேலே விளக்கியவற்றால் "எழுத்து என்பது வேறு, ஒலி என்பது மேறு" எனத் தெளிவாகும். ஒலிகள்தான் மொழியில் உண்டு; பேசப்படுகின்றன. அவையே உண்மை. எழுத்துக்கள், இவ்வொலிகளுக்கு இடப்பட்ட குறிகளே—இடுகுறிகளே—ஆகும். ஆகவே எழுத்துக்கள் கற்பனையே ஆகின்றன. பெரும்பாலும் எழுதப்படும் மொழிக்குப்[16] பயன்படுவதற்காகவே இவ்விடு குறிகளாம் எழுத்துக்கள் வகுக்கப்படுகின்றன இவ்வாறு வரையறை செய்து வகுக்கப்படும் எழுத்துக்களை மொழியியலார் Phoneme என்பர். இவ்வெழுத்துக்களுக்குரிய ஒலிகளை நாம் **எழுத்தொலிகள்** எனலாம். எழுத்தொலியை Allophone என்பர். இவ்வேறுபாடுகள் தோன்ற எழுத்-

---

16. **Written language**

துக்கள் சாய்வு கோடுகளுக்கிடையிலும் எழுத்தொலிகள் கட்டக் கோடுகளுக்கிடையிலும் மேலே எழுதிக் காட்டப் பட்டுள்ளன. எழுத்து, அதற்குரிய எழுத்தொலி ஒன்றாலும் எழுதிக் காட்டப்படலாம்; வேறு ஓர் இடுகுறியாலும் எழுதிக் காட்டப்படலாம். பெரும்பாலும் எழுத்தொலி ஒன்றாலேயே எழுத்து எழுதிக்காட்டப்படுவது இன்றைய வழக்கம்.

*15.* முதல் நெறியாகிய வழக்குநெறியின் அடிப் படையில் ஒருமொழிக்கு எழுத்துக்களைச் செம்மையாக வகுக்கலாம். அந்த நெறியினை இவ்வாறு குறிக்கலாம்:— "ஒருமொழியின் ஒலிவரைவில் அமைந்த பல்வேறொலிகள் வேற்றுமை வழக்கில் வழங்கிப் பொருள் வேற்றுமை செய்யுமானால் அவற்றை வேறுவேறெழுத்துக்களாக வகுக்கலாம். வேறுபட்ட ஒலிகள் வேற்றுமை வழக்கில் வழங்காது ஒற்றுமை வழக்கில் வழங்கிப் பொருள் வேற்றுமை செய்யப் பயன்படாதிருக்குமானால் அவற்றை ஒரு குழுவாக்கி அக்குழுவினை ஓரெழுத்தாக வகுக்கலாம். அக்குழுவொலிகள் எல்லாம் அவ்வெழுத்திற்குரிய எழுத்தொலிகளாகும்."

*16.* பல்வேறொலிகள் ஓரெழுத்தாக வகுக்கப்பெறலாம் என முதல்நெறி விளக்குகிறது. அவ்வொலிகள் ஒற்றுமை வழக்கில் வழங்க வேண்டும் என்பதே அவ்வகுப்புக்கு அடிப்படை. நடைமுறையில் ஒருமொழியில் ஓரெழுத்துக் குரிய எழுத்தொலிகள் ஒன்றாகவும் இருக்கலாம். இவ் வாறிருப்பது அந்த மொழியின் இயல்பைப் பொறுத்தது ஆகும். பெரும்பாலும் ஓரெழுத்துக்குப் பல எழுத்தொலி-கள் அமைந்திருப்பதையே உலகமொழிகளில் காணு-

கிறோம். ஆகவே எழுத்து என்பது ஒற்றுமை வழக்கில் வழங்கும் பல ஒலிகளால் அமைந்த குழுவிற்கு இடப்படும் குறியேயாகும். இவ்வாறு பல ஒலிகளும் ஓரெழுத்து என ஆராய்ச்சியளவில் வகுப்பது மட்டும் போதாது; அம்மொழியினைப் பயில்வோருள்ளத்தில் அவ்வொலிகள் எல்லாம் ஓரெழுத்து என்ற எண்ணம் தோன்ற வேண்டும். ஆனல் ஒற்றுமை வழக்குக் கொள்கையின் அடிப்படையில் எத்தகைய ஒலிகளும் ஓரெழுத்தாகும் வாய்ப்பைப் பெறு-கின்றன. எடுத்துக் காட்டாகத் தமிழ்மொழியில் லகரமும் குற்றியலுகரமும் ஓரெழுத்தாகலாம். காரணம் இரண்டும் எப்போதும் ஒற்றுமை வழக்கில்தான் வழங்குகின்றன. இத்தகைய முற்றிலும் வேறுபட்ட ஒலிகளை ஓரெழுத்தாக வகுத்தால் அவை ஓரெழுத்து என்ற எண்ணத்தைப் பயில்வோர் உள்ளத்தில் எளிதில் தோற்றுவிக்கமாட்டா. ஆகவே இவ்வெண்ணத்தைத் தோற்றுவிக்கும் முறையில் ஒற்றுமை வழக்குக்கள் அமைய வேண்டும். இல்லையேல் கொள்கை ஒன்று, நடைமுறை வேறொன்று என்றாகிப் பயில்வோருள்ளத்தில் குழப்பமே தோன்றும்

மேலும் பல்வேறொலிகளை ஓரெழுத்து என வகுப்-பதிலும் பொருள் இல்லை என ஆகும். அத்தகைய ஓரெழுத்து எனும் எண்ணம் தோன்றுதலுக்கு அவ்-வொலிகள் எவ்வகையிலாவது உறவு—ஒற்றுமை கொண்டு விளங்குதல் வேண்டும். அவ்வாறு விளங்காத ஒலிகளை ஓரெழுத்து என வகுப்பதால் பயில்வோருக்குக் குழப்பமும் மயக்கமுமே ஏற்படும். ஆகவே தமக்குள் ஒற்றுமை கொண்ட ஒலிகளை ஓரெழுத்தாக வரையறுப்பதே பொருத்தம். இக்கருத்தைக் கூறுவதே இரண்டாவது நெறி

யாகும் : ஒற்றுமை வழக்கில் வழங்கும் பல்வேறொலிகளை ஓரெழுத்தாக வகுக்க வேண்டுமானால் அவை தமக்குள் ஒலியொற்றுமை[17] கொண்டு விளங்க வேண்டும்.

17. ஒலியொற்றுமை என்பது பிறப்பு முறையால் ஒத்திருத்தலாகும். மெய்யொலிகள் ஒலிப்பிடம், ஒலிப்-புறுப்பு, ஒலிப்புமுறை, குரல்நிலை ஆகிய பிறப்பு முயற்சி-களோடு பிறக்கின்றன. பல்வேறொலிகளுக்கு இப்பிறப்பு முயற்சிகளில் ஒன்றோ பலவோ ஒன்றாக இருக்குமானால் அவ்வொலிகள் அந்த அளவில் ஒற்றுமையுடையன எனக் கருதப்படும். தமிழிலக்கண ஆசிரியர்கள் இனவெழுத்துக்-கள் எனப் பாகுபடுத்துவது இத்தகையதே ஆகும். எடுத்துக்காட்டாகத் தமிழில் இரட்டித்து வழங்கும் வல்-லெழுத்துக்கள் ஒலிப்பு முறையாலும் குரல் நிலையாலும் ஒற்றுமையுடையன. அதாவது அவை தடையுயிர்ப்-பொலிகள். மெல்லொலிகள் ஒலிப்பு முறையால் ஒற்றுமை யுடையன; அதாவது அவை மூக்கொலிகள். டகரணகரம் ஒலிப்பிட ஒலிப்புறுப்பால் ஒற்றுமை யுடையன. அதாவது அவை வல்லண்ண வளைநாவொலிகள், இத்தகைய ஒலி யொற்றுமையுடைய ஒலிகளே ஓரெழுத்தாகத் தக்கன.

18. இக்கருத்தினைத் தமிழெடுத்துக்காட்டுக்கள் கொண்டே தெளிவுபட விளக்கலாம். தமிழ் வல்லெழுத்-துக்களுக்குள்ள எழுத்தொலிகள் முன்பே விளக்கப் பட்டன. ( காண்க 13. ) :-

---

17 Phonetic similarity

| | | உயிர்ப்புத் | குரல் | |
|---|---|---|---|---|
| | | | தடை | உரைவு |
| | | தடை | | |
| /க/ | பின்நா மெல்லண்ணம் | [k] | [g] | [h] |
| /ச/ | முன்நா முன்வல்லண்ணம் | [c] | [j] | [s] |
| /ட/ | வளைநா வல்லண்ணம் | [ṭ] | [ḍ] | [ḍ̇] |
| /த/ | நுனிநா அண்பல் | [t] | [d] | [δ] |
| /ப/ | மேல் கீழிதழ் | [p] | [b] | [ḃ] |

ஒவ்வொரு வல்லெழுத்திற்கும் மும் மூன்ருெலிகள் அமைந்துள்ளன. இவ்வொலிகள் மும்மூன்றும் ஒலிப்பிட ஒலிப்புறுப்புக்களாகிய இரண்டு பண்புகளால் ஒற்றுமையுடையன என்பது தெளிவாக விளங்குகிறது. முதல் வரிசையும் இரண்டாம் வரிசையும் மேலும் தடைப்பண்பொன்ருலும் ஒற்றுமையுடையன. இத்தகைய ஒலியொற்றுமை கொண்டிருக்கின்ற காரணத்தால் இவை மும்மூன்றும் ஓரோரெழுத்து என்ற எண்ணத்தைப் பயில்வோருள்ளத்தில் எளிதில் தோற்றுவிக்கின்றன. இவற்றிடை அமைந்திருக்கும் சிறு வேறுபாடு எந்தச் சூழலில் எவ்வாறு தோன்றும் என்பதை மொழியினைப் பயில்வோர் எளிதில் மனத்தில் கொள்ள முடியும்; நடைமுறைச் சிக்கல் எதுவும் தோன்ருது. ஆகவே இவ்வாறு ஒலியொற்றுமையுடைய ஒலிகள் ஒற்றுமை வழக்கில் வழங்கிஞல்தான் அவற்றை ஓரெழுத்தாக வகுக்க வேண்டும்.

*19.* இக்கருத்தின் மறுதலைக்கருத்தும் எண்ணத்தக்கது. எவ்வகையிலும் ஒலியொற்றுமை கொண்டில்லாத ஒலிகள் ஒற்றுமை வழக்கில் வழங்கிஞலும்கூட அவற்றைத் தனித்தனி எழுத்துக்களாகத்தான் வகுக்கவேண்டும்.

20. தமிழ் முன்னோர்கள் தமிழுக்கு எழுத்துக்களை வகுத்தபோது வேறுபட்ட ஒலிகளையெல்லாம் வேறுபட்ட எழுத்துக்களாக வகுத்திருக்க வேண்டும். ஒற்றுமைவழக்கு வேற்றுமைவழக்குக் கருத்துக்கள் அவர்களுக்குத் தெரிந்திருந்தவைகளாகத் தோன்றவில்லை, ஆனால் மற்றொரு மொழியியல் உண்மையும் கருதத்தக்கது:- ஒரு மொழியினைப்பேசுவோர் தம்தாய்மொழியில் பொருட் குறிப்புள்ள ஒலிகளை மட்டுமே இயல்பாக உணரவும் பொருட்குறிப்பில்லாத ஒலிகளை உணராது இயல்பாகப் புறக்கணிக்கவும் பயின்றிருப்பார்; இன்றைய மொழியியல் கொள்கைகளின்படி ஒற்றுமை வழக்கில் வழங்கத்தக்க ஒலிகளிடை அமைந்துள்ள சிறுஒலிவேறுபாடுகளை அன்னோர் உணராது புறக்கணிக்கவும் பயின்றிருப்பார். இவ்வியல்பு காரணமாக நம் முன்னோர்கள் வகுத்த தமிழ் நெடுங்கணக்கிற்கும் நாம் வகுக்கும் எழுத்துக்களுக்கும் — இலக்கியத் தமிழைப் பொறுத்த வரையிலாவது —பெருவேறுபாடு அமைந்திருக்கவில்லை.

21. மொழிகளின் எழுத்தியலமைப்பெல்லாம், வரையறைக்கும் கட்டுப்பாட்டுக்கும் ஒழுங்குக்கும் உட்பட்டவையே. மொழிகளில் இயல்பாகவே **ஒழுங்கமைப்புக்கள்**[18] பொருந்திவிடுகின்றன. எடுத்துக்காட்டாகப் பழந்தமிழில் வகுக்கப்பட்ட வல்லெழுத்துக்களையும் மெல்லெழுத்துக்களையும் குறிக்கலாம்;-

| | | | | | |
|---|---|---|---|---|---|
| க | ச | ட | த | ப | ற |
| ங | ஞ | ண | ந | ம | ன |

இங்கு ஆறு வல்லெழுத்துக்களுக்கும் ஏற்ற ஆறு மெல்லெழுத்துக்கள்[19] அமைந்திருத்தலைக் காணலாம்.

18. Pattern Congruity or Neatness of pattern
19. Homorganic Nasals

நன்னூலார் காட்டிய, தமிழில் அண்ணமெய்யாகிய யகரம் அண்ண உயிர்களான இ, ஈ, எ, ஏ ஆகியவற்றுடனும் இதழ் மெய்யாகிய வகரம் இதழ் உயிர்களான உ, ஊ, ஒ, ஓ, ஆகியவற்றுடனும் மொழிமுதலில் வாரா என்பது ஒழுங்கமைப்பிற்கு மற்ருேரெடுத்துக்காட்டு.

இன்றைய பேச்சுத்தமிழில் வல்லெழுத்துக்களின் எழுத்தொலிகள் ஓரொழுங்கு முறையில், மும்மூன்ருக உயிர்ப்பு, குரல், உரைவு என்ற முறையில், அமைந்திருப்பது முன்பே காட்டப்பட்டுள்ளது. (18 காண்க.) இதுவும் ஒழுங்கமைப்பிற்கு ஒருசான்ருகும். சுருங்கச் சொன்னல் மொழிகளின் அமைப்பே இத்தகைய ஒழுங்கமைப்புக்கள் கொண்டது தான்.

22. இவ்வொழுங்கமைப்பு எழுத்து எழுத்தொலிகள் வகுப்பிற்குத் துணைபுரிகிறது. எழுத்துக்கள் வகுப்பு, மொழியின் ஒழுங்கமைப்பைக் கெடுப்பதாக அமையக் கூடாது தமிழ் எழுத்துக்கள் வகுப்பிலிருந்தே ஓரெடுத்துக் காட்டுத் தந்து இதனை விளக்கலாம். சொக்கன், பச்சை என்ற தமிழ்ச் சொற்களில் அமைந்த வல்லண்ண ஒலியினை (சகரத்தை) இருவகையில் எழுதலாம். ஒன்று c. (தனியொலி); மற்றது ṭs (கூட்டொலி.) ஆனல் எழுத்து வகுப்பிற்கு இரண்டில் ஒன்றையே தேர்ந்தெடுக்கவேண்டும். எதனைத் தேர்ந்தெடுப்பது? இந்நிலையில் தமிழெழுத்தியலின் ஒழுங்கமைப்புத் துணைபுரிகிறது. ṭs என்பதை ஒலியாக எடுத்துக் கொண்டால் அது தமிழின் ஒழுங்கமைப்பிற்கு ஒத்துவரவில்லை. காரணம் தமிழ்மொழியில் எந்தத் தடையொலியை அடுத்தும் உரைவொலி வருதல் இல்லை ஆகவே இதனைக் கொள்ளுதல் விதிக்கு விலக்

காகும். மேலும் தமிழில் மொழிமுதலில் இரண்டு மெய்-கள் தொடர்ந்து வழங்குதல் இல்லை என்பது ஓ'ரொழுங்கமைப்பு விதி. ṭs என்பதை ஒலியாகக் கொண்டால் சொக்கன் என்பது போன்ற சொற்களில் இரண்டு மெய்கள் தொடர்ந்து வழங்குதலாக ஏற்பட்டு அவ்வொழுங்கமைப்பும் கெடுகிறது. இவ்வாருகத் தமிழின் எழுத்தி-யலமைப்புக்கு ஏற்பச் சகரத்தை c எனவே கொள்ள வேண்டும்.

நெடுங்கணக்காக்கத்தின் மூன்ருவதுநெறி இதுதான்; 'ஒரு மொழியின் எழுத்துக்கள் வகுப்பு அம்மொழியின் எழுத்தியலொழுங்கமைப்பிற்கும் ஏற்ப அமைதல் வேண்டும்."

23. ஒலிகள் பலவற்றையே எழுத்துக்கள் சிலவாக வகுக்கின்ருேம். இதனுல் எழுத்துக்களில் தொகை சுருங்கி அமைகிறது இது ஒரு சிறப்பே. சிலர் ஒலிகள் எல்லா-வற்றையும் எழுத்துகளாகவே வகுக்கலாமே என்கின்றனர். அவர்கள் கருத்துப்படியானுல் மொழியில் எழுத்துக்கள் பல்கியிருக்கும் இதனுல் தேவையில்லாத சிக்கல்கள் தோன்றும் சிக்கல் எதுவும் இல்லாது குறைந்த எழுத்-துக்களை வகுக்க முடியுமானுல்அ வ்வகுப்பே சிறப்புடையது. இன்றைய தமிழுக்குச் சகரத்தை ṭs / ḍz என வகுப்பதைக் காட்டிலும் c/j என வகுப்பது ஏற்புடையது என மேல் விளக்கப் பட்டது. (22 காண்க.) ஏற்புடையது மட்டுமல்லாது சிக்கனமும் கூட எனலாம். c/j என வகுக்காது ṭs/ḍz என வகுத்தால் ṭ, ḍ, z, எனும் மூன்ருெலி-களைத் தமிழுக்குப் புதிதாகக் கொள்ள வேண்டியிருக்கும்.

(s முன்பே உண்டு.) இதனால் தமிழ் எழுத்தொலிகளின் தொகை தேவையில்லாமலே கூடும். இது சிறந்த வகுப்பும் அல்ல; அதில் பயனும் இல்லை.

இக்கருத்துக்களைக் கொண்டதே நாலாம் நெறி: "மொழிக்கு எழுத்துக்கள் வகுக்கின்ற போது முன்னெறிகளுக்கு முரண் இல்லாத முறையில் இயன்றவரை குறைந்த தொகையுள்ள எழுத்துக்களையும் எழுத்தொலிகளையுமே வகுக்க வேண்டும்."

இந்நான்கு நெறிகளைக் கொண்டு இன்றைய மொழியியலார், எழுத்துக்கள் வகுக்கப் பெற்றிராத மொழிகளுக்குப் புதிதாக எழுத்துக்களை வகுத்துத் தருகின்றனர். இதுவே மொழிக் கல்விக்கு மொழியியலார் தந்த தலையாய கொடையாகும்.

ụ ē ů ẓ n̄
ô ā
ü û
ḏ ç ă ɛ̃ ã

# புறவிதழ் இரண்டு

[இன்று மொழியியலில் பயின்று வழங்கும் சொற்கள் பயிற்சியால் சிறப்புப் பொருள் பெற்றுவிட்டன. அவை மொழியியற் கலைச்சொற்கள் (Linguistic Terminology) எனப்படும். அவை பல, தமிழ் மொழியெயர்ப்புக்களுடன் இந்நூலுள்ளும் இடம்பெற்றுள்ளன. பிற அறிஞர் தமிழ் நூல்களிலும் இவை மொழிபெயர்க்கப் பெற்று உள்ளன. அம்மொழிபெயர்ப்புக்கள் இந்நூல் மொழிபெயர்ப்புக்களுடன் ஒத்தும் போகலாம்; ஒவ்வாதும் விளங்கலாம் ஒவ்வாமை பலவும் படிப்போருக்கு மயக்கம் தரும். ஆங்கிலத்தில் அமைந்த மொழியியல் நூல்களை ஓத முயல்வோருக்குத் தமிழுடன் செல்லும் ஆங்கிலக் கலைச் சொற்கள் துணை நிற்கும். அம்மயக் கறுத்தல் பொருட்டும் இத்துணை நிற்றல் கருதியும் இத் *தமிழ் எழுத்தியலில் ஏறிய மொழியியற் கலைச் சொற்கள்* இங்குத் தமிழுடன் தொகுத்துத் தரப்படுகின்றன.]

# மொழியியற் கலைச்சொற்கள்

| | |
|---|---|
| Accent | ஒலியழுத்தம் |
| Affricate sound | தடை உரைவொலி |
| Allophone | எழுத்தொலி (மாற்றொலியன்) |
| Alphabet | வரிவடிவெழுத்துக்கள், நெடுங்கணக்கு |
| Apex of the tongue | நா நுனி அல்லது நுனி நா |
| Articulator | ஒலிப்புறுப்பு |
| Articulatory phonetics | ஒலிப்பியல் முறை |
| Assimilation | ஒலியியைபு |
| Auditory phonetics | கேள்வி முறைஆராய்ச்சி |
| Back vowel | பின்னுயிர் |
| Bilabial sound | ஈரிதழொலி |
| Bilingual persons | இருமொழியாளர் |
| Blade of the tongue | தகட்டு நா |
| Central vowel | நடுவுயிர் |
| Collation | ஒப்பிட்டு வகுத்தல் |
| Complementary distribution | ஒற்றுமை வழக்கு |
| Contrastive distribution | வேற்றுமை வழக்கு |
| Dental sound | பல்லொலி |
| Dialect | கிளைமொழி |
| Diaphragm | வயிற்றுக் கூரை |

| | |
|---|---|
| Distribution | வழக்கு |
| Dorsom of the tongue | பின் நா (அல்லது அடி நா) |
| Environment | சூழல் |
| Flap sound | தட்டொலி |
| Fricative sound | உரைவொலி |
| Friction | உரைவு |
| Front vowel | முன்னுயிர் |
| Gathering | தொகுத்தல் |
| Gloss | பொருள் விளக்கம் |
| Glottal stop | குரல்வளைத் தடையொலி |
| Hard palate | வல்லண்ணம் |
| Higher-low-sound | உயர்தாழொலி |
| High-sound | உயரொலி |
| Homorganic nasal | இனமூக்கொலி |
| Juncture | விட்டிசைப்பு |
| Labial sound | இதழொலி |
| Lamina of the tongue | தகட்டு நா |
| Larynx | குரல் வளை |
| Lateral sound | புறவளியொலி, புறவொலி |
| Lax sound | தளர்வொலி |
| Lip | இதழ் |
| Lip-rounding | இதழ் குவிவு |
| Lip-spreading | இதழ் விரிவு |
| Liquid consonant | தெளிவோட்டம் உள்ள மெய் |

| | |
|---|---|
| Literary Tamil | இலக்கியத் தமிழ் |
| Low-sound | தாழொலி |
| Lungs | நுரையீரல்கள் |
| Manner | முறை |
| Manner of articulation | ஒலிப்பு முறை ; ஒலிப்பு வகை |
| Mediopalate | நடுவண்ணம் |
| Mid-sound | இடையொலி |
| Minimal pair | சிற்றிணை |
| Modern Tamil | இன்றைத் தமிழ் |
| Nasal cavity | மூக்ககம் ; மூக்கறை |
| Nasal sound | மூக்கொலி |
| Old Tamil | பழந்தமிழ் |
| On-glide | முன் தாழொலி |
| Onomotop sound | ஒலிக்குறிப்பு |
| Oral sound | வாயொலி |
| Palatalization | அண்ணொலித் திரிபு ; அண்ணொலியாக்கம் |
| Pattern congruity | ஒழுங்கமைப்பு |
| Pause | விட்டிசைப்பு |
| Pharynx | தொண்டை |
| Phoneme | எழுத்து (ஒலியன்) |
| Phonemic writing | எழுத்து நிலை வரைவு |
| Phoneticians | ஒலியியல் அறிஞர் |

| | |
|---|---|
| Phonetics | ஒலியியல் |
| Phonetic similarity | ஒலியொற்றுமை |
| Phonetic transcription | ஒலி வரைவு |
| Phonological environment | ஒலிச்சூழல், ஒலியியற்சூழல் |
| Phonology | எழுத்தியல் |
| Point of Articulation | ஒலிப்பிடம் |
| Postpalate | பின்னண்ணம் |
| Postvelum | பின்மெல்லண்ணம் |
| Prepalate | முன்னண்ணம் |
| Pre-Tamil | முன்னைத் தமிழ் |
| Prevelum | முன்மெல்லண்ணம் |
| Production of sound | ஒலிப் பிறப்பு |
| Retroflex sound | வளை நா ஒலி |
| Rolled sound | துடிப்பொலி |
| Roof of the mouth | வாயகக் கூரை |
| Root of the tongue | வேர் நா |
| Script | நெடுங்கணக்கு |
| Semi-vowel | அரையுயிர் |
| Significant | (பொருட்) சிறப்பு |
| Speech sound | பேச்சொலி |
| Spirant | உரைவொலி |
| Spoken Tamil | பேச்சுத் தமிழ் |
| Stops or stop-plosives | தடையொலி ; தடைவெடியொலி |

| | |
|---|---|
| Stress | ஒலியழுத்தம் |
| Syllable | அசை |
| Tense sound | வலிவொலி |
| Tip of the tongue | நா நுனி |
| Toothridge or alveolum | அண்பல்; ஈறு |
| Trachea | மூச்சுக் குழல் |
| Trilled sound | துடிப்பொலி |
| Uvula | உள் நாக்கு |
| Velar sound | மெல்லண்ண ஒலி |
| Velum | மெல்லண்ணம் |
| Vibrant sound | துடிப்பொலி |
| Vocal sound | உயிரொலி |
| Voice | குரல் |
| Voiced sound | குரலொலி |
| Voiceless sound | உயிர்ப்பொலி |
| Vowel | உயிர் |
| Vowel release | ஈற்றுத்துணையுயிரொலி |
| Windpipe | மூச்சுக்குழல் |
| Written Tamil | எழுத்துத் தமிழ் |

# குறுக்க விளக்கம்

| | |
|---|---|
| BSOAS. | Bulletin of SOAS. |
| CGDL. | A Comparative Grammar of the Dravidian Languages by Dr. Robert Caldwell. |
| CML. | A Course in Modern Linguistics by C. F. Hockett. |
| CPDL. | Collected Papers on Dravidian Linguistics by Prof. T. Burrow. |
| DCPK. | Dravidian Comparative Phonology A Sketch by M. B. Emeneau. |
| DED. | A Dravidian Etymological Dictionary by T. Burrow and M. B, Emeneau. |
| HBODTL. | A Hand Book of the Ordinary Dialect of the Tamil Language by Dr. G. U. Pope. |
| HGTT. | History of Grammatical Theories in Tamil by P. S. Subrahmanya Sastri. |
| HTL. | A History of Tamil Language by T. P. Meenakshisundaran. |
| IDL. | An Introduction to Descriptive Linguistics by Dr. H. A. Gleason. |

| | |
|---|---|
| LVR. | L. V. Ramaswami Aiyar. |
| MEN. | A Modern Evaluation of Nannul by G. Vijayavenugopal. |
| OLA. | An Outline of Linguistic Analysis by B. Bloch and G. L. Trager. |
| OTATPD. | Old Tamil, Ancient Tamil and Primitive Dravidian by S. K. Chatterji |
| QJMS. | Quarterly Journal of Mythic Society. |
| SLTI. | A Study of the Language of Tamil Inscriptions by V. Jayakumari. |
| SOTP. | A Short Outline of Tamil Pronunciation by J. R. Firth. |
| SPST. | The Segmental Phonemes of Sanskritized Tamil By Murray Fowler. |
| TC. | Tamil Culture ( A Journal ) |
| TBISA. | Tamil - Brahmi Inscriptions of the Sangam Age by Iravatham Mahadevan. |
| TDC. | Tamil Dialect in Cylon by M. Shanmugam. |
| Tol. | Tolkaappiyam |

| | |
|---|---|
| TPOTP. | Two Problems of Old Tamil Phonology by F. B. J. Kuiper. |
| TVB. | Telugu Verbal Bases by Bh Krishnamurti. |

| | |
|---|---|
| இல. விள. | இலக்கண விளக்கம் |
| எழு. | எழுத்து |
| சிலம்பு. | சிலப்பதிகாரம் |
| தொல். | தொல்காப்பியம் |
| தொல். எழு. அ. ஆ. | தொல்காப்பிய எழுத்ததிகார ஆராய்ச்சி |
| தொன். விள. | தொன்னூல் விளக்கம் (வீரமா முனிவர்) |
| நச். / நச்சி. | நச்சினார்க்கினியர் |
| நன். | நன்னூல் |

# நூல் விளக்கம்

(இத் தமிழ் எழுத்தியலில் மேற்கோளாக எடுத்துக் காட்டப்பட்ட நூல்கள், பிறவகையில் சுட்டிக்காட்டப்பட்ட நூல்கள் ஆகியவை மட்டுமே இங்கு நூல் விளக்கப் பட்டியலில் இடம் பெறுகின்றன.)


இராகவையங்கார், மு. — கட்டுரை மணிகள் (1959) எம். ஆர். நாராயணையங்கார், மானாமதுரை.

இராகவையங்கார், மு. — ஆராய்ச்சித் தொகுதி (1964) பாரி நிலையம், சென்னை-1.

இளங்கோவடிகள் — சிலப்பதிகாரம், தி. தெ. சை. சி. நூற்பதிப்புக் கழகம், (1950) சென்னை-1.

குணவீர பண்டிதர் — நேமிநாதம் (1956), தி. தெ. சை. சி. நூ. கழகம், சென்னை-1.

சண்முகம், மு. — இக்கால மொழியியல் (1971), மதுரை.

சண்முகம், மு. — இக்காலத் தமிழ், (1967). சீயோன் பதிப்பகம், மதுரை-9,

திருத்தக்க தேவர் — சிந்தாமணி, (1959). தி. தெ. சை. சி. நூ. கழகம், சென்னை-1

தோலாமொழித் தேவர் — சூளாமணி, (19 ,2). தி. தெ. சை. சி. நூ. கழகம், சென்னை-1

திருவள்ளுவர் — திருக்குறள், (1961). தி. தெ சை. சி. நூ. கழகம், சென்னை-1.

திருவாய்மொழி — எஸ்.ராஜம்,(1956)சென்னை-1.

தேவ நேயப் பாவாணர் — ஆய்தம் (கட்டுரை), சை. சி. நூற்பதிப்புக் கழகத்தின் ஆயிரத்தெட்டாவது வெளியீட்டு விழா மலர், 1961 சென்னை-1.

தொல்காப்பியர் — தொல்காப்பியம், எழுத்ததிகாரம், நச்சினார்க்கினியம், (1961) தி. தெ. சை. சி. நூ. கழகம், சென்னை-1.

தொல்காப்பியர் — தொல்காப்பியம், எழுத்ததிகாரம், இளம்பூரணம், தி.தெ. சை. சி. நூ. கழகம், சென்னை-1

தொல்காப்பியர் — தொல்காப்பியம் (மூலம்) (1954), தி. தெ. சை. சி. நூ. கழகம், சென்னை-1.

| | |
|---|---|
| பவணந்தி | நன்னூல், (1953), சங்கர நமச்சிவாயர் உரை, உ. வே. சா. பதிப்பு, சென்னை-5. |
| பவணந்தி | நன்னூல், (1946), மயிலைநாதர் உரை, உ. வே. சா. பதிப்பு, சென்னை-5. |
| பவணந்தி | நன்னூல், சிவஞான முனிவர் விருத்தியுரை, (1961), தி. தெ. சை. சி. நூ. கழகம், சென்னை-1. |
| பவணந்தி | நன்னூல், காண்டிகையுரை, ஆறுமுக நாவலர் பதிப்பு, (1958), சென்னை. |
| புறநானூறு | டாக்டர் உ. வே. சா. பதிப்பு (1936), சென்னை-5. |
| பெருந்தேவனுர் | வீரசோழியம் உரை, கே.ஆர். கோவிந்தராச முதலியார் பதிப்பு. (1942), பவானந்தர் கழகம், சென்னை, |
| யாப்பருங்கல விருத்தி | எஸ். பவானந்தம் பிள்ளை பதிப்பு, (1916.), சென்னை. |
| வரதராசன், மு. | மொழிநூல், (1963), தி. தெ. சை. சி, நூ. கழகம், சென்னை-1. |
| வீரமாமுனிவர் | தொன்னூல் விளக்கம், (1857). |

வெள்ளை வாரணர் — தொல்காப்பியம் நன்னூல் எழுத்ததிகாரம், (1962), அண்ணாமலைப் பல்கலைக்கழகம் அண்ணாமலை நகர்.

வேங்கடராசலு ரெட்டியார், வே. — தொல்காப்பியம், எழுத்ததிகாரவாராய்ச்சி, (1941), சென்னைப் பல்கலைக் கழகம், சென்னை-5.

வைத்தியநாத தேசிகர் — இலக்கண விளக்கம், தாமோதரம் பிள்ளை பதிப்பு.

Arden, A. H — A Progressive Grammar of Common Tamil, Christian Literature Society, Madras- 1.

Baghirathi, S. — The Language of the Tamil Inscriptions (1050–1250 A. D.), M. Litt. Thesis, Unpublished, Annamalai University.

Bloch, B. and Trager, G. L. — Outline of Linguistic Analysis, (1942), Linguistic Society of America, Baltim ore.

Burrow, Prof. T. — Collected Papers on Dravidian Linguistics, Annamalai University, Annamalai Nagar, S I.

Burrow. T. and Emeneau, M. B. — A Dravidian Etymological Dictionary, Oxford University Press (1961).

Caldwell, Dr Robert. — A Comparative Grammar of the Dravidian Languages, (Reprint) (1956), Madras University, Madras-5.

Chatterji, Dr. S. K. — Old Tamil, Ancient Tamil and Primitive Dravidian, Tamil Culture, Vol. 11, No. 2, (1950) Madras.

Emeneau, M. B. — Dravidian Comparative Phonology, A Sketch,(1970) Department of Linguistics, Annamalai University, Annamali Nagar, S. I.

Emeneau, M. B. — Dravidian Lingusitics, Ethnology, and Folktales–Collected Papers. (1967) Annamalai University, Annamalai Nagar, S. I.

| | |
|---|---|
| Firth, J. R. | A Short Outline of Tamil Pronunciation in Arden's A Progressive Grammar of Common Tamil Language. 30 (1954) |
| Fowler, Murray | The Segmental Phonemes of Sanskritized Tamil. |
| Gleason, Dr. H, A, | An Introduction to Descriptive Linguistics, (1955), New York. |
| Hockett, C. F. | A Course in Modern Linguistics, (1958), The Macmillan Company, New York. |
| Jayakumari, V. | A Study of the Language of the Tamil Inscriptions, Seventh Centuary upto the Middle of the Eleventh Centuary A.D., Unpublished Thesis, University of Madras. |
| Krishnamurti, Bh. | Telugu Verbal Bases(1961), University of California Press, Berkeley and Los Angeles, |

Kuiper, F. B. J. Two Problems of Old Tamil Phonology: Convertibilityof Surds and Sonants (Indo Iranian Journal, 2,3. 1958).

Lisker, Leigh. The Tamil Occlusives: Short Vs. Long or Voiced vs. Voiceless, Indian Linguistics, (Turner Jubilee Volume-I 1958), Poona.

Mahadevan. I. Tamil Brahmi Inscriptions of the Sangam Age, II International Conference - Seminar of Tamil Studies, Madras, 1968.

Meenakshisundaran, T.P. A History of Tamil Language, Deccan College Post Graduate and Research Institute (1965), Poona.

Murugarathanam, T. A Linguistic Study of Andal's Works, M. Litt. Thesis, (1973), Unpublished, Madras University.

Pope, Dr. G U. A Hand Book of the Ordinary Dialect of the Tamil Language.

Potter, Simeon — Modern Linguistics, (1957). Andre Deutch, London.

RamaswamiAiyar, L. V. — Collected Papers of L. V RamaswamiAiyar,(Mimeo) Department of Linguistics, Annamalai University, Annamalai Nagar, S. I.

Rama Subbiah — Tolkaappiyam and Phonetics, Indo-Iranian Journal Vol. X. No-4 (1968).

Sankaran, C R. — Tolkaappiyar and the Science of Phonemics, Tamil Culture, 9, 1961.

Shanmugam, M. — A Tamil Dialect in Ceylon

Shanmugam, M. — Grammar of Colloquial Tamil, Unpublished, Thesis Annamalai University. Annamalai Nagar, S. I.

Shanmugam, M. — Vowel Split in Tamil Dialect, II International Tamil Conference-Seminar, Madras, 1968.

Subbaiya, K. V. — Dravidic Studies, Madras University, Madras.

| | |
|---|---|
| Subrahmanya Sastri, P. S. | Grammatical Theories in Tamil and their Relation to the Grammatical Literature in Sanskrit, (1954). Madras. |
| Subrahmanya Sastri, P. S. | Tolkaapiayam Translation |
| Tamil Lexicon (7 Volumes) | Madras University, (1924-1939). |
| Vijayavenugopal, G | A Modern Evaluation of Nannul (Eluttatikaram) (1968), Annamalai University, Annamalai Nagar, S. I. |
| Zvelebil, Kamil | The Vowels of Colloquia Tamil, Archiv Orientalnli 31, 1963. |

## பிழை பொறுக்க

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 28 | 21 | fiprous | fibrous |
| 32 | இறுதி | veriety | variety |
| 72 | 24 | then | than |
| 72 | 26 | lex | lax |
| 78 | இறுதி | them ovement | the movement |
| 80 | 22 | —ம்த்— | —ம்த்த்— |
| 85 | இறுதி | Bllabial...fricative | Bilabial...fricative |
| 95 | 3 | குரங்கிலிலுள்ள | குரங்கிலுள்ள |
| 98 | 1 | மெலிமுதல் | மொழி முதல் |
| 109 | 21 | ‘ | ’ |
| 109 | 26 | alveole | alveolar |
| 143 | 14 | ut | but |
| 143 | 19 | In the case | In the case of |
| 151 | 26 | நடத்தலே காரணமாம் | நடத்தலேயாம் |
| 158 | 29 | putam | putan |
| 159 | 12 | graplic | graphic |
| 160 | இறுதி | Blach | Bloch |
| 211 | 6 | அற்றின் | அவற்றின் |
| 238 | இறுதி | cuphonic | euphonic |
| 254 | 10 | i tinct | distinct |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 257 | இறுதி | 21[illegible] | 2, 19 2 |
| 278 | 5 | அஃ[illegible] | அஃகடிய |
| 282 | 5 | தேன்று[illegible] | தோன்றுகின்ற |
| 283 | 9 | உயரிடைக் | உயிரிடைக் |
| 286 | 7 | வெஃஃஃகுணர் | வெஃஃகுணர் |
| 289 | 19 | கஃறென்னும் | கஃறென்னும் |
| 307 | 24 | முற்றியலுகரம் | முற்றியலிகரம் |
| 308 | 13 | குற்றியலிகரத்தை | குற்றியலுகரத்தை |
| 311 | இறுதி | ய்கரத்தின் | யகரத்தின் |
| 313 | இறுதி | lophone | allophone |
| 321 | 7 | Uniformly | formly |
| 334 | இறுதி | முடியும் | முடியும் |
| 352 | 13 | விதிபினை | விதியினை |
| 358 | 1 | இருமெய் | இருமெய் |
| ,, | 8 | ச்ண் | ண்க் |
| ,, | 18 | ள்ஞ் | ள்ப் |
| 362 | 10, 11, 12 | ய, ர, ழ | ய், ர், ழ் |
| 365 | 25 | statis tieai | statistical |
| 366 | 17 | காண | காண |